# ஸ்ரீ பகவத்கீதை

## வசனகாவியம்.



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்

சென்னை.

ஸ்ரீ கிருஷ்ணாய நம:

பரமார்த்த தரிசனம் என்னும்

# ஸ்ரீ பகவத்கீதை

## வசனம்

இதனுள்

ஸ்ரீ பகவத்கீதா மான்மியமும், சங்கர - ராமானுஜ - மாத்வ பாஷ்யங்களின் குறிப்புகள் முதலியன

அடங்கியிருக்கின்றன

கு. குமாரசுவாமி அவர்களால்

இயற்றப்பெற்றது.

அ. மஹாதேவயோகி அவர்களால்

பார்வையிடப்பெற்றது.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

1938.

காபிரையிட்] [விலை ரூபா 2.



# முகவுரை



அன்பார்ந்த சகோதர சகோதரிகளே! அஞ்ஞானமாகிய இருளைப்போக்கி நல்வழி கடைப்பிடித்தொழுகுமாறு, ஸ்ரீ பகவத் கீதை என்னும் அரிய நூலைத் தெள்ளிய நடையில் வசன ரூபமாக எழுத நெடுங்காலமாய் எண்ணங்கொண்டு பொருளுதவி பெறாது வருந்தி நிற்குங்கால், சென்னையில் பிரசித்தி பெற்ற புஸ்தக வியாபாரிகளும், 'திருமகள் விலாச' அச்சியந்திர சாலையின் தலைவர்களுமாகிய, ம-ா-ா-ஸ்ரீ B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ் அவர்கள் பேருதவிய[illegible], இந்நூலை ஒருவாறு எழுதத் துணிந்தனன். ஸ்ரீ பகவத் கீதைக்கு வ்யாக்யாந கர்த்தராகிய ஸ்ரீ தரசுவாமிகள், ஸ்ரீ சங்கராசாரியர், ஸ்ரீ இராமாநுஜாசாரியார், ஸ்ரீ மாத்துவாச்சாரியார், ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள், ஸ்ரீ மதுசூதன சரஸ்வதி, ஸ்ரீ ஆநந்தகிரி சுவாமிகள் முதலியோரது வடமொழி பாஷ்யங்களிலுள்ள சாராம்ஸங்களை ஆங்காங்குத் தழுவியுள்ளேன். அவ்வவற்றிற் கிடையே எனது அபிப்பிராயத்தையுங் குறித்திருக்கிறேன். தமிழ் ஆராய்ச்சி செய்து கியாதிபெற்ற புலவோர் அனைவரும் இப் புத்தகத்தில் பிழைகளிருப்பின் அவைகளைப் பாராட்டாது, இதனை அங்கீகரிப்பார்களென வேண்டுகின்றனன்.

இங்ஙனம்:

கு. குமாரசாமி.

ஸ்ரீ

# விஷய ஸூசிகை

| அத்தியாயம் | விஷயம் | பக்கம் |
|---|---|---|
| | முகவுரை | 1 |
| | ஸ்ரீமத் கீதார்த்த ஸங்கிரஹம் | 3 |
| | அத்வைத சித்தாந்த சாரசங்கிரகம் | 7 |
| | விசிஷ்டாத்வைத சித்தாந்த சாரசங்கிரகம் | ,, |
| | நூல் வரலாறு | 8 |
| 1 | அர்ச்சுன விஷாத யோகம் | 9 |
| 2 | சாங்கிய யோகம் | 21 |
| 3 | கர்ம யோகம் | 66 |
| 4 | ஞான யோகம் | 92 |
| 5 | கர்ம சந்நியாஸ யோகம் | 107 |
| 6 | ஆத்ம ஸம்யம யோகம் | 113 |
| 7 | விஞ்ஞான யோகம் | 136 |
| 8 | அக்ஷர பரப்ரஹ்ம யோகம் | 150 |
| 9 | இராஜவித்யா இராஜகுஹ்ய யோகம் | 161 |
| 10 | விபூதி யோகம் | 178 |
| 11 | விசுவரூப ஸந்தர்ஸன யோகம் | 185 |
| 12 | பக்தி யோகம் | 207 |
| 13 | க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம் | 216 |
| 14. | குணத்ரய விபாக யோகம் | 245 |
| 15 | புருஷோத்தம ப்ராப்தி யோகம் | 256 |
| 16 | தைவாஸுர ஸம்பத் விபாக யோகம் | 272 |
| 17 | சிரத்தாத்ரய விபாக யோகம் | 282 |
| 18 | மோக்ஷ ஸந்யாஸ யோகம் | 293 |
| | ஸ்ரீ பகவத் கீதா மான்மிய சங்கிரகம் | 320 |

ஸ்ரீ கிருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீமத் கீதார்த்த ஸங்கிரஹம்

பகவத் சேஷபூதனான சேதனனுக்கு விஹித தர்மமான கர்மம், அந்தக் கர்மானுட்டத்தால் தெளிவுற்ற மனதிற் பிறக்கும் ஸ்வஸ்வரூப பரஸ்வரூபாதி யதார்த்த க்ஞானம், அவற்றால் பிறக்கும் விஷய விரக்தி, அதன் பின்னர், பகவத் கிருபையினால் உண்டாகும் பக்தி, எல்லாவற்றிற்கும் பரப்ரஹ்மமான ஸ்ரீமந் நாராயணனே உத்தேசிய பூதனென்றும் இவை ஸ்ரீ கீதா சாஸ்திரத்தில் கூறப்படும். அதில், ஆத்மானுபவத்தைச் சித்திக்கப்பண்ணும் ஞானயோகம், கர்மயோகம் என்கிற இரண்டு நிஷ்டைகளும் முதல் ஆறு அத்தியாயங்களில் நன்கு சோதிக்கப்பட்டன. நடுவிலுள்ள ஆறு அத்தியாயங்களாலும் பகவத் ஸ்வரூபத்தை உள்ளபடியே அடைவிப்பிக்கும் ஞான கர்மங்களால் அடையக்கூடிய பக்தியோகம் வருணிக்கப்பட்டது. கடைசி ஆறு அத்தியாயங்களில், பிரகிருதி புருஷர்களின் சேர்க்கையான பிரபஞ்ச ஸ்வரூபமும், சர்வேசுர ஸ்வரூபமும், முந்திய அத்தியாயங்களில் சொல்லப்பட்ட கர்ம ஞான பக்திகளும் கூறப்படுகின்றன.

1-வது அத்தியாயத்தில்: தகாத விஷயத்தில் சிநேகத்தையும் கருணையையும் பாராட்டித் தர்மாதர்மந் தெரியாமல் மயங்கினவனாய், தர்மந் தெரியவேண்டு மென்கிற சிந்தையுடையவனாய், எம்பெருமானைச் சரணம் புகுந்த பார்த்தனை யுத்தேசித்து இக் கீதா சாஸ்திரம் ஆரம்பிக்கப்பட்டது.

2-வது அத்தியாயத்தில்: அர்ச்சுனனுடைய கலக்கந் தெளிகைக்காக நித்தியமான ஆத்மாவைப் பற்றிச் சாற்றிய புத்தியும் அந்த சாங்கிய புத்தியை முன்னிட்டே ஸ்திதப்பிரக்ஞதை யென்னும் யோகத்திற்குச் சாதனமாகின்ற கர்மயோக விஷயமான புத்தியும் சொல்லப்படுகின்றன.

3-வது அத்தியாயத்தில்: கர்த்திருத்துவம் தனக்கில்லை யென்று மதித்து, அதைப் பிரகிருதியினிடத்திலாவது சர்வேசுவரனிடத்திலாவது வைத்து போகரக்ஷணார்த்தமாகக் கர்மத்தை யனுஷ்டிக்க வேண்டு மென்னுமிடஞ் சொல்லுகிறது.

4-வது அத்தியாயத்தில்: பிரஸ்தாபமாய்த் தம்முடைய சுவ பாவத்தை யருளிச்செய்து, கருமமே ஞானரூபமாகிற தென்னுமிடமும், அதன் பேதங்களும், ஞானத்தின் மஹாத்மியமும் அருளிச் செய்கின்றார்.

5-வது அத்தியாயத்தில்: கர்மயோகம் எளிதில் செய்யக்கூடிய தென்பதும், விரைவில் சித்திக்கு மென்பதும், பின்னும் அதற்குண்டான சில பேதங்களும் பிரமக்ஞானமும் சொல்லப்படும்.

6-வது அத்தியாயத்தில்: யோகாப்பியாசத்தின் விதியும், யோகிகள் நால்வகைய ரென்பதும், யோக சாதனமும், அதன் சித்தியும், அதில் பகவத் தியான ரூபமான யோகமே சிறந்த தென்பதுங் கூறப்படும்.

7-வது அத்தியாயத்தில்: ஸ்ரீ கிருஷ்ண பகவான் தமது யதார்த்தத்தையும் பிரகிருதியால் மறைக்கப்பட்டிருக்கின்றமையால், பிராணிகள் தம் யதார்த்தத்தை யறியார்க ளென்பதையும், சரணாகதியையும், பக்தர்களின் உட்பிரிவையும், ஞானியே சிறந்தவனென்பதையும் அருளிச் செய்கின்றார்.

8-வது அத்தியாயத்தில்: ஐசுவரியத்தைக் கோரியவரும், ஆத்மப் பிராப்தியைக் கோரியவரும், பகவத் சரணாபேக்ஷை யுடையவரும் அறிந்து பற்றவேண்டிய விஷயங்களின் பேதங்களும் சொல்லப்படும்.

9-வது அத்தியாயத்தில்: தமது மகாத்மியமும், தாம் மனுஷ்யனாயிருக்கச் செய்ததே தமக்குண்டான பரத்வமும், மகாத்மாக்களுக்குண்டான விசேஷமும், பக்தி யோகமுஞ் சொல்லுகின்றார்.

10-வது அத்தியாயத்தில்: தமது கல்யாண குணங்களுக்கு எல்லையில்லை யென்றும், எல்லாம் தம் ஆதீனமென்றும் அறிவதனால் பக்தி யுண்டாகி விருத்தியா மென்பதை விஸ்தாரமாய் அருளிச் செய்கின்றார்.

11-வது அத்தியாயத்தில்: பகவத் ஸ்வரூபத்தை அர்ச்சுனன் உள்ளபடியே ஸாக்ஷாத்கரித்தபடியும், பகவத் ஸாக்ஷாத்காரமும் தத்பிராப்தியும் பக்தியினால் மாத்திரங் கிடைக்கு மென்பதும் சொல்லப்படும்.

12-வது அத்தியாயத்தில்: பக்தி யோகம் விரைவில் சித்திக்குமென்பதும், அதைக் கைப்பற்று முபாயங்களும், அதை யனுஷ்டிக்கச் சக்தி யற்றவன் ஆத்ம நிஷ்டையி லிருக்க வேண்டுமென்பதும், ஆத்ம நிஷ்டையின் பிரகாரங்களும், பக்தி யுள்ளவர்கள் எம்பெருமானுக்கு மிகவும் இஷ்டர்க ளென்பதும் சொல்லப்படும்.

13-வது அத்தியாயத்தில்: தேகத்தின் ஸ்வரூபமும், ஆத்மப் பிராப்திக்கு ஹேதுவும், ஆத்ம ஸ்வரூப சோதனமும், பந்தத்திற்குக் காரணமும், அதின் விவேகமும் சொல்லப்படும்.

14-வது அத்தியாயத்தில்: குணங்கள் புருஷனைக் கட்டுப்படுத்துகிற விதமும், அவைகளே கர்த்தா வென்பதும், அக் குணங்களை யொழிக்க வேண்டு மென்பதும், கதி மூன்றுக்கும் தாமே காரண மென்பதும் சொல்லப்படும்.

15-வது அத்தியாயத்தில்: அசேதனத்தோடு கலந்த ஜீவனையும் சுத்தனான முக்தனையும் விட, புருஷோத்தமன் (உலகங்களை) வியாபித்தும் தரித்தும் ஆண்டும் போருகையாலே அந்நிய னென்கிறது.

16-வது அத்தியாயத்தில்: தத்வாநுஷ்டானமும் தத்வ விஜ்ஞானமும் திடப்படுவதற்காகத் தேவாசுரர்களின் விபரத்தை யருளிச் செய்து கொண்டே சாஸ்திரத்திற்கு வசப்பட் டிருக்கவேண்டு மென்பதை யருளிச் செய்தார்.

17-வது அத்தியாயத்தில்: சாஸ்திரத்தில் சித்தமாகாதவைவெல்லாம் அசுரரைச் சேர்ந்ததென்றும், சித்தமானவைகளுக்கு மூன்று லக்ஷண முண்டென்றும் அருளப்பட்டது.

18-வது அத்தியாயத்தில்: எம்பெருமா னிடத்தில் கர்த்திருத்வாநு சந்தானமும், சத்துவ குணத்தை அவசியம் கைப்பற்ற வேண்டுமென்பதும், இவனுடைய கர்மம் பரிணமிக்கும்படியும் சாஸ்திரத்தின ஸாரார்த்தமும் சொல்லப்பட்டது.

கர்ம யோகமாவது: தபஸ், தீர்த்த யாத்திரை, தானம், யக்ஞம் முதலியவைகளை யனுட்டிப்பது.

ஞான யோகமாவது: அந்தக்கரணத்தை ஜெயித்து, பரிசுத்த ஆத்ம ஸ்வரூபத்தில் தானே நிற்கை.

பக்தி யோகமாவது: பரனுக்கென்றே அற்றுத்தீர்ந்த பிரீதியோடு தியானுதிகளி லிருத்தல்.

இம் மூன்று யோகங்களும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டவைகள். பரனுடைய ஆராதன ரூபங்களான நித்திய நைமித்திக கர்மங்களும் அவ்வாறே. இம் மூன்றும் யோகத்துவாரா ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குச் சாதனமாகின்றன. சகல அஞ்ஞானங்களையு மொழித்தவன், ஆத்ம வஸ்துவானது பரனுக்குச் சேஷப்பட்டதென்பதை யறிந்து, பரமபுருஷனிடத்தில் பரம பக்தியைப்பண்ணி, அதைக்கொண்டே பரம பதத்தை யடைவான். ஐசுவரியத்தை யபேக்ஷித்து பக்தியோகம் அனுஷ்டிக்கப்படுமாகில் அது அதைப் பரிபூர்ணமாகச் சாதித்துக் கொடுக்கும். ஆத்மாவை யபேக்ஷிக்கும் பக்ஷத்தில் இம்மூன்றுங் கூடி ஆத்மாவின் கைவல்யத்தைச் சாதிக்கும். இவ்வதிகாரிகள் மூவருக்கும் பகவானிடத்தில் ஐகாந்தியம் சமானம். பகவத் பிராப்திபரியந்தம் பரம புருஷனையே கோரி யிருந்தானாகில் இறுதியில் பரம புருஷனையே யடைவான். பரமைகாந்தியான ஞானியானவன், தனது ஜீவனம் பரமாத்மாதீனமாய், அவனைக் கூடினால் சுகமும், பிரிந்தால் துக்கமுமாய், அவனையே சிந்தித்தல், அவன் விஷயமான அபயாச யோகத்தை யனுஷ்டித்தல், அவன் திருநாமங்களை ஜபித்தல், அவனை வந்தித்தல், துதித்தல், குண கீர்த்தனஞ் செய்தல், இவைகளைக் கொண்டு ஆத்மாவைத் தரித்து, பிராணன்-மனது-புத்தி-இந்திரியம்-கிரியை ஆகிய எல்லாவற்றையும் அவன் ஆதீனமாக்கி, தனக்கென்று வகுத்த கருமம் முதல் பக்தி பரியந்தமான எல்லாவற்றையும் அவனுக்கு முகோல்லாஸமாகும்படிச் செய்கிறோமென்று கர்த்திருத்வாபிமான மில்லாமற் செய்து, அவைகளில் உபாய புத்தியை விட்டு, தனது உஜ்ஜீவன் விஷயத்தில், ''நாமென்ன செய்யப்போகிறோம்'' என்கிற பயலேச மில்லாமல் ''அதற்கு உபாயம் அவனே'' என்று பரம புருஷனிடத்தில் உபாய புத்தியைப் பண்ணி, ''உனக்கே நான் ஆட்செய்ய வேண்டும்'' என்று அவனுடைய தாஸ்யமே போக்கியமாயிருந்து, கடைசியில் அவன் திருவடித் தாமரைகளை யடைவன் என்கிற இவ்விஷயங்களை இக் கீதா சாஸ்திரம் முக்கியமாய்ப் பிரதிபாதிக்கிறதென்று கீதார்த்தம் சங்கிரகிக்கப்பட்டது.

ஸ்ரீமத் கீதார்த்த ஸங்கிரஹம்

முற்றுப்பெற்றது.

---

## அத்வைத சித்தாந்த சாரசங்கிரஹம்

உலகம் சத்தியமன்று; அசத்தியம். காணப்படுகின்ற இடப்பொருளாகிய உலகமும் அதிலுள்ள பொருள்களும் அழியுந் தன்மைய வென்பது எல்லா மதத்தினர்க்கும் உடன்பாடே. அத்வைத பக்ஷத்தில், உலகம் அசத்திய மென்பதின் கருத்து யாதென்றால், நாம் உண்பதும் உடுப்பதும் நடப்பதும் பேசுவதுமாகிய செய்கைகளெல்லாம் பரமார்த்த தசையில் மித்தை (பொய்) விவகார தசையில் சத்தியம் (உண்மை) நிர்க்குணமான ஆத்மா ஒன்றன்றி இரண்டாவதான வஸ்து இல்லை. சுத்தப் பிரமம் மாயா சம்பந்தத்தாலே ஈசுவரனென்றும், அவித்யா சம்பந்தத்தாலே ஜீவனென்றும் விவகரிக்கப்படுகின்றது. சம்சரிக்கிறதற்குக் காரணம் யாதென்றால், அவித்தையே யன்றி வேறில்லை. மோக்ஷமாவது தானே பி...மென்றுணரும் ஞானமே.

---

## விசிஷ்டாத்வைத சித்தாந்த சாரசங்கிரஹம்

உலகம் சத்தியம். அதாவது, நாம் உண்பது முதலிய செய்கைகளெல்லாம் உண்மையே. ஈசுவரன் வேறு; ஜீவன் வேறு. ஈசுவரன் சர்வக்ஞன்; ஜீவன் கிஞ்சிக்ஞன். ஈசுவரனைப்போன்று ஜீவனும் நித்தியனே. ஈசுவரன்: ஜீவர்களுக்கும், ஜடப்பிரபஞ்சங்களுக்கும் அந்தர்யாமியாகவும், சரீரியாகவும், நியாமகனாகவும், சேஷியாகவுமிருக்கின்றான். ஜீவர்கள்: ஈசுவரனுடைய அம்சர்களாகவும், சரீரங்களாகவும், சேஷமாகவு மிருக்கின்றார்கள். ஜீவர்கள் சம்சரிக்கிறதற்குக் காரணம் அநாதியான கருமமே யன்றி வேறில்லை. மோக்ஷமாவது: நித்தியானந்தமுடைய அப்ராகிருதமான ஸ்ரீ வைகுண்டத்தில் பிராகிருத ரகிதமான சரீரமுடைய பரப்ரஹ்மத்தின் பரம சாம்மியம் பெற்று நித்தியானந்தர்களா யிருப்பது. இதற்கு முக்கிய சாதனம் பகவத் பக்தியே யாம்.

---

# நூல் வரலாறு

பாரதப் போரில் அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண பகவானை நோக்கி, "இரதத்தை இரண்டு சேனைகளுக்கு நடுவில் நிறுத்த வேண்டும்" என்று வற்புறுத்தினன். அம் மொழிகளைக் கேட்டருளிய பகவான், "அர்ச்சுனா! இவ்வாறு நீ கூறுவதற்குக் காரண மென்ன?" என்று உசாவினன். "கிருஷ்ணா! நீ இவ்வாறு புரிவாயாகில் துரியோதனாதிக ளுக்கு உதவி செய்ய வந்தவர்களையும், நமக்குச் சகாயம் செய்ய வந்த வர்களையும் இலேசாகக் காணக்கூடும்" என்று விடை பகர்ந்தான் அர்ச்சுனன். அதனைச் செவிமடுத்த வாசுதேவன் அவ்வாறே இரண்டு சேனைகளின் நடுவில் இரதத்தைக் கொண்டுபோய் நிறுத்தினன். உடனே அர்ச்சுனன் கௌரவ சேனைகளையும், ஆண்டு யுத்தத்திற் குப் பிரசித்தர்களாய் போர் முனையில் வீற்றிருக்கும் துரோணர் பீஷ்மர் முதலானவர்களையுங் கண்ணுற்று, மிகவும் மனங் கலங்கி, தயாள மனத்துடன், 'ஐயோ! இத்தகைய பெரியோர்களைப் புட்பங் களைக் கொண்டு திருவடியில் அர்ச்சிப்பதை விலக்கி, கூர்மையான பாணத்தை எவ்வாறு பிரயோகிப்பது?' என்று மனஞ்சாம்பி, அறி வழிந்து, "கிருஷ்ணா! இந்தப் போர்முனையில் வெற்றி பெறுவதற்கு எனக்கு இச்சையில்லை. இராஜ்ஜிய மடைவதனால் யாது பயனுளது? ஆகையால், எனக்கு யுத்தஞ் செய்வதற்குப் பிரியமில்லை" என்று தேரினின்று கீழிறங்கினன்.

அவ்வா றிறங்கியபோது ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவனுக் குண்டாயிருந்த அஞ்ஞானத்தை நிவர்த்திக்குமாறு சகல உபநிஷத் துக்களின் சாரங்களையு மொன்றாகத் திரட்டி ஸ்ரீ பகவத் கீதை என் னும் உண்மையான சாஸ்திரத்தை உபதேசஞ் செய்ததுமன்றித் தனது விராட் சொரூபத்தை வெளிப்படுத்தி, அவனது அஞ்ஞான இருளைக் களைந்து மெய்ஞ்ஞானத்தை நிலைபெறச் செய்வித்து, அவனை யுத்தஞ் செய்யுமாறு ஏவினனென்பது கதையின் வரலாறு.



அர்ஜுனனுக்கு கிருஷ்ணபகவான்
ஸ்ரீ பகவத்கிதையை உபதேசம் செய்தல்.

உ

ஹரிঃ ஓம்

ஸ்ரீ ருக்மணீ ஸத்யபாமா ஸமேத

ஸ்ரீ கிருஷ்ணாய பரப்ரஹ்மணே நமঃ

# பரமார்த்த தரிசனம்

என்னும்

# ஸ்ரீ பகவத்கீதை வசனம்

---

## முதலாவது அத்தியாயம்

## அர்ச்சுன விஷாத யோகம்

---

அதாவது

அர்ச்சுனனது சோகத்தை யுணர்த்தும் அத்தியாயம்

### விநாயகர் துதி

கலி விருத்தம்

*பாதியோர் பெண்மையான் பரிந்து பெற்றதோர்*
*சோதியாங் களிற்றினைத் தூர மண்மையிற்*
*பேதியா துளம்பெறப் பேணிப் பாகவற்*
*கீதையான் மொழிகுவன் ஞானங் கிட்டவே.*

### மஹாவிஷ்ணு துதி

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

*அரியயனோ டரனாகி யகிலந் தன்னை*
*யாக்கியளித் தழிக்கின்ற வவித்தைக் கென்றுங்*
*கரியதுவாய்க் காந்தத்தி னிரும்பு போலக்*
*கரணத்தின் சலனத்துக் கேது வாகி*
*வரியமரு மரவணைமே னெளிய வேறி*
*வைகுண்டத் தினிதமரு மாயோன் மண்மேற்*
*பரிபுணரு மணிநெடுந்தேர்ப் பார்த்தற் கூர்ந்த*
*பாண்டவர்கள் சாரதிநாம் பரவுந் தெய்வம்.*

கலிவிருத்தம்

ஒருபத மடித்தொரு பதம்பொற் றேர்மிதித்
தொருகையிற் குசைகசை யொருகை ஞானமாய்ப்
பொருகையில் விசயனைப் புரிந்து நோக்கிமெய்
தருபொரு ளுரைத்தவர் சரணம் போற்றுவாம்.

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஐவகைப் பொருளு நான்கு
கரணமுங் குணங்கண் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி
யாவருந் திகைப்ப நின்ற
பொய்யிரு ளகல ஞானப்
பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவள ராழிச் செங்கட்
கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

---

# அவதாரிகை

ஸ்ரீய:பதியாய், ஸ்வாபாவத்தி லேற்பட்ட அளவில்லாத மேன்மையுடைய அறிவு, பலம், ஐஸ்வரியம், மனோபலம், சக்தி, தேஜஸ் முதலிய கல்யாண குணங்களை ஒருங்கே நன்கடையப்பெற்று ஸ்ரீ லக்ஷ்மிக்கு நாயகனாய் விளங்காநிற்பன் ஸ்ரீமந்நாராயணன். இப் பரம்பொருள் தன்னை நீக்கிய எல்லாப் பொருள்களைக் காட்டிலும் வேறுபட்ட முடிவில்லாத ஞானம், ஆனந்தம் இவைகளை ஸ்வரூப மாக உடையதும், நம்மால் நினைக்க வொண்ணாததும், திவ்வியமான தும் ஆச்சரியமானதும், அழிவில்லாததும், தோஷ மில்லாததும், கணக்கில்லாத காந்தி - அழகு - நல்ல வாசனை - மிருதுவா யிருத்தல்- யௌவனம் முதலிய நற்குணங்களுக்கு இருப்பிடமானதுமான திவ்ய ரூபத்தைப் பெற்ற பரமதயாளு தனக்குப் பொருந்தினதாயும், அநேக விதங்களாயும், விசித்திரங்களாயும், முடிவில்லாத ஆச்சரி யங்களை உடையதாயும், அழிவில்லாதவைகளாயும், தோஷமில்லா தவைகளாயும் இருக்கிற திவ்ய ஆபரண அலங்காரி. தனக்குத் குந்தவையாயும், எண்ணிறந்தவையாயும், நினைக்க முடியாத

ஆற்றலை யுடையவையாயும், அறிவில்லாதவைகளாயும், தோஷமில்லாதவைகளாயும், எல்லை யில்லாத நன்மை யுள்ளவைகளாயு மிருக்கிற சீர்த்திபெற்ற ஆயுதபாணி.

அஃதன்றி, தன்னுடைய சங்கற்பத்தை அனுசரித்த ஸ்வரூபம் அதன் இருப்பு வியாபாரம் இவைகளின் வித்தியாசங்களை யுடையவராகியும், எல்லாக் கைங்கரியங்க ளொன்றிலேயே விருப்பத்தை ஸ்வரூபமாக வுடையவர்களாயும், நித்யர்களாயும், தோஷ மில்லாதவர்களாயும், இதற்கு மேலான தில்லாத ஞானம் - கிரியை - ஐஸ்வரியம் முதலிய எண்ணிறந்த குணங்களின் கூட்டங்களை யுடையவர்களான கணக்கில்லாத நித்ய சூரிகளால் எப்போதும் துதிக்கப்பெற்ற போற்பாத கமல முடையோன். வாக்கு, மனது இவைகளால் அளவிட முடியாத ஸ்வரூபம் சுபாவம் உடையோன். இப் பெருமான் வைபவச் சிறப்பை யோசிக்குங்கால், தனக்குத் தகுந்த அநேக விதமான விசித்திரமான அளவில்லாத அனுபவிக்கக்கூடிய வஸ்துக்கள், அனுபவிப்பதற்கு உதவியான கருவிகள், அனுபவிக்கு மிடங்கள், இவைகளால் நிறையப்பெற்ற ஆச்சரியத்தை விளைவிப்பதாகி, எல்லை யில்லாத விபவங்களை உடையனவும், முடிவில்லாத அளவை யுடையதும், நித்தியமாயும் தோஷ மில்லாததுமான அக்ஷரமான உயர்ந்த ஆகாயத்தை இருப்பிடமாக உடையவனாயும், அநேக விதங்களாயும், விசித்திரங்களாயும், முடிவில்லாதவைகளுமான அனுபவிக்கக்கூடிய வஸ்துக்கள், அனுபவிக்கிற ஆத்மாக்கள் இவைகளின் கூட்டங்களால் நிறைந்த எல்லா உலகங்களுடைய உற்பத்தி, ஸ்திதி, பிரளயம் இவைகளைச் சீலையாகப் பெற்றுப் பிரகாசம் பொருந்தியவன். பரப்ரஹ்மமும், புருஷோத்தமனுமான ஸ்ரீமந் நாராயணன் எல்லா உலகங்களையும் சிருஷ்டித்துத் தன்னுடைய நிஜ ஸ்வரூபத்தோடு மாத்திரம் விளங்கி நின்றால், பிரஹ்மா முதலிய தேவதைகள் மனிதர்கள் இவர்களுடைய தியானம் ஆராதனம் இவைகளுக்கு விஷயமாகாதவனாய் இருக்க நேரிடும் என ஐயம் கொண்டு, ஸௌசீல்யம், கொடை முதலிய நற்குணங்களை யாவர்க்கும் கட்புலனுக்கக் கருதித் தன்னுடைய உருவத்தையே அந்தந்த ஜாதிகளுக்குச் சமானமாக அமைத்துத், தன்னுடைய இயற்கையை விடாமலே செய்துகொண்டு, அந்தந்த உலகங்களில் அவதாரஞ் செய்து, அவர்களால் வழிபடப் பட்டு, அவரவர்களின் விருப்பத்திற் கேற்றவாறு தர்மம் - அர்த்தம் - காமம் - மோக்ஷம் என்கிற நான்கு பிரயோசனங்களைத் தந்து விளங்கி நிற்பவன்.

'ஜனங்கள் தம் பிறப்பைக் களைந்து நல்வழிப்பட்டு ஒழுக வேண்டும்' என அவாக்கொண்டு, இப் பரதகண்டத்தில் மனிதப் பிரவிர்த்தி பூண்டு, தன் கல்யாண குணங்கள் அனைத்தையும் புத்தி புகட்டி, வெகு அற்புதமான காரியங்களைச் செய்து, பூதனை - சகடாசுரன்-காளியன்-கேசி-கம்ஸன் முதலியவர்களைச் சம்ஹாரித்து, அளவில்லா தயை - சிநேகம் - அன்பு ஆகிய இவைகளை மனதிடமாகக் கொண்டு, பார்வை-அமிர்தம்போன்ற வார்த்தை இவைகளால் உலகத்தவர்க்கு உவகை உண்டாகும்படிச், செய்தவன். மேற்கூறிய ஸௌசீல்யம், கொடை முதலிய நற்குணங்கள் சம்பூர்ணமாக அடைந்திருந்ததால் அக்ரூரர், மாலாகாரர் முதலியவர்களைப் பரம பாகவத சிரோன்மணிகளாகவும், அர்ச்சுனனை யுத்தத்தில் சந்தோஷப்படுத்துவ தென்கின்ற வியாஜத்தால் மேலான புருஷார்த்தமாகிய வீட்டிற்கு உபாயமாக வேதாந்தங்களில் கூறப்பட்டதும், தன்னைப் பற்றியதும், ஞானம் கர்மம் இவைகளால் உதவி செய்யப்பட்டதுமான பக்தி யோகியாகவும் சங்கற்பித்தான்.

பாண்டவர்களுக்கும், குரு வம்சத்து அரசர்களுக்கும் யுத்தம் தொடங்கும்போது யாவர்க்கும் கட்டளையிடுபவனான ஸ்ரீமந் நாராயணன், ஸ்ரீ கண்ணபிரானாக அவதரித்துத் தன்னைப் பற்றினவர்களிடத்தில் பிரீதியுடையவனாகவும், அர்ச்சுனனை இரதத்திற்கு எஜமானனாகவும், தான் சாரதியாகவும், எல்லா ஜனங்களும் காணும்படி அருள் சுரந்தான். இஃது இவ்வாறு என உணர்ந்தும், துரியோதனன் பராக்கிரமத்தை உணர்ந்துகொள்ளக் கருதி, திருதராஷ்டிரன் சஞ்சயனைக் கேட்கலாயினன்.

---

ஓம்

ஸ்ரீ கிருஷ்ணாய பரப்ரஹ்மணே நமஃ

# நூல்

## திருதராஷ்டிரன் வாக்கியம்

"ஓ! சஞ்சயனே! தர்மஞ் செய்வதற்கு இருப்பிடமாகிய குரு க்ஷேத்திரத்திலே யுத்தஞ்செய்ய எண்ணங் கொண்டவர்களாய்ச் சேர்ந்திருக்கிற என்னுடைய புத்திரர்களான துரியோதனுதியரும், பாண்டுவின் புத்திரர்களான தர்மராஜனுதியரும் என்ன செய்தார் கள்?" 1

[உள்ளுரை:—அதாவது, "குருமகாராஜனுல் பரிபாலிக்கப்பட்ட படியால், குரு க்ஷேத்திரம் என்றும், பல யக்ஞங்கள் நிறைவே றினபடியால் தர்ம க்ஷேத்திரம் என்றும் கீர்த்தி படைத்த அந் தப் பிரதேசத்தில் என் குமாரர்களும், பாண்டு புத்திரர்களும் என்ன செய்தார்கள்?" என்று திருதராஷ்டிரன், பரம்பரை யாகச் சாரதி வம்சத்திற் சேர்ந்த சஞ்சயனை வினவினன். திருதராஷ்டிரன்: 'யுத்தம் எவ்வாறு புரிந்தனர்?' என்பதற்குப் பிரதியாக, 'என்ன செய்தார்கள்?' என்று வினவினதால், புண் ணிய பூமியின் ஸ்பரிசனத்தால் யுத்தத்தை நிறுத்தி விட்டார் களா என்று அபிப்பிராயம்.]

## சஞ்சயன் வாக்கியம்

"ஓ! திருதராஷ்டிர மகாராஜனே! இருதரத்தவரும் போர்க் களத்தில் சேர்ந்தபோது, இராஜனுன துரியோதனன் அணிவகுக்கப் பட்டுள்ள பாண்டவர்களின் சேனையை நோக்கி, வில்லாசிரியரான துரோணுசாரியரை சமீபித்து, பின்வருமாறு சொல்லுவானுயினன். 2

அதாவது: "ஆசாரியரே! தேவரீரது சீடனும், விவேகியுமான துருபத புத்திரனுகிய திருஷ்டத்யும்னனுல் வகுக்கப்பட்டுள்ள பெரி தாகிய பாண்டு புத்திரர்களது சேனையைக் காண்பீராக!" 3

உயுத்தத்தில் வீரர்களும், பீமார்ச்சுனர்கட்குச் சமானமானவர்க ளும், பெரிதான விற்களை யுடையவர்களுமாகிய சாத்தியகியும், விராடனும், மகாரதனுகிய துருபதேசாதிபனும், திருஷ்டகேதுவும், சேகிதானனும், பராக்கிரமசாலியான காசிதேசத்தரசனும், புருஜித்து என்பவனும், குந்திபோஜனும், மனித சிரேஷ்டனுன சைப்பியனும், பராக்கிரமசாலியான யுதாமன்னியனும், வீரியவானுன உத்தமௌஜ னும், அர்ச்சுனனுல் சுபத்திரையினிட முற்பத்தியான அபிமன் னியுவும், திரௌபதியிடம் தருமர் முதலிய ஐவர்க்கு முறையே

யுடைய பிரதிவிந்தியன், சுருதசோமன், சுருதகீர்த்தி, சதானீகன், சுருதசேனன் ஆகிய உப பாண்டவர்களும் ஆகிய இவர்களெல்லோ ரும் (மஹாரதர்கள்) இந்தப் பாண்டவசேனையி லிருப்பதைக் கண் ணுற்றுப் பார்ப்பீராக!

[யாவனொருவன் வேறொருவர் சகாயமின்றித் தனியாக ஆயுதங்க ளோடு பதினாயிரஞ் சூரர்களுடன் போர்செய்யத்தக்க வல்லமை யும் அஸ்திர சஸ்திர பயிற்சியு முடையவனோ அவன் மஹாரத னென்னப்படுவன்.] 4-5-6

மேலும், நம்மைச் சேர்ந்தோரான சூரதீர பராக்கிரம முள்ள வர்களும், நமது சேனைக்குத் தலைவர்களும் யாவரோ அவர்களை உமக்கு ஞாபகஞ் செய்தற்காகச் சொல்லுவேன். அதனைக் கேட்பீ ராக! 7

தேவரீரும், பீஷ்மரும், கர்ணனும், கிருபாசாரியரும், யுத்தத்தில் வெற்றிவாய்ந்த அசுவத்தாமனும், விகர்ணனும், சோமதத்தன் குமார னாகிய பூரிசிரவனும், ஜயத்திரதனும், மற்றும் அனேக சூரர்களும் என்பொருட்டுப் பிராணனைத் துறந்து யாவரும் சர்வாயுதர்களாகவும், உயுத்தத்திற் கைதேர்ந்தவர்களாகவு மிருக்கின்றனர். 8-9

ஆயினும் பீஷ்மரால் காக்கப்பட்டுள்ள நமது சைனியமானது அபரிமிதமாக காணப்படுகிறது; ஆயினும் வலியற்றது. நமக்கு விரோதிகளாயுள்ள பீமனால் காக்கப்பட்ட பாண்டவர்களது இந்தச் சேனையோ மிதமாயிருக்கின்றது; ஆயினும் வலியுடையது. ஆகலின், நீவிரெல்லோரும் வியூகங்களின் எல்லா மார்க்கங்களினும் அவரவர்க் குக் குறிக்கப்பட்டுள்ள இடங்களில் ஜாக்கிரதையாக இருந்து நமது சேனாபதியான பீஷ்மரை நன்றாகக் காத்தல்வேண்டும்'' என்று வற் புறுத்தினன். 10-11

பிறகு சத்துருக்கள் அஞ்சத்தக்க பிரதாபவானும் கௌரவர்க ளிற் பெரியோருமான குரு பாண்டவர்களுக்குப் பாட்டனுமாகிய பீஷ்மாசாரியர்: துரியோதனனுக்கு உவகை யுண்டாகுமாறு சிங்க நாதஞ் செய்து தமது சங்கத்தைப் பூரித்தனர். 12

ஓ! திருதராஷ்டிர மகாராஜனே! பின்னர் சங்கங்களும், பேரிகை களும், படகம் ஆனகம் என்று சொல்லப்படும் நகரா, கோமுகம் முதலிய வாத்தியங்களும் முழங்கப்பட்டன. அப் பேரொலியானது திக்குகள்தோறு நிறைந்து ஒலித்தது. 13

பின்னர், வெண்மையான குதிரைகளினால் கட்டப்பட்டதாகிய தெய்விகமான பெரிதாகிய இரதத்தில் அமர்ந்திருந்த மாதவனாகிய ஸ்ரீ கிருஷ்ணசுவாமியும், பாண்டு குமாரனான அர்ச்சுனனும், தெய்வத்தன்மை பொருந்திய தமது திவ்வியமான சங்கங்களைப் பூரித்தனர்.

[14-வது சுலோகத்தில் 'மாதவ' என்று குறிப்பிட்டமையால், சாந்தோக்கிய உபநிடதத்திலுள்ள மதுவித்தை யென்கிற வேதபாகத்தினால் புகழப்பட்டவனதால் மாதவன் என்றும்; (மா—லக்ஷ்மி, தவ:—பதி) லக்ஷ்மீபதியானதால் மாதவ என்றும்; மௌனம், தியானம், யோகம், இவைகளை யுடையவனதால் மாதவ என்றும் பெயர் வந்தது. (ஸ்ரீ விஷ்ணு சகஸ்ர நாமம் சங்கர பாஷ்யம்.] 14

ஓ! திருதராஷ்டிர மகாராஜனே! பின்பு, ஹ்ருஷீகேசன் தமது திவ்வியமான பாஞ்சஜந்யத்தை யூதினர். தனஞ்சயன்: தேவதத்தம் என்கிற சங்கத்தையும், பயங்கரமான யுத்தஞ் செய்பவனாகிய செந்நாய்போன்று சிறுத்துள்ள வயிற்றினையுடைய பீமன் பௌண்டரம் என்கிற பெரிய சங்கத்தையும், ராஜாவும் குந்திதேவியாரது புதல்வருமாகிய தருமநந்தனன்: அனந்தவிஜயம் என்கிற சங்கத்தையும், நகுலனும்-சகாதேவனும்: சுகோஷம், மணிபுஷ்பகம் என்கிற தமது சங்கங்களையும், பாரமான வில்லையுடைய காசிதேசத்தரசனும், மகாரதிகனான சிகண்டியும், திருஷ்டத்யும்னனும், விராடனும், அபஜயமில்லாத சாத்தியகியும், துருபதராசனும், உபபாண்டவர்களான துரௌபதி குமாரர்களும், புஜபலமுள்ள சுபத்திரையின் குமாரனான அபிமன்னியுவும், பிறரும் வெவ்வேறான தத்தம் சங்கங்களை ஊதினார்கள்.

[இந்த 15-வது சுலோகத்தில், பாஞ்சஜந்ய என்றும், ஹ்ருஷீகேசன் என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது. அதாவது: பஞ்சஜனன் என்கிற இராக்கதனது வயிற்றைப் பிளந்து அவனது எலும்பினின்று வெளிப்படுத்தினபடியால் பாஞ்சஜந்ய என்னும் பெயருண்டாயிற்று.

ருஷீக-இந்திரியங்களுக்கு ஈசு: ஸாக்ஷியா யிருப்பதால் எஜமானனாகிய க்ஷேத்திரக்ஞனா யிருக்கிறவன் ஹ்ருஷீகேசன் என்றும், இந்திரியங்களைச் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு அவைகளை விஷயங்களி லேவுகிற பரமாத்மா வானதினால் ஹ்ருஷீகேசன் என்றும், சூரிய சந்திர ரூபங்களாக இருக்கிறவராகிய பகவானானவர் அந்தச் சூரிய சந்திரர்களுடைய கேசங்கள்

(மயிர்) என்று சொல்லப்பட்ட கிரணங்களாலே உலகத்திற்கு ஜாக்கிரத் ஸுஷுப்தி அவஸ்தைகளினால் சந்தோஷத்தை விளைவிப்பதினால் ஹ்ருஷீகேசன் என்றும் பெயர் விளங்கிற்று.] 17-18

அவ்வாறு திக்குகள் நிறைந்த பாண்டவ சேனையின் சங்கின் கோஷமானது: ஆகாயத்தையும், பூமியையும் பிரதித்துவனியுண்டாகும்படிச் செய்து, துரியோதனாதியர்களின் மனதைப் பிளந்தது. அதாவது, குடர்கள் வெடிபடச் செய்தது. 19

ஓ! திருதராஷ்டிர மகாராஜனே! பிறகு பாணங்களைப் பிரயோகிப்பதற்குக் காரணமாகிய யுத்தமானது ஆரம்பிக்குஞ் சமயத்தில், அனுமானைக் கொடியாகவுடைய அர்ச்சுனன், வில்லை உயரத் தூக்கிக் கொண்டு யுத்தஞ் செய்வதற்கு உறுதியாய் நிற்கிற துரியோதனாதியர்களைப் பார்த்து, அப்போது பகவானை நோக்கி அடியிற் சொல்லப் போகிற வார்த்தையைக் கூறினான். 20

“ஓ! சுவாமி! துர்ப்புத்தியுள்ள துரியோதனனுக்கு யுத்தத்தில் நன்மை செய்யக் கருதியவர்களாய் எந்தெந்தச் சூரர்கள் இந்த ரணரங்கத்தில் வந்து நெருங்கி நிற்கின்றனரோ, அவர்களை யான் நேரில் காணவேண்டும். ஆதலின், இந்த யுத்தாரம்பத்தில் என்னால் எவரோடு போர்செய்யத் தக்கதோ யுத்தஞ்செய்ய விரும்பியவர்களாக நின்றுள்ள அச் சூரர்களை யான் காணுமளவும் இருசேனைகளின் நடுவில் எனது இரதத்தை நிறுத்தியருள்வீராக!” என்று கேட்டுக் கொண்டனன்.

[பிறகு, யுத்தஞ் செய்யவேண்டுமென்று அவா வுள்ளவர்களாய் வந்து நிற்கிற திருதராஷ்டிரன் பிள்ளைகளைப் பார்த்து, இலங்கையைக் கொளுத்திய வானரத்தைக் கொடியிலுடைய அர்ச்சுனன்: ஞானம், பலம், ஐஸ்வர்யம், வீர்யம், தேஜஸ் இவைகளுக்கு இருப்பிடமாயும், தன்னுடைய சங்கல்பத்தினால் செய்யப்பட்ட எல்லா லோகங்களுடைய சிருஷ்டி, திதி, சம்ஹாரம் இவைகளை விளையாட்டாக வுடையவனாயும், உயர்ந்தவர்களாயும், தாழ்ந்தவர்களாயு மிருக்கிற எல்லா ஜனங்களுடையவும் மனது, வெளி இந்திரியங்கள், இவைகளெல்லா விதமாயும் நியமித்துக் கொண்டிருக்கிறவனாயும், அடைந்தவர்களிடத்தில் அன்பிற்கு வசப்பட்டுத் தனக்குத் தேரோட்டுகிற காரியத்தில் அமர்ந்த பகவானைத் தான் யுத்தஞ் செய்யவேண்டுமென்று ஆசையுள்ளவனைச் சரியாய்ப் பார்ப்பதற்காகத் ‘தகுந்த விடத்தில் தேரை நிறுத்தும்’ என்று கூறினானென்பது கருத்து.] 21-22

பிறகு சஞ்சயன் திருதராஷ்டிரபூபனைப் பார்த்து, அஞ்ஞான உறக்கத்தினை வென்ற அர்ச்சுனனால் கேட்டுக்கொள்ளப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் இரு சேனைகளின் நடுவில் பீஷ்மர் துரோணர் முதலாயுள்ள எல்லா அரசர்களின் எதிரில் சிரேஷ்டமான இரதத்தை நிறுத்தி, "ஓ பார்த்த! போர்க்களத்தைச் சார்ந்துள்ள இந்தக் கௌரவ வீரர்களைப் பார்ப்பாய்!" என்று சொல்லினர்.

[கருத்து:—திருதராஷ்டிரனைக் குறித்துச் சஞ்சயன் சொல்லுகிற வார்த்தை யாகையால், 'உன்னுடைய பிள்ளைகளான துரியோதனன் முதலானவர்களை அர்ச்சுனன் ஜயிக்க வேண்டிய நிலைமை இப்படிப்பட்டது என்றுவது, நிந்தித்துக் கொண்டாவது சொன்னான்' என்பது தாத்பரியம். இந்த அர்த்தமே மேலானது. ஏனெனில், அர்ச்சுனனைக் குறித்து ஸ்ரீ கிருஷ்ணன் சொல்வதாயிருந்தால் உங்களுடையதென்று சொல்ல வேண்டும். 'உன்னைச் சேர்ந்தவர்களுடைய' என்று சொல்ல வேண்டியதில்லை. திருதராஷ்டிரனைக் குறித்து சஞ்சயன் சொன்னதாயிருந்தால், 'உன்னுடைய பிள்ளைகள்' என்று சொல்வது சரியாயிருக்கும். (என்ன செய்தார்கள்?) என்னும் அபிப்பிராயத்தை மறைத்துக்கொண்டு சஞ்சயன் துரியோதனாதியர்கள் மனங்கள் பிளந்த முதலான கதையைச் சொன்னான்.]

[24-வது, ஸ்லோகத்தில் குடாகேசன் என்று குறிப்பிட்டமையால், நித்திரையை ஜயித்தவன்; எனின், சாகருகன் என்பது பொருள்; அதாவது, செம்பட்ட மயிர்களை யுடையவன் என்பதாம்.] 23-25

பகவான் இவ்வாறு சொன்னவுடன் அர்ச்சுனன் ஆங்கு உபய சேனைகளில் இருக்கும் பிதாக்களையும், பாட்டன்மார்களையும், குருமார்களையும், அம்மான்மார்களையும், சகோதரர்களையும், பிள்ளைகளையும், பேரன்மார்களையும், தோழர்களையும், மாமன்மார்களையும், ஆப்தர்களையும் கண்ணுற்று, அளவற்ற பரிதாபத்தோடு கூடியவனாய்ச் சிந்தாகுல மடைந்து, அடியில் வருமாறு ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் பார்த்துச் சொல்வானாயினன்:—

அர்ச்சுனன் வாக்கியம்

"கிருஷ்ணா! போர் புரிய ஆசையை யுடையவர்களும், வந்திருக்கின்றவர்களுமாகிய இந்த உறவினர்களை நோக்கி எனது அவயவங்கள் தளர்கின்றன. வாய் உலர்கின்றது. எனது தேகத்தில் நடுக்கமுண்டாகின்றது. உரோமஞ் சிலிர்க்கின்றது.

மேலும், என் காண்டீபமானது கையினின்று நழுவுகின்றது; உடம்பும் எரிகின்றது. இன்னும் இரதத்தில் உட்கார்ந்திருப்பதற்குஞ் சக்தியற்றவனாகின்றேன். எனது மனம் பிரமித்துள்ளது போற் காணப்படுகின்றது.

கேசவா! நான் துர்நிமித்தங்கள் காண்கின்றேன். இந்தப் போரில் உறவினரைக் கொன்று பின்பு சுகபோகங்களை அனுபவிப்பதற்கு விரும்பமாட்டேன்.

கிருஷ்ணா! ஜயத்தையும் விரும்பமாட்டேன். இராச்சியத்தையும் சுகத்தையும் விரும்பமாட்டேன். ஓ! கோவிந்தா! நமக்குப் பந்துக்கள் எல்லோரு மிறந்த பின்னர் இராச்சியத்தினால் வரத்தக்க பிரயோசனம் என்னுளது? போகங்களினாலும், ஜீவித்திருப்பதனாலும் யாது பயன்?

எங்கட்கு அரசு எவர் நிமித்தமாய் விரும்பப்பட்டுள்ளதோ, போகங்களும் சௌக்கியங்களும் எவர் நிமித்தம் விரும்பப்பட்டனவோ அந்த ஆசிரியர்களும், தந்தையர்களும், புத்திரர்களும், பாட்டன்மார்களும், அம்மான்மார்களும், மாமன்மார்களும், பேரன்மார்களும், மைத்துனர்களும், அவ்வாறே சம்பந்திகள் ஆகிய இவரெல்லோரும் உயிர்களையும் பொருள்களையும் விட்டுப் போர்க்களத்தினிற்கின்றார்கள்.

ஆகையினால், மதுஸூதனா! (என்னைக்) கொல்லுகிறவர்களாயிருந்தபோதிலும், இவர்களை, மூன்றுலகத்தில் இராஜ்ஜியாதிபத்தியத்தினுடைய நிமித்தியத்தினாலும், கொல்வதின் பொருட்டு நான் விரும்பவில்லை. இந்தப் பூமிக்காக என்ன? ஆதலின், நான் அவர்களைக் கொல்ல விரும்பேன்.

[ஶ்லோகத்தில் கேசவன் என்று விளித்தமையால், அழகான மயிர்களையுடையவனாதலால் கேஶவன் என்றும், கேசி என்கிற அசுரனைக் கொன்றதினால் கேஶவன் என்றும், க:-பிர்மா, அ:-விஷ்ணு, ஈஶ:-உருத்திரன்; இம்மூவரையும், வா-சவாதீனத்தில் வைத்திருப்பவனானதாற் கேஶவன் என்றும், க:-பிர்மா, ஈஶ: உருத்திரன் இவர்களை (சிருட்டியாதி காரியங்களில்) பிரவிருத்தித்திருக்கும்படி ஏவுகிறவனானதால் கேஶவன் என்றும் பெயர் வந்தது.]

[மதுஸூதனா! மது என்கிற இராக்கதனைக் கொன்ற காரணத்தால் மதுஸூதனன் என்னும் திருநாமம் வழங்கலாயிற்று.] 26-35

ஜனார்த்தனா! கௌரவர்களைக் கொன்று நமக்கு என்ன மகிழ்ச்சி யுண்டாகும்? கொடும்பாவிகளாக இருப்பினும் இவர்களைக் கொல்வதினால் நம்மைப் பழிபாவங்களே சூழ்ந்து கொள்ளும். ஆதலின், ஜனார்த்தனா! இந்த விஷயத்தில் சிறிதும் எனக்கு உடன்பாடில்லை.'' என்று கூற, அதனைக் கேட்டருளிய கிருஷ்ண பகவான், "அர்ச்சுனா! நான் இது தருணம் சொல்வதைக் கவனிக்கவும். அதாவது:—

[ஆததாயிகளைக் கொலை செய்வதால் பாபம் நேரிடாது. ஆததாயிகள் எனின்:—வீடு முதலியவற்றில் நெருப்பிட்டவன், விஷமிட்டவன், சாஸ்திரங்களைக் கைக்கொண்டு கொல்லவந்தவன், தனத்தை அபகரித்தவன், பூமியையும் மனைவியரையும் அபகரித்தவன், இவர்கள் ஆததாயிகள். இவைகளில் ஒவ்வொன்றைச் செய்தவனைக் கொல்லினும் பாபமில்லை. துரியோதனாதியர் இவ்வாறுவகைப் பாபத்தினும் பூரணரா யிருக்கின்றனர். அரக்கு மாளிகை கொளுத்தினர்; பீமனுக்கு விஷமிட்டனர்; சஸ்திரதாரிகளா யிருக்கின்றனர்; உங்கள் இராஜ்யங்களையும் பொருள்களையும் அபகரித்தனர்; திரௌபதிக்குச் சபையில் மானபங்கம் உண்டாக்கினர். ஆகையால், இத்தன்மையரான மகா பாபிகளைக் கொன்றால் பாபம் இல்லை யென்பதை நன்றாக உணரக்கடவாய்!'' என்று கூறினர்.]

அவ் வார்த்தையைக் கேட்ட அர்ச்சுனன், "கிருஷ்ணா! பேராசையுள்ள இவர்களைக் கொன்றால் நமக்குப் பாபமே யுண்டாகும். நீ கூறியவண்ணம் இவர்களைக் கொல்லத் தொடங்கினும் நிர்த்தோஷராகிய பந்துக்களையுங் கூட இவர்களுடன் கொல்லும்படி யிருக்கும். ஆகையால், திருதராஷ்டிர புத்திரர்களை அவர்களின் பந்துக்களுடன் கொல்வதால் நமக்குத் தீமையே விளையும். ஆதலின் ஏ! ஜனார்த்தனா! கெடுக்கப்பட்ட மனதையுடைய இந்தத் துரியோதனாதியர்களின் வம்சம் நசித்து விடுவதா லுண்டான தோஷத்தையும், நட்புடையார்களைத் துரோகஞ் செய்வதனா லுண்டாகும் பாவத்தையும் அறியாமற் போனாலும், வம்சம் நசித்துப்போவதா லுண்டான தோஷத்தை நன்றாய் அறிகிற நம்மால் இந்தப் பாபத்தி லிருந்து நீங்குவதற்கு எவ்வாறு தெரிந்து கொள்ளாமற் போகக் கூடும்?

குலம் நசித்துப் போகும்போது பழமையான குலதர்மங்கள் முழுமையும் நசித்து விடுகின்றன. தர்மமானது நசித்திருக்கு மளவில் அக்குலத்தவரை அதர்மஞ் சூழ்ந்து கொள்ளுகிறது.

கிருஷ்ணா! அதர்மம் மேலிடுவதால் குலத்திலுள்ள ஸ்திரீகள் பழிப்படைவார்கள். பெண்கள் தோஷமுள்ளவர்களா யிருந்தால் பிராம்மணாதி நான்கு வர்ணங்களின் கலப்புமுண்டாகிறது.

ஜாதி சேர்க்கையானது குலநாசஞ் செய்தவர்களுக்கும், குலத்திற்கும் நரகத்திற்குக் காரணமாகிறது. குலத்தைக் கெடுத்தவர்களுடைய இந்தப் பாபங்களினாலே அனாதியாக விருக்கிற ஜாதியாசாரங்களும் குலாசாரங்களும் அழிந்து போய்விடும்.

ஜனார்த்தனா! குலதர்மத்தைக் கெடுத்த மனிதர்களுக்கு நரக வாழ்க்கையாம். எந்தக் காரணத்தினால் இராஜ்யத்தி லுண்டாகும் சுக விருப்பத்தினால் பந்துஜனங்களைக் கொல்லத் துணிந்தோமோ அந்தக் காரணத்தினாலே பெரிதான பாபத்தைச் செய்யத் துணிந்து விட்டோம்.

ஆகையால், கிருஷ்ணா! ஆயுதபாணிகளாயுள்ள கௌரவர்கள், நிராயுதனும் உயுத்தத்திற்கு முனையாதவனுமாகிய என்னை இவ்விடத்தில்தானே, அதாவது இந்தப் பூமியில் கொல்லுவார்களாயின் அது எனக்கு அதிக சுகமாக விருக்கும்.”

ஸஞ்ஜயன் வாக்கியம்

“இவ்வகையாக அர்ச்சுனன் கூறி, துக்கத்தினால் சலிப்படைந்த மனத்தனாய், பாணத்தோடு கூடிய காண்டீபத்தை எறிந்துவிட்டு, இரு சேனைகளின் மத்தியில் உயுத்தகளத்தில் தேர்த்தட்டின்மீது இருந்துவிட்டான்.” 36-47

முதலாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

# இரண்டாவது அத்தியாயம்

# சாங்கியயோகம்

---

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

காருண்ணியத்துடன் கூடியவனும், கண்ணீர் பெருகுகின்ற விகாரமடைந்த கண்களையுடையவனும், அதுபோலத் துக்கத்தை யுடையவனுமாகிய அவ் வர்ச்சுனனை நோக்கி ஸ்ரீ கிருஷ்ண பகவான் பின் வருமாறு சமாதானம் கூறினர்:— 1

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"ஓ அர்ச்சுனா! சூரனுக்குத் தகுதி யல்லாததும், அறிவினர் களால் அடையத்தக்கதும், சுவர்க்கத்திற்குத் தடையாவதும், அபகீர்த்தியை யுண்டாக்கத்தக்கதுமாகிய இவ் விபரீதமானது எக்காரணத்தால் அகாலத்தில் உன்னை யடைந்தது? 2

அர்ச்சுனா! கிலேசத்தை யடையாதே! உன்னிடத்தில் இஃது (இந்தக் கிலேசமானது) தக்கதல்ல. துச்சமான சிந்தா குலத்தைவிட் டெழுந்திரு!" 3

அர்ச்சுனன் வாக்கியம்

"சத்துருக்களைக் கொல்லும் சுவபாவமுடைய, மது என்னும் அசுரனைக் கொன்ற மதுஸூதனா! பூசிக்கத் தகுந்த பீஷ்மரையும், துரோணாசாரியரையும் உயுத்தத்தில் எவ்வாறு பாணங்களினால் எதிர்த்து யுத்தஞ் செய்யப்போகிறேன்? 4

மிகுந்த மகிமையுள்ள ஆசாரியர்களைக் கொல்லாமல், இந்த உலகத்தில் பிச்சை யிரந்தாகினும் உண்பது சிறப்புடையதாம். அவ்வாறின்றி ஆசாரியர்களைக் கொன்றால் இம்மையிற்றானே உதிரந் தோய்ந்த பொருளிச்சா சொரூபமான போகங்களை உண்பவனாவேன்.

[கருத்து:—அன்னபானாதிகள் கொடுத்துப் போஷித்தமையால் பீஷ்மரும், வித்யையைப் போதித்ததால் துரோணரும் பூசிக்கத்தக்கவர்கள். இவர்களைப் பூக்களால் பூசியாதிருத்தலே தவறாகவிருக்க, இனி இவர்களைக் கொல்லுதல் பரம தப்பிதம் ஆகும்.] 5

எவர்களைக் கொன்று ஒருபோதும் உயிர் வாழ்வதற்கு விரும்பேமோ அத்தகைய துரியோதனாதிகள் நமக்கெதிரில் நிற்கின்றனர். (அங்ஙனம் கௌரவர்களைக் கொன்று யாங்கள் புத்திர மித்திரர்களுடன் பட்டாபிஷேகராய் வாழ்வோ மென்கிற திண்ணமும், பீஷ்மாதிகள் மஹா பராக்கிரமசாலிகளாகலின், கூடாது.) நாம் சத்துருக்களான துரியோதனாதியரை வெல்வோ மென்பதும், கௌரவர்கள் நம்மை வெல்வார்க ளென்பதும் ஆகிய இந்த நிச்சயத்தை அறிவோமில்லை.

[இப்படிப்பட்ட நிச்சயமற்ற சந்தேகத்தினால் நமக்கு முற்கூறிய அறங் கலந்த பிச்சையோ, அன்றி மறங் கலந்த இராஜைசுவரிய போகங்களோ யாது சிறப்பாயது? என்றால், யாவரையுங் கொன்று பின்னர் அனுபவிக்குஞ் செல்வங்களைக் காட்டினும் பிச்சை யேற்று உண்டு உயிர் வாழ்வதே சிறப்பாகும்.] 6

மேலும், பெரியோர்கள் முதலிய நல்லோர்களது உயிர்களை இராஜ்யாபேக்ஷையினாற் கொன்று நாம் சுகப்படுவது தருமமல்ல என்கிற துக்கத்தினாலும், அதினாலுண்டாகும் பாவத்திற்கு அச்சமுற்றும், நசித்த சுபாவமுடைய யான் தக்கது இது என்கிற விஷயத்திற் சந்தேகமுடையவனாய்த் தேவரீரை வினவுகின்றேன்: அது எதுவெனின், எது செய்வதற்குச் சிரேயசாக விருக்குமோ அதைச் சொல்வீராக! உமக்கு யான் மாணாக்கனாகின்றேன். தேவரீரைச் சரணமாக அடைந்த என்னைத் தெளிவுடையவனாகச் செய்தல்வேண்டும்.

[“கிருஷ்ண! நான் கார்பண்ய தோஷத்தால் என் சுவபாவங் கெட்டுத் தர்மத்தில் சந்தேகத்தை யடைந்த மனத்தினால் உன்னை வினவுகின்றேன். எது மேலானதோ அதனை நிச்சயமாகக் கூறும். உனக்கு நான் சீடன். உன்னை ஆச்ரயித்த (சரணடைந்த) எனக்கு உபதேசஞ் செய்யும்.”]

[குறிப்பு:—இச்தச் சுலோகத்தில், “யுத்தமா? பிக்ஷையா? எது உயர்ந்தது?” என்று கேட்டபோது ஸ்ரீ கிருஷ்ண பகவான் ப்ரஹ்மரஹசியங்களை வெளியிட்டனர். இதற்கு மற்றோர் பொருளுமுளது. அஃது யாதெனில், ‘கார்பண்யம்’ என்றால் வேதாந்த விசாரங்களில்லா திருத்தல்.]

[ஸ்வபாவம்:—ஜீவாத்மா, தர்மம் - ஈஸ்வரன். வேதாந்த விசாரமில்லாததால் ஜீவாத்ம ஈஸ்வர விஷயத்தில் சம்சயமுள்ளதாயிருக்கின்றது. ஆகையால், பிரம்ம ஞானத்தைக் கூறுமென்பது கருத்து.] 7

கிருஷ்ணா! தேவேந்திரனையும், அன்றி பிரம்மலோக மாயி ...ம், அதாவது இந்திரன் முதல் இரணியகர்ப்ப பரியந்தமான, சம ...க தேவதைகளின் ஐசுவரியங்களை அடைவதிலும் பிரயோஜன ...ல்லை. ஏனெனில், இந்திரியங்களைச் சோஷிக்கச் செய்யும் (வருத்தா ...ற்கும்) இந்தச் சோகத்தை தீர்க்கத் தக்கது எதுவோ அது எனக் ...த் தெரியாது.

[கருத்து:—எந்தச் சுகத்தை என் இந்திரியத்துடன் அநுபவிக்க வேண்டும்? மனம் துக்கத்தில் இருப்பதால் எந்த இந்திரியங்களுக் கும் சுகம் உண்டாகா தென்பது கருத்து.] 8

இவ்வாறாதலினால் வேதாந்த விசாரமே தக்கது. இதையே ...னக்குப் போதியும்" என்று அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக் ...க் கூறி மாறு பேசாம லிருந்தான்.

[அப்போது சஞ்சயன் திருதராஷ்டிரனைப் பார்த்துக் கூறியதாவது:—சத்துருக்கள் தவிக்கும்படி யுத்தஞ் செய்பவனும் (அநித்திய வாழ்வை நித்தியமென் றிருக்கும் ஜீவ சுவபாவமான உறக்கத்தை யொழிக்குங் காலம் வாய்த்தமையால்) அஞ்ஞான நித்திரையைச் செயித்தவனுமாகிய அர்ச்சுனன், பகவானை நோக்கி, முற் கூறியபடி சொல்லி, மீண்டும் பகவானைப் பார்த்து, "யுத்தஞ் செய்யமாட்டேன்" என்று கூறி, தற்போது மற்றவனாக (மௌனமாக) இருந்து விட்டான்.] 9

### சஞ்சயன் வாக்கியம்

"ஓ! திருதராஷ்டிர மகாராஜாவே! இருதிறத்துச் சேனையினடுவே ...வ்வாறு துன்புற்று நின்ற அர்ச்சுனனை நோக்கி ஸ்ரீ கிருஷ்ண ...கவான் புன் சிரிப்புடன் கீழ் வருமாறு சொல்லத் தொடங்கினார்.

[கருத்து:—இந்தச் சுலோகத்தில், ப்ரஸந்நிவ 'பரிகாசஞ் செய்பவனைப்போல' என்றிருக்கிறது. இவ்விடத்தில், 'இவ்' வாக்கியாலங்கார மெனவும், ஆகையால், இந்தப் பதத்திற்குப் பொருள் கூற வேண்டுவதில்லை யெனவும், இவ்வாறு இந்தப் பதத்தை விடுவதால் அர்ச்சுனன் மனம் யுத்தத்தில் மாறினதால் ஸ்ரீ கிருஷ்ணபகவான் சிரித்தா ரெனவும் பாவப் படுகின்றது.]

[அன்றி, "இந்த விஷயத்தை ஆசாரியன் கூறுவதுபோ லல்லாமல் பரிகாசமாக வார்த்தையாடிக்கொண்டு கூறினன்" என்பது ஸ்ரீ ராமாநுஜர் கொள்கையாம். பரிகாசம் எற்றுக்கோ வெனில், "அர்ச்சுனனுக்கு இன்னமும் பக்தி திடப்படவில்லை" என்பது இவரது அபிப்பிராயம்.]

[ரூபத்தில் என்னையுங்கூட வேண்டிக்கொள்வர். அவ்வளவில், ஸதா அவனுக்குத் தாசனா யிருப்பதற்குக் கோறார்கள். ஆகை யால், அந்தப் பதத்தில் காட்டப்பட்ட பக்தி நம்பத்தக்க தன் றென பாவம்.]

[அர்ச்சுனன் இதற்கு முன்னமே தான் பிரபன்னனென்று கூறின தால் அவனிடத்தில் சந்தேகித்தல் தகாதாகையால், சகல சாஸ்திரங்களையும் விருதா காலயாபனஞ் செய்பவரைப்போலப் போதித்தா னென்று ஒருவித கொள்கையாகும்.]

[சகல தத்துவங்களையுஞ் சோதித்த ஆசாரியன் மாணவனுக்குப் போதிப்பதுபோல லீலையாய் உபதேசித்தானென்று மற்றோர் கருத்தாகும்.]

[தேகேந்திரியங்கள் தத்தம் மாத்திரைகளின் வியாபாரங்களி னின்று சேர்ந்தவைகளாகவும், கரணங்கள் தத்தம் விருத்திகளின் பிரேரக மற்றவைகளாகவும், போதம் பதைப்பற்றதாகவும், முன்னரே உடல் பொருள்களை ஸ்ரீ கிருஷ்ண பரப்பிரமத்தின் பால் வைத்த பரம பக்தியானே தத்தஞ் செய்து அவரது ஆஞ் ஞையை முடியாக வகித்து, இதுவரையில் நடந்து கொண்டதா லுண்டான பக்குவ மேலிட்டதால் இது தருணத்தில் நின்ற ஆவி யையும் பகவானுக்கே தத்தஞ் செய்து தற்சுதந்தர மிழந்து நிற்கு மாணாக்கனை அர்ச்சுனனது அதிதீவிர பக்குவத்தை யுணர்ந்த "தூஷ்ணீம்பஹ பூவஹ" "மௌனமாயிருந்தான்" என்றது. இங்கு 'ஹ' என்றது, "இராஜ குமாரனும் விஷய போகத்தில் மட்டில் லாத பிரபல முடையவனும், அசகாய சூரனுமான அர்ச்சுனன் வேதங்களாலும் அறிவதற்கருமையான பிரம்ம ஞானத்தை ஸ்ரீ பகவான் திருவாக்காலே அடைவதற்கு, ஆ! என்ன புண்ணியஞ் செய்தானோ!" என ஸஞ்ஜயன் அடைந்த ஆச்சர்யத்தை விளக் கிக் காட்டியது.]

[திரிபுரத் தானவரைத் தேவர்களின் பொருட்டு அவர்களின் கர்வத் தைப் போக்குமாறு சிவன் நகை செய்தருளியபோது அது பொடி பட்டவாறு, இஞ்ஞான்று அர்ச்சுனனுக்காக அவனது தூல சூக் கும காரண உபாதிகளான முப்புரத்தை நீறாக்கக்கருதிய கருணை யங் கடலான ஸ்ரீ பகவான் புன்சிரிப்புள்ளவரைப்போல "இத வசம் உவாச" இது சொல்லின ரென்றதாம். இங்கு "இவ" போல, என்றதின்: அன்று திரிபுரத்தைச் சிரித்தெரித்தமை வரு விக்கப்பட்டது.]

[தீக்ஷை யென்பது: உபதேசம். இது ஐவகைப்படும். என்னை; சொரூப தீக்ஷை, மானத தீக்ஷை, சக்ஷுஷ தீக்ஷை, பரிச தீக்ஷை, கிரியா தீக்ஷை என்பனவாம்.]

[இனி, (1) சொரூப தீக்ஷையாவது:—பரமகுரு அநுபவாதீதமான சகச சுபாவசித்தனு யிருக்க, அவர் சந்நிதியில் பரிபாக விசேடத்தானே நின்ற சாங்குசித்தனுகி உத்தமாதிகாரியான சீடனும் அங்ஙனே அநுபவசித்தனுய் விளங்கி யிருத்தலாம்.

(2) மானத தீக்ஷையாவது:—ஆசாரியர்தானே மாணவனது புத்தியில் அனுப்பிரவேசித்து அவனது அந்தரங்கத்தில் சின்மயத்தைப் பிரகாசித்துத் தானுக அவனது சைதன்னியத்தை வியாபித்துக்கொண்டு நோக்கலும் அச் சீடனும் அங்ஙனே விளங்கிடுதலாம்.

(3) சக்ஷுஷ தீக்ஷையாவது:—அங்ஙனமாய் அனுபூதியையுடைய திருஷ்டியோடும் சீடனே, அவன் சேவித்து நின்றபோதெல்லாம் ஆசிரியர் நோக்கியருள, அச் சீடனும் ஆசிரியரது அநுபூதி நிலையை அடைந்திடுதலாம்.

(4) பரிச தீக்ஷையாவது:—ஆசிரியரை அபிஷேக அலங்காராதிகளால் மகிழச்செய்த காலத்தில், அநுபவதிருஷ்டி யுல்லாசத்தோடும் அவர் தமது அஸ்தந் திருவடிகளே மாணுக்கனது முடியிற் சாத்தியருள, அவனும் உள்ளபடி அநுபூதியுடையனுதலாம்.

(5) கிரியா தீக்ஷையாவது:—பிரம்ம வேத்தாவானவர் அபரோக்ஷாநுபவ சித்தமான சுவபாவத்தோடு மிருக்குங்கால், சிரவண மனன நிதித்தியாசன சமாதி முதலியன தொடங்கி அகலாதவருடன் வசித்தல், அவரைச் சதா வுபசரித்தல் முதலியவற்ருேடு அவரது சொற்களை யெல்லாம் பொருளாகக் கொண்டு, உபதேசம் மனதில் நிலைபெறச் செய்துகொண்டு, துவைத வாசனு பீஜமான அஞ்ஞானம் நசித்தவனுய், உடலந்தம் அவரைக் காத்து நிற்பதினுல் சீடன் அநுபூதியுடையனுதலாம்.]

[இனி, புன்சிரிப்புக் கொண்டவரைப்போற் கூறினு ரென்ற தீக்ஷா விசேடத்தானே, பரம குருவாக ஸ்ரீ பகவான்: ஆமை, மீன், பறவைப்போலத் திருவுளத்திற் கருதுதல், கருணைக் கண்ணுல் நோக்குதல், அஸ்தத்தால் மத்தகத்தைப் பரிசித்தல் முதலியவும் புரிந்தனரென்பது வைதிக மரபாதலின் உடன் கொள்ளுவதுவுமா மென்க.] 9-10.

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"ஓ! அர்ச்சுனு! நீ துயரப்படத் தகாத விஷயத்தில் துயர்கின்றனே. தேகாத்ம விவேகத்தினுல் சொல்லக்கூடிய வார்த்தைகளையும்

கூறுகின்றாய். பண்டிதர்கள் (ஆத்மானாத்ம விவேகிகள்) தேகங்களைப் பற்றியும் ஜீவாத்மாக்களைப்பற்றியும் (அதாவது, இறந்தவர்களையும், உயிரோடிருப்பவர்களையும் குறித்து) துக்கமடைய மாட்டார்கள். நீ விசாரிக்கத் தகாத வஸ்துக்களைக்குறித்தும் விசனமுறுகின்றனை.''

[குறிப்பு:—தேகம், ஆத்மா இவைகளின் சுவபாவத்தை அறிந்ததனா லுண்டாகக்கூடிய வார்த்தைகளைச் சொல்லுகிறாய்; தேகம், ஆத்மா இவைகளின் சுவபாவத்தைத் தெரிந்து கொண்டவர்களுக்கு இவ் விஷயத்தில் விசனமடைவதற்குக் காரணமொன்று மில்லை. தேகங்களைப்பற்றியும், ஆத்மாக்களைப்பற்றியும் அவற்றின் சுவபாவமான தன்மைகளைத் தெரிந்தவர்கள் விசனப்படுவதில்லை. ஆகையால், ஒன்றுக்கொன்று விரோதமான இந்த இரண்டும் உன்னிடத்தில் தெரியலாயின. எதுவென்னில், 'இவர்களைக் கொல்லப் போகிறேன்' என்று நீ துக்கிப்பதும், தேகத்தைவிட வேறென்று தெரிந்துகொண்டு, அதனால் தர்மாதர்மத்தைப் பற்றிப் பேசுவதுமேதான். ஆகையால், தேகத்தின் சுவபாவத்தையும், அதைக்காட்டிலும் வேறாய் நித்தியமான ஆத்மாவையும், அதை அடைவதற்குக் காரணமான உபாயமாகிய யுத்தம் முதலிய தர்மத்தையும், நீ அறிந்து கொள்ளவில்லை. பலத்திலாசை யில்லாமல் செய்யப்படுகிற இந்த யுத்தம் ஆத்மாவின் உண்மையான சுவரூபத்தை யடைவதற்கு உபாயமா யிருக்கிறது. ஆத்மாவோ பிறப்பினா லுண்டாகும் உற்பத்தியும், மரணத்தினா லுண்டாகும் அழிவு மில்லாதது. எனெனின், அந்த ஆத்மாவுக்கு உற்பத்தியும் மரணமுமில்லை யாகையால், அவ் ஆத்மாவைப்பற்றி நீ துக்கிக்க வேண்டியதில்லை. அசேதனமாகிய தேகமோ, மாறுதலையே சுவபாவமாக உடையது; அதற்கு உற்பத்தி விநாசங்கள் உண்டாவது சுவபாவத்திலேயே ஏற்பட்டது. ஆகையால், அதைப் பற்றியும் நீ துக்கிக்க வேண்டியதில்லை. மேலும், வெளி மயக்காகிய மண் முதலிய பஞ்சபூத விகாரத்தினால் அமைந்த பொம்மை யுருவங்களை மனிதர் முதலிய பேதங்களாகப் பகுத்துத், தன்மையி லொன்றைத் தானெனவும், ஏனை வேற்றுருவங்களில் சிலவற்றைத் தாய் தந்தையர்க ளெனவும், சிலவற்றைத் தாரம் மகவெனவும், சிலவற்றைச் சுற்றந் தமரெனவும், சிலவற்றை அன்னியர் பகைவரெனவு மதித்து, அதனால் விளையும் ஆக்கக் கேட்டினது சுகதுக்கானுபவத்தைச் சுதந்தரித்து, ஜனன மரண மென்கிற பிரவாகப் பேரிருட் பிழம்பில் திகைத்துத் தடுமாறுவது ஜீவ சுவபாவமாம். நீயும் இது

விஷயமாய் மனம் நைகின்றனை. இதனை நீ விட்டொழியக் கடவாய்!] 11

"நான் ஒருகாலத்திலாவது இல்லாமற் போனதில்லை. நீயும் இல்லாமற் போனதில்லை. போர்முகத்தில் நிற்கின்ற இந்த அரசர்களும் இல்லாமற் போனதில்லை. நாமெல்லோரும் தேகமழிந்த பின்னும் இல்லாமற் போகின்றோமென்பது மில்லை."

[குறிப்பு:—எல்லாவற்றிற்கும் கட்டளை யிடுபவனுகிய நான் இப்பொழுது நடக்கிற காலத்திற்கு முந்தியதாயும், அநாதியுமான காலத்தில் இருக்கவில்லை யென்பதில்லை; அதாவது, இருந்து கொண்டே யிருந்தேன். நியமிக்கக்கூடிய ஜீவர்களும் இருக்க வில்லை யென்பதில்லை; இருக்கவே இருந்தீர்கள். நானும் நீங்களுமாகிய எல்லோரும் இதற்குப் பிறகு வருங் காலத்திலும் இருக்கப்போகிறதில்லை யென்பதில்லை; அதாவது இருக்கவே போகிறோம். எவ்வாறு எல்லா வஸ்துக்களையும் நியமிக்கிற பரமாத்மாவாகிய நான் நித்தியனென்கிற விஷயத்தி லில்லையோ, அவ்வாறே க்ஷேத்திரஞ்ஞரென்று சொல்லப்பட்ட ஜீவாத்மாக்களாகிய நீங்களும் நித்தியர்களென்றே நினைக்கவேண்டும்.]

[குறிப்பு:—இவ்வாறு சர்வேஶ்வரனுகிய பகவானுக்கும், ஜீவர்களுக்கு முள்ள பேதமும், ஜீவாத்மாக்களுள் ஒவ்வொரு ஜீவனுக்கு முள்ள பேதமும், உண்மையென்று பகவானலேயே சொல்லப்பட்டதென்று விளங்குகிறது; எனெனில், அஞ்ஞானத்தால் மோகித்துக் கிடக்கிறவனைக் குறித்து அந்த அஞ்ஞானம் நீங்குவதற்காக, உண்மையான நித்யத்வத்தை உபதேசிக்குஞ் சமயத்தில், நான், நீ, இவர்களெல்லோரும் நாம் என்று சொல்லி யிருக்கிறபடியால், ஆத்மாக்களுக்குப் பேதம் ஔபாதிகம்; அதாவது காரணத்தினு லுண்டானது. 'சுவரூபத்தில் பேதமில்லை' என்று சொல்லும் பக்ஷத்தில் ஆத்மாக்களுக்குப் பேதம் பொய்யாகையால், உண்மையை உபதேசிக்குஞ் சமயத்தில் பொய்யாகிய பேதத்தைச் சொல்வது பொருந்தாது.]

இவ்வாறு பகவானல் அருளிச் செய்யப்பட்ட பேதமானது சுவபாவத்திலேயே ஏற்பட்டதென்று நித்தியர்களாயும், அறிவுள்ளவர்களாயும், அநேகர்களுமான ஜீவர்களுக்கு நித்தியனுயும், சேதனனுயும், ஒருவனுயுமிருக்கிற எந்தப் பரமாத்மா இஷ்டங்களைக் கொடுக்கிருனே என்று அர்த்தமுள்ள சுவேதாசுவதர உபநிஷத்தில் கூறியுள்ளது. 'அவித்தையினுல் பேதத்தைப் பார்க்கிருன்' என்று சொல்லும்பக்ஷத்தில், உண்மையைக் கண்டறிந்த பரமபுருஷனுக்குப் பேதங்களொன்று மில்லாமல், கூடஸ்தனுய்,

நித்தியனாய், ஞானஸ்வரூபனான தன்னுடைய வுண்மையை எப்பொழுதும் தான் பார்த்துக் கொண்டிருப்பதினால். அஞ்ஞானமும் அதன் காரியங்களும் நீங்கிவிட்டபடியால், அஞ்ஞானத்தினால் பேதத்தைப் பார்ப்பதும், உபதேச முதலியவைகளும் பொருந்தாது. 'எல்லாம் ஒன்று' என்கிற அறிவைப் பரம புருஷனுக்கு, அத்வைத ஞானத்தினால் பொய்யென்று ஞானமுண்டாயிருந்தாலும், முன் வாசனையினால் உலகம் பேதப்பட்டதாகவே தோன்றும்.

“மடிப்புடனே கூடிய வஸ்திரத்தைக் கொளுத்திவிட்டால் அது பார்வைக்கு வஸ்திர மடிப்புப்போ லிருந்தபோலும். உடுத்துகிறது முதலிய காரியங்களுக்கு அது உபயோகப் படாதது போல, இந்தப் பேதஞானம் சம்சார பந்தத்தை உண்டாக்காது” என்று கூறுவோமாகில், அதுவும் யுக்திக்கு ஒத்திருக்கிறதில்லை. கானலைப் பார்க்கும்போது ஜலமென்னும் புத்தி உண்டாகிறது; அது ஜலமல்ல வென்கிற சரியான புத்தியினால் மறுத்த பிறகு முன் வாசனையினால் கானலைப் பார்க்கும்போது ஜலமென்று தோன்றினாலும், ஜலத்தைக் கொண்டுவரப் பிரவிர்த்தி செய்வதற்கு அது காரணமாகாது.

“ஈஸ்வரன் முன்பு கொஞ்சகாலம் அறியப்படாமலிருந்து, பின்பு சாஸ்திரத்தினா லுண்மையைத் தெரிந்து கொண்டவனாகையால், அவனுக்குப் பாதிதானுவிருத்தி உண்டாகலாம்” என்று சொல்ல முடியாது; ஏனெனில், எவன் எல்லா வஸ்துக்களையும் தெரிந்து கொண்டவனோ அந்தப் பரமாத்மாவின் சக்தி உயர்ந்ததாகவும் பலவிதமாகவும் கேட்கப்படுகிறது. “சுவபாவத்திலேயே ஏற்பட்டதான ஞானம், பலம், கிரியை இவைகளும் கேட்கப்படுகின்றன” என்று அர்த்தமுள்ள சுருதி வாக்கியங்களும், “சென்று போயினவும், இருக்கின்றனவும், வரப்போகின்றனவுமாகிய பிரபஞ்சங்களை நான் அறிவேன்; என்னையோ ஒருவனுமறிய மாட்டான்” என்று 7-வது அத்தியாயம். 24-வது சுலோகத்தில் கூறப்போகிற வார்த்தைக்கு விரோதம் வரும்.

மேலும், பரம புருஷனும் இப்பொழுதிருக்கிற ஆசாரியர்களுடைய பரம்பரையும், ஆத்மாவைத் தவிர வேறு வஸ்துக்களில்லை யென்கிற உண்மை யிருக்கும்பொழுது பேதஞானம் தொடர்ந்து வந்தாலும், தங்கள் தங்கள் நிச்சயத்திற்குத் தக்கபடி ஆத்மாவைத் தவிர வேறு பொருளில்லை யென்று யாருக்கு உபதேசிக்கிறானென்று கேட்டால், பதில் கூறவேண்டும். 'பிரதிபிம்பம்போல் கண்ணுக்குப் புலப்படுகிற அர்ச்சுனன் முதலியவர்களுக்கு உபதேசிக்கப்படுகிறது' என்பதும் சரியல்ல.

பைத்தியம் பிடியாத எவனும் இரத்தினம், கத்தி, கண்ணடி முதலியவைகளில் தோன்றும் தங்கள் பிரதி பிம்பங்கள் 'தங்களை விட வேறல்ல வென்று தெரிந்துகொண்டு, அவைகளுக்கு ஒன்றையு முபதேசிக்க மாட்டானல்லவா?' 'பாதிதானுவிருத்தியு முண்டு' என்று அவர்களால் சொல்ல முடியாது. ஏனெனில், 'பிரபஞ்ச மில்லை என்று தடுக்கிற ஆத்மாவைத் தவிர வேறு பொருளில்லை' என்கிற ஞானத்தினல் ஆத்மாவைத் தவிர வேரு யும், அனுதியுமான இந்தப் பேத ஞானத்திற்குக் காரணமாகிய தோஷமும் நாசமு மடைந்துவிட்டபடியால், சந்திரனை இரண் டாகப் பார்ப்பதிலேயோ, சந்திரன் ஒன்றென்று தெரிந்து கொள்வதால், அப்படிச் சந்திரனை இரண்டாகப் பார்ப்பதற்குக் காரணமாகிய உண்மையான திமிரம் முதலிய தோஷம் நாச மடையா திருத்தலால், பாதிதானு விருத்தி சொல்லலாம். (அதா வது, காரண மில்லாவிட்டால் காரிய மாகாதென்ற அபிப்பிரா யம்); அவ்வாறு சந்திரனை இரண்டாகப் பார்ப்பது தொடர்ந்து வந்தாலும், அவ்வா றில்லையென்று அதிக பலமுள்ள பிரமாணத் தால் மறுக்கப்பட்டபடியினல் ஒரு காரியமும் செய்கிறதில்லை. இவ்விடத்திலேயோ பேத ஞானமும் அதற்கு விஷயமாகத் தோன்றுகிற பேதங்களும் இந்தப் பேத ஞானத்திற்குக் காரண மாகிய தோஷங்களும் பொய்யாகையினல் பொருளி னுண்மை யைத் தெரிந்து கொள்வதினல், அதாவது, நாசஞ் செய்யப்பட்ட படியினல், ஒரு வழியாலும் பாதி தானுவிருத்தி சம்பவிக்காது. ஆதலின், சர்வேஶ்வரனுக்கோ, அன்றி இப்போதிருக்கும் ஆசாரி யர்களின் பரம்பரைக்கோ தத்துவஞான மிருந்தால் பேதங்களைப் பார்க்கிறதும், அதினு லுண்டாகு முபதேச முதலியவைகளும் சம்பவிக்காது. இல்லையெனில், அஞ்ஞானமும் அதன் காரிய மாகிய பேத தர்சனமு மிருந்தாலும், தான் தெரிந்து கொள்ளா மையினல் உபதேசஞ் செய்வதற்குச் சரிப்படாது.

மேலும், 'ஆசாரியனுக்கு, ஆத்மாவைத் தவிர வேறு பொருளில்லை' என்கிற ஞான முதயமானபடியினலேயே, பிரம்மத்தின் அவித்தை யும் அதன் காரியமான பிரபஞ்சமும் நாசஞ் செய்யப்பட்ட படியி னல், சிஷ்யனைப்பற்றி உபதேசஞ் செய்வது பிரயோசனமற்றது. ஆசாரியனும் அவனுடைய ஞானமும் அவித்தையினு லுண்டாக் கப்பட்டபடியினல், பிரம்மத்தின் அவித்தையைப் போக்கச் சக்தி யற்ற தாகிவிடும். 'அவித்தையினு லுண்டாக்கப்பட்டதா யிருந் தாலும், இதற்கு முன் உண்டாகிய அஞ்ஞானத்திற்கு இது விரோதியாகையால், அதைப் போக்கலாம்' எனின், இது ஆசாரியனுடைய ஞானத்திற்கும் பொதுவாகையால் அதற்கு

முன்னிருந்த அஞ்ஞானத்தைப் போக்கடிக்கலா மாகையால் உபதேசம் பிரயோசன மற்றதுதான். இவ்விதமாக யுத்திக்கு ஒத்திராத வார்த்தைகளுக்குப் பதில் சொன்னது போலும். [ராமாநுஜர்]

[ஸ்ரீ சங்கரபாஷ்யக் குறிப்பு:—உடம்பினை நானெனக்கொண்ட மூடமாகிய அதிஷ்டானஞ்ஞானமே பல அனர்த்தங்கட்குக் காரணமான பேத புத்தியைத் தந்து விபரீதப்படுத்துவதாகலின், பஞ்சபூத காரியமாகிய உடம்பினையும் ஞானேந்திரிய கருமேந்திரிய அந்தக் கரணங்களையு பேதிகளைந்து, அங்ஙனம் பேதிகளை தற் குடன்படாத ஆத்ம தத்துவத்தை யறிந்தாயாயின், 'நாமெல்லோரும் ஒரு காலத்திலாயினும் இல்லாமற் போனதில்லை; அல்லாமல், தேக மழிந்த பின்பும் இல்லாமற் போவதுமில்லை' என்பதை அபரோக்ஷமாக அறிவாய் உடம்புகள் தோறும் நானென அறிவாய் நிற்கும் ஆன்மா ஒன்றேயாம். தேகத்தை முன்னிட்டுத் தன்மையிடனும், முன்னிலையிடனும், படர்க்கையிடனும், ஆண் பெண் முதலிய பால் வகுப்புகளும் ஆன்மாவினிடத்து அவித்தையினால் கற்பிக்கப் பட்டதேயன்றி இந்தப் பேதபாவனை விபரீதங்கள் பரமார்த்தத்தில் சசவிஷாணத்தைப் போன்ற மித்தையேயாம் என்றதாம். இதனால், பிறவி தொடங்கி தேகோக பாவனை விபரீதத்தா லுண்டாகிய நான், நீ, அவர்கள் என்கிற பேத ஞானத்தைத் தத்துவோப தேசத்தாற் கழற்றி மாணாக்கனுக்கு அபேத அத்துவித அபரோக்ஷ சாக்ஷாத் காரானுபூதியை உபதேசித்ததாம்.

"அபேத ஞானமாகிய அத்துவிதமே பரமார்த்தம்" என்பதற்கு யோக சிகோபநிஷத்திற் கூறியதாவது:—சைதன்னியமானது ஒன்றே யாகலின் அதிற் பேதஞ் சாதிப்பது ஒரு காலத்தினும் பொருத்த முடைத்தன்று. பழுதையி னிடத்திற் பாம்பென்கிற தன்மைபோல, ஜீவத்துவம் (பிரமத்தி னிடத்துத் தோற்றமான பொய்யென்று) அறியத் தக்கதாம். இது கயிறு என்கிற ஞான மில்லாமையின் ஒரு கணத்திற் கயிறே சர்ப்பமாகக் காணப் படுகின்றது. அதுபோல் கேவலம் சித்தே பிரபஞ்சமாக விளங்குகின்றது. பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம் (கடத்திற்கு மண் உபாதானம் போல) பிரமத்தை யன்றி அயலில்லை ஆதலின், இந்தச் சகல பிரபஞ்சமும் பிரமமாகவே யிருக்கின்றது, அயலில்லை. சகலமும் ஆத்மாவாகச் சொல்லப்பட்டிருத்தலின் வியாப்பிய மென்பதும், வியாபகமென்பதும் மித்தையேயாம்

பரத்துவமானது இங்ஙன மறியப்பட்டால் பேதஞ் சொல்ல இடமேது என்றதனாலும், பேதத்தைத் தோற்றுவிக்கும் துவித ஞானமானது அவிவேகமாக வுண்டானதன்றி அது பரமார்த்தமாகா தென்பதற்குப் பிரமாணம். மாண்டுக்கியோபநிஷத்து: "பலவாகத் தோன்றும் இந்தத் துவிதமானது மாயாபந்திரமே. இரண்டாவதில்லை யென்கிற அத்துவிதமே பரமார்த்தமாம்" என்றதனாலும்,

"ஈஸ்வரனே தேகத்தளவாகப் பல ஜீவர்களெனப்படும்" என்றதற்குப் பிரமாணம்: நிராலம்போபநிஷத்து: "ஈஸ்வரனே: பிரமா, விஷ்ணு, உருத்திரன், இந்திரன் முதலிய நாமரூபத்தினால் "நான் தூலதேகமாக விருக்கிறேன்" என்கிற தூலாத்தியாசத்தினால் ஜீவனாகின்றான். அவன் ஒருவனேயாயினும், தேகோற்பத்திக்குக் காரணமான கருமபந்தத்தினாற் பல தேகங்களிற் பல ஜீவர்களாகக் காணப்படுகின்றான்." (ஏரி, குளம், சால், சட்டி, குடத்தின் ஜலசந்திரன்போல) என்பதனாலும்,

மஹா நாராயணோபநிஷத்து:—"எவ்வாறு தங்கமானது கடக மகுடாதிகளாகக் காணப்படுகின்றதோ, எவ்வாறு சமுத்திர ஜலமானது பேரலை சிற்றலைகளாகவும், நுரை குமிழி திவலைகளாகவும், உப்பாகவும் பாறைகளாகவும், மற்று மனேகவகைப் பொருள்களாகவும் காணப்படுகின்றதோ, எவ்வாறு மண்ணானது பருவதமாகவும், விருக்ஷமாகவும், திரணமாகவும், புதலாகவும், கொடி முதலிய அநேகவகைப் பொருள்களாகவும் காணப்படுகின்றதோ, அவ்வாறே அத்துவித பரமானந்த இலக்கண பரப்பிரமமாகிய நானே சகலமு மாகின்றேன்; சகலமும் என் சொரூபமே; எனக்கு அயலாக அணுத்துணையுமில்லை என்பவற்றினாலும்,

ஜீவன்: பிரமத்தின் பிரதிபிம்பமன்றிச் சுயஞ்சத்தை யுடையதாய்ப் பிரமத்துக்கு வேறாக இரண்டாவ தொரு முதலன்று என்பதற்கு ஷை உபநிஷத்தில் (மாயை வித்தைகளில்) பிரம சைதன்னிய பிரதிபிம்பங்களே ஜீவர்களென்று சொல்லப்படுகின்றன. சகல ஜீவர்களும் அந்தக் கரணத்தை யுபாதியாக வுடையவர்களா மென்பதனாலும்,

[ஸ்ரீசங்கரர்:—பேதஞானமானது சுருதி, யுத்தி, அநுபவங்களால் விலக்கப்பட்டுள்ள தென்பதைக் கண்டு தெளிக.] 12

"ஜீவனுக்கு இந்தத் தேக சம்பந்தத்தினால் காளைப்பருவமும், யௌவனமும், வார்த்திகமும் எத்தன்மையோ அத்தன்மையாகவே இறந்து மற்றொரு சரீரத்தை யடைதலும், மேற் கூறியுள்ள பருவங்

கள் போலவே ஈதுமொரு பருவமாகலான் விவேகியானவன் சோகமடைவதில்லை.''

[உள்ளுரை:—''ஓ! குந்தி புத்திரா! இந்திரியங்கட்கு விஷயங்களோடு சம்பந்தங்கள், சீதோஷ்ணம், சுக துக்கம் என்பனவற்றை உண்டு செய்கின்றனவாயும், வரத்துப் போக்குள்ளனவாயும், நிலையற்றனவாயு மிருக்கின்றன. ஆதலால், ஓ! பார்த்தா! அச் சீதோஷ்ணாதிகளைப் பொறுத்துக்கொள், ஓ! புருஷ சிரேஷ்டனே! இவைகள், சுக துக்கங்களைச் சமமாக எண்ணிய விவேகியான எந்தப் புருஷனைப் பாதிக்கமாட்டாவோ, அந்தப் புருஷன் மோக்ஷ மடைவதற்குத் தகுந்தவனாயிருக்கிறான். இல்லாததற்கு இருப்பில்லை; இருப்பதற்கு இல்லாமை யில்லை; இவ் விரண்டின் நிச்சயம் உண்மை யறிந்தவர்களால் தெரிந்து கொள்ளப்பட் டிருக்கிறது. இந்த ஜடமான வஸ்துக்களும் எந்த ஜீவேசுவரர்களால் வியாபிக்கப்பட் டிருக்கின்றனவோ அதை நாசமற்றதாக அறி! நாசமற்ற இதற்கு நாசத்தை விளைவிக்க ஒருவனுஞ் சக்தனல்லன்.''

''கிருஷ்ணா! இதற்காயினு மிழிந்த சரீரம் வரின் துக்கமேயன்றோ?''

அர்ச்சுனா! அப்படிக்கல்ல; பீஷ்மத் துரோணர்கள் மஹானுபாவர்கள் என்று நீயே கூறினாய். இவர்களுக்கு நல்ல சரீரமே வரும். கஜேந்திரனுக்கும் நளன் கூபர மணிக்கிரீவர்களுக்கும் பூர்வ ஜன்ம ஸ்மிருதி யிருந்தால், தமது அகங்காரம் நடக்கையில் தமக்கு லபித்த அந்தச் சரீரம் நல்லதே யென்று அவர்கள் சந்தோஷித்தனர்.''] 13

''ஓ! குந்தி புத்திரா! பஞ்ச தன்மாத்திரைகளால் பிறந்த இந்திரியங்களுக்கு விஷயங்களோடு சம்பந்தங்கள் சீதோஷ்ண சுக துக்கமிவைகளை யுண்டாக்குவதாயும், மாறி மாறி வரத்தக்கனவாயும் நிலையற்றனவாயு மிருக்கின்றன. ஆதலின், அச் சீதோஷ்ணாதி சுக துக்கங்களை, ஓ! பரத வம்சத்திற் பிறந்தவனே! பொறுத்துக் கொள்வாயாக!''

[கருத்து:—'சீதோஷ்ணஸுகதுக்கதா:' சீதோஷ்ண சுக துக்க ரூபமான உலகமானது, 'மாத்ராஸ்பர்ஸாஸ்து' யப்தாதி பஞ்சதன்மாத்திரைகளின் கூறாகிய சுரோத்திராதி இந்திரியங்களினது சம்யோகத்தினாற் றோன்றும் என்றது, சப்த முதலிய ஐந்தும், அவற்றின்கண் தோன்றிய பூதங்களைந்தும், அவற்றின் கூறாய் ஞானேந்திரியங்கள் ஐந்தும், தெரியும் புருடனும், தெரிதற் கருவியாகிய யான் அகங்கார மனமும், அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியுமாகிய இவ் விருபத்தைந்து தத்துவங்களை யன்றி

யுலகெனப் பிறிதொன்றில்லை யெனப் பெற்றும். இவைகள் அசத்தாகிய மாயாகாரிய மாகலான், "ஆகமாபாயிந:" போக்கு வரத்துள்ளனவும், "அநித்யா:" நிலையற்றனவா யழிதற்பால னவா மெனவும் கூறியதாம். அதாவது, நீ கொல்லாதிருக்கி னும் பீஷ்ம துரோணர்கள் நெடுங்காலம் ஜீவித்திருக்கார்.]

[ஸ்ரீ சங்கரர்:—இந்திரியங்கள் விஷயங்களுடன் சம்பந்தப்படுவ தால், சீதோஷ்ண சுக துக்காதிகள் காலபேதத்தா லுண்டா கின்றன. சுக துக்காதிகள் ஆத்மாவுக்குக் கிடையாது.] 14

"புருஷ சிரேஷ்டனை ஓ! அர்ச்சுன! இந்த விஷய வாசனைகள் சுகதுக்க சமபுத்தியுடைய அபேத ஞானியான எந்த தத்துவ விவே கியை உபாதிக்கமாட்டாவோ அவனன்றோ மோக்ஷத்திற்கு உரியவ னாகின்றான்."

[ஸ்ரீ சங்கரர்:—"அர்ச்சுன! இராஜ சேவகன், கள்வர்களைத் தன்னை யொத்தவரென்று அவர்களைக் கைது செய்தல் பெரும் பிழையாமென் றெண்ணித் தன் வீட்டிலேயே உட்கார்ந்திருந் தால், அவனுக்கு உயர்ந்த நிலைமை வாய்க்காததுபோல, ஸ்வ கர்மமாகும் யுத்தத்தை விட்டுவிடுவையாயின் உனக்குப் பெரி யவனென்னும் புகழுண்டாகாது. பெருங் காரியஞ் செய்து அதிலுள்ள சுகதுக்கங்களைப் பொறுத்தல்வேண்டும். ஓ! புருஷ சிரேஷ்டனே! துக்கத்தையும் சுகத்தையும் ஒப்பாக எண்ணி, தைர்ய யுக்தனாய் தைர்யத்தால் அவஸ்யம் வரத்தக்க துக்கத் தைச் சுகத்தைப்போலெண்ணி மோக்ஷ சாதனமான தன் குல தர்மத்தைப் பலாபிஸந்தி யில்லாமல் செய்துகொண் டிருக்கிற, எந்தப் புருஷனை இவை (இந்தப் பாணங்களி னடிகள் முதலா கிய க்ரூர ஸ்பர்ஸங்கள்) துக்கிக்கச் செய்யாவோ அவனே நித்யாநந்தத்திற்குத் தக்கவனாகின்றான். இந்த ஸ்லோகத்தில், "தீர:" என்று கூறினமையால், ஆத்மானாத்ம ஞானிகளைச் சுக துக்காதிகள் பாதிக்கமாட்டா தென்பர்."] 15

"இல்லதற்கு உள்ளதில்லை; உள்ளதற்கு இல்லதில்லை; இவை யிரண்டிற்கு நிர்சயம், தத்துவம் தெரிந்தவர்களால் அறியப்படு கின்றது."

[ஸ்ரீ மாத்துவாசாரியர்:—"கிருஷ்ண! பீஷ்ம துரோணர்களை நான் எவ்விதம் கொல்வேன்? என்று உம்மைக் கேட்டேன். அதற்கு நீர் ஆத்மா நித்யனென்றும், சரீரம் அநித்தியமென்றும், மமகாரம் நீங்கின காலத்துத் துக்க முண்டாகாது என்றும் கூறியருளினீர்; அந்த விஷயம் உண்மை யென்று நம்பத் தகுந்த

தாக இருக்கின்றது. "ஈசத்தில் நித்திய வாசம் உண்டாகுமோ' என்று உம்மைக் கேட்டேன். நீர் அதற்குச் சரியான சமாதானம் கூறவில்லை. ஆகையால், அதனை விளக்குவீர்." 'அர்ச்சுன! கெட்ட காரியங்களுக்குப் புண்ணியமில்லை; நல்ல காரியங்களுக்குப் பாவமில்லை. (யுத்தம் ஸ்வதர்மம் ஆதலினால் நற்காரியம். இதனால் உனக்குப் பாவமில்லை என்று கருத்து.) நீ இது தருணம் இந்த விஷயத்தில் நம்பிக்கை யடைந்தவனாய்ப் பிரவிர்த்திக்கவேண்டும்." இந்த ஸ்லோகத்தில் பாவ என்பதற்குப் புண்ணியம் என்பது பொருள்.]

[ஸ்ரீ சங்கரர்:—"தேகாதிப் பிரபஞ்சம் அவத்தைகடோறும் லம் சாயை, சூனியமாக மாறி மாறி வரப் பேத புத்திக்குத் தோன்றும். அவற்றை யன்றித் திரிசிய மெனல் வேறெங்கணு மில்லை. இல்லாததாகவே, பேதபுத்தியாம் பிரகிருதிகுண சுவபாவமான முழுமையு மில்லா மாயையிற் றோன்றுந் திரிசியங்கள், அவத்தைகடோறு நிலையின்றி மாறி மாறி உலகுயிர் பரமென்று சொல்லப்பட்டு நிகழும். இங்ஙனஞ் சொல்லளவாக நிகழும் அத்திரிசியம் காலத்திரயத்தினும் தனக்கென யதார்த்த மின்றிச், சூரியன் மணல் நிலத்திற் றூக்கக் கானலாறு அலை முதலியவைகள் தோன்றுதல் போலப், போத சூரியன் பேதபுத்தியாம் நிலத்திற் றூக்கலும், உலகுயிர்பரமாதிய பிரவாகம் சாங்கோபாங்கமாய் நிகழத் தோன்றும். தோன்றினும், விசாரிக்கில் கானலாறு சூரியனிடம் ஆரோபமா யழிந்து அசத்தெனப் படுவதுபோன்று ஆத்மசூரியனிடம் உலகுயிர்பர மென்பவை யாரோபமாகி அசத்தெனப் படுவதனால் எங்ஙனமு மாறுதலின்றி ஆன்மா வொன்றே யென்றும், ஒருபடித்தாகவும், அதிஷ்டானமாகவும், அசங்க சின்மாத்திரமாகவும், அநுபூதிக்கு வரத் தெரியும். தெரியவே பாரிசேட அளவையானே நின்ற ஆன்மாவே சத்தென்றாயது. ஆகவே, சத்தாத்மாவுக்கு இல்லாமை யில்லை என்பார், 'நாபாவோவித்யதேஸத:' என்றும், அசத்தாகிய திரிசியங்களுக்கு இருப்பு இல்லை யென்பார், 'நாஸதோ வித்யதே பாவோ' என்றும், அங்ஙனமாகக் கண்ட ஆன்மா தானாகவே சித்தித்தலின் தானே யதுவெனக் கண்ட ஞானிகளால் இவ்விரண்டி னுண்மை தெரிந்து கொள்ளப்பட்டிருக்கின்ற தென்பார். 'உபயோரபித்ருஷ்டோந்த ஸ்த்வநயோஸ் தத்வதர்சிபி:' என்றுங் கூறப்பட்டது. இதனாலே திருக்கு திரிசிய விவேகமானது அதிகாரிக ளின்றி ஏனையோர் தம் பண்டிதத்தா லறியப்படா தென்பதும், அத்துவிதத்தின் 'அ'காரத்திற்கு இன்மைப்பொருளே யாசிரியர்தங் கொள்கையா மென்பதும் இதனால் பெறப்பட்டன."]

[ஸ்ரீ இராமாநுஜர்:—"2-வது அத்தியாயத்தில் 11-வது சுலோகத்தில் 'சரீராத்மாக்களுக்காகத் துக்கமில்லை' என்று கூறினதற்குக் காரணத்தை ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகின்றான். அர்ச்சுனா! அசத் வஸ்துவிற்கு (தேகத்திற்கு) சத்பாவம் (நித்யத்வம்) இல்லை. சத் வஸ்துவிற்கு (ஆத்மாவிற்கு) அபாவம் (அநித்யத்வம்) இல்லை. ஆகையால், எவ்வளவு ஜாக்கிரதையாகக் காப்பாற்றினும் நிலையாத சரீரத்தைப் பற்றியும், கொன்றாலும் சாகாத ஆத்மாவைப்பற்றியும் நீ வியசனப்படுதல் கூடாது."]

[கருத்து:—சௌக்கிய முண்டானபோது மிகுந்த உற்சாக மடைவதும், விசனம் வந்தபோது அதிக துக்க மடைவதும் அறிவாளருடைய சுவபாவமல்ல. ஏனெனில், ஆத்மாநுத்ம ஞானிகள், "சுகதுக்காதிகள்: மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்னும் தருமமே யன்றி ஆத்மதரும மல்ல" என்று உணருகின்றார்கள். அவர்களைச் சுக துக்காதிகள் சம்பந்தப்படுத்தமாட்டா. அத்தகைய பெரியோர்கள் மோக்ஷத்திற்கு உரித்தானவர்கள். தேகமே ஆத்மா என்று நினைத்து, தேகேந்திரியாதிகளினால் அந்தக்கரணத்தினின் றுண்டாகும் நன்மை தீமைகளை ஆத்மாவில் ஆரோபிக்கிற அஞ்ஞானிகளுக்கு, எத்தனை கோடி ஜென்ம மெடுத்தாலும் கிடைக்காதென்பது இச் சுலோகத்தால் தெரியலாயிற்று.] 16

"இந்தச் சகலமும் எந்தப் பரப்பிரம்மத்தினால் வியாபித்திருக்கின்றனவோ அத்தகைய பிரம்மம் நாசமில்லாதது என்றும், நாசமற்ற இந்தப் பரப்பிரம்மத்திற்கு நாசத்தை விளைவிப்பதற்கு ஒருவனும் அருகனல்ல வென்றும் நீ அறிவாயாக."

[ஸ்ரீ சங்கரர்:—ஆத்மாவிற்கு என் நாசமில்லை எனின், ஆத்மா அனைத்தினும் வியாபித்திருப்பதால் இதனை நாசஞ் செய்தல் அசாத்தியம். சர்வத்ர நிறைந்திருக்கும் ஆகாசத்தைப் போக்கடிக்க எண்ணி ஓரிடத்தில் சுவர் வைக்கின், மற்றோரிடத்தில் ஆகாச மிருக்கவே யிருக்கின்றதல்லவா?"]

[ஸ்ரீ இராமாநுஜர்:—"அர்ச்சுனா! ஆத்மா மிகச் சிறியதாகையால் அதனைக் கொல்லுதல் முடியாது." "கிருஷ்ணா! அணுவிற்கும் அணுவான பரமாத்மா அதனைக் கொல்லானா?" "அர்ச்சுனா! அவனுக்கு அவ்வகைத்தான வல்லமை யிருப்பினும் அவனது சங்கல்பம் அவ்வாறில்லை. சிறியதாகையால் எவ்விடத்து மிருக்குமெனின், விசிஷ்டாத்வைதக் கொள்கை குற்றமாகும். எல்லாச் சரீரங்களிலும் எனின், எவ்வளவு பெரியதாயினும் சிறியதாயினும் சம்பந்தப்படுவதற்குத் தக்கதென்பது கருத்து."] 17

"ஓ! பாரதா! நித்தியனையும், நாசஞ் செய்யத் தகாதவனையும், நம்மால் அறியத்தக்கவனுமான ஆத்மாவினுடைய சரீரங்கள் அழிதலையே சுவபாவமாக வுடையன வாகையால் நீ யுத்தஞ் செய்வாயாக!"

[சங்கரர்:—நித்தியனாய், நாசரகிதனாய் (அதாவது, வேறொருவனால் அறியத் தக்கதாகும் ஜடவஸ்து) அல்லவாகும். ஆத்மாவிற்குச் சம்பந்தப்பட்ட இந்தத் தேகங்கள் வளரும் இயல்பை யுடையன நசிப்பனவாகக் கூறப்பட்டிருக்கின்றது. (நசித்தல் இரண்டு வகை யுடையன: வஸ்துதஃ நாசமொன்று; நோய் முதலியவற்றால் நாசமுறுதல் மற்றொன்று.) பார்த்தா! ஆகையால், அவசியம் நசிக்கும் தேகத்தைக் குறித்தும், நசிக்காத ஆத்மாவைக் குறித்தும் சோகமில்லை. உயுத்தஞ் செய்! ஈண்டு, "பாரதா!" என்று ஸ்ரீ கிருஷ்ண பகவான் விளித்ததினால், நீ இவ்வகை வம்சத்தில் பிறந்தனை யாகையால் உயுத்தஞ் செய்ய வேண்டியவனாகின்றாய்.]

[ஸ்ரீ இராமாநுஜர்:—"ஓ! அர்ச்சுனா! அவயவங்களின் சேர்க்கையினாலுண்டான இந்த தேகங்கள் அழிவதே சுவபாவமாக உடையவைகள். அவயவங்களின் சேர்க்கையான குடம் முதலியவைகள் அழிதல் நம்மால் பார்க்கப்பட்டனவன்றோ? தேகங்கள், நித்தியமான ஆத்மாவுக்குக் கர்மங்களின் பலத்தை அனுபவிப்பதற்காக ஏற்பட்ட பஞ்சபூதங்களின் சேர்க்கை யென்று, 'ப்ரஹதாரண்யம்' என்ற நூல் "புண்ணிய கர்மத்தினால் புண்ணியஞ் செய்கிறவனாக ஆகிறான்" என்கிற அர்த்தமுள்ள சுருதியால் கூறுநிற்கும். கர்மங்கள் முடிந்தால் தேகம் நசித்துவிடும் சுவபாவமுள்ளது. ஆத்மாவோ நாசமில்லாதவன். ஏனெனில், நம்மால் அறியப்படாதவனாகையால், ஆத்மா நம்மால் அறியத் தகுந்தவனாய்க் காணப்படுகிறதில்லை. ஆனால், எவ்வாறெனின்: அறிகிறவனாகவே காணப்படுகின்றான். ஆத்மா அநேக வஸ்துக்களின் சேர்க்கையாகக் காணப்படுகிறதில்லையல்லவா? ஏனெனில், தேகத்தி லெல்லாவற்றிலும், 'நான் இதைத் தெரிந்து கொள்ளுகின்றேன்' என்று தேகத்தையும் மற்ற வஸ்துவையும் அறிகிறவனாகவும், ஒரே சுவபாவ முள்ளவனாகவும் காணப்படுகிறபடியினால், தேக முதலான வஸ்துக்களுக்குப்போல அறியுந் தன்மையுள்ள ஆத்மாவிற்கு வெவ்வேறிடங்களில் வெவ்வேறு சுவபாவங்கள் உணர்வதற்கிடமில்லை. ஆகையால், ஒரே சுவபாவமுள்ளவனாகையாலும், அவயவங்களை யுடையவனல்லாமையாலும், எல்லா வஸ்துக்களையு மறி

கிறவனுகையாலும், வியாபித்திருக்கிறபடியாலும், ஆத்மா நித்தியன். தேகமோ, அவயவங்களை யுடைய தாகையாலும், அநேக சுவபாவமுள்ள தாகையாலும், ஆத்மாவால் பரவப்படுகிறபடியாலும் நாச முள்ளது; ஆதலின், தேகம் அழியுந் தன்மை யுள்ள தாகையாலும், ஆத்மாக்கள் நித்தியமா யிருத்தலையே இயற்கையா யிருத்தலானும், இவை இரண்டும் துக்கிப்பதற் கிடமல்ல என்று நினைத்து, தனக்கும் அயலாருக்கும் நேரக் கூடியவைகளும், விடமுடியாதவைகளுமான ஆயுதம் விழுதல் முதலான கடின ஸ்பர்சங்களைத் தைரியத்தினுல் பொறுத்துக்கொண்டு, மோக்ஷத்தை யடைவதற்காகப் பலத்தில் விருப்பம் வைக்காமல் உயுத்தமாகிற தொழிலை நீ ஆரம்பஞ் செய்.''] 18

''யாவன் இவ்வான்மாவைக் கொல்லுபவனுக அறிகிறானே யாவன் இவ்வான்மாவைக் கொல்லப்பட்டவனுக நினைக்கின்றானே, அவ் விருவரு முண்மை யறிந்தவராகார். இவ்வான்மா கர்த்திருத்துவ போகத்திருத்துவாதி விகார ரகித னுகலின், கொல்லுவது மில்லை, கொல்லப்படுவது மில்லை.''

''இந்தத் தேகி பிறப்பற்றவன், நாசமற்றவன், ஸ்திரரூப முடையவன், அநாதியானவன்; ஆதலால், உடல்கள் நசிக்குமே யல்லாமல் உடல்களை யுடையவர்கள் ஒருக்காலும் நசியார்கள்.''

[ஸ்ரீ ராமாநுஜர்:—''கிருஷ்ணு! 'ஆத்மா நித்தியன்' என்று சொன்னுல் உலக வியவஹாரத்திற்குப் பாதகமா யிருக்குமே. இந்த உலகத்தில் கொலை செய்தவனைப் பெரிய குற்றம் செய்தவனுகப் பாவிக்கின்றார்களே. வியவஹாரப்பிரகாரம் சாஸ்திரத்தை மாற்றவேண்டுமா? சாஸ்திரப்பிரகாரம் வியவஹாரத்தை மாற்ற வேண்டுமா?''

''அர்ச்சுனு! சாஸ்திரமே முக்கிய பிரமாணம். 'ஆத்மாவைக் கொல்லுகின்றவன்' என்று நினைக்கிறவனெவனே, 'கொல்லப்பட்டது' என்று நினைப்பவனெவனே, அவர்களிருவரும் ஞானமில்லாதவர்கள். ஆத்மா கொல்லவுமில்லை, கொல்லப்படவுமில்லை. (சகல தர்மங்களுக்கும் காரணமாக விருக்கும் சரீரங்களைக் கொல்லுதலே குற்றமாகும்) ஆதலின், இவைகளின் சரீரம் கொல்லப்பட்டது' என்று கூறவேண்டும்

மேலும், அர்ச்சுனு! இவ் விலக்கணங்களை யுடைய ஆன்மாவானவன் ஒரு காலத்தும் பிறந்தவனுகான்; ஒரு காலத்தும் இறப்பவனு மாகான்; இல்லாமலிருந்து மீண்டும் (புதிதாக) உண்டாக்

சப் பட்டவனு மாகான். இருந்து மறுபடியும் இல்லாமற்போகின்றவனு மல்லன். ஆகலின், இவ்வான்மா: பிறப்பற்றவன், நாசமற்றவன், என்று மொருபடித்தாகியவன். அநாதி தேகமானது பல விகாரங்களை யேற்கினும் இவ்வான்மா விகாரமடைவதில்லை. எல்லாத் தேகங்களிலும், எல்லோராலும் நடந்துகொண்டிருப்பதாய்க் காணப்படுகிற ஜனன மரணங்கள் எக்காலத்திலும் ஆத்மாவைத் தொடுகிறதில்லை.

இந்த ஆத்மா கற்பகாலத்தில் முதலில் உற்பத்தியாகி, கற்பத்தின் முடிவில் இல்லாமற் போகிறதுமில்லை. சில பிர்மா முதலியவர்களின் தேகங்களில் சாஸ்திரங்களால் தெரிந்து கொள்ளப்பட்டதான, கற்பத்தி னாரம்பத்தி லுற்பத்தியும், கற்பத்தின் முடிவில் மரணமும் ஆத்மாவைத் தொடுகிறதில்லை. ஆகையால், எல்லாத் தேகங்களிலு மிருக்கிற ஆத்மா பிறப்பில்லாதவன்; ஆகையினாலேயே, ஆத்மா நித்தியன். பிரகிருதிபோல் பிரகாசமாய்த் தெரியாத மாறுதல்களாலு மடையப்போகிறது மில்லை. முக்காலத்திலும் புதிதானவன். அதாவது, 'எப்போதும் புதியதுபோ லனுபவிக்கத் தகுந்தவன்' என்று பொருள்படும். ஆகையால் சரீரம் கொல்லப்பட்டாலும் இந்த ஆத்மா கொல்லப்படுகிறதில்லை."]

[கருத்து:—"நால்வகை யோனி, எழுவகைத் தோற்றம் எண்பத்து நான்கு லக்ஷம் பேதமாகக் கூறும் சரீரங்களின் கற்பனை யனைத்தும் ஆன்மாவினிடம் ஆரோபிதமே" என்பர். சராயுசம், அண்டசம், சுவேதசம், உப்பிசம் என்பன நால்வகை யோனிகளாம். இவற்றில் கருப்பாசயப் பையினிடமாகக் கட்டுண்டு மனிதர் மிருகங்கள் போன்று பிறத்தல் சராயுசமும்; முட்டையினிடமாகக் கட்டுண்டு பக்ஷி முதலியனபோல் பிறத்தல் அண்டசமும்; அழுக்கு வியர்வை யாதிகளினால் கொசு பேன் முதலியனபோற் பிறத்தல் சுவேதசமும்; பூமியினிடம் விருக்ஷங்கள் போன்று பிறத்தல் உற்பிசமும் என்று கூறப்பட்டு, அவைகள்: தேவர், மக்கள், விலங்கு, பக்ஷி, நிலத்திலூர்வன, ஜலத்திலூர்வன, தாவர முதலிய எழுவகைத் தோற்றமுடைமையில், தேவ-யக்ஷ-கந்தருவ-சித்த-சாத்திய - கின்னர - கிம்புருட - வித்யாதர - ராக்ஷத-பூதப்பிரேத-பசாக-சாகினி - டாகினியாதி தேவ சரீரங்கள் பதினறு லக்ஷம் பேதமும், மநுமாந்தாதி நரரில் பிரம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திரர் முதலான மானிட சரீரங்கள் ஒன்பது லக்ஷம் பேதமும், கோ-இடப-அசுவ-கார்த்தப-சிங்க-சார்த்தூல-சுவான-மார்ச்சாத் மர்க்கடாதி மிருக சரீரங்கள் பத்து இலக்ஷ பேதமும்; கருடமசகாதி பக்ஷி சரீரங்கள் பத்து லக்ஷமும்;

பன்னகாதி நிலத்தி லூர்வன சரீரங்கள் பதினொருலக்ஷ பேதமும்; மகர-திமிங்கில-கூர்மாதி நீ ரூர்வன சரீரங்கள் பத்துலக்ஷம் பேதமும்; கற்பக மந்தார-பாரிஜாத-கதளீ-நாரிகேள-தாளி-அசுவத்தாதி விருக்ஷ சரீரங்களும்; மகாமேரு-சித்திரகூட-திரிகூட-ஸப்தகுல பர்வதாகிருதி சரீரங்களுமாக ஸ்தாவர சரீரங்கள் பதினெட்டு லக்ஷம் பேதமாக, ஓரறிவே முதல் எண்ணறிவு வரையும் எண்பத்து நான்குலக்ஷம் சீவபேதமாகக் கூறப்படு மிவற்றுள், ஆன்மா கருமத்துக் கீடாகப் பிறந்து வாழ்ந்து, பிராரத்த நாசத்தில் தான் நாசமடைதல் முதலிய வாக விஸ்தரிக்கப்பட்டுள்ள அனைத்தும் அவித்தியா சம்பந்தத்தினல் அஞ்ஞானிகட்குக் காணப்படினும், ஒரு காலத்திலும் பகலவன் இருளறியானே போல, ஆன்மா இவையொன்று மறிவதின்றி யென்று மொருபடித்தாகச் சச்சிதானந்தமாந் தனதியற்கை குன்றாத முன்னோனகையால் இவனொருபோதும் கொல்லப்படுவதில்லை, பிறப்பற்றவன், இறப்பற்றவன் என்பார், "நஜாய தெம்ரிய தெவா கதாசிந் நாயம்...அஜோ நித்யஸ் ஸாஸ்வதோயம் புராணோ நஹந்யதே ஹந்யமானே சரிரே" என்றும், "அங்ஙனமாயினும், இப்போது பிரத்தியக்ஷத்தில் செய்துவருங் கன்மங்கட் கீடாக மேற்பிறவி யெய்தானோ?" எனின், அங்ஙனமின்று என்பார். "பூத்வா பவிதா வாநபூய-மீண்டு முண்டா யிருப்பதுமில்லை" என்றுங் கூறியதாம்.

ஆகையால், ஓ! அர்ச்சுனா! சேதனங்களான தேகங்களில் காணப்படும் ஜனன மரணங்கள் ஆத்மாவிற்குச் சம்பந்திக்கா, ஆத்மா பிரமாதிகளின் தேகத்தைப்போல ஒரு காலத்தில் (சிருஷ்டி காலத்தில்) பிறந்து, ஒரு காலத்தில் (பிரளய காலத்தில்) நசிக்காது; ஆகையால், ஜன்ம ரஹிதனாய் எக்காலத்தும் புதியவனே. தேகம் கொல்லப்படினும், கொல்லப்பட்டவன் பிறத்தல், வளர்தல், பருத்தல், இறத்தல் எனும் விகாரங்க ளில்லாமையால் ஆத்மா நித்தியன். இந்த விகாரங்க ளிருத்தலால் சரீரம் அநித்தியம்.] 19-20

"இவ்வாறு நாச மில்லாமையாலும், பிறப்பில்லாமையாலும், விகாரங்களை அடைவிக்கக் கூடியவ னல்லாமையாலும், நித்தியனாகிய இந்த ஆத்மாவை எவன் தெரிந்து கொள்ளுகின்றானோ, அந்தப் புருஷன்: தேவன், மனுஷ்யன், மிருகங்கள், தாவரங்களாகிற சரீரங்களிலிருக்கிற ஆத்மாக்களுக்குள் ஒரு ஆத்மாவை எவ்வாறு தான் நாசஞ் செய்கிறான்? எப்படி வேறொருவன் நாசஞ் செய்யக் காரணமா யிருக்கிறான்?"

[உள்ளுரை:—"இந்த ஆத்மாக்களை நான் நாசஞ் செய்கிறேன்" என்று துக்கிப்பது ஆத்ம சுவரூபத்தின் உண்மையை யறியாமையினா லுண்டானது என்று தாத்பரியம். நித்தியர்களான ஜீவாத்மாக்களுக்குச் சரீரத்தைவிட்டுப் பிரித்தல் மாத்திரந் தான் செய்யப்படுகின்றது. ஆனாலும் அழகிய போகங்களை அனுபவிக்கக் காரணங்களாகிய சரீரங்கள் நாச மடையும் பொழுது, அவ்வாறு சரீரத்தை விட்டுப் பிரிவதாகிய ஆன்மா துக்கப்படுவதற்குக் காரண மிருக்கிறதென்கிற ஆக்ஷேபத்திற்குச் சமாதானமாவது, அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, "நாச மில்லாத ஆத்மாவை என் நாசமுள்ளதாக எண்ணுகின்றனர்?" என்று வினவினான். அதற்குப் பகவான் விடை கூறுவதாவது:—அர்ச்சுனா! ஸதாசாரியனிடம் கேட்காத குற்றமேயாம்; அதாவது, ஜன்ம நாசங்களும் மாறுதலும் கிடையாதென்று இந்த ஆத்மாவை எவன் அறிகின்றானோ, அந்தப் புருஷன் எவ்வாறு யாரைக் கொல்விப்பான்? யாரைக் கொல்வான்? வேதாந்த விசார மில்லாமையாலும், ஆத்மானாத்ம ஸ்வரூபஞானமில்லாமை யாலும் இவ்வாறு விபரீதஞான முண்டாகின்றது."] 21

"மனிதன் எவ்வாறு ஜீர்ணமான அதாவது பழைய வஸ்திரங்களைக் களைந்து வேறு புதிய வஸ்திரங்களை யணிந்து கொள்ளுகின்றானோ, அவ்வாறே தேக முடையவன் பழைய தேகத்தை விட்டு, வேறு புதிய தேகங்களை யடைகின்றான்.

ஆயுதங்கள் இவனை யொன்றுஞ் செய்தலில்லை; அக்கினி இவனை சுடுதலில்லை: ஜலம் இவனை நனைத்தலில்லை: வாயு இவனை உலர்த்தலில்லை.

இவன் வெட்டப்படத் தக்கவனல்லன், எரிக்கப்படத் தக்கவனல்லன், நனைக்கப்படத் தக்கவனல்லன், உலர்த்தப்படத் தக்கவனல்லன், நித்தியன், எங்கு நிறைந்தவன், ஸ்திரமான சுபாவமுள்ளவன், சலிக்காதவன், இவன் அனாதி."

[ஸ்ரீ இராமானுஜர்:—"தர்மமான யுத்தத்தில் சரீரத்தை விடுபவர்கள், விடப்பட்ட சரீரங்களைக் காட்டிலும் மிகவும் அழகான சரீரங்களை யடைவார்க ளென்பது சாஸ்திரத்தா லறியப்படுகின்றது. கந்தையான துணிகளைக் கழிர்த்துவிட்டுப் புதிதாயு மழகாயு மிருக்கிற வஸ்திரங்களை உடுத்துக் கொள்ளுகிறவர்களைப்போல், உற்சாகப் படுவதற்குக் காரணந்தான் இவ்விடத்தில் காணப்படுகிறது. மீண்டும் முன்னர்க் கூறிய நாச

யில்லாமையையே சுகமாய் அறிவதற்காகத் தெளிவாகச் சொல்லி உறுதிப்படுத்திச் சொல்லுகிறதாவது: ஆயுதம், நெருப்பு, ஜலம், காற்று முதலியவைகள் இந்த ஆத்மாவைக் குறித்து வெட்டுதல், கொளுத்துதல், நனைத்தல், உலர்த்தல் முதலியவைகளைச் செய்யச் சக்தியற்றவை; ஏனெனில், இந்த ஆத்மா, எல்லாவற்றிலும் பரவுதலையே சுவபாவமாக வுடையது; எல்லாப் பொருள்களைக் காட்டிலும் சூக்ஷ்மமா யிருப்பது வெட்டுதல், கொளுத்துதல், நனைத்தல், உலர்த்தல் இவைகளுள்ளே பரவியே செய்யவேண்டியது. ஆத்மா அழிவில்லாதவன், நிலையான சுவபாவ முள்ளவன், அனாதியானவன்; ஆகையால், அர்ச்சுனா! பீஷ்ம துரோணர்கள் விருத்தர்கள்; அவர்களின் சரீரங்கள் வெகு நாட்பட்டவை ஆதலின், அவர்கள் எந்தக் காரியத்தையும் திடமாகச் செய்ய வல்லவர்கள். க்ஷேமம் அடையும் வரையினும், புனர் ஜன்மங்கள் உண்டாய்க்கொண்டே யிருக்கும். ஆகையால், இவர்க ளிந்தச் சிதிலமான சரீரத்தை விட்டுப் புதிய சரீரத்தை யடைவர். ஆகலின், நீ இந்தக் காரியஞ் செய்தலினால் பீஷ்ம துரோணர்களுக்கு மஹோபகாரி யாவாய். ஆகையால் நீ யுத்தஞ் செய்.''

'கிருஷ்ணா, அவ்வாறே செய்கின்றேன். உயுத்தத்தினால் புதிய சரீரம் வருவதற்குச் சம்பந்த மென்ன? இந்தச் சரீரத்தைப் பிறர் தரல் வேண்டுமோ? அல்லது, சொந்தமாய்ச் சம்பாதிக்கலாமா? இவற்றைத் தெளிவாய்ச் சொல்லவேண்டும்.'?

அதற்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான்: "அர்ச்சுனா! நீ கேட்ட வினாக்களுக்கு விடை பகர்வேன்; அதனைக் கவனமாய்க் கேட்பாயாக! இந்தச் சரீரத்தை ஈஸ்வரன் கொடுக்கவேண்டும். ஒரு குடும்பத் தலைவன், தன் மனைவி மக்களுக்கு வஸ்திரங்களை வாங்கித் தருவதுபோல, ஈஸ்வரன் ஆத்மாவிற்குக் கொடுத்தல் வேண்டும். தந்தையின் கட்டளையின்படி நடந்துகொண்டு பள்ளிக்கூடஞ் சென்று வாசித்துக் கொண்டிருக்கும் புத்திரனுக்குத் தந்தை நல்ல ஆடைகளைத் தயையுட னளிப்பன். அவனது உத்தரவை அசட்டை செய்துகொண்டு கெட்ட வழியில் நடக்கும் புத்திரனுக்கு மான ரக்ஷணார்த்தத்தின் பொருட்டு வஸ்திராதிகள் கொடுக்கப்படும். அவ்வாறே பகவானின் கட்டளை வேதம். அதில் ஸ்வதர்மம் செய்யப்பட வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. ஆதலால், நீ யுத்தஞ் செய்வாயாக.] 22-23-24

"அர்ச்சுனா! வெட்டுதல் முதலியவற்றிற்குத் தகுந்த வஸ்துக்கள் எவைகளினால் அறியப்படுகின்றனவோ, அவைகளினா லிந்த ஆத்மா அறியப்படுகின்ற தில்லை. ஆகையால், வெட்டத்தகுந்த வஸ்

துக்கள் முதலியவைகளைக் காட்டிலும், இந்த ஆத்மா வேறுபட்டவன். இவ்வாறு எல்லா வஸ்துக்களையும்விட வேறுபட்டவனானதையால், அந்தந்த வஸ்துக்களின் சுவபாவங்களை யுடையவனாக நினைக்கவுந் தகாதவன்; ஆகையால், விகாரத்தை அடைவிக்கத் தகாதவன். ஆதலின், இவ்விதமான இந்த ஆத்மாவைத் தெரிந்துகொண்டு நீ அவனைக் குறித்துத் துக்கிக்கத் தகுந்தவனல்லன்.

மேலும், ஒருகால் இவனை எப்பொழுதும் பிறப்புள்ளவனாகவும், எப்பொழுதும் இறப்புள்ளவனாகவும் நீ நினைத்தாலும், ஓ! மஹாபாஹோ! நீ இவனை (ஆத்மாவைக்) குறித்துத் துக்கிக்க யோக்கியனல்லன்.

ஏனெனில், பிறந்தவனுக்கோ மரணம் நிச்சயம்; இறந்தவனுக்கோ ஜனனம் நிச்சயம்; ஆகலால், பரிகாரஞ் செய்யக்கூடாத விஷயத்தில் நீ சோதிக்க யோக்கியனல்லன்.

ஓ! பாரதா! தேகாதிகள் மாயையினின்றும் உண்டாய், மத்திய காலத்திற் காணப்பட்டு, மாயையிலே லயிக்கின்றன: இவ்விஷயத்தில் என்ன விசனம்?

இவனை (இந்த ஆத்மாவை) ஒருவன் யோக சித்தியால் ஆச்சரிய வஸ்துபோலப் பார்க்கின்றான். அவ்வாறே, மற்றொருவன் இவனை வஸ்துபோலச் சொல்லுகின்றான். வேறொருவன் இவனை ஆச்சரிய வஸ்துபோலக் கேட்கின்றான். இவர்கள் பார்த்துப் பேசிக் கேட்டபோதிலும் அவர்களி லொருவனும் ஆத்மாவை அறியவே யில்லை.''

[உள்ளுரை:—அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானை நோக்கி, ''ஆத்மாவிற்கு ஜனன மரணாதிகள் இருப்பதாகத் தோன்றுகின்றது; அதனை தெளிவுறப் போதித்தருள வேண்டும்'' என்று வினவினன். அப்போது பகவான் அர்ச்சுனனை நோக்கி, ''நீ கேட்டவாறு ஆத்மாவிற்குச் சரீரத்துடன் மரணமிருப்பின் எப்போதாயினும் சாகும்; ஆகையால், நீ துக்கிக்க வேண்டியதில்லை. இந்தச் சரீரத்துடன் ஆத்மா நீங்குதலால், யமலோகத்தின் பயங்கூட இராது. புண்ணிய பாவங்கள் இந்த உலகத்திலேயே முடிந்து போகும். இவர்களைக் கொல்வதற்குப் பரலோக பயமேயில்லை. ''ஆத்மா நித்தியம்'' என்று நான் சொல்லுகிற பக்ஷத்தை நம்பின் இது தர்ம யுத்தமாதலினால் பாபமில்லையென்று சரிப்படுத்த வேண்டியிருக்கும். 'ஆத்மா

விற்கு நாசமுளது' என்னும் உன்பக்ஷம் யுத்தஞ் செய்வதற்குத் தடையில்லை யென்பதைத் தெரிவிக்கிறது."

இந்த ஸ்லோகத்தில், 'மஹா பாஹோ' என்பதால், "அநேக யுத்தங்களில் நீ ஜயம் பெற்றாய்; இப்போது உனக்கேன் இந்தப் பயம்?" என்று ஸ்ரீ கிருஷ்ணன் பரிகாசஞ் செய்தானென்பது ஒரு கருத்து. 'மஹா பாஹோ அல்லவா' என்று தயையுடன் விளித்ததாக மற்றொரு பாவம்.

"ஆத்மா நித்திய மெனவும், அநித்திய மெனவும் வாதித்து என்னை யுத்தஞ் செய் யென்கின்றாயே" என்று அர்ச்சுனன் கேட்கையில், 'மஹா பாஹோ! நீ யிருந்தாலன்றோ யுத்தத்தில் சுவாரஸ்யம்" என்று மற்றொரு கருத்து, "நித்தியம் பிறந்துகொண்டும் இறந்துகொண்டு மிருக்கும் இந்தச் சரீரத்தையே நீ ஆத்மா வென்று எண்ணுகின்றனையா? அவ்வாறாயினும், 'மஹா பாஹோ' நீ துக்கித்தல் தக்கதன்றாம்."

மேலும், ஆன்மாக்கள் பூர்வ கர்மப்பயனை அனுபவிப்பதற்காக ஈஸ்வரனாலே தநு கரண புவன போகங்கள் உதவப் பெற்றுப், பிறந்து பிறந்து இறக்கும். பரிகரிக்கப்பட்டதான ஜனன மரணப் பிரவாகத்தி லுலைதரும் அவ் ஆன்மாக்களை ஜனனங்க டோறும், 'எம்மவர் எம்மவர்' எனச் சுட்டிக்கொண்டிருந்து பிரயோஜனத்தை யிழந்தோர் அஞ்ஞானிகள். ஈண்டு இவர்களை எம்மவரென நீ அவர்களுக்காக வருத்த மடைவது மிகுந்த நகைப்பை விளைவிக்கு மென்பதை, "தஸ்மா தபரிஹார்யேர்த்தே நத்வம் சோசிது மர்ஹஸி" பரிகரிக்கப்படாத இதனிமித்தம் நீ துக்கிப்பதற்குப் பாத்திரனல்ல" என்பதாம். "அர்ச்சுனா! ஏனெனில், பிறந்தவனுக்கு இறப்பும், இறந்தவனுக்குப் பிறப்பும் நிச்சயமாகையால், நீக்கக்கூடாத இந்த விஷயமாக நீ வருந்துதல் சரியல்ல."

"கிருஷ்ணா! ஆத்மா அநித்திய மென்று கூறினையல்லவா?" அர்ச்சுனா! நான் அவ்வாறு கூறவில்லை எந்தப் பக்ஷத்தை அனுசரிக்கினும் யுத்தஞ் செய்யவேண்டு மென்று ஏற்படுமென்று தெரிவித்தற்கு அவ்வாறு ஆத்மா அநித்திய மென்று சம்மதித்தேன்.

ஓ! அர்ச்சுனா! ஜீவ சரீரங்கள் அதிஷ்டான சைதன்னியத்தைத் தவிர மூன்று காலத்துந் தனக்கெனச் சொரூப மின்றிய மாயையி னிடத்துத் தோன்றி, இடையில் உண்டுபோல் காணப்பட்டவாறே இல்லையெனும் அம் மாயையில் தானே இலயமாகின்றன. இதன் விஷயத்தில் துயரமானது யாதுக்காக?

மேலும், நாம ரூப காரியமான குடம் மண்ணில் தோன்றி அதி லேயே ஒடுங்குதல்போல, மாயையில் தோன்றி அதிலேயே ஒடுங்கும். முத்துச்சிப்பியில் வெள்ளியென்னும் பிராந்தி யுண்டாகி மீண்டும் கெட்டதுபோலக் கெடும். "இருக்கிறதென்று தோன்றுவதற்கு வெள்ளியெனும் ஒரு பொருள் இருக்க வேண்டாமா?" எனின், "அந்த வஸ்துவே பரப்பிரமம்."

அர்ச்சுனா! ஒருவன் இவ் ஆன்மாவை மிக அற்புத வஸ்துவாகக் காண்கின்றனன். அவ்வாறே பின்னு மொருவன் இவனை மிக ஆச்சரிய வஸ்துவைப்போலச் சொல்லுகின்றனன். மற்றொருவன் இவனை மிக ஆச்சரிய வஸ்துவைப்போலக் கேட்கின்றனன். இவ்வாறு கேட்டுஞ் சொல்லியுங் கண்டு முள்ளவர்களில் ஒருவனும் இவ் ஆன்மாவை யதார்த்தமாக அறிந்தவனல்லன். ஆகையால், ஆன்மாவைப் பலபலவாகிய யோக சாதனங்களினால் மிக அற்புத வஸ்துவாகக் கண்ட யோகியர்களும், சாத்திரங்களிற் கூறியுள்ளபடி கற்றுணர்ந்த வித்வான்களும், அவர்களால் அவ் வஸ்துவை யின்னதெனப் போதிக்கக் கேட்டவர்களும், ஆகிய இவர்களி லொருவரும் உள்ளபடி ஆன்மாவை அறிந்தவ ராகார். என்னை? "ஸ்வாநுபவா தீதம் ப்ரஹ்மம்" என்றது வேதமாகலின், எது சாதனமற்ற ஆன்மாவை யோகியர்கள் கண்டுளா ரென்பது தமது அகண்டாகார விருத்தியிற் பிரதி பலித்த சைதன்னிய சாயையாதலின், அது ஆன்மாவினது சுயசொரூப மன்றாகவே, கண்டவருங் கண்டிலர் எனவும், அப்பிரமே யாகலின் அது சாத்திரங்களா லமையுமாறு கூறத்தக்க தன்று. ஆகையால், இந்தக் கடினமான விஷயத்திற்காக நீ துக்கப்படாதே."] 25-29

"ஓ! அர்ச்சுனா! தேவர் மக்களாதி ஜீவகோடிகளது தேகமானது கொல்லப்படினும், இவ் வான்மா எக்காலத்தும் கொல்லப்படுவதன்று. ஆகலின், நீ இவ்வெல்லாச் சீவர்கட்காகத் துக்கிப்பதற்குத் தக்கவனாகாய்.

மேலும், க்ஷத்திரிய தருமமாகிய உனது குல தருமத்தை நோக்குமிடத்தும், நீ சலிப்பதற்குக் கூடாதவனாகின்றாய். ஏனெனில், க்ஷத்திரியனுக்கு ஸ்வதருமத்துக் கடுத்த யுத்தத்தைப் பார்க்கிலும் மற்றும் உத்தமமான தொன்று மில்லை."

[உள்ளுரை:—"மேலும், உன் வருணத்தாருக்கு நியமனஞ் செய்திருக்கின்ற தருமத்தை நீயுணர்ந்திருந்தும் யுத்தம் புரிய மயங்குவது உனக்குத் தகுதியன்று. ஏனென்றால், க்ஷத்திரியனுக்குத் தருமத்தோடு கூடின யுத்தத்திலும் சிரேஷ்டமானது வேறே

கிடையாவாம். அக்கினிஷ்டோமாதி யாகங்களில் பசு ஹிம்சை எவ்வாறு தருமமோ, அவ்வாறே க்ஷத்திரியனாகிய உனக்கு நீதியாய் நேரிட்டிருக்கிற இந்த யுத்தம் சுவதருமமானதால், அதனால் உனக்குத் தோஷம் பொருந்தாது.'' 30-31

''அர்ச்சுனா! சுவர்க்கத்தை யடையும் பொருட்டுத் தெய்வாதீனமாய்ச் சம்பவித்திருக்கிற இந்த யுத்தத்தைப் பாக்கியவான்களாயிருக்கிற க்ஷத்திரியர்க ளடையவேண்டும், அவ்வாறிருக்க நீ போர் புரியாமற்போனால் அதனா லுண்டாகும் தோஷங்களைச் சொல்லுகின்றேன். அவற்றை நீ கேட்பாயாக.''

[உள்ளுரை:—''அதாவது, எத்தன மில்லாது நேரிட்ட யுத்தமானது சுவர்க்கத்திற்குத் திறந்து வைத்த வாயிலாகும். ஐஸ்வரியவான்களாகிய அரசர்களுக்கே இது லபிக்கும். வெற்றியை யடைந்தால் ஜயமும், இறந்தால் சுவர்க்கமும் கிடைக்கும். உயுத்தமே சுவர்க்கத் துவாரமாக இருக்கின்றது; அதுவுந் திறந்தபடியே யுள்ளது. ஆண்டு வசிப்பவர்கள் வாயிலை மூடினும் இந்த யுத்த மென்கிற தர்மமே அர்தத் துவாரத்தைத் திறப்பதற்கு ஆயத்தமாக இருக்கின்றது'' என்ற ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறினன்.

அதைக் கேட்ட அர்ச்சுனன், ''கிருஷ்ணா! க்ஷத்திரியனுக்கு யுத்தமே மேலான தென்று உன் அபிப்பிராயமாயின், சந்தியாவந்தன யஜ்ஞாதிகள் செய்ய அக்கரையில்லை யென்று தோற்றுகின்றது.''

''அர்ச்சுனா! அப்படியன்று, ஒருவனைப் பிரஹஸ்பதி யென்று புகழ்ந்தால், மற்றவனை வைததாகக் கருத்தன்று. ''வருஷங்களிலுள்ள ஒவ்வொரு மாதங்களும் ஒன்றைக் காட்டிலு மொன்று மேலானது'' என்று வர்ணிக்கப்படினும் பன்னிரண்டு மாதங்களும் உயர்ந்தனவே; அவ்வாறே யுத்த பிரசம்சைக்காக அவ்வாறு கூறப்பட்டது. சந்தியா வந்தன யஜ்ஞாதிகள் முக்கியமே.] 32

''திரவியங்கள் செலவில்லாத இந்தச் சுவதருமத்தைச் செய்; இல்லாவிடில், நீ சுவர்க்க லாபத்தை யிழப்பதல்லாமல் நியாயமான இந்த யுத்தத்தைச் செய்திருப்பாயாகில், அதனாலே உன்னுடைய சுவதருமத்தையும் புகழ்ச்சியையும் இழந்து எல்லையில்லாத பாபத்தையும் அடையப் போகிறாய்'' என்று கூறினன்.

[உள்ளுரை:—இவ்வாறு ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறியபொழுது, அர்ச்சுனன், ''நான் இவர்களைக் கொல்லுதல் மகா பாதக

மென்று கூறினேன். நீர் 'உயுத்தஞ் செய்யாவிடில் பாபம்' என்று கூறுகின்றீர். பாபகர்மஞ் செய்பவன் நரக மனுபவிக்க வேண்டியிருக்கும். ஆகையால், "நானிப்போது என்ன செய்வேன்?" என்று கூறினன்.] 33

"அர்ச்சுன! ஜனங்கள் சாசுவதமான (அதாவது) நீண்டகாலம் உன்னுடைய அபகீர்த்தியைச் சொல்லிக் கொள்வார்கள். (யாவராலும்) நன்கு மதிக்கப்பட்டிருக்கிறவனுக்கு அபகீர்த்தியானது மரணத்தைவிட அதிகமாம்.

நீ எவர்களால் நன்கு மதிக்கப்பட்டிருந்தாயோ அந்த மகாரதிகர்கள் அச்சத்தால் போர்க்களத்தில் நீ புறங்கொடுத்து ஓடியதாக உன்னை நினைப்பார்கள்; ஆதலால், நீ போர்வீரனாயிருந்தும் இழிவடைவாய்.

உன் விரோதிகள் உனது வல்லமையை நிந்திக்கிறவர்களாய் அநேகமான சொல்லத்தகாத வார்த்தைகளையுஞ் சொல்லுவார்கள்; அதனினும் அதிக துக்கம் யாதுளது?

ஓ! கௌந்தேயா! நீ கொல்லப்பட்டாலோ புண்ணிய லோகத்தை யடைவாய்; ஜயமடைந்தால் இராஜ்ஜியத்தை யனுபவிப்பாய்; ஆதலால், யுத்தத்தின் பொருட்டு நிச்சயித்தவனாய் எழுந்திரு."

[உள்ளுரை:—"உறவினரிடத்தி லுண்டான பிரீதியினாலும் தயவினாலும் யுத்தத்திலிருந்து திரும்பின எனக்கு அபகீர்த்தி எவ்வாறுண்டாம்?"

"அர்ச்சுன! எவர்களால் நீ கொண்டாடப்பட்டவனாக விருந்து இப்போது எளிதாய் இருக்கையை அடையப் போகின்றாயோ, அப்படிப்பட்ட சூரர்கள், பயத்தினால் யுத்தத்திலிருந்து ஓய்ந்துவிட்டவனாக உன்னை நினைக்கப் போகிறார்கள். மேலும், எந்தக் கர்ணன், துரியோதனன் முதலிய மகாரதிகர்களால், இதற்கு முன் நீ 'சூரனாகிய சத்துரு' என்று கொண்டாடப்பட்டவனாக விருந்து யுத்தம் நேர்ந்திருக்கும் இச் சமயத்தில் ஒரு வேலையுஞ் செய்யாமையால் சுலபமாகப் பிடிக்கக் கூடியவனாயிருக்கையை அடையப் போகின்றாயோ, அது தருணம் அந்த மகாரதிகர்கள் உன்னைப் பயத்தினால் யுத்தத்திலிருந்து ஓய்ந்தவனாக நினைக்கப் போகின்றார்கள். சூரர்களாகிய சத்துருக்களுக்குப் பந்துக்களிடத்தில் பிரீதி முதலியவற்றால் யுத்தத்திலிருந்து திரும்புவது யுக்தமன்றல்லவா? 'சூரர்களாகிய நமக்கு முன்பு இந்த அர்ச்சுனன் ஒரு விநாடி கூட நிற்பதற்கு எவ்வாறு சமர்த்தனாவன்? நம்முடைய முன்னிலையி லல்லாமல் மற்றைய

விடங்களிலல்லவோ அவனுக்குச் சாமர்த்தியம்' என்று உன்னுடைய சக்தியைத் தூஷித்துக்கொண்டு, உன்னுடைய விரோதிகளும், திருதராஷ்டிரன் பிள்ளைகளுமான அந்தச் சூரர்கள் சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லப் போகின்றார்கள். அதைவிட மிகவும் அதிகமான துக்கம் உனக்கு எது? 'இவ்வாறு சொல்லத் தகாத வார்த்தையைக் கேட்பதைவிட மரணமே நல்லது' என்று நீயே நினைக்கப்போகிறாய்."] 34-37

"இன்னுஞ் சுகதுக்கங்களையும், இலாப நஷ்டங்களையும், ஜயாபஜயங்களையும் சமமாகப் பார்த்து, அதன் பிறகு யுத்தத்திற்கு ஆயத்தமாகக் கடவாய்; நீ இவ்வாறான நிச்சய முடையவனாயின் பாபத்தை யடையாய்."

[உள்ளுரை:—இப்படித் தேகத்தைக்காட்டிலும் வேறாகவும், தேகத்தின் சுவபாவங்களொன்றுடனும், யுத்தத்தில் விடமுடியாத ஆயுதம் விழுதல் முதலியவைகளா லுண்டாகிற சுகம், துக்கம், பொருள் கிடைத்தல் கிடையாமை, ஜயம், தோல்வி ஆகிய இவைகளில் விகார மடையாத புத்தியை யுடையவனாய், சுவர்க்கம் முதலிய பிரயோசனங்களில் ஆசை யில்லாதவனாய், செய்யவேண்டிய தென்கிற புத்தியினால் மாத்திரம் யுத்தத்தை நீ ஆரம்பஞ்செய்! இவ்வாறு செய்தால் நீ பாபத்தை யடையாய்; அஃதாவது, துக்கமான சம்சாரத்தைப் பொருந்த மாட்டாய்; சம்சார பந்தத்திலிருந்து விடுபடப் போகிறாய்.]

[ஸ்ரீதரர்:—"நன்மை தீமைகளுக்குக் காரணம் இலாப நஷ்டங்கள்; இலாப நஷ்டங்களுக்குக் காரணம் வெற்றியும் தோல்வியும். ஆகலான், காரண காரிய மிரண்டையும் விடவேண்டு மென்பது கருத்து. இந்த ஸ்லோகத்தில் 'பாபம்' எனின் 'பரப்ரஹ்மம்' என்று பொருள். இந்தப் பாபத்தைப் பிரிக்கின், ப × அபம் என்று ஆகும். 'ப = ஈஸ்வரன், அப = தனக்கு மேல் ஈஸ்வரனில்லாதவன்' என்று பொருள்."]

[ஸ்ரீ இராமாநுஜர்:—"ஓ! அர்ச்சுனா! அறிவினா லறியக்கூடிய அதாவது அவசியம் தெரிந்து கொள்ளவேண்டிய ஆத்ம வஸ்துவினிடத்தில் அதை உணர வேண்டியதற்காக எந்தப் புத்தி புகட்டப்பட வேண்டியதோ, அவ்வகைத்தான இந்தப் புத்தி அந்த ஆத்ம ஞானத்தை முன்னிட்டதும், மோக்ஷத்திற்குச் சாதனங்களுமான கர்மத்தைச் செய்யவேண்டிய விஷயத்தில் எந்த அறிவின் சம்பந்தம் சொல்லப்படவேண்டியதோ அதனை இப்போது உனக்குத் தெளிவாகச் சொல்லுகின்றேன். அதாவது, நிச்சய சொரூப புத்தியாலே செய்யப்படுகின்ற நிஷ்காம

கருமயோகத்தைப் பார்க்கினும் பலாபேக்ஷையாலே செய்யப் படுங் காமிய கருமம் மிகவும் இழிவானது. ஆகையால், நிச்சய சொரூப புத்தியாலே காரணமான நிஷ்காம கருமயோகத்தை நீ ஆசிரயிப்பாய். 'பலனை இச்சிக்கிறவர்கள் துக்க மடைவார்கள்' என்று இனிச் சொல்லப்போகிறபடியால், அந்த யோகத்தில் எந்தப் புத்தி சொல்லவேண்டியதோ, எந்த புத்தியோடு சேர்ந்த நீ கர்ம பந்தத்தை விடப்போகின்றாயோ, என்னால் சொல்லப் போகிற அந்த புத்தியைக் கேள்! கர்மத்தினா லுண்டாகக்கூடிய பந்தம் கர்மபந்தம்; அதாவது சம்சாரபந்தம்."] 38

"ஓ அர்ச்சுனா! சாங்கியத்தில் இந்த ஆத்ம விசார ஞான மானது சொல்லப்பட்டது. இனி யோக விஷயமான ஞானத்தைக் கேட்பாயாக. இந்த யோக மார்க்கத்தை யனுசரிப்பதால் நீ கரும பந்தத்தை நிவிர்த்தித்துக் கொள்ள வல்லவனாவாய்.

அர்ச்சுனா! பலாபேக்ஷையின்றி ஈஸ்வரார்ப்பணமாகச் செய்யும் இக் கருமயோகத்தில் ஆரம்பித்து வீணாதல் இல்லையாம். இடையிடையே இதற்கு லோப நேரிடினும் தோஷமானது இல்லை. பலாபேக்ஷையின்றிச் செய்யும் இக் கருமயோகத்தில் சொற்ப அப்பியாசமாயினும் மிகப் பெரிய ஜனன மரண பிரவாக ரூபமான சமுசார பயத்தினின்றும் விடுதலை யுண்டாகும்."

[உள்ளுரை:—சாஸ்திரங்களிற் கூறிய எல்லாக் கர்மங்களிலும் 'வ்யவசாய' ரூபமான புத்தி, ஒன்று மோக்ஷத்தை விரும்புகிறவனால் செய்யப்படுங் கர்மத்தில் செய்யப்படும் புத்தி; 'வ்யவசாய' என்பது நிச்சயம்; கீழ்ச்சொல்லிய புத்தி ஆத்ம ஸ்வரூபத்தில் உண்மையைப்பற்றிய நிச்சயத்தை முன்னிட்டு உண்டாகின்றது. காமிய கர்மத்தைப்பற்றிய புத்தியோவெனில், 'வ்யவசாய' ரூபமல்ல. பலன்களி லாசையினால் ஆரம்பிக்கப்படுகிற அந்தக் கர்மத்தில் தேகத்தைவிட வேறாகிய ஆத்மாவொன்றிருக்கிற தென்கிற ஞான மாத்திரம் வேண்டியது. ஆத்ம ஸ்வரூபத்தின் உண்மையைப்பற்றிய நிச்சயம் வேண்டியதில்லை. அவ்வா றில்லாவிட்டாலும்; சுவர்க்கம் முதலிய பலன்களி லாசையும், அதின் உபாயங்களை அனுஷ்டிப்பதும், அதின் பலன்களை அனுபவிப்பது முண்டாகலாம். விரோத மில்லாமையாலும் கீழ்ச்சொன்ன வ்யவசாயமாகிய இந்தப் புத்தி ஒரே பலத்திற்குச் சாதனங்களைப்பற்றி வருவதாலொன்று மோக்ஷமென்கிற ஒரே பிரயோசனத்திற்காகவன்றோ மோக்ஷத்தி லாசையுள்ளவனுக்கு எல்லாக் கர்மங்களும் விதிக்கப்படுகின்றன.

சாஸ்திரார்த்த மொன்ருகையால் எல்லாக் கர்மங்களையும் பற்றிய புத்தியு மொன்றே. தாங்கள் தங்கள் அங்கங்களுடன் கூடிய ஆக்கினேய முதலிய ஆறு இஷ்டிகள் ஒரே பலத்திற்குச் சாதனங்களா யிருத்தலாலே ஒன்றே சாஸ்திரார்த்த மாகையால், அவைகளைப்பற்றிய புத்தி எவ்வாருே அவ்விதமேதான். அப்படி ஆத்மாவின் சொரூபத்தைப்பற்றி நிச்சயமில்லாதவர்களாய், ஸ்வர்க்கம், பிள்ளை, பசு, அன்னம் முதலிய பலன்களெண்ணிறந்தவைக ளாதலால், அவைகளும் அநேகம். அதிலும் அநேக முட்பிரிவை யுடையவைகள்; ஒரே பலத்திற்காக விதிக்கப்பட்ட தர்ச பூர்ணமாசம் என்கிற கர்மத்தில் ஆயுளை விரும்புகின்ருன். தர்ச பூர்ணமாச மென்ருல், ஆக்நேயம், அக்னீஷோமீயம், உபாம்ஸுயாஜம், ஐந்திரம் இரண்டு, ஐந்திராக்கனம் இவைகளாலும் முதலில் விதிக்கிற வாக்கியங்களில் தனித்தனியே விதிக்கப்பட்டு முதல் மூன்று பௌர்ணமியில் செய்யப்படுகிறபடியால் தர்சமென்றும், இவ்விரண்டும் சுவர்க்கமாகிய ஒரே பலத்திற்குச் சாதனமாகையால், தர்ச பௌர்ணமாசமென்று ஒரே பெயராகச் சொல்லப்படுகிறதென் றறியவும். என்றிவை முதலிய வாக்கியங்களால் சொல்லப்பட்ட உட்பிரிவான பலன்களில் வித்தியாசங்களால் அநேகம் கிளைகளிருக்கின்றன. ஆகையால், ஆத்ம சுவரூப நிச்சய மில்லாதவர்களுடைய புத்தி, அநேகங்களாயும், அநேக உட்பிரிவுகளையுடையவைகளாயு மிருக்கின்றன. அர்ச்சுனு! இதனுல் விளங்குவது யாதெனின், நித்தியங்களும் நைமித்திகங்களுமான கர்மங்களில் எந்தெந்த முக்கிய பலன்களும் இடையே சம்பவிக்கும் பலன்களும் சாஸ்திரங்களில் கேட்கப்படுகின்றனவோ அவைகளெல்லாவற்றையும் விட்டு மோக்ஷமாகிய ஒரே பலத்திற்குச் சாதனமாக இருத்தலால், எல்லாக் கர்மங்களையு மொரோ சாஸ்திரார்த்தமாக அனுஷ்டிக்கவேண்டும். தன் வர்ணுஸ்ரமத்திற்குத் தகுந்த காரியங்களையும், அததன் பலன்களையும்விட்டு மோக்ஷத்திற்குச் சாதனமாக விருத்தலால் நித்திய நைமித்திகங்களோடு சேர்த்துத் தன் சக்திக்குத் தக்கபடி அனுஷ்டிக்க வேண்டியது ] 39-40

"ஓ! குருவம்சத்திற் பிறந்தவனே! ஈசுவரார்ப்பணமாகச் செய்கிற இந்த நிஷ்காம கருமயோகத்தில் மேற்கூறியபடி அபேத விவேகமொன்றே வியாபகமா யிருப்பதென்றும், அவ்வணமாய தத்துவத்திற் றுணிபெய்தற்கு கூடிற்றேரது புத்தியானது ஜீவேச்சுவர சகத்தாகப் பரிணமிக்கப்பட்டு மூன்ருக விரிந்து ஒவ்வொன்றும் பற்பல

சம்பந்த முடைத்தாகிச் சிதறப்பட்டு முடிவின்றி யனந்த பேதமாக இருந்துகொண்டிருக்கும்.''

[உள்ளுரை:—மெய்யுணர்ச்சிக்கண் அன்னியமொன்றுங் தமக்கென யதார்த்த சொரூப முண்டாகச் சித்தியதாகவே செய்பவன் - செயல் - செயப்படுபொருள் - கருவி - நிலம் - காலம் ஆகிய இவற்றி லொன்றும் அச் செம்மை யநுபூதிச் செல்வனை யுபாதிக்கமாட்டா தென்பதாம்.] 41

"ஓ! அர்ச்சுன! வேதத்திற் பலன்களைக் கூறும் பிரகரணமாகிய அர்த்தவாதத்தில் அன்பினை யுடையவரும், 'கருமங்களைக்காட்டிலும் வேறு புருஷார்த்த மில்லை' என்பாரும், ஈஷணைத்திரயங்களில் ஆசையுள்ள மனமுடையோரும், 'சுவர்க்காதி பதவியே யெவற்றினு மேலாய புருஷார்த்தம்' எனக் கொண்டிருப்போருமாகிய உண்மை யறியா அவிவேகிகள்: பிறவியையும் - வினையையும் - வினைப்பயனையுந் தரத்தக்கதும், போக ஐசுவரியங்களை யடைதற்குப் பலவித கருமங்களை யுடையதும், கனிக ளில்லாது பூக்களை மாத்திரங் கொடுக்கும் காயா மரங்கள்போல அற்ப பயனைத் தருவதாம். இவ்வாறாகிய எந்த வசனத்தைச் சொல்லுவார்களோ அந்த வசனத்தினால் அபகரிக்கப்பட்ட மனதை யுடையோராகவும், சுகசௌக்கியத்தினும் ஐசுவரியத்தினும் ஆசை யுடையோரான அவர்களுக்குப் பரமார்த்த நிச்சயமான விவேகமானது எவ்வளவு போதிப்பினும் உண்டாகமாட்டாது.''

[குறிப்பு:—யக்ஞம் முதலிய கருமங்களுக்கு மேலான பலன்கள் சுவர்க்க முதலியவைக ளென்றும்; புத்திர, மித்திர, களத்திர, தனதான்னிய, வஸ்து, வாகனாதி பலன்களு முண்டாகு மென்றும் வேதங்களில் பலன்களைச் சொல்லுகிறபடியால், அவைகளில் அவாவுற்றுக் கவரப்பட்ட மனதை யுடையவனுக்கு ஆத்ம சுவரூப ஞானத்தில் பிரவிர்த்தியே யுண்டாக மாட்டாது.] 42-44

"ஓ! அர்ச்சுன! வேதங்கள் (சத்துவாதி) முக்குணங்களை விஷயமாக வுடையன; ஆகையால், நீ ஆசை நீங்கினவனாயும், (சுகம், துக்கம், லாபம், நஷ்டமுதலான) துவந்துவங்க ளற்றவனாகவும், நித்திய சத்துவ நிலையை யுடையவனாகவும், யோகக்ஷேமங்களை யற்றவனாகவும், ஊக்க முள்ளவனாகவு மாகக்கடவாய்!

ஸ்நான பான முதலிய காரியங்களுக்குச் சொற்ப ஜலமுள்ள கிணறு முதலியவைகளில் எவ்வளவு பிரயோஜனமோ அவ்வளவு நான்கு பக்கங்களிலிருந்து வந்து சேருகிற விஸ்தாரமான நீருள்ள ஏரியில் உண்டாவதுபோல, வேதோக்தமான சகல கருமங்களிலேயும்

எவ்வளவு உபயோகமோ அவ்வளவு பிரயோஜனமும் ஆத்ம தத்துவ சுவரூப நிச்சயமுள்ள பிரமநிஷ்டனுக்கு உண்டாகும்"

[உரை:—சத்துவம், ரஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களுண்டு. ஈண்டு சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகிய முக்குணங்களினால் நிறைந்தவர்களென்கிற பதத்தினால் சொல்லப்படுகின்றார்கள். அவர்களைப் பற்றியவைகள் வேதங்கள்; தமோகுணம் நிறைந்தவர்களிடத்திலும், இரஜோகுணம் நிறைந்தவர்களிடத்திலும், சத்துவகுணம் நிறைந்தவர்களிடத்திலும் பிரீதியையுடைத்தா யிருக்கையினால், வேதங்கள் அவர்களுக்கு நன்மையைத் தெரிவிக்கின்றன. இவைகளுக்குத் தத்தம் குணத்திற்குத் தக்கபடி சுவர்க்கம் முதலியவைகளுக்குச் சாதனத்தையே நன்மையாகத் தெரிவிக்காமற்போனால், இவர்கள்: இரஜோகுணம் தமோகுணம் மேலிட்டிருத்தலால், சாத்விகமான பிரயோஜனமான மோக்ஷத்தில் ஆசை இல்லாதவர்களாய்த், தங்களால் விரும்பப்பட்ட பலத்திற்குச் சாதனத்தைத் தெரிந்துகொள்ளாதவர்களாய்க், காமிய பலத்தின் ஆசையினால் பரவசர்களாய்ச், செய்யக்கூடாத காரியத்தில் செய்யத் தகுந்தது என்கிற பிரமையினால் பிரவேசித்தவர்களாய் நாசமடைந்து விடுவார்கள். ஆகையால், வேதங்கள், இம்மூன்று குணங்களையுடைய மனிதர்களைப் பற்றியன. நீயோவெனின், மூன்று குணங்களு மில்லாதவனாக இரு! இது தருணம் சத்துவகுணம் மேலிட்டவனாகிய நீ, அதனையே விருத்தி செய்! ஒன்றுக்கொன்று கலந்திருக்கிற மூன்று குணங்களும் மேலிட்டவனாக நீ இருக்கக் கடவனல்லன். அவைகள் மேலிடுவதை நீ விருத்தி செய்யாதே! சம்சாரத்தி லுண்டான எல்லாச் சுவபாவங்களு மில்லாதவனாகவும், மற்றைய இரண்டு குணங்களோடுங் கலக்காத, எப்பொழுதும் விருத்தி யடைந்த சத்துவ குணத்திலிருப்பவனாக நீ இரு! எவ்வாறெனில், ஆத்ம ஸ்வரூபமும், அதை அடைவதற்கு உபாயமும், தவிர, மற்ற வஸ்துக்களை அடைதலையும், அவ்வாறு அடைந்ததைக் காப்பாற்றுதலையும் கைவிட்டு, ஆத்ம சுவரூபத்தை அடைவதிலேயே நீ எப்பொழுதும் ஆசையுள்ளவனாக இரு! இதுகாறும் அடையாததைப் புதிதாக அடைவது யோகம்; அவ்வாறு அடைந்ததைக் காப்பாற்றுதல் க்ஷேமம். இவ்வாறிருக்க, உன்னிடம் ரஜஸ் தமஸ் ஓங்குவது குன்றி விடும்; சத்துவகுணம் விருத்தி யடையும். வேதத்தில் கூறிய எல்லாப் பொருள்களும், யாவருக்கும் கிரகிக்கத் தகுந்ததுமல்ல. எவ்வாறு எல்லாவற்றிற்காகவும் ஏற்படுத்தப்பட்டும் எல்லா விடங்களிலும் நிறைவான ஜலமுள்ள

குளம் முதலியவற்றில், தாகமுடையவன் தனக்கு எவ்வளவு ஜலம் பிரயோஜனமோ அவ்வளவு மட்டும் எடுத்துப் பருகு வானே தவிர, முழுமையும் எடுத்துப் பானஞ் செய்வதில்லை. அவ்வாறே, எல்லா வேதங்களிலும் மோக்ஷத்தில் விருப்பமுள்ள வைதிகர்களுக்கு எவ்வளவு மோக்ஷத்திற்குச் சாதனமோ அவ்வளவுதான் எடுத்துக் கொள்ளப் படுகிறது. வேறல்ல.]

[குறிப்பு:—பிரவிர்த்தி கருமம் கிணறு; நிவிர்த்தி கருமம் சமுத்திரம். சமுத்திரத்தில் செய்யும் காரியம் கிணற்றில் நடவாது; கிணற்றில் செய்யுங் காரியம் கடலில் நடக்குமல்லவா? ஆகலின், பிரவிர்த்தி கர்மவான் சுவர்க்க மாத்திரம் அனுபவிப்பவன். நிவிர்த்தி கர்மவான் தான் எண்ணின லோக மனைத்திற்கும் போகக்கூடும்.] 45-16

"அர்ச்சுனா! உனக்குக் கருமஞ் செய்தற்குமட்டுமே அதிகாரமுண்டு; (கரும) பலனை யனுபவிக்க வேண்டு மென்கிற அவாவில் உனக்கு ஒருபோதும் அதிகார மில்லை. சத்கருமப் பிறவியைத் தருமாதலின், 'நான் செய்தேன்' என்கிற அகம்பாவத்தைக் கொண்டு அதைச் செய்யின், அக் கருமத்திற்கான பலனை நீ யனுபவிக்க வேண்டி வருமாகலின், அங்ஙனஞ் செய்து கருமப் பலனுக்கு நீ பாத்திரனாக வேண்டாம். (பலனைக் கருதாமற் கருமஞ் செய்வதைப் பார்க்கிலும்) கருமமே செய்யாமல் விட்டிருப்பே னென்பதில் உனக்கு ஆசை யுண்டாகா தொழியக் கடவது."

[உள்ளுரை:—மேலும், சிற்சில பிரயோசனங்களோடு கூடியதாகவே சுருதியிற் கூறப்பட்ட நித்திய நைமித்திக காமிய கர்மங்களில், எப்பொழுதும் சத்துவகுணத்தி லிருந்து கொண்டு மோக்ஷத்தில் விருப்பமுள்ளவனுமான உனக்குக் கர்மங்களில் மாத்திரமே அதிகாரம்; அத்துடன் சேர்ந்ததாக அறியப்பட்ட பிரயோஜனங்களில் ஒருபொழுதும் உனக்கு அதிகார மில்லை. பலத்தோடு சேர்ந்தவைகள் பந்தமாகையாலும், பலனில்லாமல் என்னுடைய ஆராதனமாக மாத்திர மிருக்கும் அவைகள் மோக்ஷத்திற்குக் காரண மாகையினாலும், கர்மங்களுக்கும் அதின் பலன்களுக்கும் நீ காரணமாக இராதே! உன்னால் செய்யப்படுங் கர்மத்தில் எப்போதும் சத்துவகுணத்தி லிருந்து கொண்டு மோக்ஷத்தை விரும்புகிறவனான நீ உன்னுடைய கர்த்திருத்துவ மில்லாமையை பசி நீங்குதல் முதலிய பிரயோஜனத்திற்கும் காரணமில்லையென்று நீ அனுசந்திக்க வேண்டும். இவ்விரண்டையும் குணங்களிலேயாவது, சர்வேஸ்வரனாகிய என்னிடத்திலேயாவது அனுசந்திக்க வேண்டுமென்று மேலே

சொல்லப் போகிறேன். இவ்வாறு தியானஞ் செய்துகொண்டு கர்மத்தை நீ செய்! கர்மங்களைச் செய்யாம லிருப்பதால், 'யுத்தஞ் செய்கிறதில்லை' என்று முன்பு உன்னால் சொல்லபபட்டதே அதில், உனக்கு ஆசை இருத்தல் கூடாது.]

["கிருஷ்ண! கர்மத்தில் இவ்வளவு நிபந்தனையானால் அது என்னால் ஆகாத காரியம்; கர்மத்தை விட்டுவிட வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது."

"ஓ! அர்ச்சுன! சகல கருமங்களுந் தேகேந்திரிய சொரூபமான பிரகிருதியை யுடையன; ஆன்மா ஒரு கருமத்தையுஞ் செய்பவனல்லன்; நிர்க்குணன், நிஷ்கிரியன், நிருவிகற்பன், நிர்விகாரி என முன்னறிந்தபடி சிந்திப்பதாகிய யோகத்தில் நிலைத்தவனாக ஈஸ்வரனுக்குத் திருப்தி யுண்டாக்கவேண்டு மென்பது முதலாகிய பலாபேக்ஷையும், 'நான் செய்கின்றேன்' என்னும் கர்த்திருத்துவமும், எனதென்னு மபிமானமும் விட்டு, ஈசுவரார்ப்பண மென்கிற இந்தக் கருமயோகத்திற்குப் பயனாகிய சித்தியை நீ அடையினு மடையாமற் போயினும் அதிலும் கவலை யின்றிச் சமமா யிருந்துகொண்டு கருமங்களைச் செய்வாயாக. இந்தச் சமனிலையே யோகமெனச் சொல்லப் படுகின்றது.]

[குறிப்பு:—இந்த ஸ்லோகத்தில் 'யோகஸ்த்த' என்கிற பதத்திற்குப் பொருளாவது: கிடைத்தாலும், கிடைக்காமற் போனாலும் சமமாயிருத்தல் என்னும் அர்த்தத்தில் ஓரிடத்திலும் பிரயோகம் காணப்படவில்லை. யோகமாவது: மனதின் சமாதானத்தின் பிரயோகம் யோக சாஸ்திரத்தி லேற்பட்டிருக்கின்றது. இவ்வாறு சமமாயிருத்தலும் மனதின் சாதனமாகையால், யோக மென்கிற பதத்திற்கு இது அர்த்தமாகலாம்.] 47

"ஓ! தனஞ்சயா! ஈசுவரார்ப்பணமாகச் செய்யும் நிஷ்காம கருமமென்கிற புத்தியோகத்தைப் பார்க்கிலும், பிரயோஜனத்தில் ஆசையோடு செய்யப்படுகிற காமிய கருமமானது மிகவு மிழிவுடையதேயாம்; ஆகலின், ஞானயோகத்தில் ஆச்சிரயத்தை நீ விரும்பக்கடவாய்! எந்தப் பிரயோஜனத்தையும் முன்னிலையாகக் கருமங்களைச் செய்பவர்கள் ஜனன மரணப் பெருந்துயர் நீந்தமாட்டாது அதிலழுந்துப் பேதைகளாவர். ஆத்ம சொரூப நிச்சய சித்தனாய்ச் செய்கிற நிஷ்காம யோகத்திற்கு உரை யிறந்ததும் ஒப்புயர் வற்றதுமான பிரம நிர்வாணமே யடையத்தக்க பயனாக வுறும். அல்லாமல், வேறு பிரயோஜனத்தைக் கருதிச் செய்யுங் கருமத்திற்குச் சொர்க்

சாதிகளை உபாதிகளை முன்னிட்டுக்கொண்டு பயனையுண்டா யிருப்பு மாகலின், அவை யொரு பயனைப் பெறத் தக்கனவல்ல.

ஆகலின், சுவாத்மானந்த சுகவாரிதி மயமாதற்குரிய சாங்கிய மென்கிற ஞான ஐஸ்வரியத்தை யடைதற்கான சாதனமாகிய நிஷ்காம கருமயோகமான ஞானயோகத்தைச் சார்ந்துகொள்ளக் கடவா யாக. முன்னிலையாக ஒன்றைச் சுட்டிப் பலனை விரும்புவோர் துன்பே சுமையாகச் சுமப்பர்.”

[குறிப்பு:—‘நிஷ்காம கருமயோகத்தில், அல்லது சாங்கிய புத்தியில் ஆசிரயத்தை விரும்பு’ என்றால், ‘பரமார்த்த ஞானத்தை சரணமடையக்கடவாய்’ என்று ஸ்ரீ சங்காரும், ஞானத்தின் பொருட்டுக் காரணமாகிய கருமயோகத்தை அல்லது இரக்ஷிக்கிற ஈசுவரனை ஆசிரயிக்கக் கடவாய்’ என்று ஸ்ரீ தரரும், காமிய கருமமானது ஜனன மரணத்திற் கேதுவானது; ஆதலால், அறிவை யடையக்கடவாய்’ என்று ஸ்ரீ இராமாநுஜரும், ஞானத்திற்குக் காரணமான நிஷ்காம கருமயோகத்தில் இருக்கக்கட வாய்’ என்று ஸ்ரீ மாத்துவரும், ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளும் கூறியுள்ளார்கள்.] 48-49

“ஆதலால், ஆத்மஞானத்தில் சுகதுக்க சமபுத்தி யுடையவன் இருவினைப் பயனாகிய பாவ புண்ணியங்களை இந்த ஜன்மத்திற்றானே போக்கிக்கொள்ளுகிறான். ஆகலின், சமனிலை யோகத்தின்பொருட்டு நீ பிரயத்தனஞ் செய்வாயாக! வருணாசிரம தருமமாகிய சத்கருமங் களைச் செய்தும் அதன் பயனி லொட்டுதலின்றித் தூக்கற நிற்கு முபாயமே யோகமென்று சொல்லப்படுகின்றது.

ஆகையால், அர்ச்சுனா! ஆத்ம ஞானியானவன் தானடைந்த அத்துவித ஞான மகிமையினாலே சுகிருதம் துஷ்கிருதம் ஆகிய இவைகளைச் செய்தும் செய்யாதவனாக ஜனன மரணத்தினின்று வீடடையும்படிக்கான சுதந்திரத்தை யுடையவ னாகின்றான்.

ஆகலின், யான் கூறியுள்ளபடி எதனால் சகலத்தையுஞ் செய் துஞ் சும்மாவிருந்தே னென்பதற்கான நிவிர்த்தியை நீ பிரவிர்த்தியி னிடத்திற்றானே காண்பாயோ அந்த யோகத்தை யடைவதற்கு நீ முயல்வாயாக! பிரவிர்த்தியில் நிவிர்த்தியைக் கண்டிருப்பதாகிய யோகத்தில் திடம் பெறுதற்காக, ஜீவன்முக்தன் சகல கருமங்களை யுஞ் செய்தல்வேண்டும். ஆத்ம தத்துவஞான முடையவர்கள் மேற் கூறிய யோகசாதனத்தில் முயன்று ஆத்மாக்களைச் சுகதுக்கங்களிற்

பந்திப்பதான சுவபாவத்தையுடைய பிரவிர்த்தியி லிருந்துகொண் டிருப்பத்தானே நிவிர்த்தியைக் கொடுப்பதாகு மான்மியத்தையுடைய அந்த யோக சக்தியினுல் ஜநந மரண பயத்தையுடையதான கருமப் பலன்களைத் தகிக்கச் செய்து ஜீவன் முக்தர்களாகத் துக்க நிவர்த்தி யினையுந் தடையற்ற ஆனந்தத்தையு மடைவார்கள்.

ஆகையால், எப்போது உனது புத்தி அஞ்ஞானமாகிய தோஷத் தைக் கடக்குமோ அது தருணம் கேட்கவேண்டிய வேதாந்தார்த்தத் திலும் வைராக்கிய மடைவாய். அநேக அர்த்தங்களைக் கேட்டதி னுல் கலங்கியிருக்கின்ற உனது புத்தி எப்பொழுது சலிக்காமல் பர மாத்மாவினிடத்தில், அல்லது தியானத்தில் நிலையாய் நிற்குமோ அப் போது ஞானயோகமாகிய ஆத்ம தரிசனத்தை, அல்லது பகவத் யோகத்தை, அல்லது தத்துவஞான யோகத்தை யடைவாய்.''

[உள்ளுரை:—மேலும், கர்மத்தி லிருந்துகொண்டும் அவ்வா றிருப் பதினுல் எல்லாப் பாவங்களையும் போக்கடிக்கப்பட்ட உன் னுடைய புத்தி எப்பொழுது மிகவும் அற்பமான பலத்தில் ஆசை வைப்பதற்குக் காரணமாகிய அஞ்ஞானமாகிற கலக்கத்தைத் தாண்டப் போகின்றதோ, அப்போது என்னிடமிருந்து இதற்குமுன் விடவேண்டியதாகக் கேட்கப்பட்ட பலம் முதலிய வைகளைப்பற்றியும் இனிக் கேட்க வேண்டியதைப்பற்றியும் நீயே துக்கத்தை யடையப்போகின்றாய். மேலும், என்னிடம் கேட் டதினுல் விசேஷமா யறியப்பட்ட, அதாவது மற்றெல்லா வஸ் துக்களையும்விட வேறுபட்டதாயும், அழிவில்லாததாயும், மிகவும் சூக்ஷ்மமுமாகிய ஆத்மாவைப் பற்றியதான ஒரே விதமான புத்தி யானது, பலத்தி லாசை யில்லாமல் நிர்மலமாகச் செய்யப்பட்ட மனதில் எப்போது அசையாமல் நிற்கப் போகின்றதோ அப் போது நீ ஆத்மாவலோகநத்தை யடையப் போகின்றாய்.]

[ஸ்ரீ சங்கர பாஷ்யம்:—இதுகாறும் வேதாந்தக் கேள்வியினுலும், இனிச் செய்யவேண்டிய வேதாந்த சிரவணத்தினுலும் உனக்கு மனம் வெறுப்புண்டாகக் கூடாது. ஏனெனில், நீ அஞ்ஞான இருளாகிய நிலைமையி லிருக்கிறபடியால், வேதார்த்தங்களை யுணர்ந்து அதன்படி அனுட்டிக்க வேண்டியவனு யிருக்கின் ருய். கருமத்தையும் அதைச் செய்யவேண்டிய விவரத்தையும் கூறுவதாகிய வேத வாக்கியங்களில் வெறுப்புண்டாவது பிரம்ம ஞானிக்குத் தகுமாகுலும், நீ அவ்வாறு வெறுப்படையத் தகுந் தவ னுகமாட்டாய்; உனக்கு ஞானுதிகாரம் இன்னும் வரவில்லை. இது 53-வது சுலோகத்தைச் சார்ந்தது.] 50-53

அர்ச்சுனன் வாக்கியம்

"ஏ! கேசவா! சமாதிநிலையடைந்து சலிக்காத ஞானமுள்ளவனுக்கு லக்ஷணமென்ன? அவன் எவ்வாறு பேசுவான்? எப்படியிருப்பான்? எவ்வாறு மற்றைக் காரியங்களை நடத்துவான்? அதனைச் சிறிது விளக்கவேண்டும்."

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"ஓ! அர்ச்சுனா! எவன் தன் ஆத்மாவில் தானே மனதைத் திருப்தி செய்து கோரிக்கைகளை முழுதும் எப்பொழுது விடுவானோ, அப்பொழுதே அவன் ஸ்திர ஞானமுள்ளவனென்று கூறப்படுவான்.

இராகத்தை (ஆசையை) விட்டுவிட்டால் இந்த நிலைக்கு வருவான்; இது ஞானயோக நிஷ்டையின் முதிர்ந்த நிலைமை. மேலும், வருத்தம் வரின் துடிக்காத மனதை யுடையவனும், சுகம் வரின் பற்றற்றவனும், விருப்பம் பயம் கோபம் இவைக ளற்றவனுமாயிருக்கிற மௌனி அல்லது சந்நியாசியானவன் நிலைத்த ஞானியாகச் சொல்லப்படுகின்றான்."

[குறிப்பு:—இந்த ஸ்லோகத்தினாலும் இதற்கு முந்திய ஸ்லோகத்தினாலும் முதலாவது கேள்வியான நிலைத்த ஞானியின் இலக்ஷணஞ் சொல்லப்பட்டது. ஸ்ரீ இராமாநுஜ பாஷ்யக்காரரால் முந்திய சுலோகத்தில் எவனைக் குறித்துச் சொல்லப்பட்டதோ அவன் முதல் அந்தஸ்துள்ளவன்; உலக வாசனை முற்றிலுமொழிந்தவன். இதில் கூறப்பட்டவனோ, இரண்டாவது அந்தஸ்துள்ளவன். பிரபஞ்ச வாசனை முற்றிலு மற்றுப்போகாமல் சில பற்றுதலுட னிருப்பவன்.] 54-56

"ஓ! அர்ச்சுனா! எவன் சகல வஸ்துக்களி னிடத்திலும் அபிமான மற்றவனோ, அந்தந்த இஷ்ட அநிஷ்டங்களை அடைந்தாலும், சந்தோஷப்படுகிற தில்லையோ, அல்லது வெறுப்படைகிற தில்லையோ, அவனுடைய ஞானமானது நிலைபெற்றுள்ளது."

[ஸ்ரீதர சுவாமிகள்:—இதிற் கூறப்பட்டவன் அலக்ஷியமா யிருப்பவன். எவ்வாறெனில், துக்க முண்டானால் விசனப்படாமல், "இதில் எனக்கு யாதொரு சம்பந்தமுமில்லை" என்றும், சுகமுண்டானால் அதில் சந்தோஷப்படாமல், "இந்தப் பிரபஞ்சத்தின் சுகம் சுகமாகுமா? இது எனக்குச் சந்தோஷத்தை யுண்டாக்கமாட்டாது" என்றும் கூறுவான். 54-வது சுலோகத்தி

லுள்ள இரண்டாவது கேள்வியான 'எப்படிப் பேசுவான்?' என்பதற்கும் பதில் உத்தரஞ் சொல்லப்பட்ட தென்பர்.]

[ஸ்ரீ இராமாநுஜர்:—இதிற் சொல்லப்பட்டவன் மூன்றாவது வகுப்பைச் சார்ந்தவன். ஏனெனில், உலக விஷயத்தில் மனப் பிரவிர்த்தியுள்ளவனையும், ஆனால் அப்படிப்பட்ட பிரவிர்த்தியினால் உண்டாகும் சுக துக்காதிகளில் தான் சம்பந்த மற்றவனென்றும், உதாசீனனாயு மிருப்பவ னென்றும் மொழிந்துள்ளார்.] 57

''ஆமையானது தன் கரசரணாதி உறுப்புக்களைத் தனக்குப் பயமுண்டாகுங் காலத்தில் உள்ளாக இழுத்துக்கொள்வது போன்று, யோகியானவன் விஷயங்களில் வியாபித்திருக்கிற இந்திரியங்களை இந்திரிய விஷயங்களிலிருந்து எப்பொழுது நிவர்த்திக்கும்படிச் செய்வானோ அப்பொழுது அவனுடைய ஞானம் ஸ்திரமுடையதாகும்.

உபவாசாதிகளைச் செய்யும் புருஷர்களுக்கு இந்திரியங்களினின்று அவ்வவ் விந்திரிய விஷயங்கள் மாத்திரம் நிவர்த்திக்குமல்லாமல் ஆசை யகலாது. பரமாத்மாவை ஞானத்தால் உணர்ந்த புருஷனுக்கு மாத்திரம் அந்த ஆசையும் நீங்கும்.''

[உள்ளுரை:—பிள்ளைகள் கெட்டுப் போவதற்குப் பெரியவர்கள் கற்பிக்க வேண்டுமென்ற நியதி யில்லை. அதுபோல, இந்திரியங்கள் கெட்ட வழிகளில் பிரவேசிக்க முயன்று கொண்டிருக்கும். குதிரைகள் புற்களை மேய்வன போன்று இந்திரியங்கள் விஷயங்களை அநுபவிக்கக் கோரும். அவைகளை விரோதிக்க வேண்டும். மனம், ஒரு குமாரனாகக் கூறப்படுகிறான். இவன் இந்திரியங்களென்னும் கெட்ட நட்பாளருடன் கலந்து கெட்டிருக்கின்றான். முதலில் அந்தத் துஷ்ட சிநேகராகும் இந்திரியங்களைத் தூர விலக்க வேண்டும். பின், கெட்டிருக்கிற மனதிற்கு அந்தக் கெட்ட இந்திரியங்களி லிருக்கும் ஆசையைப் போக்கடிக்க வேண்டும். "மனதை என் திருத்த வேண்டும்?" எனின், தன் சிநேகராகும் பாலர்கள் வாராமையினால், பையன், வெளியிற் செல்லச் சாமர்த்திய மற்றவனாயினும், 'அவர்கள் வரவில்லையே' என்று அவன் சிந்தித்துக் கொண்டேயிருப்பான்; ஆதலினாலும் தீதேயுண்டாம். அவ்வாறே இந்திரியங்களின் சம்பந்தம் இல்லாமற் செய்யினும் மனது மாத்திரம் சிந்தை யடைந்திருக்கும். ஆதலால், அந்த மனதைத் திருத்த வேண்டும். 'எந்த மூடாத்மா கர்மேந்திரியங்களை நடக்க விட்டு மனதால் விஷயங்களை ஸ்மரிக்கின்றானோ அவன் பொய்யான

ஆசாரமுள்ளவன்' என்று கூறப்பட்டதாகையால், முக்கியமாய் மனதை நிக்ரஹிக்க வேண்டும். பல நாட்களாகப் பாராத தனது நண்பனைக் கண்டவுடனே பையனுக்கு முன்னைய நட்பு எப்போதும்போல உண்டாம். ஆதலால், அவர்கள் மீண்டும் காணப்படாத இடத்தில் இந்தப் பிள்ளையை வைக்க வேண்டும். அவனுக்கு ஏதேனும் சாஸ்திரங்களைப் படிப்பித்து முன்னருள்ள பழக்கத்தைப் போக்கடிக்க வேண்டும். இவ்வாறு செய்யின் அந்தப் பையன் புத்தியுள்ளவனாய் மீண்டும் எப்பொழுதும் அந்தத் துஷ்டர்களுடன் சேராமல் சுக மடைவான். இவ்வாறே, மனதைத் திருத்திய பிறகு, ராகம்-பயம்-குரோதம் இவைகளைச் சுவாசனையாகப் போக்கடித்தல் வேண்டும். இவ்விதம் செய்யின் மனஞ் சரிப்பட்டு ஆத்மாவிலே திருப்தியடைந்ததாகும்.

மேலும், இந்த மனத்தையே பெண் குழந்தையாகவும் கூறுகின்றனர். பெண்பிள்ளை தாய் வீட்டிற் பிறந்து வளர்ந்து பிறகு புருஷன் வீட்டிற்குப் போக வேண்டி யிருக்கின்றது. அவ்வாறே, மனம் இருதயத்தில் பிறந்து பரமாத்மாவில் லயிக்க வேண்டியிருக்கின்றது. இதற்காகவே தோழிப் பிள்ளைகளாகும் இந்திரியங்களுடன் சேரவொட்டாமல் செய்து, பிள்ளைகளின் மனதைத் தமது வீட்டிலுள்ள பிள்ளைகளி னிடத்துள்ள ஆசையை நீக்கச் செய்து, பிறகு தன் பெண்ணை மாமியார் வீட்டிற்கு அனுப்பித், தந்தையும் சில நாட்க ளவ்விடத்தில் வசித்துத், தம் வீட்டினும் மாமியார் வீடு சுதந்தரமான தென்று அவளுக்குப் போதித்து இவ்விடத்திய வாசனையைப் போக்கின பிறகு, பின் அவள் மாமியார் வீட்டில் பழக்க மடைந்து, பின்னால் தன்னை யெப்போதாயினும் தனது தாயானவள் வரும்படி அழைக்கின், "எனக்கு இவ்விடத்தில் வீட்டுக் காரியங்களைப் பார்ப்பதிலேயே பொழுது சரிப்பட்டுப் போகின்றது; ஆகையால், எனக்கு இப்பொழுது வருவதற்குத் தடையாயுள்ளது" என்று சொல்லுவா ளல்லவா? அவ்வாறே, பிள்ளைகளாகும் இந்திரியங்களைச் சேரவொட்டாமற் செய்து, அதிக சிநேகமில்லாமல் மனதைத் திருத்தி, ராகம்-பயம்-குரோதம் இவைகளைச் சுவாசனையுடன் போக்கின் ஆத்மாவில் மனம் லயிக்கும்.

இந்த ஶ்லோகத்தில் 'ஸர்வஶ:' அதாவது, எல்லா விதத்தினால், என்று கூறினமையால், பார்ப்பது, வார்த்தை சொல்வது, விளையாடுவது, பரிகாசஞ் செய்வது முதலியவைகளின் நிவர்த்தி கூறப்பட்டது. இந்திரியங்களை அடக்குதலும் ஆத்மாவைத் தியானஞ் செய்வதற்கு அங்கமென்று காட்டப்பட்டது. இவ்

விடத்தில் ஞான யோக நிஷ்டனுடைய அவஸ்தைகளின் பிரிவைச் சொல்லு மிடத்தில், தூக்கம் முதலியவைகளைவிட வேறான இந்திரியங்களின் ஓய்வு என்றால், ஆத்மாவினிடத்தில் மனதைச் செலுத்தும்வரையி லுள்ள ஓய்வு என்றர்த்தம்.

இந்த நான்குவித அவஸ்தைகளும் இவ்விடத்தில் எதற்காகப் பிரித்து உபதேசிக்கப்படுகின்ற தென்கிற ஆக்ஷேபத்திற்குச் சமாதானமாவது யாதெனில், முதலில் வெளி யிந்திரியங்களை விஷயங்களிலிருந்து அடக்கி, மனதை ஆத்மாவினிடத்தில் நிலைநிறுத்துவதற்குப் பிரயத்தனஞ் செய்யவேண்டும். பிறகு, பலாத்காரமாக வெளி இந்திரியங்கள் அடக்கப்பட் டிருந்த போதிலும், மிகுதியான ஆசை, துவேஷம் முதலிய தோஷங்களினால் கலக்கப்பட்ட மனது, அவைகளை மறுபடியும் அந்தந்தக் காலங்களில், அந்தந்த விஷயங்களில் செல்லும்படிப் பிரவிர்த்திக்கும். தானும், ஆத்மாவினிடத்தில் நிலையாய் நிற்கச் சக்தி யுள்ளதாயாகாது. ஆகையினால், பக்குவமான தோஷங்களின் மிகுதியான ஆசை, துவேஷம் முதலியவைகளைத், தான் அவைகளில் உபேக்ஷையாயிருத்தல், அதிகப் பிரீதி அடையாமலிருத்தல் முதலிய கிரமப்படி பக்குவ மாக்கவேண்டும். பிறகு, தோஷங்களின் மிகுதியும் பக்குவமான போதிலும், அநாதியாய் அநுபவித்ததினால் உண்டாக்கப்பட்ட வாசனைமாத்திர மிருந்து கொண்டு, ஆத்மாவை அநுபவிக்கவேண்டுமென்று யத்தனஞ்செய்கிற புத்தியைத் தடுக்கும். அந்தச் சமயத்தில் எல்லையில்லாத ஆநந்த ரூபமாகிய ஆத்மாவைப் புருஷரிடத்தில் துவேஷமுள்ள ஸ்திரீக்கு யுவாவைக் காட்டுவதுபோலக் காட்டிக் கிரமப்படி ஆத்மாவினிடத்தில் பிரீதியை புண்டாக்கி, நினைக்க முடியாத, நீண்ட காலங் கழித்து, வெளி விஷயங்களி லுண்டான வாசனைகளின் கூட்டங்களை வேருடன் பிடுங்க ஆசை கொள்ளவேண்டும். எல்லா வாசனைகளும் நாசமடைவதால் அவைகளில் சந்தோஷங்கூட இல்லாமல் முதிர்ந்த வைராக்கியத்தை அடைந்த நிலை எதுவோ அது, "வஸகாரஸம்ஜ்ஞை" ஞானயோக நிஷ்டையின் முதிர்ந்த நிலையாகிய இது யோகமென்று பெயருடைய ஆத்மாவலோகநத்தை உண்டாக்குகின்றது. அந்த ஆத்மாவலோகநமாவது, பரம்பரையாக எல்லையில்லாத பிரயோஜனமாகிய மோக்ஷத்தைக் கொடுக்கச் சக்தியுள்ளதாக ஆகிறதென்று காட்டப்பட்டது. விரும்பக்கூடிய வஸ்துக்களை அவ்விதமாகத் தெரிந்துகொள்ளாமை, அப்படித் தெரிந்துகொள்பவைகளில் பற்றுத லில்லாமை, சொற்பம் பற்றுதலோடு அனுபவிக்கப்பட்டவைகளில் அதிகப் பிரீதி இல்லாமை, ஆசை அதிகமா யிருந்

தாலும் அதை அடக்க ஆரம்பித்தல் ஆகிய இந்த நான்கு அவஸ்தைகளுக்கும் வித்தியாசம் அறியவும்.

ஆத்மாவினிடத்தில் பிரீதி யுள்ளவனுயிருந்த அவனுக்குச் சுவரூப மென்று சொல்லி யிருப்பதுபோல, அந்த ஆத்மாவைப்பற்றியும் பேசுவதே அவனுக்கு வார்த்தை; அந்த ஆத்மாவை நினைத்துக் கொண்டிருப்பதே அவனுக்குத் தியானம்; அந்த ஆத்மாவை அடைவதற்குப் பிரவிர்த்தி செய்வதே அவனுடைய வியாபாரம் என்று நான்கு விதங்களான கேள்விகளுக்குப் பதில் ஏற்பட்டது. மேலும், இந்திரியங்கள் மூலமாய் விஷயங்களைக் கிரகிக்காம லிருக்கிற ஆத்மாவுக்கு இச்சையைத் தவிர விஷயானுபவங்கள் நிவர்த்தியாய்விடும். இந்த ஸ்திதப்பிரக்ஞனுக்கு விஷய இச்சை யுங்கூடப் பரமாத்மாவைப் பார்த்து நிவிர்த்தியாகின்றது. ஆகை யால், 'நிராஹாரஸ்ய' என்பதற்கு விஷயங்களிலிருந்து அடக்கப் பட்ட இந்திரியங்களுடைய ஜீவாத்மாவிற்கு விஷயங்கள் நிவிர்த் திக்கும்பொழுது, ஆசை நீங்கலாக நிவிர்த்தித்து விடுகின்றன; விஷயங்களில் ஆசை நிவிர்த்திக்கிறதில்லை; ஆசையும் விஷயங் களை விட மிகுந்த சுகமாகிய ஆத்ம ஸ்வரூபத்தைப் பார்த்துத் திரும்பி விடுகிறது.] 58-59

"கிருஷ்ண! மனதை மாத்திரம் ஜெயித்தால் போதாதா? அதே அல்லவா பந்த காரணம்?" "அர்ச்சுன! அவ்வாறல்ல. ஞானமுள்ள புருஷன் இந்திரியங்களை வெல்லுவதற்குப் பிரயத்தனஞ் செய்பினும் வன்மை மிகுந்த இந்தியங்கள் மனதைப் பலாத்காரமாய்க் கெடுக் கும்; ஆகையால், இந்திரியங்களுங்கூட வசப்பட வேண்டும். ஆத்மா வைப் பாராமல் விஷயங்களில் ஆசை நிவிர்த்திக்கிறதில்லை விஷ யங்களி லாசை நிவிர்த்திக்காமற்போனால், தெரிந்தவனாயுப் பிரயத் தனஞ் செய்துகொண்டு மிருக்கிற புருஷனுடைய இந்திரியங்கள் மிகுந்த பலமுள்ளவைகள்; மனதைப் பலாத்காரஞ் செய்து இழுத்து விடுகின்றன. இவ்வாறு ஆத்மாவைப் பார்த்து இந்திரியங்களை ஜெயிப்பது; ஆகையினால், ஞானயோக நிஷ்டை அடைதல் முடியாது. இவ்வாறு இந்திரியங்களை வெல்ல முயன்று அசுத்த மனதைப் பக வானுக்கும் சமர்ப்பித்தால் அவன் அதைத் திருத்துவான். தீபம் வந்தவுடனே இருள் நீங்கும். இருளை முன்பு போக்கிப் பிறகு விளக்கைக் கொண்டு வருவதற்குச் சாத்தியமில்லை யல்லவா? சுத்த மான மனத்துடன் ஈஸ்வரனைத் தியானித்திருப்பதற்கு முதன்முதல் சரிப்படாது. சிலகாலம் அசுத்தமான மனத்துடனே ஈஸ்வரனைத் தியானித்திருந்தால் காலக்கிரமத்தில் ஈஸ்வரனுக்கு அவன்மீது

கருணைகூர்ந்து, அந்த அசுத்தமான மனத்தைச் செவ்வனே செய்து அதனைச் சுத்தப்படுத்துவான். இவ்வாறு இந்திரியங்களை வசமாகப் பெற்றுக்கொள்ளாவிடின் உண்டாம் அனர்த்தங்கள் பலவுள. அதனை இனிக் கூறுவேன். கேட்பாயாக!"

[ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள்:—இந்த 60-வது சுலோகத்திற்கு, "இந்திரியங்களை வைராக்கியத்தினு லடக்கினால் மனதும் சுவாதீனமாய், பிரம தெரிசனத்திற்கு அனுகூலமாகுமே யன்றி, முன்னர்க் கூறியபடி ஆகாரஞ் செய்யாததினால் இந்திரியங்கள் அடங்கி யிருக்கின்றவனுக்கு மனது சுவாதீனமாகவாவது பரமார்த்த தெரிசனமாவது சாத்தியமானதேயல்ல" என்பது கருத்து.] 60

"எல்லா இந்திரியங்களையுஞ் சுவாதீனஞ் செய்துகொண்டு, என்னிடம் மனதைச் செலுத்தினவனாய், (அதாவது) சாவதான மனதுள்ளவனாய் இருக்கக்கடவன். எவனுக்கு இந்திரியங்கள் தனது சுவாதீனத்தில் இருக்கின்றனவோ அவனுக்கு ஞானமானது நிலைத்திருக்கின்றது."

[இவைகள் எல்லாவற்றையும் பரிகரிக்கவேண்டியதற்காக விஷயங்களில் ஆசையோடு சேர்ந்திருப்பதால், ஜெயிக்க முடியாத இந்திரியங்களை அடக்கிக்கொண்டு மனதை என்னிடத்தில் நிறுத்து, சாவதானத்தை யுடையவனா யிருத்தல்வேண்டும். மனமானது என்னிடத்தில் செலுத்தப்பட் டிருந்ததேயானால், எல்லாப் பாவங்களும் கொளுத்தப்பட்டபடியினால், நிர்மலமாகச் செய்யப்பட்டதாயும், விஷயங்களில் ஆசை யற்றதுமான மனது இந்திரியங்களைத் தனக்குச் சுவாதீனங்களாகச் செய்கின்றது. பிறகு சுவாதீனமான இந்திரியங்களையுடைய மனது, ஆத்மாவைப் பார்ப்பதற்குச் சாமர்த்தியமுள்ளதாகிறது. நெருப்பானது உலர்ந்த புல்லை எவ்வாறு தகிக்கின்றதோ அவ்வாறே பகவத் தியானத்தி லீடுபட்ட புண்ணிய ஆத்மாக்களுடைய பாபம் யாவும் நசித்துவிடும்.] 61

"உலகத்திலுள்ள வஸ்துக்களைச் சிந்தனை செய்கின்ற புருஷனுக்கு அவற்றிற் பிரிய முண்டாகின்றது; அந்தப் பிரியத்தினால் ஆசை யுண்டாகின்றது; அப் போக சுகத்திற்குத் தடை யுண்டானபோது ஆசையினின்றுங் கோப முண்டாகின்றது.

கோபத்தினின்றும் அறிவின்மை யுண்டாகின்றது; அறியாமையிலிருந்து நினைவின்மை யுண்டாகின்றது; நினைவின்மையி

லின்றும் புத்திக்கேடு உண்டாகின்றது; புத்திக்கேட்டால் எல்லாங் கெட்டவனாவான், அல்லது நரகத்தை யடைவான்.''

[மேலும், விஷயங்களில் ஆசையை நீக்காமலும் என்னிடத்தில் மனதைச் செலுத்தாமலு மிருக்கிற மனிதனுக்குத் தான் இந்திரியங்களை அடக்கிக்கொண் டிருந்தபொழுதிலும் அநாதியான பாபத்தின் வாசனையினால் விஷயங்களை நினைத்துக்கொண் டிருப்பதை அவனால் விடல் முடியாது. அவ்வாறு விஷயங்களை நினைத்துக் கொண்டிருக்கின்ற மனிதனுக்கு மறுபடியும் அவைகளில் பற்றுதல் உண்டாகின்றது; பற்றுதலினால் காம முண்டாகின்றது. காமமாவது: பற்றுதலின் பக்குவமான நிலை. மனிதன் எந்த நிலையை யடைந்தால் விஷயங்களை அநுபவிக்காம லிருக்க முடியாதோ அந்த நிலை காமமென்று சொல்லப்படும். காமத்தினால் கோப முண்டாகின்றது; அதாவது, காம மிருந்துகொண் டிருக்கும்பொழுது, விஷயங்கள் தனக்குக் கிட்டாவிடில், சமீபத்தி லிருக்கிற மனிதர்களைக் குறித்து, 'இவர்களால் நம்முடைய இஷ்டம் தடுக்கப்பட்டது' என்று அவர்கள் மீது கோப முண்டாகின்றது. கோபமாவது: இது செய்பத் தகுந்தது, இது செய்யத் தகாது என்கிற பகுத்தறிவில்லாமை; அதனால், அவன் தன் மனப் போக்கின்படி எல்லாவற்றையுஞ் செய்கின்றான்; அவற்றால் ஆரம்பிக்கப்பட்ட இந்திரிய வெற்றி முதலிய பிரயத்தனங்களில் ஞாபகத் தவறுத லுண்டாகின்றது; அவ்வித ஞாபகத் தவறுதலால், ஆத்மாவைத் தெரிந்துகொள்ள எவ்வித நிச்சயம் செய்யப்பட்டதோ அந்த நிச்சயத்திற்கு நாச முண்டாகின்றது; அவ்வாறு நிச்சயத்தின் நாசத்தினால் சம்சாரத்தில் மூழ்கி நாசமடைந்தவனாகின்றான்.] 62-63

"மேலும், விருப்பு வெறுப்பற்றும் தனக்குச் சுவாதீனங்களாயிருக்கின்ற இந்திரியங்களினாலே அன்னபானாதி விஷயங்களை அநுபவிக்கின்றவனானாலும், சுவாதீனமான மனத்தை யுடையவன் மனச் சமாதானத்தை, அதாவது மனத்தெளிவை யடைகின்றான்.''

[குறிப்பு:—இஃது அர்ச்சுனனுடைய நான்காவது கேள்வியான, 'எவ்வாறு நடப்பான்? அல்லது, செய்கை எவ்வண்ண மிருக்கும்?' என்கிறதற்கு உத்தரமாக விருக்கின்றது.] 64

"ஓ! அர்ச்சுன! மனச் சமாதானமான பின்பு இவனுக்குச் சகல துக்கங்களினுடைய நாசம் உண்டாகின்றது. சமாதானமான மனதை யுடையவனுக்கு விரைவில் புத்தியானது நிலையாய் நிற்கும்.''

['மனது சரிப்படுவதால் என்ன உண்டாகும்?' என்றால், மோக்ஷ முண்டாகும். 'பிரஹ்மஞான மில்லாமலே மோக்ஷ முண்டாகுமோ?' என்றால், மனதைச் சரிவரச் செய்துகொண்டால் ஞான முண்டாகும். மனதிற்கு நைர்மல்ய முண்டானால், பிரகிருதியோடு சேர்ந்திருந்ததா லுண்டாகிய எல்லாத் துக்கங்களுக்கும் நாச முண்டாகின்றது. ஆத்மாவலோகநத்திற்குத் தடையான தோஷ மில்லாத மனதை யுடையவனுக்கு அது தருணமே பரிசுத்தமான ஆத்மாவைப்பற்றியதான புத்தி நிலைநிற்கின்றது; ஆகையினால், மனது நிர்மலமா யிருந்தால் எல்லாத் துக்கங்களுக்கும் நாச முண்டாகின்றது.] 65

"ஓ! அர்ச்சுன! என்னிடத்தில் மனதைச் செலுத்தாதவனுக்குப் பரிசுத்தமான ஆத்மாவைப்பற்றிய புத்தி யில்லை: கீழ்ச் சொல்லிய புத்தி யில்லாதவனுக்கு அதைப்பற்றி இடைவிடாமல் தியானிப்பது மில்லை; ஆத்மாவை இடைவிடாமல் தியானஞ் செய்யாதவனுக்கு, விஷயங்களி லிருக்கின்ற ஆசைக்கு ஓய்வில்லை; ஆகையினால், ஓய் வில்லாதவனுக்குச் சுகமானது எப்படி யுண்டாகும்?"

[என்னிடத்தில் மனதைச் செலுத்தாமல் தன்னுடைய முயற்சியினால் இந்திரியங்களை யடக்குவதில் பிரவிர்த்தித்தவனுக்கு எக்காலத்திலும் பரிசுத்தமான ஆத்மாவைப்பற்றிய புத்தி யுண்டாகாது. அதனாலேயே அவனுக்கு அதை இடைவிடாது தியானிப்பதும் சம்பவிக்காது.] 66

"அர்ச்சுன! இன்னுங் கூறுவேன் கேட்பாயாக! அதாவது, விஷயங்களில் பிரவேசிக்கின்ற இந்திரியங்களை யாதொரு மனம் அனுசரித்துப் போகின்றதோ அந்த மனம் இவனது (ஜீவனது) விவேகத்தைப் புனலிற் கப்பலை யிழுக்குங் காற்றுப்போல இழுத்துக் கொண்டு போகின்றது.

ஆதலால், ஓ! மஹாபாஹோ! எவனது இந்திரியங்கள் சகல விஷயங்களினின்றும் விடுபடுகின்றனவோ அவனது ஞானம் நிலைத்திருக்கின்றது."

[இந்திரியங்கள் விஷயங்களி லிருந்துகொண் டிருக்கும்பொழுது, அவைகளின் நிலைமையை அனுசரித்து எந்த மனது செய்யப்படுகின்றதோ, அதாவது எந்த மனதினால், மனது பின் செலுத்தப்படுகின்றதோ அந்த மனது இவனுடைய பரிசுத்தமான ஆத்மாவைப்பற்றிய புத்தியை அபகரிக்கின்றது. அது எதுபோலு

மென்றால், எவ்வாறு ஜலத்தில் கொண்டுபோகப்படுகிற தெப்பத்தை எதிர்காற்றானது பலாத்காரஞ்செய்து இழுத்துக்கொண்டு போகின்றதோ, அதேமாதிரியே, மனமானது புத்தியை விஷயங்களிற் போகும்படி செய்கிறது. ஆகையால், எவனுடைய இந்திரியங்கள் தங்களுடைய விஷயங்களி லிருந்து எல்லா விதங்களினாலும் அடக்கப்படுகின்றனவோ அவனுக்கே ஆத்மாவினிடத்தில் புத்தி நிலைத்திருக்கின்றது.] 67-68

“ஓ! அர்ச்சுனா! எல்லாப் பிராணிகளுக்கும் எது (எந்த ஆத்மாவைப்பற்றிய புத்தியானது) இராத்திரியோ, (இரவுபோலப் பிரகாசமின்றி இருக்கிறதோ) அந்தப் புத்தியில் இந்திரியங்களை அடக்கிக் கொண்டிருக்கிற விவேகி, விழித்துக்கொண் டிருக்கின்றான். எதில் (எந்த சப்தாதி விஷயங்களைப் பற்றிய புத்தியில், எல்லாப் பிராணிகளும் விழித்துக்கொண் டிருக்கின்றனவோ, அந்த புத்தியானது (ஆத்மாவைப் பார்த்துக் கொண்டிருக்கிற) யோகிக்கு இரவு போன்றது; அதாவது, அந்தகாரமானது.

மேலும், ஜலங்களாற் பூரணமாய் நிறைந்ததும் ஸ்திரமான இருப்புடையதுமான கடலில் புனல்கள் பிரவேசித்தும் அசைவற்றிருக்கின்றது. அவ்வாறு சமஸ்த விஷயங்களும் பிரமநிஷ்டனைப் பிரவேசித்தாலும், அப்புருஷன் நிர்விகாரியாய்ச் சாந்தசித்தமுடையவனா யிருப்பான்: விஷய இச்சையுள்ளவன் மோக்ஷமடைதலில்லை.

எந்தப் (பிரமநிஷ்டனான) புருஷன் சமஸ்த விஷயங்களையும் விட்டுச் சகலத்திலும் ஆசைபற்றும் (தன்னுடைய தென்னும்) மமதை யற்றும் அகங்கார மற்றும் சஞ்சரிக்கின்றானோ, அவன் சுகத்தை, அல்லது மோக்ஷத்தை யடைகின்றான்.”

[“அர்ச்சுனா! தானே நிரம்பப்பெற்றதாயும் ஒரே சுவபாவமுள்ளதாயு மிருக்கின்ற சமுத்திரத்தை, ஆறுகளின் ஜலங்கள் எவ்வாறு பிரவேசிக்கின்றனவோ, மேற்படி ஆறுகளின் ஜலங்கள் பிரவேசித்தாலும் பிரவேசிக்காவிடினும் சமுத்திரம் எவ்வாறு ஒருவித மாறுதலையு மடைகின்ற தில்லையோ அவ்வாறே, சப்தம் முதலிய எல்லா விஷயங்களும் எந்த யோகியைப் பிரவேசிக்கின்றனவோ, அதாவது, இந்திரியங்களுக்குத் தோன்றுத லடைகின்றனவோ, அவன் சாந்தியை யடைகின்றான். அதாவது, சப்தம் முதலியவைகள், இந்திரியங்களுக்குத் தோன்றுதலை யடைந்தாலும் அடையா விட்டாலும், தன்னுடைய ஆத்மாவைப் பார்ப்பதினா

னுண்டாகும் திருப்தியினாலேயே எவன் விகாரத்தை அடைகின்ற தில்லையோ, அவனே சாந்தி யடைகின்றான் எவன் சப்த முதலியவைகளால் விகாரத்தை யடைகின்றானோ, அவன் எக் காலத்திலும் சாந்தி யடைகிறதில்லை. மேலும், இவனால் விரும்பப் படுகிறபடியால், சப்தாதி விஷயங்கள் காமம் எனப்படுகின்றன. எந்தப் புருஷன் சப்தம் முதலிய எல்லா விஷயங்களையும் விட்டு அவைகளில் ஆசையை நிவர்த்தித்தவனாகவும், அவைகளில் என்னு டைய தென்கிற எண்ணம் முழுமையும் அற்றவனாகவும், ஆத்மா வல் லாத தேகத்தில் ஆத்மா என்கிற அபிமானம் அற்றவனாகவு மிருக் கின்றானோ, அவன் ஆத்மாவைப் பார்த்துவிட்டுச் சாந்தியை யடை கிறான்.'']  69-71

ஓ! அர்ச்சுனா! இந்த நிலைமையானது பிரஹ்மத்தை அடை விக்கக் கூடியது; இந்த நிலைமையை யடைந்தவன் பிறகு மோகத்தை யடைகின்றதில்லை. இந்தப் பிரஹ்ம நிஷ்டையில் மரணாந்த காலத்தி லிருந்தபோதிலும், பிராகிருத சரீர மில்லாத பரப்பிரஹ்மத்தை யடைகின்றான் வாலிப முதல் இந்த ஞானத்தை யுடையோன் விஷய மாக என்னவென்று சொல்லக்கூடும்?''

[இந்த ஆத்மா நித்திய மென்கிற ஞானத்தை முன்னிட்ட சங்க மில்லாத கர்மத்தில் நிஷ்டையானது, ''சித்தப்ரக்ஞ'' ராக இருக் கையைப் பிரயோஜனமாக வுடையதாகவும், பிரஹ்மத்தை அடை விக்கக் கூடியதாகவு மிருக்கின்றது. இப்படிப்பட்ட கர்மத்தின் நிலையை யடைந்து மறுபடியும் சம்சாரத்தை அடைகிறதில்லை. இந்த நிலைமையில் கடைசி வயதி லிருந்துகொண்டு சுகமாகிய பிரஹ்மத்தை யடைகின்றான்; அதாவது, சுக மொன்றுக்கே இருப்பிடமாகிய ஆத் மாவை யடைகின்றான்.]

[கருத்து:—இவ்வாறு ஆத்மாவின் உண்மையான சிவபாவத்தை யும், ஸ்வரூபத்தையும், யுத்த மென்னும் கர்மத்தை அடைவதற்கு உபாயமென்று அறியாதவனும், தேகமே ஆத்மாவென்கிற அறி வினால் மயக்கத்தை யடைந்தவனும், அந்த மயக்கத்தினால் யுத் தத்தை விட்டுத் திரும்பினவனு மிருக்கிற அர்ச்சுனனுடைய மோகத்தைப் போக்குவதற்காக நிலைமையினின்ற ஞானமென்று சொல்லப்பட்ட யோகத்திற்குச் சாதனமான ஆத்மாவைப்பற்றிய சாங்கிய புத்தியும், அதை முன்னிட்டுச் சங்க மில்லாமல் கர்மங் களைச் செய்வதாகிய கர்ம யோகத்தைப் பற்றிய புத்தியும் இந்த இரண்டாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டன.]  72

இரண்டாவது அத்தியாயம்
முற்றுப்பெற்றது.

---

9

## மூன்றாவது அத்தியாயம்

# கர்மயோகம்

["ஏ ஜனார்த்தனா! ஞான மார்க்கம் கரும மார்க்கத்தைக் காட்டிலும் சிரேஷ்டமானதென்று தேவரீர் அபிப்பிராயமாகத் தோன்றுகின்றது. உமக்குப் பந்துவாகவும், நண்பனாகவும், பக்தனாகவு மிருக்குமெனக்கு அந்தப் பெரிதாகிய ஞான யோகத்தைக் கூறாமல் கோரமான கர்மத்தில் ஏன் என்னைப் பிரவிர்த்திக்கச் செய்கின்றீர்?"

"அர்ச்சுனா! நான் கூறவேண்டியதைக் கூறினேன். உனக்கு அதனிடத்தில் பற்றுத லிருந்தால் செய்; இல்லாவிடின் அதை விட்டுவிடு! பிர்ம ருத்ராதிகளுங்கூட ஆநந்தத்தை விட்டு என் ஆணையைச் செலுத்துதற்காகச் சிருஷ்டி, சம்ஹாரங்க ளென்னும் கர்மங்களைச் செய்துகொண்டே யிருக்கின்றனர். ஆகையால், இவ்வாறு மோக்ஷத்தில் அவாவுடையவர்களால் அடையத் தகுந்ததாக வேதாந்தங்களில் கூறப்பட்டதாயும், அவித்தை முதலிய சகல தோஷங்களின் வாசனை யற்றதாயும், அளவில்லாத மேன்மையை யுடையதாயும், எண்ணிறந்த கல்யாண குணங்களின் கூட்டங்களை யுடையதாயுமிருக்கின்ற பரப்பிரஹ்மமாகிய புருஷோத்தமனை அடைவதற்கு உபாயமாயும், வேதனம் - உபாஸநம் - தியானம் - முதலிய சப்தங்களால் சொல்லத் தகுந்ததாயு மிருக்கின்ற அவனைப்பற்றிய பக்தியைச் சொல்லுவதற்காக அதற்கு அங்கமாயும், 'எந்த ஆத்மா பாபமற்றவனோ' என்று பிரஜாபதி வாக்கியத்தால் சொல்லப்பட்டதாயு மிருக்கின்ற அந்தப் பரமாத்மாவை அடைகின்ற ஜீவாத்மாவினுடைய உண்மையான ஸ்வரூபத்தை நேரில் பார்ப்பது. அந்த ஆத்மா நித்திய மென்கிற ஞானத்தை முன்னிட்டுப் பற்றுத லில்லாமல் புரிகிற கர்ம யோகத்தினா லுண்டாகக்கூடிய ஞான யோகத்தினால் உண்டாவதாகச் சொல்லப்பட்டது. பிரஜாபதி வாக்கியத்தில், தஹர வாக்கியத்தில் சொல்லப்படுகிற பரவித்தைக்கு, அதாவது, மோக்ஷத்திற்கு உபாயமாகச் செய்யும் உபாசனம் அங்கமாக அந்தப் பரமாத்மாவை அடைகிற ஜீவாத்மாவின் ஸ்வரூப சாக்ஷாத்காரத்தை எவன் அந்த ஆத்மாவைத் தெரிந்துகொண்டு உபாசிக்கின்றானோ என்று சொல்லி, விழித்துக்கொண்டிருத்தல், கனவு காணுதல், தூங்குதல் முதலிய அவஸ்தைகளைத் தாண்டினதாய்,

சரீர சம்பந்த மற்றதான ஜீவாத்ம ஸ்வரூபத்தை நிரூபித்து, 'இவ்வாறே இந்த ஜீவாத்மா இந்த சரீரத்தை விட்டுக் கிளம்பி மேலான ஜ்யோதிஸ்ஸை அடைந்து தன்னுடைய ரூபத்துடன் சேருகின்றான்' என்பது தஹர வித்தையின் இலக்கணம். உபாஸனமாவது - ஆத்மாவைப்பற்றிய யோகத்தினு லுண்டாகு மறிவினால் பகவானை உபசானஞ் செய்து புத்திமானாகிய புருஷன் சந்தோஷம், துக்கம் இவைகளை விடுகின்றான். அணுவான வஸ்துவைக்காட்டிலும் மிகவும் அணுவானவனும், எங்கும் நிறைந்தவனுமா யிருக்கிற பரமாத்மாவைத் தியானஞ் செய்து புத்திமானா யிருக்கின்றவன் துக்கத்தை அடைகிறதில்லை. இந்தப் பரமாத்மா: மனனஞ் செய்வதினாலும், அநேகமாகக் கேட்பதினாலும் அடையத் தக்கவ னல்லன். அத்தகைய பரம புருஷனுக்கே பரமாத்மா தன்னுடைய ஸ்வரூபத்தைப் பிரகாசப் படுத்துகின்றான்.]

அர்ச்சுனன் வாக்கியம்

"ஜனார்த்தனா! கருமத்தைக் காட்டிலும் ஞானமானது மேலானதென்று தேவரீருக்குச் சம்மதமானால், ஓ! கேசவா! என்ன காரணத்தினால், பயங்கரமான, அல்லது பிராணி இம்சகரமான கருமத்தி லென்னைப் பிரவிர்த்திக்கும்படிச் செய்கின்றீர்?

சந்தேகத்தை யுண்டாக்குவதுபோன்றுள்ள வாக்கியத்தினாலே எனது புத்தியை மோகிக்கச் செய்வது போலக் காண்கின்றீர். நான் எதனால் மோக்ஷமடையப் பெறுவேனோ அஃதொன்றினையே தேவரீர் எனக்கு அருளிச்செய்தல் வேண்டும்"

["கிருஷ்ணா! கர்மயோகத்தைவிட ஞானயோகமே விசேஷமென்பது தமது அபிப்பிராயமானால், எதற்காக என்னைப் பயங்கரமான கர்மயோகத்தில் ஏவுகின்றீர்? இதனால் நான் தெரிந்துகொண்டது யாதெனில், ஞான நிஷ்டைதான் ஆத்மாவைப் பார்ப்பதற்குச் சாதனம்; கர்மயோக நிஷ்டையோ அதை உண்டாக்குகின்றது. ஆத்மாவலோகனத்திற்குக் காரணமாகிய ஞானயோக நிஷ்டையும், எல்லா இந்திரியங்களுக்கும், மனதிற்குச் சப்தம் முதலிய விஷயங்களில் வியாபாரம் ஓய்வதினா லுண்டாகக்கூடியது. இந்திரியங்களின் வியாபாரம் ஓய்வதினா லுண்டாகக்கூடிய ஆத்மாவலோகனம் செய்ய வேண்டுமென்னும் எண்ண மிருந்தால் எல்லாக் கர்மங்களினின்றும் நிவிர்த்திப்பதை முன்னிட்டு ஞானயோக நிஷ்

டையிலே நான் நியோகிக்கத் தக்கவன். அவ்வாறிருக்க, எதற்காகக் கோரமாயும், எல்லா இந்திரியங்களினுடைய வியாபாரமாயும், ஆத்மாவலோகனத்திற்கு விரோதமாயு முள்ள கர்மத்தில் என்னைத் தூண்டுகின்றீர்? ஆகையினால், கலக்கமான வார்த்தைகளினால் தேவரீர் என்னை மயக்கினதுபோல் காணப்படுகின்றது; அதாவது ஆத்மாவலோகனத்திற்குச் சாதனமாயும், எல்லா இந்திரியங்களை யுடையனவாயும், வியாபார நிவர்த்தியாயு மிருக்கிற 'ஞானயோக நிஷ்டைக்கு அதற்கு விரோதமா யிருக்கும் கர்மமே சாதனம் அதனையே செய்' என்கிற வார்த்தை ஒன்றுக்கொன்று விருத்தமாயும் கலந்ததாயு மிருக்கின்றது. ஆகையினால், நான் எந்த வார்த்தையினால் அனுஷ்டிக்க வேண்டியதை நிச்சயஞ் செய்து நன்மையை யடைவேனோ அந்தகைய கலப்பில்லாத வார்த்தையை எனக்குத் தேவரீர் கூறியருளல் வேண்டும்."

[ஸ்ரீ சங்கரர்:—"பிரவிர்த்தி புத்தி, நிவிர்த்தி புத்தி என இரண்டுள்ளன. இவ்விரண்டு வித்தத்தினாலும் கிருதார்த்தனாகக் கூடுமானால், சுலபமானதாகிய நிவிர்த்தி மார்க்கமான சாங்கிய புத்தியை விட்டு, கஷ்டசாத்தியமானதும், பிரவிர்த்தியை யுடையதுமான கருமத்தில் பிரவேசிக்கும்படி ஏன் என்னைக் கட்டளை யிடுகின்றீர்?" என்பது அர்ச்சுனனுடைய கேள்வியாக இருப்பதென்று ஸ்ரீ சங்கரர் கொள்கை. இது 2-வது சுலோகத்தைப் பற்றியது.] 1-2

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனா! இந்த உலகத்தில் ஞானயோகத்தோடு பிரஹ்ம நிஷ்டை செய்ய முயற்சி யுள்ளவர்களான சாங்கியர்களுக்கு ஞானம் நிலைக்கும் பொருட்டுச் செய்ய வேண்டிய தியானமாகிய ஞானயோகமும், கருமஞ் செய்து அதனால் சித்த சுத்தி யடைந்து பிறகு சாங்கிய யோகத்தில் பிரவேசிக்க இச்சிப்பவர்களான கரும யோகிகளுக்கு நிஷ்காம கரும யோகமும் ஆகிய இரண்டுவிதமான நிஷ்டையானது என்னாலே உனக்குச் சொல்லப்பட்டது."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—அதாவது: ஞானயோகம், கர்மயோகம் இவை யிரண்டு மொன்றே. கர்மயோகத்தில் கர்மபாகம் விசேஷமாகவும் ஞானயோகத்தில் ஞானபாகம் விசேஷமாகவும் கலந்திருக்கும். அஃதாவது, நீர் மிகுதியாய்க் கலந்திருக்கும் பாலினைப் பாலென்றே கூறுவர். பால் குடித்த மாத்திரத்தில், நீர் வார்த்தலினால் அந்த நீர் பால்போ லிருக்கினும்,

தண்ணீரென்றே கூறுவர். முடிவை ஆராயுங்கால், பாலில் தண்ணீர் சேர்ந்திருப்பது யாவருக்கும் நன்கு விளங்கும்.]

[ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அபிப்பிராயம்:—ஞான மடைவதற்குக் கருமாநுஷ்டானம் காரணமா யிருக்கின்றது. எவ்வாறெனில், கருமங்களைப் பலாபேக்ஷையின்றி ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்து வந்தால் அதனால் சித்த சுத்தியும், சித்த சுத்தியினால் ஞானமும், அந்த ஞானத்தினால் மோக்ஷமு மடையவேண்டுமே யன்றி, கருமங்களைச் செய்யாமலே விட்டு விடுவதினால், ஞானமாவது, அதினால் நிஷ்காம கருமமான ஆத்ம ஸ்வரூபமா யிருக்கிறதாவது உண்டாகிறதில்லை.] 3

"அர்ச்சுனா! சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்யாமையினால் புருஷன் ஞான நிஷ்டையை யடைவதில்லை. ஆரம்பிக்கப்பட்டதும் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டதுமான கர்மங்களை விடுவதினாலே மோக்ஷத்தை யடைதலு மில்லை."

[எதனால் பலத்தில் அபிஸந்தி யற்றதாயும், பரமபுருஷனுடைய ஆராதன ரூபமாயுமுள்ள கர்மத்திற்கே சித்தி யுண்டாகுமோ அதனால், அந்தக்கரணமின்றிச் சித்தியை யடையமாட்டான். பலத்தில் அபிஸந்தி யில்லாத கர்மங்களினால் கோவிந்தனை ஆராதிக்காதவர்களினால், நசிக்காத அநாதிகாலமா யுண்டான கணக்கற்ற பாவங்களின் கூட்டத்தை யுடையவர்களினால், கலக்கப்படாத இந்திரியங்களை யுடைத்தாயிருத்தலை முன்னிட்ட ஆத்ம நிஷ்டையானது சம்பாதிக்க முடியாது.] 4

"அர்ச்சுனா! ஒரு காலத்திலும் அற்ப நேரமும் ஒருவனாயினும் கருமமியற்றாதவனாகச் சும்மா விருத்தற்குக் கூடாது. யாதினாலோவெனின், தன்னை மறந்த மறதியாகிய அஞ்ஞானத்தினால் தானல்லாத தத்துவங்களைத் தானென்றறிவதனால் தற்சுதந்திரம் அற்றவனான அஞ்ஞானியாகிய எவனும் மாயையினா லுண்டாகிய முக்குணத்தினால் கரண முதலியவற்றினா லுண்டாம் அவஸ்தைகளாகிய கருமத்தை வலியச் செய்விக்கப் படுகின்றான்."

["இவ் வுலகில் மனிதன் ஒருபோதும் கர்மத்தைச் செய்யாதவனாக இருக்கமாட்டா னல்லவோ? 'என்றுஞ் செய்யக்கடவே னல்லேன்' என்று முடிவு செய்துகொண்டவனாயினும், எல்லா மனிதர்களும் பிரகிருதியினா லுண்டாகிய சத்வ-ரஜஸ்-தமஸுக்களினால் பழைய கர்மத்திற்குத் தக்கவாறு நாளடைவில் விருத்தி யடைந்த

குணங்களினால் தனக்கேற்றபடி கர்மத்தைக் குறித்து அவசனாகப் பிரவிர்த்திப்பிக்கப் படுகின்றான். ஆகையினால், முன் சொன்ன வித மான கர்மயோகத்தினாலே அநாதியான பாப சமூகங்களை நசிக்கும் படி செய்து, சத்வம் முதலிய குணங்களைத் தனக்கு வசமாக்கி, நிர் மலமான மனத்தினால் ஞானயோகம் சம்பாதிக்கத் தக்கது.''

''கிருஷ்ணா! மனிதன் எந்தக் காரியத்தையேனும் செய்யாமலிரா னென்பது உன் அபிப்பிராயமா?''

''அர்ச்சுனா! இந்திரியங்களின் காரியங்களை யொருவேளை நிறுத் தினும் மனதைக் கட்டுவதற்கு இவைகளா லாகா. பந்த மோக்ஷங் களுக்கு மனதே காரணமாகின்றது. கர்மத்தைச் செய்யும்போ தாயினும், மனஞ் சற்று நிலைத்திருக்கும். எந்தக் காரியமு மில்லா மல் சும்மா விருக்கும்பொழுது விஷயங்களைச் சிந்திப்பதற்கு மன திற்கு வியத்தி அதிகமா யிருக்கும்.''] 5

''எவன் கர்மேந்திரியங்களை யடக்கி மனதால் விஷயங்களைச் சிந்தித்துக்கொண் டிருக்கின்றானோ, விவேக சூனியனாகிய அவன் மித்யாசார னாவான்.''

[அவன் ஆசரிக்க விரும்பியபோது ஆத்ம ஞானமும், ஆசரித் தது விஷயத் தியானமுமாகும்.]

கிருஷ்ணா! அவ்வாறாயின் நான் என்ன செய்யவேண்டும்? 6

''அர்ச்சுனா! அவ்வகைப்பட்ட மனதால் எவன் கண், காது, நா, நாசி, துவக்கு ஆகிய ஞானேந்திரியங்களை நியதி செய்து, என்றால் (அகார்யங்களில் போகாமற் செய்து) பலாபேக்ஷையை விட்டுக் கர்மேந்திரியங்களால் கர்மஞ் செய்கின்றானோ அவன் சிரேஷ்ட னாவான்.''

[ஆகையினால், முன்னே பரிசயஞ் செய்யப்பட்ட விஷயங்க ளுடன் ஒத்திருக்கிற சாஸ்திரங்களினால் நியமிக்கப்பட்ட கர்மங்களில் இந்திரியங்களை, ஆத்மாவை சாக்ஷாத்கரிப்பதில் பிரவிர்த்தித்த மனதினாலடக்கித் தானாகவே கர்மங்களில் ஆசக்தியையுடைய இந் ரியங்களினால், பற்றில்லாமையை முன்னிட்டு எவன் கர்மயோ கத்தை ஆரம்பிக்கின்றானோ, அவனுக்குச் சம்பவிக்கக் கூடாத பிரமா தம் சம்பவிக்கா தாகையினால் ஞான நிஷ்டனான புருஷனைக் காட்டி லும் மேன்மையை யடைகின்றான்.] 7

"நித்தியமாய்ச் செய்யத் தகுந்த கருமத்தை நீ செய்! கருமஞ் செய்யாது விடுவதைப்பார்க்கிலும், கருமஞ் செய்வது சிரேஷ்டம். கருமஞ் செய்யாதிருக்கின்ற உனக்குச் சரீர சம்ரக்ஷணையுஞ் சித்திக்க மாட்டாது."

[ஆகையால், விடமுடியாத பிரகிருதியோடு சேர்ந்திருப்பதால் விடமுடியாதது; பிரகிருதியோடு சேர்ந்திருக்கிற நீ அநாதியான வாசனையினாலே விடமுடியாம லிருப்பதினாலும், சுலபமாகச் செய்யக் கூடியதாயிருப்பதினாலும், பிரமாதம் சம்பவிக்காம லிருந்தாலும் கர்மத்தையே செய். ஞானநிஷ்டையைக் காட்டிலும் கர்மமே உயர்ந்தது. கர்மமென்னும் பதத்தால் ஞானநிஷ்டையே சொல்லப்படுகின்றது. ஞானநிஷ்டையில் அதிகாரிக்கும், ஞானநிஷ்டையானது இதற்கு முன் பரிசயஞ் செய்யப்படா தாகையினாலும், விடமுடியா தாகையினாலும், செய்யமுடியாததா யிருப்பதினாலும், பிரமாதத்தோடு கூடியதா யிருப்பதினாலும், ஞானநிஷ்டையைக் காட்டிலும் கர்மநிஷ்டையே மேலானது. கர்மத்தைச் செய்துகொண் டிருக்கும் பொழுது ஆத்மாவின் உண்மையைப்பற்றிய ஞானத்தினால் ஜீவாத்மாவிற்கு ஒரு கர்மத்திலும் கர்த்திருத்துவ மில்லையென் றனுசந்திக்க வேண்டு மென்பதை இனிச் சொல்லப்போகிறேன். ஆகையினால், ஆத்ம ஞானமுங்கூடக் கர்மயோகத்திற்குள் அடங்கியது; அந்தக் கர்மயோகமே உயர்ந்தது. கர்மத்திற்கு, ஞானநிஷ்டையை விட மேன்மை சொல்வது ஞானநிஷ்டையி லதிகார முள்ளபோதுதான் பொருந்தும்; எல்லாக் கர்மங்களையும் பரித்தியாகஞ் செய்துவிட்டு, கேவலமான ஞானநிஷ்டையைச் செய்கின்றாயானாலும், அப்போது கர்மத்தையே செய்யாமல் ஞானயோகத்தைச் செய்துகொண்டிருக்கிற உனக்கு ஞானநிஷ்டைக் குதவியான சரீர தாரணமும் சித்திக்காது. உபாய முடியு மளவும் சரீர தாரணமு மவசியஞ் செய்யவேண்டியது. நியாயமாகச் சம்பாதிக்கப்பட்ட தனத்தினால் மஹாயக்ஞம் முதலியவைகளைச் செய்து அதில் மிகுந்ததை புசிப்பதினாலேயே சரீர தாரணஞ் செய்யத் தகுந்தது.]

[உள்ளுரை:—"ஆகாரம் பரிசுத்தமாக விருந்தால் சத்வமும் சுத்தி அடைகிறது; சத்துவம் சுத்தியானால் இடைவிடாத பகவத் ஸ்மரண முண்டாகிறது" என்று சுருதி கூறுகின்றது. மேலும், இந்த அத்தியாயத்தில் 13-வது சுலோகத்தில் நான் சொல்லப் போகிறேன். ஆகையினால், ஞானநிஷ்டனுக்கும் கர்மத்தைச் செய்யாதவனுக்கும் தேக தாரணம் சித்திக்காது. எதனால்

ஞானநிஷ்டனுக்கும், சரீரத்தைத் தரிப்பவனுக்குந் தான் ஆரம்பித்த உபாயம் முடிவு பெருமளவும் மஹாயக்ஞம் முதலிய நித்திய நைமித்திக கர்மங்கள் அவசியஞ் செய்ய வேண்டியதோ, எதனால் கர்மயோகத்திலும் தனக்குக் கர்த்திருத்துவ மில்லாமையைப் பாவிப்பதினால் ஆத்மாவின் உண்மையை அனுசந்தித்த லுள்ளடங்கியதோ, எதனால் பிரகிருதியுடன் சேர்ந்திருப்பவனுக்குக் கர்மயோகம் சுலபமாகவும் பிரமாதமற்றதாகவு மிருக்கின்றதோ, அதனால் ஞானநிஷ்டையி லுரியவனுக்கும் ஞானயோகத்தினும் கர்மயோகமே உயர்ந்தது. ஆகையினால், நீ கர்மயோகத்தையே செய்யக்கடவாய். மேலும், சரியாய் ஆசரிக்கப்பட்ட அன்னிய தர்மத்தைக் காட்டிலும் (எனின், பிரகிருதி சம்பந்த முள்ளவனுக்கு அசாத்தியம். ஆதலால், அன்னிய தர்மமான ஞானயோகத்தைக் காட்டிலும்) ஸ்வதர்மம் (கர்மயோகம்) குணமில்லாத தாயினும் மிக வுயர்ந்தது. தன் தர்மத்திலிருந்து (ஒரே ஜன்மத்தில் பலம் லபிக்காமல்) இறத்தலும் மேலாகும். பர தர்மம் (ஞானயோகம்) பயஹேது. (எனின்) தவறின் நரக ஹேது."

"கிருஷ்ணா! கர்மத்தில் எனக்கு இச்சை யுண்டாகவில்லை."

"அவ்வாறானால் அர்ச்சுனா! எல்லாக் கர்மங்களையும் விட்டுவிடுகின்றாயா?"

"மாதவா! விட்டுவிடுகின்றேன்."

"அங்ஙனமாயின், எவ்வாறு போஜனஞ் செய்வாய்?"

"கேசவா! சரீர சம்ரக்ஷணைக்கு வேண்டிய கர்மங்களைச் செய்கிறேன்."

"அர்ச்சுனா! அநித்தியமான சரீரத்தைக் குறித்துச் சாக்கிரதைப் படுகின்றவன் சாஸ்வதமான ஆத்ம க்ஷேமத்தைக் கவனியாதிருத்தல் நியாயமா?"

"பரந்தாமா! 'கர்மம் பந்தஹேது' என்று சாஸ்திரங்கள் கூறுதலால், கர்மத்தி லெனக்கு இச்சையில்லை."

"அர்ச்சுனா! இந்த லோகத்திற்கு யக்ஞார்த்தமான கர்மத்தினும் வேறு (ஸ்வப்ரயோஜனார்த்தமான) கர்ம பந்தம் சம்சார ஹேதுவாகும்." 8

"குந்தி புத்திரா! பகவத் அர்த்தரூபமான கருமத்தைக்காட்டிலும் இதரமான கருமம் பந்தத்தை யுண்டுபண்ணுகிறது. யக்ஞார்த்தமான கர்மத்தை பலாசக்தி யில்லாதவனாய் ஆசரி."

[எல்லா யக்ஞங்களுக்கும் ஆராத்தியனும் பலங் கொடுப்பவனும் நானே. காம்ய கர்ம நிஷ்டர்கள் என்னை உண்மையாய் அறியார்கள். ஆகையாற்றான் அவர்களுக்குத் தவறுத லுண்டாம். அவர்கள் மறு ஜன்மத்திற்கு வருவர். யக்ஞம், தபஸ் இவைகளால் ஆராதிக்கத் தக்கவனாய், உலகங்க ளெல்லாவற்றிற்கும் மஹேஸ்வரனாய், சர்வ பூதங்களுக்கும் ஹிதனான என்னை அறிந்தவன் சுகத்தை அடைகின்றான்.]

‘‘கிருஷ்ணா! இனி என்ன செய்வேன்? எவ்வாற்றானும் கர்மஞ் செய்ய வேண்டிய தென்றே ஏற்படுகின்றது.’’

‘‘அர்ச்சுனா! அவ்வாறு துக்கித்துச் செய்யாதே! பகவன் முகோல்லாசத்திற் கென்று நீ பிரீதியுடன் செய்ய.’’ 9

‘‘சிருட்டிகாலத்தில் அந்தப் பகவானாகிய பிரஜாபதி அநாதி காலமாயுண்டான அசேதனத்தின் சேர்க்கையினால், பாபஸர்களாயும், பேர் ரூபம் இவைகளா லுண்டான பேதங்களில்லாமல் தன்னிடத்தில் இலயத்தை யடைந்தவர்களாயும், ஒருவித பிரயோசனத்தை யடைவதற்கும் யோக்கியதை யில்லாதவர்களாயும், அசேதனங்களுக்குச் சமானமாயு மிருக்கின்ற ஜனங்களைப் பார்த்து மிகுந்த தயை யுடையவனாய், அவர்களை உஜ்ஜீவிக்கச் செய்யவேண்டு மென்கிற எண்ணத்தினால் தனக்கு ஆராதனங்களாகிய யக்ஞங்களைச் செய்வதற்காக யக்ஞங்களுடன் அவர்களைச் சிருஷ்டித்தான். இந்த யக்ஞங்களால் நீங்கள் உங்களை விருத்தி செய்து கொள்ளுங்கள்; யக்ஞங்கள் உங்களுக்கு எண்ணின கோரிக்கையைப் பூர்த்தி செய்யக் கடவன.’’

[குறிப்பு:—‘பிரஜாபதி’ என்னும் பதத்தால் வெவ்வேறு கர்த்தாக்கள் நிர்த்தாரிக்கப்பட்டார்கள். எல்லாவற்றையும் சிருஷ்டித்தவனும், எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாயும், எல்லாவற்றிற்கும் முக்கியமாய் அடைய வேண்டியவனாயு மிருக்கிற ஈஸ்வரனை அப்பதம் குறிக்கிறது.] 10

‘‘இந்த யக்ஞங்களால் தேவர்களைப் பூசித்தால் அவர்கள் உங்களை விருத்தி யடையச் செய்வார்கள்; நீங்கள் பரஸ்பர சகாபூதர்களாகி க்ஷேமத்தை யடைவீர்கள்.’’

[அநாதிகாலமா யுண்டான பிரகிருதி சம்பந்தத்தினாலே பராதீனர்களாயும், புருஷார்த்தங்களைச் சாதித்துக் கொள்ளச் சக்தி யற்றவர்களாயும், ஜடத்திற்குச் சமான முடையவர்களாயும், நாம ரூபங்களில்லாதவர்களாயு மிருந்த ஜீவன்கள் பகவத் சிருஷ்டிக்கு உட்

பட்டவை யென்றும், பிரமனிற்கு ஆயுட்பிரமாண மிருத்தலால், பிரமாதிகளை ரக்ஷ்ய பிரஜைகளையும், மனுஷ்யாதிகளை ரக்ஷகப் பிரஜைகளையும் சிருஷ்டித்தான்.] 11

“அதன்றி, யக்ஞங்களினாலே நிவேதிக்கப்பட்ட தேவதைகள் உங்களுக்கு இஷ்டங்களான போகங்களைத் தருவார்கள். யக்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட என்னை அந்தராத்மாகவுடைய தேவதைகள் உயர்ந்த புருஷார்த்தமான மோக்ஷத்தைச் சாதிப்பவர்களுக்கு எவைகள் இஷ்டமான போகங்களோ அப்போகங்களை முன் செய்த யக்ஞங்களினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள் கொடுக்கப் போகின்றனர். மேன்மேலும் செய்யும் ஆராதனங்களுக்கு அவசியம் வேண்டுவதான எல்லாப் போகங்களையும் உங்களுக்குக் கொடுக்கப் போகின்றார்கள். அவ்வாறன்றித் தங்களை ஆராதனம் செய்வதற்காக அவர்களால் கொடுக்கப்பட்ட போகங்களை அவர்களுக்குக் கொடாமல் எவனொருவன் அனுபவிக்கின்றானோ அவன் கள்ளன்.”

[குறிப்பு:—திருட்டுத்தனமானது - அயலானுக்குச் சொந்தமாய் அவன் பிரயோஜனத்திற்காகவே ஏற்படுத்தப்பட்ட ஒரு வஸ்துவினிடத்தில் தன்னுடைய தென்ற புத்தியைச் செலுத்தி அதனால் தன்னைத் திருப்தி செய்வித்தல். ஆகையால், இத்தகையோன் மோக்ஷத்திற்கு அர்ஹனாகாததோடு நரகத்தையு மடைவன்.] 12

“அர்ச்சுன! யாகத்தில் ஈசுவராதிகளுக்கு அர்ப்பணஞ் செய்து மிகுதியான அன்னத்தைப் புசிக்கிற சத்புருஷர்கள் (பஞ்சசூனா முதலிய) சகல பாபங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். யார் தமக்காகவே பாகஞ் செய்து புசிக்கின்றார்களோ அந்தப் பாபிகள் பாபத்தையே புசிக்கின்றார்கள்”

[அதாவது, இந்திரன் முதலியவர்களுக்கு அந்தர்யாமியா யிருக்கிற பரம புருஷனுடைய ஆராதனத்திற்காகவே திரவியங்களைச் சம்பாதித்துப் பாகஞ் செய்து, அவற்றால் உள்ளபடியே பரம புருஷனை ஆராதனஞ் செய்து, அதன் மிகுதியான ஆகாரத்தினால் எவர்கள் தேகதாரணத்தைச் செய்கின்றார்களோ அவர்கள் அநாதிகாலமாகச் செய்யப்பட்டதாயும், ஆத்மாவின் உண்மையைப் பார்ப்பதற்குத் தடையாயு மிருக்கிற எல்லாப் பாபங்களினின்றும் நீங்குகிறார்கள். எவர்கள் இந்திரன் முதலியவர்களுக்கு அந்தர்யாமியாகிய பரம புருஷனால் தன்னை ஆராதிப்பதற்காகக் கொடுக்கப்பட்டவை

களைத் தங்களுக்காகச் சேகரித்துக்கொண்டு பாகஞ் செய்து சாப்பிடு கின்றார்களோ, பாபத்தையே சுவபாவமாகவுடைய அவர்கள் பாபத்தையே புசிக்கிறார்கள். பாபமாக மாறுகிறபடியினால் அதுவே பாபமென்று சொல்லப்படுகின்றது. அதனால், ஆத்மாவைப் பார்ப்ப தில் ஆசையற்றவர்களாய் நரகத்திற்காகவே பாகஞ் செய்கிறார்கள்.

[குறிப்பு:—பஞ்ச யக்ஞங்க ளென்றால், வேதமோதுதலாகிய பிர ம்மயக்ஞம், ஜலதர்ப்பணத்தினால் பிதுருக்களைத் திருப்தி செய்வதாகிய பிதுர் யக்ஞம், தேவதைகளைக் குறித்து அக்கினி யில் ஹோமஞ் செய்வதாகிய தேவ யக்ஞம், வாயஸபலி முதலி யவை வைப்பதாகிய பூத யக்ஞம் அதிதிகளுக்கு அன்னமிடுவ தாகிய மானுட யக்ஞம்.]

அர்ச்சுனா! மேற் கூறியவாறு ஐந்து யக்ஞங்களை யாவனொருவன் தன் சக்திக் கிசைந்தவாறு செய்கின்றானோ, அவன் கிரகஸ்தாச்சிர மத்தி லிருந்தபோதிலும், குத்துகிறது, அறைக்கிறது, எரிக்கிறது, பினல் கொண்டு வருகிறது, பெருக்கிறது ஆகிய இந்த ஐந்து விதங் களினா லுண்டாகும் தோஷங்களினின்றும் விடுபடுகின்றான். 13

“ஜீவாத்மாக்களால் அதிஷ்டானஞ் செய்யப்பட்ட சரீரங்கள் ஆகாரத்தினா லுண்டாகின்றன; மேகத்தினால் ஆகாரங்கள் உற் பத்தியாகின்றன; மேகமானது யாகத்தினா லுண்டாகின்றது; யாக மானது கருமத்தா லுண்டாகின்றது.

கர்மம் வேதத்தினா லுண்டாகிறது: வேதம் பரப்ரஹ்மத்தி னின்று முண்டாகிறது; எங்கும் வியாபித்திருக்கின்ற பரப்ரஹ்மம் எப்பொழுதும் யக்ஞத்தில் ஸ்தாபிக்கப்பட் டிருக்கிறது. இவ்வித மாகப் பகவானால் பிரவிர்த்திக்கப்பட்ட சக்கரத்தை இந்தச் சாத னத்தி லிருக்கிற எந்த மனிதன் தொடர்ச்சியாகச் செய்துகொண்டு வரவில்லையோ, அவன், அர்ச்சுனா! பயத்தோடு சேர்ந்த ஆயுளை யுடையவனாயும், இந்திரியங்களையே அனுபவிக்கு மிடமாக வுடையவ னாயும் ஜீவிக்கின்றான்.”

ஆகையால், சர்வ பிராணிகளும் ஆகாரத்தினா லுண்டா கின்றன. மேகத்தினால் அன்ன முண்டாகிறதென்பது உலகர் நன் கறிந்த விஷயம். யக்ஞத்தினால் மேக முண்டாகிற தென்பதும், நெருப்பில் போடப்பட்ட ஹோமம் நன்றாகச் சூரியனை யடைகிற தென்பதும், சூரியனிடத்திலிருந்து மழை யுண்டாகின்ற தென்பதும் சாஸ்திரங்களினா லறியப்படுகின்றன. யக்ஞம், பணம் சம்பா

கித்தல் முதலிய கர்த்தாவின் வியாபாரமாகிய கர்மத்தினுலுண்டாகிறது. கர்மம், பிரஹ்மத்தினுலுண்டாகிறது. பிரகிருதியின் மாறுதலாகிய சரீரம் அந்தப் பரமாத்மாவி னிடத்திலிருந்து பேர், ரூபம் இவைகளை உடையதாய் ஜீவர்களால் அனுபவிக்கப்படுகிற பிரஹ்மமுண்டாகிறது.

[ஜீவாத்மா அக்ஷர மென்றும் சொல்லப்பட்டான். அன்னம், பானம் முதலியவைகளினுல் திருப்தியடைந்த ஜீவாத்மா அதிஷ்டானஞ் செய்யப்பட்ட கர்மத்தைச் செய்யச் சக்தியுள்ள தாகின்றது. கர்மத்திற்குச் சாதனமாகிய சரீரம் ஜீவாத்மாவினு லுண்டாகின்றது; ஆகையினுல், எல்லா அதிகாரிகளிடத்திலு மிருக்கும் சரீரம் எப்போதும் யாகத்திலேயே இருந்துகொண் டிருக்கின்றது. அதாவது, யக்ஞத்தையே காரணமாக வுடையதென்று பொருள். இவ்வாறு பரமபுருஷனுல் ஏற்பட்ட சக்கரம், அதாவது ஆகாரத்தினுல், பூதமென்கிற பதத்தினுல் சொல்லப்பட்ட ஜீவாத்மாவோடுகூடிய சரீரமுண்டாகின்றது; மேகத்தினு லாகார முண்டாகின்றது; யக்ஞத்தினுல் மேகமுண்டாகின்றது; யக்ஞம் கர்த்தாவின் வியாபாரமாகிய கர்மத்தினுலுண்டாகின்றது; கர்மம் வேதத்தினு லுண்டாகின்றது; வேதம் பரப்ரஹ்மத்தினின்று முண்டாகின்றது; எங்கும் வியாபித்திருக்கின்ற பரப்ரஹ்மம் எப்பொழுதும் யக்ஞத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு ஒன்றுக்கொன்று காரணமாயும் காரியமாயு மிருக்கிறபடியினுல் சக்கரம்போலச் சுழன்று வரும் இதை, இந்தச் சாதனத்திலிருக்கிற கர்ம யோகாதிகாரியோ, ஞான யோகாதிகாரியோ, எவன் யக்ஞத்தின் மிகுதியினுல் தேகதாரணத்தைச் செய்யாமல் தொடர்ச்சியாகச் செய்துகொண்டு வரவில்லையோ அவன் அகாயுஸ்ஸு ஆகிறுன்; அதாவது, எவனுடைய ஆயுள் பாவத்தைச் செய்வதற்காக ஏற்பட்டதோ அல்லது பாபத்தினு லுண்டானதோ, அல்லது இவ்விருவகையு மிருக்கிறதோ அவன் அகாயுஸ்ஸு என்று சொல்லப்படுகின்றுன். ஆகையினுல், அவன் இந்திரியங்களையே தனக்குச் சுகத்தை அனுபவிக்கு மிடமாக வுடையவ னுகின்றுன்; ஆத்மாவைச் சுகமனுபவிக்கு மிடமாக வுடையவ னுகிறதில்லை. இந்திரியங்கள் எவனுக்குப் பூந்தோட்டமாக விருக்கின்றனவோ அவன் இந்திரிய ராமனென்று சொல்லப்படுகிறுன்; அதாவது, யக்ஞத்தில் மிகுதியினுல் விருத்தி செய்யப்படாத தேகம், மனது இவைகளை உடையவனுகையினுல் மேலிட்ட ரஜோகுணம், தமோகுணம் இவைகளை யுடையவனுய், ஆத்மாவை நேரில் பார்ப்பதில் ஆசை யில்லாமையினுல், விஷ

யங்களை அனுபவிப்பதிலேயே ஆசையை யுடையவனுகின்றான். ஆகையினால், ஞானயோகம் முதலியவற்றில் பிரயத்தனஞ் செய்து கொண்டிருந்தபோதிலும், பிரயோஜன மில்லாத பிரயத்தனத்தை உடையவனாகையினால், அர்ச்சுனா! அவன் வியர்த்தமாகவே ஜீவிக்கின்றான்.]

## ஆதி இறைவனிடத்தினின்றும் வேதகம் உற்பத்தியானதற்குப் பிரமாணம்:

### திருச்சந்த விருத்தம்

"புள்ளதாகி வேதநான்கு மோதினாய தன்றியும்
புள்ளின்வாய் பிளந்துபுட் கொடிப்பிடித்த பின்னரும்
புள்ளையூர்தி யாதலா லதென்கொல்மின்கொள் நேமியாய்
புள்ளின்மெய்ப் பகைக்கடற் கிடத்தல்காத லித்ததே."

### பெரிய திருமொழி 7 - வது பண்டை

"மன்னுமா நிலனும் மலைகளும் கடலும்
வானமுந் தானவ ருலகும்
துன்னுமா யிருளாய்த் துலங்கொளி சுருங்கித்
தொல்லைநான் மறைகளு மறையப்
பின்னும்வா னவர்க்கும் முனிவர்க்கும் நல்கிப்
பிரங்கிருள் நிறங்கெட வொருநாள்
அன்னமா யன்றங் கருமறை பயந்தா
னரங்கமா நகரமர்ந் தானே."

### ஸ்ரீமத் கம்பராமாயணம் ஆரணியகாண்டம், விராதன் வதைப்படலம்

"அன்னமா யருமறைக ளறைந்தாய்நீ யவையுன்னை
முன்னமா ரோதுவித்தா ரெல்லாரு முடிந்தாரோ
பின்னமா யொன்றுதல் பிறிந்தேயோ பிறிபாதோ
வென்னமா மாயமிவை யேனமாய் மண்ணிடந்தாய்." 14-16

"அர்ச்சுனா! எவன் ஆன்மாவினிடத்தில் ஆசையை யுடையவனாகவும், ஆத்மாவினிடத்தில் திருப்தியை யுடையவனாகவும், ஆத்மாவினிடத்தில் சந்தோஷத்தை யுடையவனாகவும் இருக்கின்றானோ அவனுக்குக் கருமத்தா லாகவேண்டிய தொன்றுமில்லை." 17

"அவனுக்குச் செய்த காரியத்தினால் பிரயோஜன மில்லை. இந்த ஆத்மாவைப் பார்க்கிற விஷயத்தில் செய்யாததினால் ஒருவித அநிஷ்டமு மில்லை இவனுக்குப் பஞ்சபூதங்க ளெல்லாவற்றிலும் பிரயோஜனமாக அடையக் கூடியது ஒன்று மில்லை" 18

"ஆகையினால் பற்றுத லில்லாமல் கர்மத்தை எப்பொழுதும் செய்க! அவ்வாறு செய்கிற புருஷன் மோக்ஷத்தை அடைகின்றனல்லவா?"

[ஸ்ரீ தரர்:—"அஞ்ஞானி, அந்தக்கரண சுத்தியின் பொருட்டுக் கருமங்களைச் செய்ய வேண்டு மென்று சொல்லப்பட்டது. பிரம்மஞானிக்குக் கருமத்தினால் யாதொரு பிரயோஜனமு மில்லை."]

[எவன் ஞானயோகம் கர்மயோகங்க ளென்கிற சாதனங்களை அபேக்ஷிக்காமல், சுவபாவத்திலே ஆத்மாவினிடத்தில் ஆசை உள்ளவனோ, ஆத்மாவினாலேயே திருப்தி யடைந்தவனோ, ஆத்மாவைத் தவிர வேறாகிய அன்னம் பானம் முதலியவைகளினால் திருப்தி யடைந்தவ னல்லனோ, ஆத்மாவினிடத்திலேயே சந்தோஷமுள்ளவனோ, பூந்தோட்டம் - மாலை - சந்தனம் - பாட்டு - வாத்தியங்கள் - இரத்தினம் முதலியவைகளில் சந்தோஷ மடைந்தவ னல்லனோ, தரிக்கச் செய்கிறதும் அனுபவிக்க வேண்டியதும் ஆகியவை யெல்லாம் ஆத்மாவேயோ, அவனுக்கு ஆத்மாவைப் பார்ப்பதற்காகச் செய்யப்பட்ட அதனுபாயத்தினா லொரு பிரயோஜனமு மில்லை: ஆத்மாவைப் பார்ப்பதற்கு உபாயத்தைச் செய்யாததினால் ஒரு அநிஷ்டமு மில்லை. உபாயத்தை எதிர் நோக்காமல் கிடைத்த ஆத்ம சாக்ஷாத்காரத்தை உடையவனாதலின், தானாகவே ஆத்மாவைத் தவிர வேறு எல்லா அசேதன வஸ்துக்களிலும் ஆசை யில்லாத இவனுக்குப் பிரகிருதியி னொருவித மாறுதல்களான, தங்கள் தங்கள் காரியங்களோடு கூடிய ஆகாசம் முதலிய எல்லாப் பூதங்களிலும் பிரயோஜனமா யிருத்தலினால் அடைய வேண்டிய தொன்று மில்லை. இவ்வா றிருந்தாலல்லவோ அவைகளி னாசையை ஒழிக்க வேண்டியதற்காக உபாயம் ஆரம்பிக்க வேண்டும் அவன் முக்தனே அன்றோ? எந்தக் காரணத்தினா லுபாயத்தினாலன்றிக் கிடைத்த ஆத்ம தரிசனத்தை யுடையவனுக்கே உபாயத்தில் பிரவிர்த்திக்க வேண்டியதில்லையோ, எக்காரணத்தினால் உபாயத்தில் பிரவிர்த்தித்தவனுக்கும், தவறாமற் செய்யக்கூடிய தாகையினாலும், தவறுதல் நேரிடக்

கூடிய தில்லாமையினாலும், ஆத்மாவின் உண்மையைப்பற்றிய அனுசந்தானத்தை யுள்ளடக்கிக்கொண் டிருப்பதினாலும், ஞானயோகஞ் செய்கிறவனுக்கும் ஒரு பாகத்தில் கர்மங்களை அனுசரிக்க வேண்டியிருக்கிறபடியினாலும், கர்ம யோகமே ஆத்மாவின் சாக்ஷாத்காரத்தை உண்டாக்குவதில் சிறந்ததோ, ஆகையினால் பற்றுதலில்லாமையை முன்னிட்டுச் செய்யவேண்டியதென்றே நினைத்து, ஆத்மாவை அடைகிறவரையில் கர்மத்தையே செய். இவ்வாறு பற்றுதலில்லாமல் செய்யவேண்டியதென்று நினைத்து, 'நான் கர்த்தாவல்ல' என்கிற அனுசந்தானத்துடன் கர்மத்தைச் செய்கிற புருஷன் கர்ம யோகத்தினாலேயே ஆத்மாவை அடைகின்றான்.] 19

"அர்ச்சுனா! ஜனகன் முதலானவர்கள் நிஷ்காம கருமத்தினாலேயே ஞானசித்தியை யடைந்தார்கள். ஜனங்களின் பிரயோஜனத்தை யுத்தேசித்தாவது கருமத்தைச் செய்வதற்கு நீ யோக்கியனாகவிருக்கின்றாய்."

[இனி நீ, 'எனக்கு ஞானம் சித்தியாய்விட்டது; கருமஞ் செய்ய வேண்டியதில்லை' என்றெண்ணினாலுங்கூட, ஞானத்தில் பிரவிர்த்தி யற்றதுவும், கருமத்திலேயே அதிகார முள்ளதும், அஞ்ஞானத்தி லிருக்கிறவர்களாகிய ஜனங்கள் சற்கருமங்களைச் செய்ய விருப்பத்தை யடையவும், துஷ்கருமங்களில் பிரவிர்த்திக்காம லிருக்கவும் வேண்டியதி னிமித்தம் பெரியோர்களா யிருக்கின்றவர்கள், தங்களுக்குக் கருமஞ் செய்து ஆகவேண்டிய தொன்று மில்லாவிட்டாலும், லோக ஜனங்களுக்காகச் சற்கருமங்களைச் செய்து காட்டவேண்டும். மேலும், எந்தக் காரணத்தினால் ஞான யோகத்தில் அதிகார முள்ளவர்களுக்கும் ஆத்மாவைப் பார்ப்பதில் கர்ம யோகமே மேலானதோ. ஆகையினால், இராஜரிஷிகளாயும் ஞானிகளுக்குள் சிறந்தவர்களாயுமுள்ள ஜனகன் முதலியவர்கள் கர்ம யோகத்தினாலேயே ஆத்மாவை யடைந்தார்கள்.]

[அவதாரிகை:—இவ்வாறு மோக்ஷத்தி லாசையை யுண்டாக்கி முதலில் ஞான யோகஞ் செய்ய யோக்கியதை இல்லாமையால், கர்ம யோகத்தில் அதிகாரமுள்ளவனுக்குக் கர்ம யோகமே செய்யத் தக்கதென்று சொல்லியும், ஞான யோகத்தில் அதிகார முள்ளவனுக்கும் ஞான யோகத்தைவிடக் கர்ம யோகமே மேலானதென்றும் காரணத்துடன் நிரூபிக்கப்பட்டது. இப்போது சிஷ்டன் என்று பிரசித்தி யடைந்தவனுக்கு எல்லா விதத்தாலும் கர்ம யோகமே செய்யத் தக்கதென்று சொல்லப்படுகின்றது.]

"கிருஷ்ணா! நான் கர்மஞ் செய்யின் உலகத்தவரும் என்னை அனுசரிப்பார்களா?"

### ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனா! பெரியவனானவன் எந்தெந்தக் கருமத்தைச் செய்கின்றானோ, அந்தந்தக் கருமத்தையே அன்னிய மனிதனுஞ் செய்கின்றான். அந்தப் பெரியவன் எதைப் பிரமாணமாகக் கொள்ளுகின்றானோ அதையே உலகம் அனுசரிக்கும். ஆகையால், உலகத்தை ஒன்று சேர்ப்பதை யோசித்தாவது நீ கர்மத்தையே செய்ய வேண்டியது."

[எல்லா சாஸ்திரங்களும் தெரிந்தவனாகவும், அனுஷ்டானஞ் செய்கிறவனாகவும் பிரசித்தி யடைந்தவன் எதை அனுஷ்டிக்கின்றானோ அதையே முழுமையும் தெரியாத ஜனங்களும் அனுஷ்டிக்கின்றார்கள். அவ்வாறு அனுஷ்டிக்கப்படுகின்ற கர்மத்தைச் சிரேஷ்டன் எந்த அங்கங்களோடு கூடியதாக அனுஷ்டிக்கின்றானோ அந்த அங்கங்களோடு கூடியதாகவே முழுமையும் தெரியாத உலகமும் அனுஷ்டிக்கின்றது. ஆகையினால், உலகத்தைக் காப்பாற்றுவதற்காகச் சிஷ்டனென்று பிரசித்தியடைந்த சிரேஷ்டனால் தத்தம் வர்ணாச்சிரமங்களுக்கு ஒத்த கர்மம் முழுமையும் எப்பொழுதும் அனுஷ்டிக்கத் தக்கது. அப்படிக்கில்லாவிடில், உலகம் நசித்துப் போவதினால் உண்டாகும் பாவம் இவனை ஞான யோகத்திலிருந்து நழுவும்படி செய்துவிடும்.] 21

"ஓ! பார்த்தா! திரிலோகங்களிலும் எனக்குச் செய்யத்தக்க கருமமில்லை; அடையாததாவது, அடைய வேண்டுவதாவது ஒன்றுமில்லை; அவ்வாறாயினும் நான் கருமத்திற் பிரவிர்த்தித்தே யிருக்கின்றேன்.

ஓ! அர்ச்சுனா! நான் ஒரு காலத்திலாவது ஜாக்கிரதையாய்க் கருமஞ் செய்வதிற் பிரவிர்த்திக்காமற்போனால், மனிதர்கள் சகல விதத்திலும் எனது மார்க்கத்தையே அனுசரிப்பார்க ளல்லவா?

நான் கருமத்தைச் செய்யாமற்போனால் இந்த (லோகத்திலுள்ள) ஜனங்கள் கரும லோபத்தாற் கெட்டுப் போவார்கள்; அதனால் (ஜாதி) சேர்க்கையைச் செய்தவனாவேன்; அப்பொழுது இந்த ஜனங்களைக் கெடுத்தவனாவேன்."

[எல்லாவற்றிற்கும் ஈஸ்வரனாகியும், அடையப்பட்ட எல்லா இஷ்டங்களையு முடையவனாகியும், எல்லாந் தெரிந்தவனாகியும், சத்திய சங்கல்பனாகியும், மூன்று லோகங்களிலும் தேவன் மனிதன் முதலிய ரூபங்களைக்கொண்டு எனது இஷ்டத்தினால் இருந்துகொண்டிருக்கிற யான் ஒன்றுஞ் செய்யவேண்டிய தில்லை. எந்தக் காரணத்தினா லிதுவரையி லடையப்படாமல் கர்மத்தினா லடையவேண்டிய தொன்று மில்லையே. அவ்வித லோகங்களைக் காப்பாற்ற வேண்டியதற்காக நான் கர்மத்திலேயே யிருந்துகொண்டிருக்கிறேன். மேலும், எல்லாவற்றிற்கும் ஈஸ்வரனாகவும், சத்திய சங்கல்பனாகவும், என்னுடைய சங்கல்பத்தினால் செய்யப்பட்ட உலகங்களின் படைத்தல், காத்தல் அழித்தல் இவைகளை விளையாட்டாக உடைத்தானவனாகவும், எனது இஷ்டத்தினால் உலகங்களுக்கு உபகாரஞ் செய்வதற்காக மனிதனாகப் பிறந்தவனா யிருந்தாலும், மனிதர்களுக்குள் சிஷ்ட ஜனங்களுக்கு முதன்மையான வசுதேவரின் கிரகத்தில் அவதாரஞ் செய்த நான், அந்தந்தக் குலத்திற்குத் தகுந்த கர்மத்தில் சோம்ப லில்லாமல் போனேனேயானால், சிஷ்ட ஜனங்களுக்கு முதன்மையான வசுதேவருக்குப் பிள்ளையாகிய என்னுடைய வழியை முழுமையும் தெரியாத சிஷ்டர்கள் எல்லா விதத்தினாலும், இதுவே தர்மமென்று அனுசரிப்பார்கள். அவர்கள் தாங்கள் செய்யவேண்டியதை அனுஷ்டிக்காமையினாலும், செய்யாததினா லுண்டான தோஷத்தினாலும், ஆத்மாவை அடையாமல் நரகத்தை அடைந்தவர்களாவார்கள்.]

நான் குலத்திற்குத் தகுந்த கர்மத்தைச் செய்யாமற்போனால் இவ்வாறே எல்லா சிஷ்ட ஜனங்களும் என்னுடைய அனுஷ்டானத்தைக் கைக்கொண்டு தர்மத்தை நிச்சயஞ் செய்தவர்களாய் நாசமடைந்தவர்களாவார்கள். சாஸ்திரத்திற் கூறிய ஆசாரத்தைப் பரிபாலனஞ் செய்யாமையினால் எல்லா சிஷ்ட ஜனங்களுக்குங் கலப்பைச் செய்தவனாவேன்: ஆகையினால், இந்த ஜனங்களைக் கெடுத்தவனாவேன்.

இவ்வாறு பாண்டுவின் பிள்ளையாகியும், யுதிஷ்டிரருக்குத் தம்பியாகியும், அர்ச்சுனனாயு மிருக்கிற நீ, ஞானயோகத்தைச் செய்தாயேயானால், அதனால் உன்னுடைய அனுஷ்டானத்தை அனுசரித்தவர்களாயும் சிஷ்டர்களாயு மிருக்கிறவர்கள், மோக்ஷத்தில் விருப்பமுள்ளவர்கள் தங்கள் அதிகாரத்தைத் தெரிந்துகொள்ளாமலும்,

கர்மயோகத்தைச் செய்யாமலும் நாசமடைந்து விடுவார்கள். ஆகவின், பிரசித்தமான கர்மமே செய்யத்தக்கது. 22-24

"அர்ச்சுனா! பாமரர், கர்மத்தில் பற்றுதலை யுடையவர்களாய்க் கர்மத்தை எவ்வாறு செய்கின்றார்களோ, அவ்வாறே ஞானவான்கள் பற்றுத லில்லாதவராய் லோகோபகாரார்த்தமாகக் கர்மங்களைச் செய்யவேண்டும்."

[ஸ்ரீ சங்கரர்:—பலாபேக்ஷையுடன் காமிய கருமங்களைச் செய்வதிலேயே விருப்பமுள்ள அவிவேகிகளை அந்தக் கருமத்தைச் செய்து வரும்படிச் செய்யவேண்டியதின் பொருட்டு ஞானிகள் தாங்களும் கருமஞ் செய்துகொண்டு வரவேண்டும்.]

"தெரியாதவர்களாய்ப் பற்றினை யுடையவர்களுக்குப் புத்தியின் கலக்கத்தை உண்டாக்குதல் கூடாது. தெரிந்தவன் (கீழ்ச்சொன்ன புத்தியோடு) கூடியவனாய்க் கர்மங்களைச் செய்துகொண்டு, எல்லாக் கர்மங்களிலும் குறித்த பிரீதியை யுண்டாக்கவேண்டியது."

மேலும், ஆத்மாவைப்பற்றி முழுதும் தெரியாதவர்களாய்க் கர்மங்களில் விடமுடியாத சம்பந்த முள்ளவர்கள் ஆத்மாவை முற்றிலும் தெரியாமையினால், அதையே அடிக்கடி நினைப்பதாகிய ஞானயோகத்தில் அதிகார மில்லாதவர்களாய்க் கர்ம யோகத்திலதிகார முள்ளவர்கள் தாங்கள் ஆத்மாவைப் பார்ப்பதற்காக எவ்வாறு கர்மயோகத்தையே செய்கின்றார்களோ அவ்வாறே ஆத்மாவைப்பற்றி முழுவதும் தெரிந்தவனாகையால், கர்மத்தில் பற்றுதலில்லாதவனா யிருந்தாலும், பிரசித்தனா யிருக்கிற சிஷ்டன் உலகங்களைக் காப்பாற்றுவதற்காகத் தன்னுடைய அனுஷ்டானத்தினால் சிஷ்டர்களான ஜனங்களுக்கும் கர்மத்தின் நிச்சயத்தை உண்டுபண்ண வேண்டுமென்கிற அவாவுடையவனாய்க் கர்மத்தையே செய்ய வேண்டியது. மேலும், ஆத்மாவைப்பற்றி முழுமையும் தெரியாமையினால், ஞானயோகத்தைச் செய்ய சக்தி யில்லாதவர்களாயும், மோக்ஷத்தில் விருப்ப முடையவர்களாயும், அநாதியான கர்மவாசனையினால் கர்மத்தையே செய்துகொண்டிருப்பதினால், கர்மயோகத்தில் அதிகார முள்ளவர்களாயு மிருக்கிறவர்களுக்கும், கர்மயோகத்தைத் தவிர வேறு ஆத்மாவலோகனத்திற்குச் சாதனமிருக்கிற தென்று புத்தியால் கலப்பை யுண்டாக்குதல் கூடாது. ஆத்மாவைப்பற்றி முற்றிலும் தெரிந்தவனாகையால், ஞானயோகத்தைச் செய்யச் சக்தியுள்ளவனா யிருந்தபோதிலும், முன் சொல்லியபடி

கர்மயோகமே, ஞானயோகத்தை எதிர்பாராமல், ஆத்மாவலோகனத்திற்குச் சாதனமென்கிற புத்தியோடு கூடினவனாய் கர்மத்தையே செய்துகொண்டு, எல்லாக் கர்மங்களிலும் முழுவதும் தெரியாதவர்களுக்குப் பிரீதியை யுண்டுபண்ண வேண்டியது. 25-26

"அர்ச்சுன! பிரகிருதியின் குணங்களாகிய சத்வம் முதலியவைகளால் அதற்குத் தக்கவாறு செய்விக்கப்படுகிற கர்மங்களைக் குறித்து அகங்காரத்தினால் தெரிந்துகொள்ளப்படாத ஆத்மாவையுடையவன் 'நான் கர்த்தா' என்று நினைக்கின்றான். எவனுடைய ஆத்மாவானது அகங்காரத்தினால் தெரிந்து கொள்ளப்படவில்லையோ அவன் அகங்கார மூடாத்மாவென்று சொல்லப்படுகின்றான்."

[அகங்காரமாவது, 'அகம்' என்கிற பதத்திற்கு அர்த்த மாகாத தேகத்தில் ஆத்மா என்னும் அபிமானம்; இதனால் தெரிந்து கொள்ளப்படாத ஆத்ம ஸ்வரூபத்தை உடையவன், 'நான் கர்த்தா' என்று நினைக்கிறானென்பது பொருள்.]

சத்வம் முதலிய குணங்களின் பிரிவிலும், அவைகளின் காரியங்களின் பிரிவிலும் உண்மையைத் தெரிந்து கொண்டவன் சத்வம் முதலிய குணங்கள் தங்கள் தங்கள் காரியங்களில் இருக்கின்றனவென்று தெரிந்துகொண்டு, குணங்களின் காரியங்களில் நான் கர்த்தாவென்று பற்றுதலடைகிறதில்லை."

கருத்து:—27-28-ம் இலக்கமுள்ள சுலோகங்களுக்கு ஸ்ரீதர சுவாமிகளும், ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளும் வெவ்வேறாகப் பொருள் கூறியுள்ளார்கள். அவையாவன:—

[ஸ்ரீதர சுவாமிகள்:—"குண கருமங்களின் விபாகத்தி னுண்மையை யுணர்ந்தவ னென்றால், முக்குணங்கள் தனதல்ல; ஆத்மாவாகிய தான் அக்குணங்களு மல்லன்; கருமம் தனதன்று; கருமங்களைத் தான் செய்பவனு மல்லன்; குணங்கள் கருமங்கள் என்பனவற்றுக்குத் தான் வேறானவனென்று அறிந்தவனே குணகரும விபாகங்களைத் தெரிந்தவன்."]

[ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள்:—"பகவானுடைய இச்சை முதலிய குணங்களுக்கும், பிரகிருதியின் சத்வாதி குணங்களுக்கும், பிரகிருதி விகாரமான தேகேந்திரிய மனதுகளுக்கும் பரஸ்பர பேதத்தையும், பகவத் சிருஷ்டி முதலிய கருமங்களுக்கும், பகவத் அதீனனாகிய ஜீவனால் செய்யப்படும் கருமங்களுக்கும் பரஸ்பர பேதத்தையும் யதார்த்தமாக அறிந்தவன் பகவத் இச்சாதி குணங்கள் ஜீவசுவபாவ கருமாதிகளிலும் இந்திரியங்கள்

பகவத் இச்சாநுசாரமாய்ச் சப்தாதி விஷயங்களிலும் பிரவிர்த்திக்கின்றன.”] 27-28

“அர்ச்சுனா! சகல கருமங்களும், பிரகிருதியின் காரியமென்றறிந்த ஞானியானவன், ஆத்மாநாத்ம ஞானமில்லாத மூடர்களுக்குக் கருமத்தை விட்டு ஞானமார்க்கத்தில் பிரவிர்த்திக்கும்படிப் போதித்தல் கூடாது.”

[ஏனெனில், மூடனும் அவிவேகியுமான அவனுக்கு ஞானமார்க்கம் சித்திக்கவே மாட்டாது. இந்த ஞானியானவன் ‘கருமத்தினால் பிரயோஜன மில்லை’ என்று சொன்ன வாக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு மூடன் கருமத்தை மட்டும் விட்டுவிடுவான்: அதனாற் கருமபல னுண்டாக எதுவில்லை; அவன் ஞானசித்தியை யடைதற்கு யோக்கியனு மல்லன்; இவன் இரண்டு விதத்திலேயுங் கெட்டவன். ஆகையால், ஞானியானவன், ‘கருமமானது ஆத்ம தரிசனத்திற்குச் சாதனமான மார்க்கம்’ என்றும், ‘அதைக் கைவிட்டால் உனக்கு வேறே பிரயோஜனங் கிடைக்காது’ என்றும் வற்புறுத்திச் சொல்லித், தான் கருமத்தைச் செய்தும் செய்வித்தும் காட்ட வேண்டும். அவ்வகைப் பூரணத்தை யறியாத மந்தபுத்தி யுடையாரைப் பூரணமா யறிந்தவன் தன் ஞானயோக ஸ்திதியால் சலிக்கச் செய்தலாகாது.] 29

“அர்ச்சுனா! மேலும், நீ சகல கருமங்களையு மென்னிட மொப்புவித்துக், கருமங்களின் பலனை எனக்கு அர்ப்பணஞ் செய்து, பரமாத்மாவினுடைய பணிவிடைக்காரனாக நீ சகல கருமங்களையுஞ் செய்து, பரமாத்மாவிற்கு அர்ப்பணஞ் செய்ய வேண்டியவ னென்கிற நினைவுடன், பலத்தி லாசை வைக்காமலும், அகங்காரத்தை விட்டும், துக்கத்தை விட்டவனா யிருந்து எல்லாப் பிராணிகளுக்கும் அந்தராத்மாவாகியும் எல்லாவற்றிற்கும் ஈஸ்வரனாகியு மிருக்கின்ற என்னிடத்தில் எல்லாக் கருமங்களையும், ஆத்ம ஸ்வரூபத்தினா லுண்டான ஞானத்தினால் வைத்து, பலத்தி லாசை யில்லாதவனாயும், என்னுடைய தென்கிற அபிமான மில்லாதவனாயும், சிந்தை யில்லாதவனாயும், உயுத்த முதலிய சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட எல்லாக் கர்மங்களையுஞ் செய்.”

[எந்த அறிவு ஆத்மாவினிடத்தி லிருக்கிறதோ, அது “அத்யாத்ம சேதஸ்” என்று சொல்லப்படுகின்றது; அதாவது, ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றியதால் அநேக விதங்களில் ஏற்பட்ட ஞானத்

திறைலென்று பொருள். மேலும், ஜனங்களுக்குள் நுழைந்து நியமிக்கிறவனும், எல்லாவற்றிற்கும் ஆத்மாவாயும் கர்த்தாவாயு மிருக்கிற இவனே எவன் ஆத்மாவினிடத்தி லிருந்துகொண்டு ஆத்மாவுக்குள்ளே யிருக்கிறனே, எவனை ஆத்மா அறியவில்லையோ, எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவை உள்ளிருந்துகொண்டு நியமிக்கின்றனே, 'அழிவில்லாத அவன், உனக்கு அந்தர்யாமியாகிய ஆத்மா' என்றிவை முதலான அர்த்தமுள்ள சுருதிகள், இந்த ஜீவாத்மாவைப் பரமபுருஷனல் பிரவிர்த்திப்பிக்கிறவனாகவும், அவனுக்குச் சரீரமாகவும் சொல்லுகின்றன.]

"அர்ச்சுன! சகல பிராணிகளின் இருதயத்தில் நான் அந்தர்யாமியா யிருக்கின்றேன்; என்னலே நினைவும், அறிவும், மறதியு முண்டாகின்றன; சகல வேதங்களாலும் அறியத் தகுந்தவன் நானே; வேதார்த்தங்களை யறிந்தவனும் வேதாந்த சம்பிரதாயத்தைச் செய்த குருவும் நானே என்றும், எந்திரத்திலேறிய வஸ்துவைப்போலச் சகல பிராணிகளையுந் தனது சக்தியாலே கருமங்களிற் பிரவிர்த்திக்கும்படி செய்துகொண்டு, ஈசுவரனுனவர் சகல பிராணிகளின் இருதயத்தி லிருக்கின்றரென்றும் இனி உனக்கு நான் சொல்லப்போகின்றேன். ஆகையினல், எனக்குச் சரீரமா யிருத்தலினல் என்றல் பிரவிர்த்திப்பிக்கத் தகுந்த ஜீவாத்மாவின் சுவரூபத்தை அனுசந்தானஞ் செய்வதால், 'எல்லாக் கர்மங்களும் என்னலே செய்யப்படுகின்றன' என்று நினைத்து, பரமபுருஷனகிய என்னிடத்தில் சமர்ப்பித்து, அந்தக் கர்மங்களும் கேவலம் என்னுடைய ஆராதனங்களென்றெண்ணி, அவைகளின் பலத்தி லாசை யில்லாதவனய், அதனலேயே அந்தக் கர்மத்தில் என்னுடையதென்கிற அபிமான மில்லாதவனய், சிரத்தை யில்லாதவனய், உயுத்தம் முதலியவற்றைச் செய். தன்னுடையவனை ஜீவாத்மாவாகிற கர்த்தாவால், தன்னுடையவைகளான கருவிகளைக் கொண்டு, தன்னுடைய ஆராதனமாகிற ஒரே பிரயோஜனத்திற்காக எல்லாவற்றிற்கும் ஈசுவரனகவும், எல்லாவற்றிற்கும் சேஷியுமான பரமபுருஷன், தானே தன்னுடைய கர்மங்களைச் செய்விக்கின்ற னென்று அனுசந்தித்துக்கொண்டு, கர்மங்களில் என்னுடையதென்கிற அபிமான மில்லாதவனய், 'பிராசீனமாயும் அனதிகாலமா யுண்டானதாயும், அளவில்லாததுமான பாபங்களின் கூட்டத்தினல் நான் எவ்வாறு ஆகப்போகிறேனே?' என்றிப்படிப்பட்ட மனதின் சிந்தையினல் விடப்பட்டவனய், 'பரமபுருஷனே கர்மங்களினல் ஆராதிக்கப்பட்டவ

னைச் சம்சாரப் பந்தத்திலிருந்து விடுவிக்கப்போகிறான்' என்று நினைத்து, சுகமாகக் கர்ம யோகத்தையே செய்யக்கடவாய்.”

“கிருஷ்ணா! நீர் சொன்னபடி நடக்கின் என்ன ஆகும்?”

“அர்ச்சுனா! என்னுடைய பிரீதியை நினைத்துச் சிரத்தையுடன் அசூயை யில்லாமல் செய்தால், கர்மங்களால் விடப்பட்டவராவர். எந்த மனிதர்கள் என் வாக்கியத்தில் விசுவாச முள்ளவர்களாயும், என்னிடம் துவேஷம் அற்றவர்களாயும், எனது அபிப்பிராயத்தை எக்காலத்திலு மனுசரித்தும் நடக்கின்றார்களோ, அவர்களுங்கூட, கருமங்களாலே விடப்படுகின்றார்கள்.”

“கிருஷ்ணா! ‘அவர்களுங்கூட’ என்கிற வாக்கியமானது பின்னுஞ் சிலரைச் சேர்ப்பதாகத் தெரிய வருகிறது. ஆகையால், அத்தகைய சிரேஷ்டமானவர்களைக் குறிப்பிடவேண்டும்.” 30

“அர்ச்சுனா! அவர்கள் யாரெனில், சாஸ்திரத்திற்கு அதிகாரிகளாகிய எந்த மனிதர்கள் கீதா சாஸ்திரந்தான் மேலானதென் றுணர்ந்து அதின் வழியே அனுஷ்டிக்கின்றார்களோ அவர்களும், அனுஷ்டிக்காவிட்டாலும் இந்த சாஸ்திரத்தை யுணர்ந்து அதில் பக்தி சிரத்தை வைக்கின்றார்களோ அவர்களும், பக்தி சிரத்தை யில்லாவிட்டாலும் இந்த சாஸ்திரத்தை நிந்திக்காம லிருக்கின்றார்களோ அவர்களும் அநாதியாய் வந்திருக்கிற சகல கருமங்களி லிருந்தும் விடுபடுகின்றார்கள்.”

“கிருஷ்ணா! நீர் கூறியபடி நடவாவிடின் என்னவாகும்?” 31

“அர்ச்சுனா! எவர்கள் என்னுடைய மேற் கூறிய அபிப்பிராயத்தை நிந்திக்கின்றவர்களாய், அனுசரித்து நடக்கிற தில்லையோ, அவர்கள் புத்தி யில்லாதவர்களாயும், பிரம்ம விஷயமாயும் சகல கரும விஷயமாயு முள்ள ஞானத்தில் மூடர்களாயு மிருக்கிற அத்தகையினர் ஞான சூனியர்களாய்க் கெட்டுப்போவார்களென் றறியக்கடவாய்.”

[இந்த எல்லா ஆத்ம வஸ்துக்களும் என்னையே சரீரமாக யுடையவைகள்; என்னையே பற்றுக்கோடாக வுடையவைகள். எனக்குச் சேஷங்கள் என்றால் பிரவிர்த்திப்பிக்கத் தக்கவைகளென்று பொருள். எவர்கள் என்னுடைய இந்த மதத்தை அனுஷ்டிக்கவில்லையோ, அதாவது, இவ்வாறு அனுசந்தானஞ் செய்துகொண்டு எல்லாக் கர்மங்களையும் செய்யவில்லையோ, எவர்கள் விஸ்வாசஞ்

செய்யவில்லையோ, எவர்கள் பொறாமை கொண்டவர்களாக இருக்கின்றார்களோ அவர்கள் எல்லா ஞானங்களிலும் மிகவும் மூடர்களாகவும், அதினாலேயே நாச மடைந்தவர்களாகவும், மனதில்லாதவர்களாகவு மிருக்கிறார்களென் றறியக்கடவாய்! அர்ச்சுனா! மனதின் காரிய மென்னவென்றால், வஸ்துவின் உண்மையைப்பற்றிய நிச்சயத்தை யறிதல்; அது இல்லாமையினால் அவர்கள் மனதில்லாதவர்க ளாவர்; மேலும், விரோதமான ஞானத்தை யுடையவர்களு மாவர். இவர்கள் எல்லா விஷயங்களிலும் மூடர்கள் ] 32

"ஞானியுங்கூடத் தன் சம்பந்தமான பூர்வகரும சேஷத்திற்குத் தக்கபடி அனுகூலமாய்க் கருமத்தில் பிரவிர்த்திக்கின்றான். சமஸ்த பிராணிகளும் அவ்வவற்றின் ஜன்மாந்தர கரும சேஷத்தை யடைகின்றன. ஆகலின், கருமேந்திரிய நிக்கிரகத்தால் ஆகுங் காரியம் ஒன்றுமில்லை.

அந்த இந்திரியங்களின் சப்தாதி விஷயத்தில் இராகத் துவேஷாதிக ளிருக்கின்றனர். அந்த இராகத் துவேஷாதிகளின் சுவாதீனத்தை யடைதல் கூடாது. மேற்கூறிய ராகத் துவேஷாதிகள் ஆத்மஞானிக்குச் சத்துருக்களா யிருக்கின்றன.

[ஸ்ரீதர சுவாமிகள் அபிப்பிராயம்:—"இராகத் துவேஷாதிகளுக்குச் சுவாதீன மாகாம லிருக்கவேண்டுமானால், சாஸ்திரங்களை யறிந்து அனுஷ்டித்து ஈசுவர பஜனை செய்து வரவேண்டியது."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"பிரகிருதியைப் பார்க்கிலும் வேறான ஜீவாத்மாவின் ஸ்வரூபம் இவ்வகைத்து; இதுவே எல்லாக் காலத்திலும் அனுசந்திக்கத் தக்கது" என்று சாஸ்திரங்கள் கூறுகிற்கும். ஞான முள்ளவனும் தன்னுடையதாகிய பழைய வாசனைக்குத் தக்கபடி பிரகிருதியைச் சேர்ந்த விஷயங்களிலேயே பிரவிர்த்திக்கின்றான். ஏனெனில், அசேதனமான சரீரங்களோடு சேர்ந்த பிராணிகளின் அநாதிகாலமாக வுண்டான வாசனையே தொடர்கின்றது. இவ்வாறு வாசனையை அனுசரிக்கிற அந்தப் பிராணிகளை சாஸ்திரத்தினால் செய்யப்பட்ட இடையூறு என்ன செய்ய நேரிடும்? செவி முதலிய ஞானேந்திரியங்களின் விஷயங்களாகிய சப்தம் முதலியவைகளிலும், வாக்கு முதலிய கர்மேந்திரியங்களின் வார்த்தை சொல்வது முதலியவைகளிலும், பழைய வாசனையினா லுண்டாயதாகிய அதனை அனுபவித்துத் தீரவேண்டு மென்கிற விருப்பம் விட முடியாததாக விருக்கிறது. அதன் அனுபவ

மானது தடுக்கப்பட் டிருக்கும்பொழுது, துவேஷமும் நீக்க முடியாது. அவைகள், இவ்வாறு ஞான யோகத்திற்காக முயற்சி செய்துகொண் டிருக்கிறவனையும், அடக்கப்பட்ட எல்லா இந்திரியங்களையு முடையவனையு மிருக்கிற இவனைத் தன்னுடைய சுவாதீனஞ் செய்துகொண்டு, பலாத்காரஞ் செய்து, தங்கள் காரியங்களில் சேர்த்துவிடுகின்றன. அதனால் இவன், ஆத்மாவின் ஸ்வரூபத்தை அனுபவிப்பதில் ஆசை யில்லாதவனாய் நாச மடைந்தவ னாகிறான். ஞான யோகத்தைச் செய்யத் தொடங்குவதால் இராகத் துவேஷங்களுக்கு வசப்பட்டு நாசத்தை யடைய வேண்டாம். அந்த இராகத்துவேஷங்கள் இவனுக்கு வெல்ல முடியாத விரோதிக ளல்லவா? அஃதாவது இவைகள் ஞான யோகத்தின் பழக்கத்தைத் தடுத்துவிடுகின்றன.”]

[ஸ்ரீ மாத்துவாசார்யரின் அபிப்பிராயம்:—“கருமவாசனையால் இழுக் கப் படுகிறவனுக்கு இந்திரிய நிக்கிரகத்தினால் பிரயோஜன மில்லையென்று முன்னரே சொல்லப்பட்டது. காமக் குரோதங்களுக்குச் சுவாதீனமாகக் கூடாதென்று இதில் சொல்லப் பட்டது. இதனால், கிரமக்கிரமமாய் இந்திரிய நிக்கிரகஞ் செய்துவந்தால் பிறகு காமக் குரோதங்களையும் அடக்கிக் காலாந்தரத்தில் பிரயோஜன மடைதல் கூடும்.”] 33-34

“அர்ச்சுனா! விதிப்படி அனுஷ்டிக்கப்பட்ட பிறரது தருமத்தைக் காட்டிலும், குணமில்லாத தனது தருமம் சிரேஷ்டமாகும். தனது தருமத்தி லிருந்துகொண்டு மரண மடைந்தாலும் சிரேஷ்டமே. இதர தருமங்கள் நரகத்தை விளைக்கும்; அவை பயங்கரமானவை.”

[ஆகையினால், சுலபமாய்ச் செய்யக்கூடியதாகையினாலும், தன்னுடைய தருமமான கர்மயோகம் குணமற்றதா யிருந்தபோதிலும் தவறுதலில்லாமையை யுடையதாகையால், பிரகிருதியோடு சேர்ந்தவனுக்குச் செய்யமுடியாததாகையால், பிறருடைய தர்மமாயும் எல்லாக் குணங்களும் நிறைந்ததாயும், சிறிது கால மனுஷ்டிக்கப்பட்டும் தவறுதல் நேரிடக் கூடியதுமான ஞானயோகத்தைக் காட்டிலும் மிகவுஞ் சிறந்தது. தன்னாலேயே அனுஷ்டிக்கக் கூடியதாக விருக்கிறபடியினால், தன்னுடைய தர்மமான கர்மயோகத்தி லிருப்பவனுக்கு ஒரே ஜன்மத்தில் பலத்தை யடையாமல் மரணத்தை அடைவதும் மேலானது. ஏனெனில், தடையினால் கெடுக்கப்படாம லிருக்கிறபடியினால், மறு ஜன்மத்திலாவது குறைவில்லாமல் கர்மயோகத்தின் தொடக்கம் சம்பவிக்கக்கூடும்.]

[கருத்து:—அவரவர்க்கு எந்த (கருமம்) தருமம் சாஸ்திரத்தில் ஏற்பட்டனவோ அதை அநுஷ்டிப்பது முறையாகும். அவ்வாறன்றி, 'பிறருடைய தருமம் சிறந்தது' என்று நினைத்து அதை அநுஷ்டிக்கிறவன் நரகத்தை யடைவான்.] 35

அர்ச்சுனன் வாக்கியம்

"ஓ! சுவாமி! புருஷன் (பாபஞ் செய்ய) எண்ணாதவனா யிருந்தும் எதனாற் பிரேரேபிக்கப்பட்டவனாகிப் பலாத்காரமாகப் பிரேரேபிக்கப்பட்டவன் போலவே பாவத்தைச் செய்கிறான்?"

[அதாவது, காமம், குரோதம், உலோபம், மோஹம், மதம், மாச்சரிய மாகிய இந்த ஆறில் முக்கியமானவை காமக்குரோதங்கள். இந்த இரண்டினுடைய சுவாதீனத்தை யடைதல் கூடாதென்று முன்னரே கூறப்பட்டுள்ளது. அவ்வகை இரண்டில் எது பாபத்தி லேவுவது என்று அர்ச்சுனன் கேள்வியாம்.] 36

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனா! நீ கேட்ட காரணம் இரஜோ குணத்தா லுண்டான ஆசையே; இந்த ஆசை கோபத்தை விளைவிக்கிறது; அநுபவிக்கத் தக்க அநேக வஸ்துக்களுக் கேதுவாகின்றது; மகத்தான பாபங்களுக்குக் காரணமாகின்றது; காமம், குரோதம் இவை யிரண்டும் மோக்ஷ மார்க்கத்திற்கு சத்துருவென்று அறி." 37

"அர்ச்சுனா! சுவயம் பிரகாசமுள்ள அக்கினியானது புகையினால் மறைக்கப்படுவது போல், ஈசுவரன் ஜீவனுக்குக் காமத்தில் தெரியவொண்ணாதபடி மறைந்திருக்கின்றான்; அதனால், ஈசுவரன் ஜீவனால் அறியப்படாதவனா யிருக்கிறான். கண்ணாடியானது மலினத்தினால் தன்னுடைய பிரகாசத்தைப் பிறருக்குக் காண்பிக்காதபடி மறைக்கப்பட் டிருக்கின்றது. அந்தக் கரணமானது காமத்தினால் மூடப்பட்டிருக்கிறது. எங்ஙன மெனின், அந்தக்கரணம் காமத்தினால் மூடப்பட்டதாய்க் கொண்டு ஈசுவரனை அடைய வொட்டாமற் செய்கிறது. சிசுவானது கருப்பையில் கட்டுண்டிருக்கும்பொழுது அதனால் ஒரு காரியமும் செய்வதற்கு ஆற்ற லில்லாம லிருக்கின்றது; அவ்வாறு, ஆசையினால் கவரப்பட்ட ஜீவன் பிரமத்தையாவது, ஞானத்தையாவது அடைவதற்குச் சக்தியற்றவனாகிறான்."

[கிருஷ்ணா! அப் பண்டிதர்களை யல்லவா ஆசை அதிகம் பீடிக்கும்? எனக்கென்ன பயம்?] 38

"அர்ச்சுனா! காமமென்னும் இந்தப் பெரிய பகைவன் பரோக்ஷ ஞானத்தைச் சம்பூர்ணமாய்த் துவம்சம் செய்யும்; நெருப்பானது பண்டங்களை நாசஞ் செய்வது போன்று நாசஞ் செய்யும். ஞானத்தைச் ஸ்வபாவமாக வுடைய இந்தப் பிராணியின் ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றிய ஞானமானது, காமமென்கிற பெயரை யுடையதாயும், விஷயங்களில் மோகத்தை யுண்டாக்குவதாயும், அடைய முடியாத விஷயங்களைப் பற்றியதாயும், போதுமென்ப தில்லாததாயு மிருக்கிற நித்தியமான சத்துருவினால் மறைக்கப்பட் டிருக்கிறது."

["கிருஷ்ணா! ஆசை இவ்வளவு வேலை செய்யுமா? அது சத்துருவா? செய்யக்கூடாத காரியத்தைக் கூட அது செய்விக்குமா? அவ்வாறாயின், அது இருக்குமிடம், அது வரும் வழி ஆகிய இவற்றைத் தெரிவிக்கக் கோருகிறேன்."] 39

இந்தக் காமம் மனோபுத்திகளால் ஞானத்தையும் மறைத்துப் புருஷனையும் மோகிக்கச் செய்கின்றது.

"அர்ச்சுனா! ஆதலின், நீ இந்திரிய நிக்கிரகத்தை முதலிற் செய்து, ஞான விக்ஞானங்களை அழிக்கின்ற இந்தக் காமத்தைப் பாவியென் றுணர்ந்து நீங்கி யிருப்பாயாக."

"அர்ச்சுனா! இந்திரியங்கள், மனம் புத்தி ஆகிய இவை காமம் உள் வருவதற்கு வழிகளாம்; இவைகளே அதற்கு இருப்பிடம். காமம் இந்திரியங்களின் வழியாய் உட்பிரவேசிக்கும். எந்த வஸ்துவை யாயினும் பார்த்துக் கேளாத முன்பு ஆசை யுண்டாகாதன்றோ? இந்திரிய மனோபுத்திகள் வேலை செய்து ஆத்மாவை மோசப்படுத்தும். ஆகையால், இந்திரிய மனோபுத்திகளை உனது சுவாதீனத்தில் வைத்துக்கொள்.

கள்வன் வீட்டினுள் பிரவேசித்துத் திருடுவதற்கு முன்னரே வீட்டினுள்ளார் ஜாக்கிரதையா யிருக்க வேண்டும்; அவ்வாறே காமம் பிரவேசித்துப் பாதிக்கு முன்னரே யத்தனஞ் செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாவிட்டால், இது பரோக்ஷ ஞானத்தையும் அபரோக்ஷ ஞானத்தையும் நாசஞ் செய்யும். மனித ஜன்மம் துர்லபமானது; அஸாஸ்வதமானது. 'எல்லாவற்றிற்கும் பகவான் ஒருவனிருக்கின்றான்' என்று எண்ணுதல் சாமான்ய ஞானம். 'பகவான் எவ்விடத்தி லுளன்? அவன் செய்யுங் காரியங்கள் எப்படிப்பட்

டைவ?' இவ்வகை விஷயங்களை ஆராய்தல் விசேஷ ஞானம். காமம் இந்த இரண்டு ஞானங்களையும் போக்கும். இது பாபி எனின் இத னுடன் சகவாசஞ் செய்தவனையுங்கூட இது பாபியாக்கும்; ஆகை யால், நீ இதை நசிக்கச்செய். மேலும், ஞானத்திற்கு விரோதஞ் செய்வதில் இந்திரியங்களை முக்கியமானவைகளாகச் சொல்லுவ துண்டு.] 40-41

"இந்திரியங்கள் தேகத்தைக் காட்டிலும் மேலானது: மனது இந்திரியங்களைக் காட்டிலுஞ் சிறந்தது; இந்திரியங்கள் ஓய்ந்திருக் கும்பொழுதும், மனது விஷயத்திலாசைப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுதும் ஆத்மஞான முண்டாவதில்லை. மனதைவிடப் புத்தி மேலானது. ஆத்மா புத்தியைக் காட்டிலும் சிறந்தது."

[மனது வேறு வியாபாரங்களிலிருந்து திரும்பியிருக்கும் பொழுதும், விபரீதமான நிச்சயம் பிரவிர்த்தித்துக் கொண்டிருந் தால், ஞான முண்டாவதில்லை. புத்தி வரையில் கீழ்ச் சொல்லிய தெல்லாம் ஓய்ந்துபோனாலும் ஆசை யென்கிற பெயரையுடைய இராஜோகுணத்தின லுண்டான காம மிருந்ததேயானல், அதுவே இந்த இந்திரியம் முதலியவைகளையும் தன்னுடைய விஷயத்திலேயே இருக்கும்படி செய்து ஆத்ம ஞானத்தை யடையவொட்டாமற்படி தடுத்து விடுகிறது. 42

"ஓ மஹாபாஹோ! இவ்விதமாய்ப் புத்தியைக் காட்டிலும் சிரேஷ்டமான ஆன்மாவை நன்றாக உணர்ந்துகொண்டு, நிச்சய புத்தியாலே மனதை நிறுத்தித், துக்கோற்பத்திக்குக் காரணமான காமமாகிய சத்துருவை நீ அழிப்பாயாக."

[விஷயேந்திரியங்களின லுண்டாகிற காமாதி விகாரங்கள் புத்தி வரையிலுள்ள தத்துவங்களைச் சேர்ந்தன; ஆத்மாவைப் பொருந்தினவல்ல என்பது பொருள்படும்.] 43

மூன்றாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

## நான்காவது அத்தியாயம்

# ஞான யோகம்

---

### அவதாரிகை

[மூன்றாவது அத்தியாயத்தில் பிரகிருதியுடன் சேர்ந்தவனையும் மோக்ஷத்தில் விருப்ப முள்ளவனையு மிருப்பவனுக்கு அது தருணம் ஞானயோகத்தில் அதிகார மில்லை யாகையினால் கர்ம யோகமே செய்யத் தகுந்தது என்றும், ஞான யோகத்தில் அதிகாரமுள்ளவனுக்கும் தான் கர்த்தாவல்ல னென்கிற அனுசந்தானத்துடன் செய்கிற கர்ம யோகமே மிகவுஞ் சிறந்த தென்றும் காரணத்துடன் சொல்லப்பட்டது. சிஷ்ட னென்னும் பிரசித்தனுக்கோ விசேஷமாகக் கர்ம யோகமே செய்யத்தக்கது. இப்போது, நான்காவது அத்தியாயத்தினால், இந்தக் கர்மயோகம் எல்லா லோகங்களையும் உஜ்ஜீவிக்கச் செய்ய வேண்டியதற்காக, மன்வந்தரத்தின் முதலிலேயே என்னால் உபதேசிக்கப் பட்டபடியினால், இதுவே செய்யத்தக்க தென்பதும், ஆத்ம ஞானத்தை யுள்ளடக்கிக்கொண் டிருக்கிறபடியால் இதுவே ஞான யோகமாகிற தென்பதும், கர்ம யோகத்தின் ஸ்வரூபமும் அதின் பிரிவுகளும், கர்ம யோகத்தில் ஞான பாகமே முக்கிய மென்பதும் சொல்லப்படுகின்றன.]

### ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

“நாசமற்ற பலனைக் கொடுக்கிறதற் கேதுவான இந்த லோகத்தை மநுவந்தரத்தின் ஆரம்பத்திலேயே எல்லா லோகங்களையும் சம்சாரத்தி லிருந்து கரை யேற்றுவதற்காகச் சிறந்த பிரயோஜனமாகிய மோக்ஷத்திற்குச் சாதனமாக விருக்கிற யோகத்தை நான் சூரியனுக்குச் சொன்னேன்; அந்தச் சூரியன் தன் புத்திரனாகிய வைவசுவத மநுவுக்கும் மநுவானவர் இக்ஷ்வாகுவுக்கும் சொன்னார்.” 1

“ஏ பலவானான அர்ச்சுனா! சம்பிரதாய வரிசையால் வந்த இந்த யோகம் முன்னிருந்த சிரேஷ்டமான இராஜரிஷிகளால் அறிந்த விஷயமே யாம். அது வெகு காலமாக அந்தக் காலத்தி லிருக்கும் கேட்பவர்களின் புத்திக் குறைவினால் நஷ்டமடைந் திருக்கிறது.” 2

"ஆகையால், நீ யுத்தஞ் செய்யவேண்டியதி னிமித்தம் இந்தக் கரும யோகத்தை உனக்குச் சொன்னதாக நினைக்கவேண்டாம். அந்தப் புராதன யோகமே ஸ்வரூபம் மாறுமல் அளவில்லாத பக்தியினுலும் சிநேகத்தினுலும் என்னையே சரணமாக அடைந்த உனக்கு என்னுல் சொல்லப்பட்டது. வேதாந்தங்களில் சொல்லப்பட்ட இந்த ஞானம் உயர்ந்ததும் மறைவாகவு முள்ளது; அஃது என்னைத் தவிர வேறொருவராலு மறியவும் சொல்லவும் முடியாது. இந்த யோகம் இப்பொழுது அநுக்கிரக ரூபமாக என்னுல் உனக்கு உபதேசிக்கப் பட்டது. இது உத்தமமான ரகசியம்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—'அர்ச்சுனன் ஸ்ரீ கிருஷ்ண சுவாமியைப் பரப்பிரம்மமென் றறிந்திருந்த போதிலும், இவர் பிரம்மமென்பதைத் தெரியச்செய்யும் பொருட்டு இந்த வினு கேட்டதாகத் தாத்பரியம்."] 3

அர்ச்சுனன் வாக்கியம்

இவ்வித வசனங்களைக் கேட்ட அர்ச்சுனன் புன்னகைகொண்டு, "கிருஷ்ணு! உம்முடைய பிறவியானது இப்போது உண்டானது. சூரியனது பிறவி முந்தியது. அவ்வாறிருக்கத் தேவரீர் ஆதிகாலத்திற் கூறினீ ரென்பதை யான் எவ்வா றறியக்கூடும்?" 4

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"இருபத்தெட்டுச் சதுர் யுகங்களுக்கு முன்னரே உதித்த சூரியனுக்கு இப்போது சிறிது காலத்திற்கு முந்திப் பிறந்த நீர் எவ்வாறு சொல்லி யிருக்கக்கூடு மென்பது கருத்து."]

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனு! எனக்கும் உனக்கும் இதுவரை அநேக ஜன்மங்கள் சென்று போயின; அவை யெல்லாவற்றையும் நான் அறிவேன்; நீ அறியமாட்டாய்."

['உனக்கு மெனக்கும் அநேக ஜன்மங்களாயின' என்று கூறினதால், இந்த ஜன்மங்க ளெல்லா முண்மையென்று தெரிய வருகிறது. மேலும், நித்திய, சுத்த, புத்த, முத்த சுவபாவ முடையவ னுனதாலும், என்னுடைய ஞானமானது எப்பொழுதும் எதனுலேயும் மறைக்கப்படத் தக்கதல்ல வாகையாலும் நான் அறிவேன்.] 5

"அர்ச்சுனு! நான் பிறப்பில்லாதவ னுயினும், நாசமில்லாத சுவபாவமுடையவ னுயினும், பிராணிகளுக்கு ஈஸ்வரனுயினும்,

சொர்தமான பிரகிருதியைச் சுவிகரித்துச் சொரூப சத்தியினாலே அவதாரஞ் செய்கிறேன்.''

[என்னுடைய சுவபாவத்தோடு கூடி என்னுடைய ஆத்ம ஞான மாகிற சங்கற்பத்தினாலே தேவ மனுஷ்யாதி ரூபங்களாய் அப் பிரா கிருத சரீரத்துடன் அவதரிக்கிறேன். அப் பிராகிருத மென்றால், உலகத்தில் காணப்படுகிறதைப்போல் லல்லாத உலக விலக்ஷணமானது.]

பகவதவதாரங்களில் முக்கியமான அவதாரங்கள் பத்து; அவையாவன:—

[முதலாயிரம்]

''தேவுடைய மீனமா யாமையா யேனமா
யரியாய்க் குறளாய்
மூவுருவி னிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய்
முடிப்பான் கோயில்
சேவலொடு பெடையன்னஞ் செங்கமல
மலரேறி யூசலாடிப்
பூவணைமேற் றுதைந்தெழுசெம் பொடியாடி
விளையாடும் புனலரங்கமே.'' 6

''ஓ! பாரத வம்சத்திற் பிறந்தவனே! எந்தெந்தக் காலங்களில் வருணாச்சிரம தருமத்திற்குக் கெடுதியும், அதருமத்திற்கு அபி விருத்தியு முண்டாகின்றதோ, அப்பொழுது என்னை நான் சிருஷ்டித் துக் கொள்ளுகின்றேன்.''

[அஃதாவது, என்னுடைய பிறப்பிற்குக் கால நியம மில்லை. எந்தெந்தத் தருணத்தில் வேதத்தில் சொல்லப்பட்டதாயும், நான்கு வருணங்கள் நான்கு ஆஸ்ரமங்கள் இவைகளின் ஏற்பாட்டை அனு சரித் திருக்கிறதாயும், அவசியம் செய்யவேண்டியதுமான தர்மத் திற்கு வாட்ட முண்டாகின்றதோ, எந்தச் சமயத்தில் அதற்கு விரோதமான அதர்மத்திற்கு விருத்தி யுண்டாகின்றதோ, அப் பொழுது நானே என்னுடைய சங்கற்பத்தினால் என்னைச் சிருட்டித் துக் கொள்ளுகின்றேன்.] 7

''ஏனெனில், சாதுக்களைக் காப்பாற்றுவதற்காகவும், பாபிகளை நாசஞ் செய்வதற்காகவும், தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவும், யுகங்கள் தோறும் யான் அவதாரஞ் செய்கின்றேன்.''

[சாதுக்களாவார், கீழ்ச் சொல்லிய அடையாளமுள்ள தர்மங் களைச் செய்வதையே சுவபாவமாக வுடையவர்களான வைஷ்ணவர்க

வில் சிறந்தவர்கள். என்னை ஆசிரயிப்பதில் பிரவிர்த்தித்தவர்களாய், என்னுடைய பெயர்-கர்மங்கள்-சுவரூபங்கள் இவைகள் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதபடியினால், என்னைப் பாராவிடில் தங்கள் ஆத்மாவைத் தரிப்பது விருத்தி செய்வது முதலியவற்றை யடையாதவர்களாய், ஒரு க்ஷணகாலத்தையும் ஆயிரம் கற்ப காலத்திற்குச் சரியாக நினைத்துக் கொண்டவர்களாய்ச் சிதறிப்போன எல்லா அவயவங்களையு முடையவர்களாய் விடுவார்கள். ஆகலின், என்னுடைய சொரூபம், சேஷ்டைகள், பார்வை, சம்பாஷணம் முதலியவைகளைக் கொடுப்பதனால், அவர்களைக் காப்பாற்றுவதற்காகவும், அவர்களுடைய விரோதிகளை நாசஞ் செய்வதற்காகவும், குறைந்துபோன வேதத்தில் சொல்லப்பட்ட என்னுடைய ஆராதனமான தர்மத்திற்கு ஆராதிக்கப்படும் ரூபத்தைக் காட்டுவதனால், அதை நிலைநிறுத்துவதற்காகவும், தேவன் மனுஷ்யன் முதலிய ரூபத்தைக்கொண்டு யுகங்கள் தோறும் பிறக்கின்றேன்.]

"ஓ! அர்ச்சுனா! திவ்வியமான எனது அவதாரத்தையும் செய்கையையும் எவன் இவ்விதம் உண்மையா யறிகின்றானோ அவன் தேகத்தைவிட்டு மீண்டும் பிறப்பை யடைத லில்லை. அவன் என்னையே யடைகிறான்."

[ஸ்ரீ மாத்துவாசாரியார்:—இவ்வாறு என்னுடைய அவதார மகிமை, சரித்திர மகிமை இவைகளின் தத்துவத்தை யறிந்து, அதனால் முக்தி யடையத் தகுந்த ஜீவனெவனோ அத்தகைய ஜீவன் முக்தி யடையும் விஷயத்தை நிரூபித்துக் காட்ட இந்த 9-வது சுலோக முண்டானதாக அறியத்தக்கது.]

[கர்மங்களைக் காரணமாகவுடைய முக்குணங்களுக்கு ஆதாரமான பிரகிருதியில் சம்பந்தமாகிற பிறப்பு இல்லாதவனாயும், எல்லாவற்றிற்கும் ஈசுவரனா யிருத்தல், எல்லாவற்றையு முணர்ந்தவனா யிருத்தல், சத்திய சங்கற்பனா யிருத்தல் முதலிய எல்லாக் கல்யாண குணங்களையு முடைய சாதுக்களைக் காப்பாற்றுவதையும், என்னை அவர்கள் ஆசிரயிப்பதையும் முக்கியமான பிரயோஜனமாக வுடையதாயும், பிரகிருதி சம்பந்தம் அற்றதாயும், எனக்கே அஸாதாரணமாயு மிருக்கிற என்னுடைய அவதாரத்தையும், அதன் காரியத்தையும் உண்மையாக எவன் அறிகின்றானோ அவன், இது தருணமிருந்து கொண்டிருக்கும் தேகத்தை விட்டு மறு ஜன்மத்தை யடைகிறதில்லை; அதாவது, என்னையே யடைகின்றான். மேலும், என்னுடைய

திவ்வியமான அவதாரம், அதன் காரியம் இவைகளி னுண்மையையறி வதனலென்னை ஆஸ்ரயிப்பதற்குத் தடையான எல்லாப் பாபங்களை யும் போக்கடித்தவனுப், இந்த ஜன்மத்திலேயே சாஸ்திரங்களிற் கூறியவாறு என்னை ஆஸ்ரயித்து, என் ஒருவனிடத்திலேயே பிரீதி யுள்ளவனையும், என் ஒருவனிடத்திலேயே மனத்தைச் செலுத்தினவ னையும் என்னையே யடைகின்றான்.] 9

''ஓ! அர்ச்சுன! ஆசை, பயம், கோப மிவைகளற்ற மனத்தை யென்னிடத்தில் வைத்திருக்கின்றவரும், என்னையே உபாசித்துக் கொண் டிருக்கிறவரும் ஆகிய அநேகர் ஞானமாகிற தபசினலே பரிசுத்தர்களாய் என்னுடைய சாயுஜ்யத்தை அடைவார்கள்.''

[கருத்து:—இந்தச் சாயுஜ்யத்தைக் குறித்து விரிப்பின் வாதமே பெருகும். கம்பநாட்டாழ்வார் விராதன் வாயிலாக ''அன்ன மாய்'' என்னும் பாட்டா லிவ்விஷயத்தை இறைவனையே வின வினர். ஒன்றுலுணராது உள்ளபடியே உணர்த்துவோன் அவனே யாகலானும், சாயுஜ்யத்தை யறிந்து வந்து கூறுவோ ரின்மையாலும், பாஷ்யக்காரரெல்லாம் மாறுபட்டுத் தத்தம் மதத்தையே நாட்டினர்.]

ஸ்ரீமத் கம்பராமாயணம் - ஆரணிய காண்டம்
விராதன் வதைப் படலம்

''அன்னமா யருமறைக ளறைந்தாய்நீ யவை யுன்னை
முன்னமா ரோதுவித்தா ரெல்லாரு முடிந்தாரோ
பின்னமா யொன்றுதல் பிறிந்தேயோ பிறியாதோ
என்னமா மாயமிவை யேனமாய் மண்ணிடந்தாய்.'' 10

''அர்ச்சுன! எவரெவர்கள் எவ்வாறு எவ்வாறு என்னை யுபாசிக் கின்றனரோ அவரவர்களின் தேச, கால, நாம, ரூப குலங்களுக்குத் தக்கபடி அவரவர்களைக் காப்பேன். இவ்வாறு செய்தால் அனைவரும் என்னை அனுசரிப்பர்; அவர்களுக்கு அவர்களது விருப்பத்தை யனுசரித்து யானே பலன் கொடுக்கின்றேன்.'' 11

''அர்ச்சுன! இந்த லோகத்தில் கருமங்களின் பலனை அபேக்ஷிக் கிறவர்கள் இந்திராதி தேவதைகளை ஆராதிக்கின்றார்கள். ஏனென் றால், மனுஷ்ய லோகத்தில் கருமபலனனது விரைவிலுண்டாகிறது.''

''நான்கு வருணங்களும் என்னலே குணகருமங்களைப் பாகஞ் செய்வதாலே யுண்டு செய்யப்பட்டன. அதற்கு நான் கருத்தாவான

போதிலும், என்னைப் பற்றுத லற்றவனென்றும், உண்டு செய்தவ னல்லனென்றும் அறியக் கடவாய்." 13

"கருமங்களென்னைத் தொடுகிறதில்லை; கருமங்களின் பலத்தில் எனக்கு இச்சையு மில்லையென் றிவ்வகையாக என்னை புணர்ந்த ஞானி கருமங்களாற் கட்டுப்பட மாட்டான்."

[ஜீவன்போலப் பலாபேக்ஷையாலே நான் கருமங்களைச் செய் யாமையாற் கருமங்களாவது பலனாவது என்னைக் கட்டுத லில்லை. அந்தந்தப் பிராணியின் பிராசீன கருமத்தை யனுசரித்துச் சிருட் டித்தலாற் பல விசித்திர சிருட்டி செய்த பக்ஷபாத தோஷ மென்னை படைத லில்லை. இவ்வா றென்னை யறிந்தவனுக்கே பந்த மில்லாத பொழுது எனக்குப் பந்த மேது."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"அகங்காரமாவது பலாபேக்ஷையா வது பகவானுக் கில்லாமையால் கரும பலன் அவனைச் சார்த லில்லை. தானே பிரம மென்பதையும், ஒரு கருமத்திற்குந் தான் கருத்தா அல்ல னென்பதையு முணர்ந்து, அகங்கார மம கார ஆசை முதலிய இல்லாம லிருக்கின்றவனையுங் கருமங்கள் கட்டுப்படுத்த வில்லை."] 14

"இவ்வித மறிந்த முன்னோர்களான மோக்ஷ இச்சை யுள்ளவர் களினாலேயுங் கூடக் கருமஞ் செய்யப்பட்டது ஆகையினால், முன் னோர்களாலே செய்யப்பட்டதும், நீடித்து (நடந்து) வந்ததுமான கருமத்தையே நீ செய்."

[மோக்ஷத்தில் விருப்பத்தை யுடையவர்களான ஜனகாதிகளும் கர்மஞ் செய்தார்கள். ஆகலின், தொன்றுதொட்டு வந்த பெரியோர் களால் செய்யப்பட்டதும், நீடூழிகாலமாக வந்ததுமான கருமத் தையே நீ செய். கருமத்தை செய்து பலனை பகவானுக்கு அர்ப் பணஞ் செய்தால், அதனால் சித்த சுத்தியும் ஞானமு மடைந்து, ஞானத்தினால் மோக்ஷத்தைப் பெறலாம்.] 15

"அர்ச்சுனா! கர்மம் எப்படிப்பட்டது? அகர்மம் எத்தகையது? என்னு மிந்த விஷயத்திற் பண்டிதர்களுங்கூட மோகிக்கின்றார்கள். எதை யுணர்ந்து அல்லது அனுஷ்டித்துச் சம்சார பந்தமாகிய பாபத்தினின்றும் நீங்குவாயோ அந்தக் கருமாகருமங்களை யுனக்குச் சொல்லுகின்றேன்." 16

"கருமத்தினுடைய சொரூபமானது அறிந்து கொள்ளப்பட வேண்டியது; விகருமத்தினுடைய சொரூபமும் அறிந்து கொள்ளப்

படவேண்டியது. அகருமத்தின் சொரூபமு மறிந்து கொள்ளப்பட வேண்டியது; ஏனென்றால், கருமம், விகருமம், அகருமம் என்பன வற்றின சொரூபத்தி னுண்மை தெரிந்து கொள்வதற்குக் கடின மானது.''

''கர்மத்தில் கர்ம அபாவத்தை யெவ னறிகின்றானோ, கர்ம அபா வத்தில் கர்மத்தை எவன் தெரிந்து கொள்ளுகின்றானோ, மனிதர் களில் அவனே புத்திமான்; அவனே யோகி; அவனே யெல்லாக் கரு மங்களுஞ் செய்து முடித்தவன்.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—ஆத்மாவுக்குச் செய்வதும் செய்யாம லிருப்பதுமாகிய கருமா கருமங்க ளிரண்டு மில்லை யாதலால், தேகம் மனம் இந்திரியங்கள் இவைகளின் வியாபாரம் அல்லது செய்கை கருமமென்றும், தேகாதிகளா லெந்தெந்தச் செய்கை அல்லது வியாபாரம் செய்யப்படுவ தில்லையோ அந்தச் செய் யாமை அக் கருமமென்றுஞ் சொல்லப்படும். அவிவேகிகள் கருமா கருமங்களை ஆத்மாவிடத்தி லாரோபித்து அகங்கார மமகாரங்களினால், ''நான் செய்கின்றேன், நான் செய்யாம லிருக்கின்றேன்'' என்று வியவகரிக்கின்றார்கள். அதனால் ஆத்மா கருமஞ் செய்வதுபோல் காணப்பட்டாலும், கருமஞ் செய்வது தேகாதிக ளென்றும், ஆத்மா கருமஞ் செய்வதில்லை யென்றும் எவன் அறிகின்றானோ அவன், கருமத்தில் அகருமத் தைப் பார்க்கின்றான். அது எவ்வாறெனில், நதியில் ஓடத்தின் மூலமாக வேகமாய்ச் செல்பவனுக்கு அந்நதிக்கரை யோரத்தி லுள்ள மரங்கள் வேகமாய்ச் செல்வனபோல் புலப் படுகின்றன. வேகமாய்ப் போகிறதாகிய செய்கையற்ற மரங் களிற் செய்கையைப் பார்க்கின்றான்; அவ்வாறு தேகாதிகளில் செய்யுங் கருமத்தை ஆத்மா செய்வதாகப் பார்க்கின்றான். மரங்களிற் கரும மில்லாமைபோல ஆத்மாவிலுங் கரும மில்லை யென்று பார்க்கின்றவன் கருமத்தில் அகருமத்தைப் பார்க்கின் றான். செய்யாம லிருத்தல் அகங்காரத்தின் குணமா யிருக்க, அதைத் தான் செய்யவில்லை யென்று மூடன் வியவகரிக்கின் றான். எங்ஙன மெனின், 'நான் அதைச் செய்யாமையாலே சுகியா யிருக்கின்றேன்' என்கின்றான். அந்தச் செய்யாமை யாகிய அகருமத்தில் ''நான் அதைச் செய்யாமையாலே சுகியா யிருக்கின்றேன்'' என்னும் அகங்காரத்தின் கரும மிருக்கின் றமையாற் செய்யாமையிலுங்கூடக் கருமம் அடங்கி யிருக் கின்றதென்று விவேகி அறிகின்றான்.]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—நிவிர்த்தி கர்மத்தில் ஞானம் சேர்ந்திருக்கிறது. 2-வது அத்தியாயத்தில் 42-வது சுலோகத்தில் கூறியதுபோல, ஞானிக்கு மோக்ஷம் தவிர வேறு கோரிக்கை கிடையாது. பகவானை அறிந்துகொண்டவனன்றோ கர்மத்தைச் செய்பவன். ஆகையால், கர்மத்தில் ஞானமிருக்கிறது; ஞான முள்ளவன் கர்மத்தைச் செய்வன். ஆகையால், ஞானத்தில் கர்ம மிருக்கிறது. இவ்வாறு அறிபவன் புத்திமான்.]

கம்பநாட்டாழ்வாரும் பிரகலாதாழ்வான் வாயிலாக
இப் பாட்டால் இப்பொருளைப் பாடினர்.

உயுத்த காண்டம்-இரணியன் வதைப்படலம்

"கருமமுங் கருமத்தின் பயனுங் கண்ணிய
தருமுதற் றலைவனுந் தானுந் தானவ
னருமையும் பெருமையு மறிவ ரேலவ
ரிருமையென் றுரைசெயுங் கடனின் றேறுவார்." 18

"எவனுடைய சகல கருமங்களும் ஆசை, சங்கற்பம் என்பன அற்றிருக்குமோ, ஞானமாகிய அக்கினியா லெரிக்கப்பட்ட கருமத்தையுடைய அவனை, ஞானிகள் விவேகியாகச் சொல்லுகின்றார்கள். கருமத்தில் அபிமானம், பலனில் ஆசை யென்பனவற்றை விட்டு எப்பொழுதும் நித்திய திருப்தி யுள்ளவனும், ஒருவரையும் ஆசிரயிக்காமலு மிருக்கின்றவன், கருமத்திற் பிரவிர்த்தித் திருந்தபோதிலும் அவன் ஒரு கர்மத்தையுஞ் செய்யவே யில்லை." 19-20

ஆசையில்லாமலும், மனம் இந்திரியங்கள் என்பனவற்றை யடக்கியும், சகல சம்பாத்தியத்தை விட்டும், சரீரம் நிலைத்திருப்பதற்கான தருமத்தை மாத்திரம் செய்கின்றவன் பாபத்தை யடைதலில்லை." 21

"அர்ச்சுனா! இச்சை வைக்காமல் கிடைத்த லாபத்தினால் திருப்தி யடைந்தவனாகவும், சீதோஷ்ண சுக துக்காதிகளில் விருப்பு வெறுப்பற்றவனாகவும், ஆச்சரிய மில்லாதவனாகவும், ஆகாரங்கள் (அநிச்சையா பிராப்த நிவிர்த்திக்கு வேண்டியவை) கிடைப்பினும் கிட்டாவிடினும், உவப்பாவது துக்கமாவது இல்லாமல் சமமாயுமிருக்கிறவன் கருமங்களைச் செய்தபோதிலும் கரும பந்தத்தை யடைகிறதில்லை." 22

"அபிமானத்தை விட்டும், காமக் குரோதங்களைத் தவிர்த்தும், ஞானத்தாலே ஸ்திரமான மனமுடையவனும் பகவதாராதனார்த்தமாகவே செய்கின்றவனுது கருமம் பலனோடு நசிக்கும்." 23

"யாகத்தில் நெய் எதனு லெடுத்து அக்கினியில் விடப்படுகின்றதோ அந்த வஸ்துவும் பிரமமே. அன்ன முதலியனவும் பிரமமே. பிரமமாகிய அக்கினியில் யக்ஞ கர்த்தாவாகிய பிரமத்தினாலே செய்யப்படுகிற ஓமமும் பிரமமே. அந்தப் பிரமமாகிய யக்ஞ கருமத்தில் நிலையுள்ள மனத்தை யுடையவனாலே யடையப்படுவதும் பிரமமே."

"கிருஷ்ணா! அவ்வா றிருந்தால் கர்மஞ் செய்கையில் மந்திர தந்திர லோப முண்டாயின் என்ன கதி?"

"அர்ச்சுனா! பிரஹ்ம மென்கிற சாதனத்தால் பிரஹ்ம மென்னும் அவிஸ்ஸைப், பிரஹ்ம மென்னும் அக்கினியில், பிரஹ்ம ரூபனு கர்த்தத்தால் ஹோமஞ் செய்யப்படுகின்றது. பிரஹ்ம ரூபமான கருமத்தைத் தியானஞ் செய்வதால். அவ்வாறு தியானிப்பவனுக்கு பிரஹ்மமே பிராப்யமாம். (எல்லாம் பிரஹ்மமே யென்று கர்மஞ் செய்யின் தவறினும் தோஷமில்லை யென்பது கருத்து) மேலும், கருமமானது அதற்குச் சாதனமான சகல வஸ்துக்களும் பிரஹ்ம மென்கிற அனுசந்தானத்துடன் செய்யப் படுகிற படியால், ஞானகாரமாகிறது. இந்தக் கருமத்தினுல் பரப்பிரஹ்மத்தை ஆத்மாவாக வுடைத்தானவன் ஆத்ம ஸ்வரூபத்தை யடைகிறான்."

[கருத்து:—இந்த 24-வது சுலோகத்தின் அபிப்பிராயம் யாதோவெனின், எவன் உலகத்திற் காணு மொவ்வொரு வஸ்துவிலும் பிரமமே நிறைந்திருப்பதாக நினைத்துத் தான் செய்யும் ஒவ்வொரு காரியமும் பிரஹ்மமே என்று தெரிந்து கொள்ளுகின்றானோ, அவன் பிரஹ்ம மாவான்.]

"கிருஷ்ணா! கர்மத்தை ஒருவிதமாகவே செய்யவேண்டுமோ? அன்றி, தேச கால வர்ணாச்சிரமங்களுக்குத் தக்கபடி செய்ய வேண்டுமோ?"

[மேற்கூறிய விஷயத்திற்கு ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"தன்னாலேயே தன்னைப் பிரம்மமாகிற அக்கினியில் ஓமஞ் செய்கின்றார்கள். இதன் தாத்பரிய மென்னவென்றால், நெய்யானது தீயில் எவ்வாறு சேர்க்கப்படுகிறதோ, அவ்வாறு உபாதியுடைய ஆத்மாவை நிருபாதிகனான பரமாத்மாவி னிடத்தில் ஐக்கியஞ் செய்வது, அல்லது சேர்ப்ப தென்பதேயாம்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"தேவதையின் அர்ச்சனமாகிய யக்ஞத்தைச் சில கர்மயோகிகள் சேவிக்கின்றார்கள்; அதிலேயே நிஷ்டையைச் செய்கின்றார்கள்; பின்னுஞ் சிலர், பிரஹ்ம ரூபமான அக்கினியில் யக்ஞக்தை யக்ஞத்தினாலேயே ஓமஞ் செய்கின்றார்கள். இவ்விடத்தில் யக்ஞ மென்கிற பதங்கள் அவிசு, ஸ்ருக்கு முதலிய யக்ஞ சாதனங்களைச் சொல்லுகின்றன. "ப்ரஹ்மார்ப்பணம் பிரஹ்மஹவி" என்கிற நியாயத்தினால் யாகம் ஹோமம் இவைகளின் நிட்டையைச் செய்கிறார்களென்று கூறுவர். 'சுருக்' என்றால், யக்ஞத்தில் ஓமஞ் செய்ய வேண்டிய அன்னாதிகள் எதனா லெடுத்து ஓமஞ் செய்யப்படுகிறதோ அந்த மரத்தினாற் செய்யப்பட்டிருக்கிற பாத்திரம். சுருவம் என்றால், மேற் கூறியபடி ஓமஞ் செய்ய நெய் முதலியவற்றை யெடுக்கும் பாத்திரம். நாம் அன்னம் நெய் இவற்றால் ஓமஞ் செய்யும்போது பிலாச இலை உபயோகிப்பது போலேயாம்."]

யக்ஞத்திலுள்ள வஸ்து பிரம மென்பதற்குப் பிரமாணம்:

ஸ்ரீமத் கம்பராமாயணம் ஆரணிய காண்டம்,

[சரபங்கர் பிறப்பு நீங்கு படலம்]

"மதநல்யானையனையான் நிலம்வகிர்ந்த குறிவாய்
நதமுலாவு நளிநீர் வயினழுந்த நவைதீர்
அதவமாய் நறுநெயுண் டுலகிலன்பர் கருதிற்
றுதவுசே வடியினா லமலனுந் துதலுமே." 24

"அர்ச்சுனா! சில கருமயோகிகள் இந்திராதி தேவதைகளை யுத்தேசித்த யாகத்தையே செவ்வையாய்ச் செய்கின்றார்கள். சில ஞான யோகிகள் பிரஹ்மார்ப்பணமான யக்ஞத்தினாலேயே ஆத்மாவைப் பிரஹ்மமாகிற அக்கினியில் ஓமஞ் செய்கின்றார்கள்." 25

"சிலர் செவி முதலிய இந்திரியங்களை விஷயங்களிற் பிரவேசியாமல் அடக்குதலாகிய அக்கினியில் ஓமஞ் செய்கின்றார்கள். வேறு சிலர், சப்த முதலிய விஷயங்களை இந்திரியங்களாகிய அக்கினியில் ஓமஞ் செய்கின்றார்கள்." 26

"சிலர், ஞானேந்திரிய கருமேந்திரிய வியாபாரங்களையும் பிராண வாயு முதலிய பத்து வாயுக்களையுடைய வியாபாரங்களையும், ஞானத்தாற் பிரகாசிக்கின்ற பிரமஞான நிஷ்டையில் மனதை நிறுத்துதலாகிய யோகமென்கிற அக்கினியில் ஓமஞ் செய்கின்றார்கள்."

[பத்து வாயுக்களும் அவைகளின் செய்கையும்]

1. பிராணன்.—தேகத்தி லிருந்துகொண்டு ஞானேந்திரியங்கள் மூலமாய்ச் சில பாகம் போவதும் வருவதுமா யிருப்பது.

2. அபானன்:—அபானத்தின் வழியாய்ச் சில பாகம் போவதும் வருவதுமா யிருப்பது.

3. வியானன்:—தேகம் முழுவதும் சுற்றிக்கொண்டே யிருப்பது. இந்த வாயுதான் இரத்தத்தை தேகம் முழுவதும் பரவும்படிச் செய்வது.

4. உதானன்:—தேகத்திற்குள் நாபியிலிருந்து தலையுச்சி வரையில் போய் வருவதாக இருப்பது.

5. சமானன்:—ஆகாராதிகளை ஜீரணஞ் செய்வித்து, ஆகாரத்தின் சத்துக்களை அவை போய்ச் சேரவேண்டிய இடத்தில் சேர்த்து அசத்தை மலஜல ரூபமாய் வெளிப்படச் செய்தல்.

6. நாகன்:—வாந்தியை யுண்டுபண்ணுதல்.

7. கூர்மன்:—கண்களை மலரச்செய்தல்.

8. கிருகரன்:—தும்மலை யுண்டாக்குதல்.

9. தேவதத்தன்:—கொட்டாவியை யுண்டாக்குதல்.

10. தனஞ்சயன்:—தேகத்தில் பிராணனிருக்கையினும், பிராணன் நீங்கிய பிறகும் தேகத்தி லிருப்பது. 27

"சிலர், பொருள் ஈதலை யாகமாகச் செய்கின்றார்கள். சிலர், தவத்தை யாகமாகச் செய்கின்றார்கள். சிலர், யோகத்தை யாகமாகச் செய்கின்றார்கள். சிலர், வேதசாஸ்திரங்களைப் பாராயணஞ் செய்தல், அவற்றின் பொருளை விசாரஞ்செய்தல் இவற்றையே யாகமாகச் செய்கின்றார்கள், இவ்வித யாகங்களைச் செய்பவர்கள் கடினமான விரதத்தை யுடையவர்களா யிருக்கின்றார்கள்."

[யோகம் எனின் சேருதல். எங்கெங்கே சேர வேண்டுமோ அங்கங்கே சேருதல்; எனின், யாத்திரை செய்தல், யோக யக்ஞம். சிலர் ஸ்வாத்தியாயம் எனின், வேதாத்யயனம் செய்தல்: பொருள் தெரிந்து கொள்ளாமல் அத்யயனம் செய்யின் பிரயோஜன மில்லை. சிலர் ஞானயக்ஞமும் செய்வர் எனின், வேதார்த்த விசாரஞ்செய்வர். இவையெல்லாம் யத்தனத்தா லுண்டாகும்.] 28

"பிராணுயாமம் செய்பவர்களாகிய வேறு சிலர், ஆகார நியமத்துடன் அபானத்தில் பிராணவாயுவை ஹோமஞ் செய்கின்றனர். மற்றும் சிலர், பிராண வாயுவில் அபான வாயுவை ஹோமஞ் செய்கின்றனர். மற்றுஞ் சிலர், பூரக ரேசக கும்பக பிராணுயாமங்களில் பிராண அபான வாயுக்களின் கதியை லயமடையச் செய்வர்."

"கிருஷ்ணு! எல்லாவற்றிற்கும் பலம் ஒன்றுதானு?"

"அர்ச்சுனு! இவர்களெல்லோரும் யக்ஞத்தை யறிந்தவர்களாய், யக்ஞத்தால் லாபம் நசித்தவர்களாய், யக்ஞ சேஷமான அமிர்தத்தைப் புசித்து சாஸ்வதமான பிரமத்தை யடைகின்றனர்."

"கிருஷ்ணு! இந்தக் கர்மத்தில் எதுவும் செய்யாத பக்ஷத்தில் என்ன கதி?"

"அர்ச்சுனு! இஹபரங்களுக்கு அந்நியனுய் நசித்துப் போவன். இவ்வகைப்பட்ட யக்ஞம் செய்யாதவருக்குத் தர்மார்த்த காமங்களே இல்லை; இனி மோக்ஷம் எப்படி வரும்? மேலும், குரு மகாராஜன் வம்சத்தில் ஜன்மித்த நீ அவ்வாறு கெட்டுப் போகாதே!"

[குறிப்பு:—பூரகமென்றுல், மூக்கினுல் சுவாசத்தை உள்ளுக்கிழுப்பது. கும்பக மென்றுல், மூக்கினுல் உள்ளுக்கிழுத்த சுவாசத்தை யுள்ளேயே நிறுத்துவது. ரேசக மென்றுல், நிறுத்தப்பட்ட சுவாசத்தில் சொற்ப பாகம் வெளியில் விடுவது.] 29

"சிலர், மிதமான ஆகாரஞ் செய்து கொண்டு இந்திரியங்களுடைய வியாபாரங்களைத் தமக்கு வசமான இந்திரியங்களிலேயே ஓமஞ் செய்கின்ருர்கள். இவர்களெல்லோரும் யாகத்தை யறிந்தவர்கள். யாகத்தினுல் தங்கள் பாபங்களைப் போக்கடித்துக் கொண்டவர்கள்."

[மேற் கூறிய விஷயம் இல்லறத்தானைப்பற்றி நினைக்கில், இவ்வாகாரம் பொருந்தும்; யோகியைப்பற்றிக் கூறுமிடத்துப் பொருந்தாதாம். அன்ன பானுதிகளை நிரம்ப வுண்ணுது, அதாவது, முக்கால் வயிற்றை நிரம்பச் செய்து கொண்டு, கால் வயிற்றைக் காற்று சஞ்சரிக்கும்படி விடுதலால், வியாதிக் கிடமின்றி இரத்த விருத்தியாகித் தேகத்தில் வலிமை அதிக முண்டாம். இந்தப் பலம் கர்மத்தில் இச்சை நுகர்விக்கும். ஆகையால், யோகி தான் எவ்வளவு ஆகாரத்தை யுட்கொள்ள வேண்டுமோ அதனையே அனுசரித்தல் வேண்டும்.] 30

"நித்திய நைமித்திக முதலிய யக்ஞங்கள் செய்து மிச்சமாகிய அன்னத்தை யுண்பவர்கள் சாசுவதமான பிரமத்தை யடைவார்கள். ஓ! குரு வம்ச சிரேஷ்டா! யாகஞ் செய்யாதவனுக்கு இந்த லோகம் கிடையாது. வேறு புண்ணியலோகப் பிராப்தியு மில்லை."

"இப்படிப்பட்ட அநேக விதங்களான யாகங்கள் வேதத்தின் முகத்தில் விவரித்துச் சொல்லப்பட் டிருக்கின்றன; அவ்வெல்லா யாகங்களும் கருமத்தா லுண்டானவையாக அறி. இவ்வித மறிந்து கரும பந்தத்தினின்றும் விடப்படுவாய்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"யாக முதலிய கருமங்கள் ஆத்மாவைச் சேர்ந்ததல்ல, மனோவாக்குக் காயங்களின் செய்கை யென் றறிந்து ஆத்ம ஞான நிஷ்டையி லிருந்தால் கருமந் தொடாது'"]

[பஞ்சமா யக்ஞங்கள் முதலான நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்யாதவனுக்குப் பிரகிருதியில் சம்பந்தப்பட்ட இந்த லோகமே யில்லை; அதாவது, பிரகிருதியின் பரிணாமமான இந்த லோகத்தைச் சேர்ந்த தர்மம், அர்த்தம், காமம் என்கிற பெயரை யுடைய புருஷார்த்தமே சித்திக்கிற தில்லை. இதைவிட வேறுபட்ட மோக்ஷ மென்னும் பெயரையுடைய புருஷார்த்தம் எவ்விதம் கிடைக்கும்? உயர்ந்த புருஷார்த்தமாக மோக்ஷமே கீழே விவரித் துள்ளதால், அதைத் தவிர மற்றைய புருஷார்த்தம் இந்த லோகமே என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு அநேக விதங்களான யக்ஞங்கள் (அதாவது, கர்மயோகங்கள்) பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூபத்தின் வழியில் விவரித்துச் சொல்லப்பட் டிருக்கின்றன. அவை எல்லாவற்றையும் (அதாவது எல்லா யாகங்களையும்) நித்திய நைமித்திக கர்மங்களினா லுண்டானவைகளாகத் தெரிந்துகொள். இவ்வாறு அனுஷ்டித்து வந்தால் நீ மோக்ஷத்தை யடைவாய்: இவ்வா றுணர்ந்து கரும பந்தத்திலிருந்து விடுபடுவாய் என்று சொன்னதின் தாத்பரிய மென்னவென்றால்: யக்ஞம் முதலிய கருமங்கள் ஆத்மாவைச் சேர்ந்ததல்ல, மனோவாக்குக் காயங்களின் செய்கை யென் றறிந்து, ஆத்மஞான நிஷ்டையிலேயே யிருப்பாயாகில் கருமம் உன்னைத் தொடாதென்பதாம்.]

இவ்வாறு அநேக விதமான கர்ம யோகங்கள் ஆத்ம சொரூப நிச்சய மடைவதற்குக் காரணங்களா யிருக்கின்றன. மேற் கூறிய சகல கர்ம யோகங்களும் தினந்தோறும் அனுஷ்டிக்கிற நித்திய

நைமித்திக கர்மங்களா லுண்டாயினவென்று அறி; இவ்விதம் தெரிந்து அனுஷ்டித்து வந்தால் மோக்ஷ மடைவாய். 32

"சத்துருக்களை ஜயிக்கும் சுவபாவமுள்ள அர்ச்சுனா! திரவியத்தாற் செய்யக்கூடிய யாகத்தைப் பார்க்கிலும், ஞானமாகிய யாகஞ் சிறந்ததாம். ஓ! பார்த்தா! பகவ தர்ப்பணமாகச் செய்யப்படும் சகல கருமங்களும் பலன்களோடு ஞானத்திலே யடங்கி யிருக்கின்றன."

"ஓ! பாண்டவா! ஆத்ம தத்துவத்தை யுணர்ந்த பிரஹ்மஞானிகள் எந்தப் பிரஹ்ம ஞானத்தை உனக்கு உபதேசஞ் செய்வார்களோ, எந்த ஞானத்தை யடைந்து மறுபடியும் இவ்வித மோகத்தை அடையமாட்டாயோ, எந்த ஞானத்தாலே சகல பிராணிகளையும் அந்தர்யாமியான என்னிடத்திலே பார்ப்பாயோ, எதனாலே அதாவது, (எந்த ஞானத்தினாலே சகல பிராணிகளையும் உன்னிடத்திலும் அவ்வாறே என்னிடத்திலும் பார்ப்பாயோ அந்த ஞானத்தை) சாஷ்டாங்க நமஸ்காரத்தினாலேயும், செவ்வையாய்க் கேட்பதினாலேயும், குரு வணக்கத்தினாலேயும் அறிந்துகொள்." 33

[இதுவரையில் ஆத்ம விஷயத்தை உனக்கு நான் சொல்லி யிருக்கிறேன்; இப்போது நான் சொல்லி வந்த விதமாய் கருமயோகத்தை நீ அனுஷ்டித்து வந்தால், கரும யோகத்தினுடைய சித்தி உனக்குண்டாகும். அவ்வாறு கரும யோக சித்தி உனக்கு உண்டாகுங் காலத்தில், பெரியோர்களை யடைந்து சேவை செய்வாயாகில், அவர்களுனக்கு ஞானத்தை யுபதேசிப்பார்க ளென்பது கருத்து.]

[மேலும், எந்த ஞானத்தை யறிந்து மீண்டு மிவ்விதமாகத் தேகத்தையே ஆத்மாவென்று நினைக்கிறதும், அதனா லுண்டாக்கப்பட்ட மற்றைய வஸ்துக்கள் என்னுடையதென்று நினைக்கிறதுமாகிய அஞ்ஞானத்தை யடையப்போகிறா யில்லையோ, எந்த ஞானத்தினால் தேவன் மனிதன் முதலிய ஆகாரத்தை யுடையதாக அறியப்பட்ட எல்லாப் பிராணிகளையும் உன்னுடைய ஆத்மாவினிடத்திலேயே பார்க்கப் போகின்றாயோ, எந்தக் காரணத்தினால் பிரகிருதியை விட்டு நீங்கிய நீயும் மற்றப் பிராணிகளும் ஞான மொன்றையே சொரூபமாக உடையவைக ளாகையினால் சமானமானவைகளோ, பிரகிருதியின் சம்பந்தமாகிய தோஷத்தினால் விடப்பட்ட ஆத்மாக்களின் ஸ்வரூபம் எல்லாஞ் சமமென்று குற்றமற்ற பிரஹ்மமானது சர்வத்திலும் சமமானதல்லவா? ஆகையினாலே, பிரஹ்மத்தினிடத்தில் அவர்கள்

நிஷ்டையை யடைந்திருக்கிறார்கள். பிறகு என்னிடத்தில் எல்லாப் பிராணிகளையும் முழுமையும் பார்க்கப் போகிறாய். பரிசுத்தமான எல்லா ஆத்ம வஸ்துவும் என்னுடைய சொரூபத்திற்குச் சமமா யிருக்கிறபடியினால், இந்த ஞானோபாயத்தை யனுஷ்டித்து என்னுடைய நிஜரூபத்தை அடைந்தவர்களென் றல்லவோ இனிச் சொல்லப் போகிறேன். பெயர், ரூபம் இவைகளினால் விடப்பட்ட எல்லா ஆத்ம வஸ்துக்களு மொன்றுக்கொன்று சமானமானவைகள், பரமாத்மாவுடனும் ஒப்பிட்டவர்களே யாம்.] 34-35

"பாவிகளில் நீ மகா பாவியா யிருப்பினும் உனது சமஸ்த பாவங்களையும் இந்த ஞானமாகிய தெப்பத்தாற் கடக்க வல்லவனாவாய்."

"அர்ச்சுனா! நன்றாய் ஜொலிக்கு மக்கினி எவ்வண்ணங் காஷ்டங்களை பஸ்ம மாக்குகின்றதோ, அவ்வண்ணமே ஞானமாகிய அக்கினி சகல கருமங்களையும் சாம்பராக்கும்." 36-37

"இந்த உலகத்தில் ஞானத்தோடு சமானமாய்ப் பரிசுத்தமானது வேறொன்றில்லை; கரும யோக சித்தியை யடைந்தவன் வெகு காலத்திற்குப் பின்பு தன்னிடத்தில் அந்த ஞானத்தைத் தானாகவே அடைகிறான்." 38

"குரு உபதேசத்தில் நம்பிக்கை யுள்ளவனும், ஞான மடைதலிலே முயற்சி யுள்ளவனும், இந்திரியங்களை அடக்கினவனுமிருக்கின்றவன் ஞானத்தை யடைகிறான். அவ்வாறு ஞானத்தை யடைந்து அதி சீக்கிரத்தில் சிறந்த சித்தி சுதந்தியு மடைகின்றான்." 39

"குரு உபதேசத்தைத் தெரிந்து கொள்ளாதவனும், அதில் நம்பிக்கை யில்லாதவனும், (குரு உபதேசித்த விஷயத்தில்) 'பல னுண்டாகுமோ மாட்டாதோ?' என்னும் ஐயமுடையவனும் கேடடைவான். ஐய முடையவனுக்கு இந்த லோகப் பிரயோஜனமு மில்லை; பரலோகப் பிரயோஜனமு மில்லை; சுகமு மில்லை." 40

"தனஞ்சய! பலாபேக்ஷையை விட்டுப் பகவதர்ப்பண புத்தியோடு செய்கின்ற கரும யோகியாயும், ஞானத்தாலே சகல ஸம்சயங்களையும் போக்கிக் கொண்டவனாயும், பிரம நிஷ்டனாயு மிருப்பவனைக் கருமங்கள் பந்தஞ் செய்யமாட்டா." 41

"பாரத! ஆதலால், உனது புத்தியி லிருக்கின்றதும் அஞ்ஞானத்தா லுண்டானதுமான இந்தச் சந்தேகத்தை ஞானமாகிய வாளாலே வெட்டி யெறிந்து கரும யோகத்தை அனுஷ்டானஞ் செய். இனி யுத்தஞ் செய்ய எழுந்திரு." 42

நான்காவது அத்தியாயம்
முற்றுப்பெற்றது.

---

# ஐந்தாவது அத்தியாயம்

# கர்ம சந்நியாச யோகம்

---

### அர்ச்சுனன் வாக்கியம்

"ஓ! கிருஷ்ணா! கருமங்களை விட்டுவிடும்படியும், மீண்டும் கரும யோகத்தை அனுசரிக்கும்படியும் கூறுகின்றீர்; இவ்விரண்டில் எது சிறப்புடையதோ அதையொன்றையே எனக்கு அருள்வீராக."

[இவ்விரண்டையும் ஏககாலத்தில் ஒரு மனிதன் அனுஷ்டிக்கிறது சாத்தியமல்லவாகையால், இவற்றில் சிரேஷ்டமான ஒன்றைச் சொல்வது விசேடம். அஃதன்றி, ஞான யோகத்தையும் மீண்டும் கரும யோகத்தையும் சொல்லுகிறாய். இதனால் கூறப்பட்டதாவது, இரண்டாவது அத்தியாயத்தில் மோக்ஷத்தி லாசை யுள்ளவனுக்கு முதலில் கர்ம யோகமே செய்யத்தக்கது; கர்ம யோகத்தினால் மனதின் மலங்களைப் போக்கடிக்கிறவனுக்கு ஞான யோகத்தினால் ஆத்ம சாக்ஷாத்காரஞ் செய்யத் தக்கது என்று நிரூபித்து, மறுபடியும், மூன்றாவது நான்காவது அத்தியாயங்களில் ஞான யோகத்தில் அதிகாரமுள்ள நிலைமை யடைந்தவனுக்கும் கர்மயோகமே சிறந்தது; அதுவே ஞான யோகத்தை அபேக்ஷிக்கலாம். ஆத்மாவை யடைவதற்குச் சாதனமாகிற தென்று கர்ம நிஷ்டையை ஸ்தோத்திரஞ் செய்கிறாய்; இந்தக் கர்மயோக ஞான யோகங்களுக்குள், ஆத்மாவை யடைவதற்குச் சாதனமாக இருப்பதில் யாதொன்றும் இலேசாகச் செய்யக்கூடிய தாகையினும், சீக்கிரமாகப் பலன் கொடுக்கிறபடியினாலும், சிறந்ததெதுவென்று நன்றாக நிர்ணயஞ் செய்யப்பட்டதோ அதை எனக்கு விளக்குவீராக.] 1

### ஸ்ரீ கிருஷ்ணபகவான் வாக்கியம்

"கருமத்தை விடுதலும், பகவத் பிரீதியாய்க் கருமஞ் செய்தலுமாகிய இவ்விரண்டும் மோக்ஷத்தைப் பரிபாலிக்கத் தக்கவை. அவைகளில் கருமத்தை விடுவதைக் காட்டிலும் பலத்தில் இச்சை வையாது ஈசுவரார்ப்பண புத்தியாய்ச் செய்யப்படும் கரும யோகம் சிறந்ததாம்."

[மேற் கூறியதைப்பற்றி ஸ்ரீமத் சங்கராச்சாரிய சுவாமிகளும், ஸ்ரீதர சுவாமிகளும் அபிப்பிராயப்படுவது யாதெனில்:—கரும யோகம் நேராய் முக்திக்குக் காரண மாகாவிட்டாலும் ஞானத்திற்குக் காரணமா யிருக்கிறது. ஏனெனில், அந்த ஞானமா

அது மோக்ஷத்திற்கு முகாந்தரமா யிருக்கிறது. ஞானி ஒருக் கால் விடக்கூடுமானாலும், அதிகாரி விஷயமாய்ப் பார்க்கையில் நின்னை யொத்தவன் கருமத்தை விடுதல் கூடாவாம்.] 2

"ஏ! மஹா பாஹோ! எவன் த்வேஷிக்கிற தில்லையோ, விரும்புகிற தில்லையோ, சுகதுக்க முதலியவை யற்றவனோ, அவன் நித்திய சந்நியாசியாக அறியத்தக்கவன். அவன் பிரயாசை யில்லாமல் கரும பந்தத்தினின்று விடப்படுவான்."

"கிருஷ்ணா! ஞானயோகத்தையும் கர்ம யோகத்தையும் செய்யென்கிறாய். இவ் விரண்டில் விரைவாய் ஆத்மப் பிராப்திக்குச் சாதனமான வொன்றை மிக வுண்மையாக எனக்குச் சொல்!"

"அர்ச்சுனா! மூன்றாவது அத்தியாயத்தில் முதலில் சந்தேகங் கொண்டனை; மறுபடியும் சந்தேகங் கொள்கின்றனை; ஞான யோகம் கர்மயோகம் ஆகிய இரண்டும் மோக்ஷ ஹேதுக்கள்; அவ் விரண்டில் கர்ம யோகமே மேலானது. இது விஷயம் இனிமேல் உனக்குக் கூறவேண்டி வரும். ஓ! மஹா பாஹோ! எவன் த்வேஷம் ஆசை யில்லாமல், த்வந்த்வ மில்லாமல் இருக்கின்றானோ அவனை நித்திய சந்நியாசி என்று தெரிந்துகொள்ள வேண்டும். அவன் எளிதாய்ச் சம்சார பந்தத்திலிருந்து விடுவிக்கப் படுகின்றான்." 3

"ஞான கரும யோகங்களுக்குப் பலன் வெவ்வேறென்று புத்தி யில்லாதவர்கள் கூறுவார்கள்; அறிவிற் சிறந்தோர் அவ்வாறு கூறுதல் கிடையாது. ஏனெனின், இரண்டி லொன்றையாவது செவ்வனே அனுஷ்டித்தவன் இரண்டினுடைய பலத்தை யடைகின்றான்."

["ஞானத்திற்குப் பலன் வேறு, கருமத்திற்குப் பலன் வேறு; ஆகையால், ஞானத்திற்குக் கருமம் சாதனமல்ல" என்று அறிவிலர் கூறுவார்கள். அறிவாளர் "ஞானத்திற்குக் கருமம் சாதனமாயும், முடிவில் மோக்ஷ பலனைத் தரத்தக்கதாயு முளது" என்று கூறுவார்கள்.]

[மேற் கூறிய விஷயத்திற்கு ஸ்ரீதர சுவாமிகள் அபிப்பிராயம்:— "கரும சந்நியாசம், கருமயோகம் இவைகளி லெது சிறந்ததென்கிற அர்ச்சுனனுடைய வினாவிற்குப் பதிலாய்ச் சாங்கிய யோகத்தையும், கருமயோகத்தையும் கூறவேண்டியது யாது காரணமோ வெனின், சாங்கிய மென்பது ஞானம்; ஞானமே கரும சந்நியாச மாகிறது; எவ்வாறெனின், ஞான நிஷ்டை யுள்ளவனுக்குக் கருமம் விலகிப் போகிறது. ஆகலின், சந்நி

யாசத்திற்குப் பிரதிபதமாக ஞானமாகிற சாங்கிய மென்கிற பதம் இதில் பிரயோகிக்கப்பட் டிருக்கிறது."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"ஞான யோகம் கர்ம யோகம் இவைகளின் பலன்கள் வெவ்வேருக இருப்பதனுல், வெவ்வே றென்று எவர்கள் சொல்லுகிருர்களோ அவர்கள் பாலர்கள்; அஃதாவது, அவர்கள் ஞானத்தை அனுசரித்தவர்க ளல்லர்; முழுது முணர்ந்தவர்க ளல்லர்; ஆனுல், கர்ம யோகம் ஞான யோகத்திற்குச் சாதனமாகின்றது; ஞான யோக மொன்றே ஆத்ம சாக்ஷாத்காரத்தை அடையும்படி செய்கிறது என்று பலன்கள் வேறுபட்டிருப்பதால், அவைகளும் வேறுபட் டிருக் கின்றன வென்று கூறுபவர்கள் வித்துவான்க ளல்ல ரென்பது நன்கு விளங்கும். ஆத்ம சாக்ஷாத்காரத்தையே பலமாக வுடையவர்க ளாகையினுல், ஒரே பலத்திற்குச் சாதனங்களாக இருக்கிற இவை இரண்டிற்குள் ஒன்றைச் செய்கிறவனும் அந்தப் பலத்தையே யடைகின்றுன்."]

[கருத்து:—'ஞான யோகமானது மோக்ஷத்திற் கேது' என்றும், 'கரும யோகமானது ஞானத்திற் கேது' என்றும், 'ஞான யோகமே சிறக்கப் பெற்றது' என்றும் முன்னரே சொல்லப் பட் டிருக்கிறது. இவ் விரண்டு மொன்றேயாம். இரண்டிற் கும் பலனென்றே என்று கூறியது எங்ஙனம் பொருந்து மெனின், ஞான நிஷ்டைக்குத் தக்கவனுக வில்லாமலும், கரும யோகத்திற்கு அதிகாரியாயு மிருக்கிறவனைப்பற்றி 'ஞான நிஷ்டையே சிறந்ததாம்; அதனையே நீ அப்பியாசஞ் செய்ய வேண்டியது' என்று சொல்லும் பக்ஷத்தில் ஞான நிஷ்டை புரிய சத்தியற்ற அவன் கருமத்திலும் முயற்சியற்று இரண்டிலு மொரே பிரயோஜனத்தை யடைவா னுகையால் கருமத்தை விசேஷித்ததாகக் கொள்ளல் வேண்டும்.] 4

"ஞான நிஷ்டர்களான சந்நியாசிகளாலே எந்த ஸ்தானம் அடை யப்படுமோ, அந்த ஸ்தானம் கரும யோகிகளாலும் அடையப்படும். சாங்கிய யோகத்தையுங் கரும யோகத்தையும் ஒரே பலனுடையன வென்று எவன் அறிகின்றுனே அவன் அறிந்தவன்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"கரும யோகம் சிரேஷ்டமென்று மேலே சொல்லி, இப்போது ஞான யோகம் கரும யோக மிரண்டும் ஒன்றென்றும் ஒரே பலனை யுடையனவென்றும் எவ் வாறு கூறலாமெனின், கரும யோகம் ஞானத்தை யுண்டாக்கி முடிவில் மோக்ஷத்தைக் கொடுக்கின்றது. ஞானமும் மோக்ஷத்தைத்தான் கொடுக்கின்றது. முடிவான பலன் இரண்டிற்கு மொன்றே யாதலால், இரண்டு மொன்றெனக்

கூறப்பட்டது. "ஞான யோகத்திலுங் கரும யோகம் ஒரு படி தாழ்ந்ததாக விருக்கக் கரும யோகஞ் சிரேஷ்டமென்று கூறலாமோ?" எனின், 'கரும சந்நியாசம் சிரேஷ்டமா? கருமம் சிரேஷ்டமா?' என்று நீ வினவியபடியாலும், இப்பொழுது நீ கருமாதி காரியா யிருப்பதாலும், 'உனக்குக் கருமஞ் சிரேஷ்டம்?' என்று சொன்னேனம். வாஸ்தவத்தில் ஞானயோகமே சிரேஷ்டம்."] 5

"ஓ! அர்ச்சுன! பரமார்த்த சந்நியாசம் கரும யோகி யல்லாதவனால் அடைவதற்குப் பிரயாசையா யிருக்கின்றது. கரும யோகத்துடன் கூடிய மனனசீலன் (தியானிக்கின்றவன்) பிரமத்தை விரைவாக அடைகின்றான்.

[அதாவது, ஞான யோகமானது கர்மயோகமில்லாமல் அடைய முடியாது. சொற்பமாகச் சுத்தமனத்துட னிருக்கிற கரும யோகியானவன் தன்னுடைய பிரகிருதி விமுக்த ஆத்ம சொரூபத்தைச் சீக்கிரமாக வடைகின்றான். ஞான யோகஞ் செய்கின்றவனோ அதிகக் கஷ்டத்தினால் ஞான யோகத்தைச் சாதிக்கிறபடியால் அவனுக்கு அதிக காலம் நீடித்துச் செல்லும். மேலும், காமக் குரோதாதிகளை விடுவதே சந்நியாசம். ஒருவன் காமக்குரோதாதிகளை விட்டதனால் பிரமத்தை யடையமாட்டான். காமக்குரோதாதிகளை நிவர்த்தித்து, நிஷ்காம கரும யோகம் புரிந்து வந்தால் விரைவாகப் பிரஹ்மத்தை அவன் அடைவான். ஆதலால், காமக் குரோதாதிகளை விடுதலாகிய சந்நியாசத்தைப் பார்க்கிலும் கரும யோகம் மேலானதென்று சொல்லப்படுகின்றது. 'காமக்குரோதாதிகள் விலகினதாலே சித்த சுத்தி முதலிய பலனுண்டாகுமே' எனின், 'அவை சொற்ப பலமாதலின் அது ஈண்டு உத்தேசிக்கப் படவில்லை.']

"கரும யோகத்தோடு கூடினவனும், பரிசுத்த மனத்தையுடையவனும், தேக சுவாதீன முள்ளவனும், இந்திரியங்களை யடக்கினவனும், சகல பிராணிகளுக்கும் சுவாமியா யிருப்பவன் தனக்குஞ் சுவாமியென்று கொண்டவனு மிருக்கின்றவன், அல்லது சகல பூதங்களிலுள்ள பரமாத்துமாவையும் தன் ஆத்துமாவையும் ஒன்றா யறிந்தவனு மிருக்கின்றவன் கருமங்களைச் செய்யினுங் கரும பந்தம் அவனைச் சார்கின்றதில்லை" 7

"கருமயோகி தத்துவத்தை யறிந்தவனாய்ப் பார்க்கின்றவன் கேட்கின்றவன், தொடுகின்றவன், முகர்கின்றவன், புசிக்கின்றவன்,

நடக்கின்றவன், தூங்குகின்றவன், மூச்சுவிடுகின்றவன், பேசுகின்றவன், (மல ஜலங்களை) விடுகின்றவன், எடுக்கின்றவன், கண்களை விழிக்கின்றவன், மூடுகின்றவனுமாக விருந்தபோதிலும், இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களில் பிரவிர்த்தித் திருக்கின்றன வென்று நிச்சயித்துக் கொண்டவனாக ஒரு காரியத்தையாவது நான் செய்யவில்லை யென் றறிகின்றான்.”

[இவ்வாறு ஆத்மாவின் நிச்சயத்தை யுணர்ந்தவன் செவி முதலிய ஞானேந்திரியங்களும், வாய் முதலான கர்மேந்திரியங்களும், பிராண வாயுக்களும், தங்கள் தங்கள் விஷயங்களி லிருக்கின்றன வென்று அநுசந்தித்துக்கொண்டு, 'நான் ஒன்றுஞ் செய்யவில்லை' என்று நினைத்தல் வேண்டும். ஞான மொன்றையே சுவபாவமாகவு முடைய எனக்குக் கர்மங்களிலிருந் துண்டான இந்திரியம் பிராணன் இவைகளின் சம்பந்தத்தினால், இவ்வகையான கர்த்திருத்துவ முண் டாக்கப்பட்டது. சொரூபத்தில் ஏற்பட்டதல்ல வென்று எண்ண வேண்டாம்.]

[கருத்து:—'ஞான மொன்றையே சுவபாவமாக வுடைய' என்பதற்கு, 'கர்மங்கள் பொய்யென்று அனுசந்தானஞ் செய்ய வேண்டும்' என்று இவ்விடத்தில் சிலர் பொருள் கூறுதல் நியாய மல்ல. அவ்வாருயின், இந்திரியங்கள் தங்கள் தங்கள் விஷயங்களி லிருக்கின்றன வென்று அனுசந்தானஞ் செய்ய வேண்டிய தில்லை. ஆதலின், முத்தியை யடைந்தவனுடைய அவனது பிரியத்தினுல் அமையப்பட்ட இந்திரியங்களை விலக்குவதற்காகவும், இந்திரிய முதலிய உபாதிகளும் மற்ருெரு உபாதியினு லுண்டாகிறதென்று தெரிவிப்பதற்காகவும் கர்மங்களினு லுண்டானதென்று சொல்லப்பட் டிருக்கிறது.] 8-9

“எவன் கருமங்களில் பரமாத்மாவின் அர்ப்பணைஞ்செய்து பலனில் ஆசையைவிட்டுச் செய்கின்றானோ, அவன் ‘ஜலத்தினால் நட்டுதலின்றிய தாமரை யிலையைப்போல’ இரு வினைகளால் தொடப்படுவதில்லை.”

“கிருஷ்ணு! இந்தக் கர்மங்கள் எவர்களால் நடக்குமென்று எண்ண வேண்டும்?”

“அர்ச்சுனு! பிரகிருதியின் மூன்று குணங்களால் ஏற்பட்டுச் செய்யப்படுகின்றன வென்று எண்ணவேண்டும். மேற் கூறியது போல் எண்ணிப் பலாசத்தி யில்லாமல் கர்மஞ் செய்தவனைத் தாமரை யிலை நீர்போலப் பாபங்கள் தீண்டா.” 10

"கருமயோகிகள் பலாபேக்ஷையை விட்டு மனது சுத்தமாவதற்காகத் தேகத்தாலும், மனத்தாலும், புத்தியாலும் அபிமான மற்றிருக்கின்ற இந்திரியங்களாலும் கருமத்தைச் செய்கிறார்கள்."

[ஸ்ரீதர சுவாமிகள் அபிப்பிராயம்:—"தேகத்தாற் செய்யப்பட்டவை நீராடல் முதலியவை; மனத்தாற் செய்யப்பட்டவை தியான முதலியவை; புத்தியினால் செய்யப்பட்டது தத்துவ நிச்சயம்; இந்திரியங்களினால் செய்யப் பட்டவை சிரவண கீர்த்தனாதிகள்.] 11

"ஆகையால், கருமயோகி (அதாவது, பலத்தி லாசை வைக்காத கருமி) கருமத்தில் பலாபேக்ஷையை நிவிர்த்தித்து ஆத்ம நிஷ்டையாலுண்டான மோக்ஷத்தை யடைகின்றான். ஆசையா லேவப்பட்டுப் பலனில் ஆசையையுடைய கரும யோகியானவன் பந்தத்தில் கட்டுப் படுகின்றான்."

[ஆத்மாவை நீங்கலாக மற்றைய பலன்களில் விருப்ப மில்லாதவனாய், ஆத்மா ஒன்றிலேயே ஆசை யுள்ளவனாய்க் கர்மங்களின் பலத்தை விட்டுக் கேவலம் ஆத்மசுத்தி அடைவதற்காகக் கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு, நிலையான ஆத்மாவை அனுபவிக்கிறதாகச் சுகத்தை யடைகின்றான். ஆத்மாவைத் தவிர மற்றைய பலன்களி லாசை யுள்ளவனாயும், ஆத்மாவைக் காண்பதில் ஆசை நீங்கினவனாயும், காமகாரத்தினால் பலன்களி லிச்சை யுள்ளவனாயும், கர்மங்களைச் செய்கிறவன் எப்பொழுதும் கர்மங்களினால் சம்பந்தப்பட்டிருக்கின்றான்; அதாவது, நித்திய சம்சாரி யாகின்றான். ஆகையால், பலன்களில் ஆசையைப் போக்கடித்தவனாய், இந்திரியங்களாக மாறியிருக்கும் பிரகிருதியினிடத்தில் கர்மங்களை வைத்துவிட்டு, ஆத்மாவின் பந்தத்தை விலக்குவதற்காகக் கர்மங்களைச் செய்ய வேண்டும்.] 12

"இந்திரியங்கள் மனது இவைகளைச் சுவாதீனமா யுடையவன் சகல கருமங்களையும் மனத்தாலே நிவிர்த்தித்து, ஒன்பது வாயில்களையுடைய பட்டினம்போ லிராநின்ற தேகத்தில் ஒன்றுஞ் செய்யாமலும், செய்விக்காமலும் ஆனந்தமா யிருக்கின்றான்."

தேகத்தைப் பட்டினமென்று கூறுவதற்குப் பிரமாணம்:

[முதலாயிரம் 2-வது நெய்க்குடத்தை]

"நெய்க்குடத்தைப் பற்றியேறு மெறும்புகள்போல் நிறைந்தெங்கும் கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் காலம்பெற வுய்யப்போமின்

மெய்க்கொண்டு வந்துபுகுந்து வேதப்பிரானர் கிடந்தார்
பைக்கொண்ட பாம்பணையோடும் பண்டன்று பட்டினங்காப்பே."

[குறிப்பு:—முகத்தில் எழு வாயில்களும், கீழே இரண்டு வாயில்களும் ஆக வொன்பது வாயில்கள் ஏற்பட்டிருக்கின்றன. சுருதி வாக்கியத்தில் நாபியையும் பிரம்ம ரந்திரத்தையும் சேர்த்துப் பதினொரு வாயில்களாகச் சொல்லப்பட் டிருக்கின்றன.] 13

"அர்ச்சுன! ஈசுவரன் ஜனங்களுக்குக் கர்த்திருத்துவத்தை யுண்டாக்குத லில்லை; கருமங்களை யுண்டாக்குதலில்லை; கரும பலனிற் பற்றுதலை யுண்டாக்குகிற தில்லை. மாயையானது பிரவிர்த்தித் திருக்கிறது."

[அதாவது, தேவ, மனுஷ்ய, பசு, பக்ஷி, தாவராதி ரூபமாகப் பிரகிருதியுடன் சேர்ந்திருக்கிற இந்த உலகத்திற்குத் தேவன் முதலியவர்களுக்குத் தனித்தனி கர்த்திருத்துவத்தையும், அவைகளுக்கு அஸாதாரணமான கர்மங்களையும், அந்தந்தக் கர்மங்களினு லுண்டாக்கப்படுகிற தேவனுக விருத்தல் முதலிய பலன்களின் சம்பந்தத்தையும், கர்மங்களுக்குக் கீழ்ப்படியாத இந்த ஜீவாத்மா, அதாவது சுவபாவத்தி லேற்பட்ட தன்னுடைய ரூபத்துட னிருக்கும் இந்த ஆத்மா உண்டாக்குகிறதில்லை. பிரகிருதி வாசனையாகிற அனுதிகாலமாய்த் தொடர்ந்து வந்த பூர்வ கருமங்களா லுண்டான தேவன் முதலிய ஆகாரங்களுடன் கூடிய பிரகிருதியின் சம்பந்தத்தினு லேற்பட்ட அந்தத் தேகமே ஆத்மா வென்கிற அபிமானத்தா லுண்டாக்கப்பட்ட வாசனையா லேற்பட்டது. இந்தக் கர்த்திருத்துவம் முதலியவைகளெல்லாம் ஸ்வரூபத்தி லேற்பட்ட தல்லவென்று எண்ணவேண்டும்.] 14

"அர்ச்சுன! ஈசுவரன் ஒருவனுடைய பாபத்தையும் கிரகித்த தில்லை; புண்ணியத்தையும் கிரகித்ததில்லை; அஞ்ஞானத்தாலே விவேகம் மூடப்பட் டிருக்கின்றது; அதனல் மனிதர்கள் மோகித் திருக்கின்றார்கள்."

[அதாவது, தன்னைச் சேர்ந்தவனுக நினைக்கப்பட்ட பிள்ளை முதலியவர்களின் துக்கத்தைப் போக்குகிறதில்லை; தனக்கு விரோதியாக நினைத்தவனது சுகத்தையும் நிவிர்த்திக்கிறதில்லை. குறிப்பிட்ட ஒரு தேகத்தி லிருக்கிறவ னல்லன்; அதாவது, எங்கும் வியாபித்தவன். 'இவ்வாறு சுவபாவமுள்ள ஜீவனுக்கு இந்த விபரீத வாசனை எவ்வாற்று லுண்டானது' எனின், ஞானத்திற்குப் பகையான முன்

செய்த கர்மத்தினால் தங்கள் தங்கள் பலன்களை அனுபவிக்க யோக்கியதை யுண்டாவதற்காக இவனுடைய ஞானமானது அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு ஞானத்திற்கு மறைவான கர்மத்தினால் தேவன் முதலிய தேகங்களோடு சம்பந்தமும், அந்தந்தத் தேகமே ஆத்மா வென்கிற அபிமானமுமாகிய மோகமு முண்டாகின்றது; அதனால், அப்படிப்பட்ட அபிமானத்தின் பூர்வ வாசனையும் அதற்குத் தகுந்த கர்மங்களின் வாசனையு முண்டாகின்றன. வாசனையினால் விபரீதமான ஆத்மாபிமானமும் கர்மங்களின் ஆரம்பமு முண்டாகின்றன.

மேற்கூறிப் போந்த விஷயத்திற்கு வேறொரு அபிப்பிராய முளது. அஃது யாதெனின், ஜீவனானவன் ஒரு துஷ்கருமத்தினுடைய பலனாகிய பாரத்தைச் சுதந்திரமாய்ப் பொருந்தவாவது, ஒரு சத்கருமத்தினுடைய பிரயோஜனமாகிய புண்ணியத்தைச் சுதந்தரமா யடையவாவது சக்தனல்ல. ஈசுவரனே அந்தக் கரும பலன்களைக் கொடுக்க ஆற்றலுடையவன். அன்றி, ஈசுவரனுக்குப் பாப கருமமாவது, புண்ணிய கருமமாவது ஒன்று மில்லாததினாலே அந்தக் கரும பலனும் அவனுக்கில்லை. 'பாப புண்ணிய பலன்களற்ற ஈசுவரன் ஒருவனாகில் ஏன் பார்வைக்குப் புலப்படுகிறதில்லை' என்றால் ஜீவனுடைய ஞானத்திற்கு அஞ்ஞானமான அந்தகாரத்தால் மறைவு ஏற்பட்டதால் ஈசுவரனை யறிவதற்குக் கூடாமையேயாம்.] 15

"அர்ச்சுனா! பிரம ஞானத்தாலே எவரது அந்த அஞ்ஞானமானது நசிக்கப்பட் டிருக்கின்றதோ அவர்களுக்கு ஞானம், சூரியன் போல பரப்பிரம சொரூபத்தைப் பிரகாசிக்கின்றது."

"கிருஷ்ணா! நீ சொன்ன பிறகு எனக்கு இந்தச் சங்கதிகள் தெரிய வந்தன; இவை முன்னரே யேன் தெரியவில்லை."

"அர்ச்சுனா! ஏன் நன்றாய் விளங்கவில்லை யென்றால், எனக்கும் உனக்கும் ஞான மிருக்கிறது. கூட்டில் தீபத்தை யிட்டு அதை ஒரு கூடையால் மூடின் எவ்வாறு இருள் உண்டாமோ, அவ்வாறு உன்னுடைய ஞானம் மறைந்திருக்கிறது. எனக்கு மாயா சம்பந்த மில்லாமையால் அனைத்தும் நன்றாய் விளங்குகின்றன."

"அவ்வாறானால், கிருஷ்ணா! அந்த விளக்குத் தெரிய நான் என்ன செய்ய வேண்டும்?"

"அர்ச்சுனா! ஞானமானது, அஞ்ஞானத்தைப் போக்கடித்துப் பரப்பிரமத்தைத் தெரிவிக்கும். அஃது எவ்வாறெனின்: மேகக்

ளால் மறைக்கப்பட்டிருந்து அவற்றால் விடப்பட்ட சூரியன், தான் அந்தக் காலத்தில் எங்ஙன மிருக்க வேண்டியதோ, அவ்விடத்திலே காணப்படுவன். மேகங்கள் நீங்க மீண்டும் உதய மாகா னன்றோ? அவ்வாறே, ஞானம் எப்போதும் இருக்கிறது; மாயை விலகினவுடன் பிரகாசிக்கும். அதாவது, எல்லா ஆத்மாக்களும் இவ்வாறு இருக்குங்கால் எந்த ஆத்மாக்களுக்குக் கீழ்க் கூறிய அடையாள முள்ளதாயும், ஆத்மாவின் நிஜத்தைப்பற்றிய உபதேசத்தினு லுண்டாக்கப்பட்டதாயும், ஆத்மாவைப் பொருந்தியதாயும், தினந்தோறும் பழக்கஞ் செய்வதினால் கீர்த்தியைப் பொருந்தினதாயும், மிகவும் பரிசுத்தமாயிருக்கிற ஞானத்தினால், அந்த ஞானத்திற்கு, மறைவாக அநாதி காலமாய்ப் பிரவிர்த்தித்திருக்கிற கருமக் கூட்டங்களாகிய அஞ்ஞானமானது எந்த ஞானத்தினாலே, அதாவது, ஆத்ம சொரூபவிஷய பரிபூர்ண ஞானத்தினாலே நசிக்கப்பட்டதோ அந்த அஞ்ஞானம் நீங்கினவர்களுடைய பரிபூர்ண மானதும் சுவபாவமானதுமாகிய அந்த ஞானமானது கதிரவனுடைய பிரகாசம்போல் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கும். எவர்களுடைய அஞ்ஞானம் நாசமடைந்ததோ, அவர்களுடைய என்கிற பன்மை வசமானது ஆத்மாக்களின் ஸ்வரூபம் அநேக மென்பதை விளக்கிக் காட்ட ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டது. அவித்தையினால் வெவ்வேறாகப் புலப்படுவதே யன்றி உண்மையி லொன்றுதானென்னும் பக்ஷம் சரியல்ல. ஏனெனின், அவித்தை நாசமடைந்த பிறகும், பல வென்கிற பொருள் இதில் கூறப்பட்டிருப்பதால், ஜீவன்கள் பல வென்பதும், ஜீவேசுவர பேத மென்பதும் ஏற்படுகிறது.'' 16

"நிச்சயமான பிரமஞானத்தை யுடையவர்களாயும், பிரஹ்மத்தினிடத்தில் நிலைத்த மனத்தை யுடையவர்களாயும், பிரஹ்ம நிஷ்டையுடையவர்களாயும், பிரஹ்மத்தையே ஆசிரியித்தவர்களாயும், ஞானத்தினாலே சகல பாபங்களையும் போக்கடித்துக் கொண்டவர்களாயு மிருக்கிறவர்கள் மீண்டும் சம்சாரத்திற்கு வராத ஸ்தானத்தை அடைகின்றார்கள்.''

[ஆகையால், நீ ஞானத்தைப் பெறுவாய். அவ்விடத்திலேயே புத்தியை வை; மனதையும் அவ்விடத்திலேயே வை; எவ்வாற்றானும் ஞானத்தையே அடையவேண்டு மென்று கோரியிரு; அதுவே யாஸ்ரய மென்று எண்ணு. இவ்வாறு செய்யின், ஞான முண்டாம்; பாபம் விலகும்; மோக்ஷம் லபிக்கும்; அதாவது, புனராவ்ருத்தி ரஹிதமான பிரகிருதி பந்தரஹித சுத்தாத்ம ஸ்வரூபம் லபிக்கும்.]

[கருத்து:—மேற் கூறிய விஷயத்தில், 'நிச்சயமான பிரம்ம ஞானத்தை யுடையவர்களாயும்' என்பதற்குத், 'தன்னுடைய ஆத்ம சுவரூப தரிசனத்தில் நிச்சயமான ஞான முள்ளவர்க ளாயும்' என்றும், 'பிரமத்தினிடத்தில்' என்பதற்கு, 'பிரஹ்மமே தன் ஆத்மாவாக வுடையவர்கள்' என்றும், என்றால், 'தானே பிரஹ்மமென்கிற நிச்சய முடையவர்கள்' என்றும், 'ஆத்ம சொரூப தரிசனத்தில் மனதைச் செலுத்துகிறவர்கள்' என்றும், 'தனக்குப் பரமாத்மாவே எஜமான னென்று எண்ணுகிறவர்கள்' என்றும், பலவாறாகப் பொருள் கொள்ளுகின்றனர்.] 17

"கல்வியும், வணக்கமு முள்ள பிராமணனிடத்திலும், பசுவி னிடத்திலும், யானையி னிடத்திலும், நாயி னிடத்திலும், நாயைச் சமையல் செய்து தின்கிறவனிடத்திலும், பிரம்மத்தைச் சமமாய்ப் பார்ப்பவர்கள் ஞானிக ளென்று சொல்லப் படுவார்கள்."

[அதாவது, கல்வியும் வணக்கமு நிறைந்த பிராம்மண னிடத்தி லும், மாடு, யானை, நாய், சண்டாளன் முதலிய ஒன்றுக்கொன்று மிகவும் வித்தியாசங்களுள்ள ஆகார முள்ளவைகளாகப் புலப்படுகிற ஆத்மாக்களுக்குள் ஆத்மாவி னுண்மையைத் தெரிந்தவர்கள் ஞான மொன்றையே சுபாவமாக இருத்தலினால், எல்லா விடத்திலும் சமமாகப் பார்க்கின்றார்கள். வித்தியாசமான ஆகாரமோ வெனின், பிரகிருதியி னுடையது; ஆத்மாவி னுடைய தல்ல. ஆத்மாவோ எல்லா விடத்திலும் ஞான மொன்றையே சுபாவமாக விருத்தலினால் சமமென்று காண்கின்றார்கள். இவ்வாறு நினைப்பதால் இந்தச் சன் மத்திலேயே மோக்ஷம் உண்டாகும். சூரியன் கங்கையிலும், கிணற்றி லும், மூத்திர ஜலத்திலும் காணப்படினும் அவனுக்குத் தோஷ மில்லை; அவ்வாறே எல்லாச் சரீரங்களினு மிருக்கும் ஆத்மாவிற்குப் பேத மில்லை. சூரியன் பிரதிபலிக்கின்ற இடமென்று மூத்திராதி களில் ஆசமனஞ் செய்யக்கூடாத வாறுபோல, அந்தந்த ஜன்மங்களுக் குத் தக்கபடி பூஜிக்கவேண்டும்; கர்மத்தைச் சாஸ்திரப் பிரகாரஞ் செய்யவேண்டும்; ஞானத்தால் சமமென்று எண்ணவேண்டும். கௌதம ஸ்மிருதியின்படி அவரவர்களின் யோக்கியதைக்குத் தக்க வாறு பூஜிக்க வேண்டுமென்று கூறினரே, அவ்வாறன்று: கௌதம ஸ்மிருதி சொன்னது பூஜை யெனின், அது கர்ம விஷயம்; இப் பொழுது உனக்குக் கூறியது சமத்வம்; ஞான விஷயமாம்.]

[கருத்து:—'உத்தம, மத்திம, நிகிர்ஷ்டப் பிராணிகளிடத்தில் சகல குண பரிபூர்ணரான - பரமாத்துமாவானவர் அந்தர்யாமியாய்ச்

சமமா யிருக்கிருரென் றுணர்ந்தவர்கள்' என்ருல், 'உத்தம மான வஸ்துவில் பரமாத்மா பூர்ணமாயும், நிகிர்ஷ்டமான வஸ்துவில் சொற்பமாயு மிருக்கிறதாக அஞ்ஞானிகள் நினைப்பார்கள். அறிவுடையோர் யாண்டும் பரம்பொருளானது சமமா யிருக்கிறதாகக் காண்கிருர்கள்.'] 18

"எவர்களது மனம் பிரமம் எல்லா வற்றிலும் சமமென்கிற விஷயத்தில் ஸ்திரமா யிருக்கின்றதோ, அவர்களாலே இந்தத் தேகத்தோ டிருக்கும் பொழுதே பிறப்பு, இறப்பு, சம்சாரம் இவை ஜயிக்கப் பட்டன. நிர்த்தோஷமான பிரமம் சர்வத்திலும் சமானமாயின தன்றோ? ஆதலால், பிரமத்தினிடத்தி லவர்க ளிருக்கின்ருர்கள்."

[அர்ச்சுனு! பிரகிருதி விமுக்த ஆத்ம ஸ்வரூப மெல்லாம் சமமான தென்கிற விஷயத்தில் எவர்களுடைய மனதானது நிலையா யிருக்கிறதோ, அவர்களாலே சாதனுனுஷ்டான சமயத்திலேயே ஜனன மரணமாகிய இவை ஜயிக்கப்பட்டன. பிரகிருதி சம்பந்த தோஷ மில்லாததும், எல்லாவற்றிலும் ஞான ஸ்வரூபமாகவே யிருக்கிறதுதான் ஆத்ம வஸ்து; அதுதான் பிரமமென்று சொல்லப் படுகிறது. அந்தப் பிரகிருதி விமுக்த ஆத்ம ஸ்வரூபிகள் ஞானகார ஸ்வரூபத்தோ டிருக்கின்ருர்கள்.]

மேற் கூறிய விஷயத்திற்கு வேறு பொருளும் கூறுவாருளர். அஃது யாதெனில், "போக்கியா போக்கியர்களிடத்தில் பொதுவா யிருத்தல் தகாது; தாரதம்மிய ஞான மிருத்தல் வேண்டும். அவ்வாறு தாரதம்மிய மிராது இருவரையும் சரியாய் நினைத்து நடக்கிறவனுக்கு இந்த லோகத்திலும், பரலோகத்திலும் நிந்தையே விளையும்" என்று கௌதமரிஷி கூறியுள்ளார். அவ்வாறிருக்க, எல்லாவற்றையும் சமமாய் எவ்வாறு பார்க்கலா மென்ருலோ, ஆத்ம சுவரூப ஞான மெவனுக்கு உண்டாக வில்லையோ அவனுக்குத் தாரதம்மிய ஞானம் கூறப் பட்டதே யல்லாமல் ஆத்ம சுவரூப ஞான முடையவனுக்கு அவ்வாறு கூறப்படவில்லை. 19

"கௌந்தேயா! பிரஹ்மத்தினிடத்தில் ஸ்திரமான புத்தியை யுடையவனும், முத்தியிலும் மோக மற்றவனும், பிரஹ்மநிஷ்டை யுடையவனு மிருக்கிற பிரம ஞானியானவன் இஷ்டத்தை யடைந்தும் சந்தோஷித்த தில்லை; அநிஷ்டத்தை யடைந்தும் விசனப்படுத தில்லை."

[இவ்வாறான நிலைமையுடைய பிரம்ம நிஷ்டனுக்கு இஷ்ட அநிஷ்டங்கள் எவ்வாற்றானும் கிடையாவென்பது நிச்சயம். ஆனால், பிராரத்த கருமமானது அவனை இந்தத் தேகமுள்ள வரையில் விடாது. அதை அவன் அனுபவித்தே தீரவேண்டும். இஷ்ட அநிஷ்டங்களை அவன் அனுபவிப்பதே யில்லை. ஆனால், அவன் அனுபவிப்பதுபோல் பிறருக்குப் புலப்படும்.] 20

"உலகிலுள்ள வஸ்துக்களில் ஆசையை நீக்கிய மனமுடையவன் தனது அந்தக்கரணத்தில் எந்தச் சுகமுண்டோ அந்தச் சுகத்தை யடைகின்றான். பிரஹ்மத் தியானத்தில் மனமுடையவன் நாசமற்ற சுகத்தை (மோக்ஷத்தை) யடைகின்றான்." 21

"ஓ! குந்தி புத்திரா! விஷயங்களினா லுண்டான போகங்கள், அல்லது சுகங்கள் எவையோ, அவை துக்கத்திற்குக் காரணமானவை. ஏனெனின், அவை உண்டாவதும் அழிவதுமாகவே யிருக்கின்றன. அவைகளின் உண்மையைத் தெரிந்த விவேகியானவன் உற்சாகப் படுகிறதில்லை."

[சுவர்க்கம் முதலிய லோகாந்தரங்களிலும் விஷயம் இந்திரியங்கள் இவைகளின் சேர்க்கையினா லுண்டாகிறபடியினால், துக்கத்திற்குக் காரணமென்பது சுலபமாகத் தெரிந்துகொள்ளக் கூடியது. பிர்மாவினுடைய சுகத்தைக் காட்டிலும் உயர்ந்ததான பிரகிருதியினுடைய சுகம் இல்லையல்லவா? அதுவும் அவருக்கு ஏற்பட்ட நாள் மாசம் முதலிய அளவின்படி நூறு வருஷ முள்ளதென்று அளவிடப்பட்டிருப்பதினால், மனுஷ்யன் முதலியவர்களின் சுகத்திற்குச் சமானந்தானென்று தெரிவிப்பதற்காகச் சொற்ப காலம் இருப்பவைகளாக என்று சொல்லப்பட்டது. மின்னல், நீர்க்குமிழி முதலியவைகளுக்குப் போலக் கால அளவுகளின் ஏற்றச் சுருக்கங்களினா லுண்டாகும் வித்தியாச மத்தனை யொழிய உற்பத்தி நாசங்களை யுடையனவா யிருத்தல் எல்லாவற்றிற்கும் சமமென்று தாத்பரியம்.] 22

"ஆசை, சினம் என்னும் இவற்றினா லுண்டாகும் மனத்துடிப்பைச் சரீரத்தை விடுவதற்கு முன்னரே சகிப்பதற்கு எந்த மனிதனானவன் சக்தி யுடையவனோ அவன் மனச்சமாதான முள்ள யோகி; அவன் சுகமுள்ளவன்."

இவ் விஷயத்திற்கு மூன்று பாஷ்யக்காரர்களும் வெவ்வேறாகப் பொருள் கொண்டனர்; அவை வருமாறு:—

[ஸ்ரீதரர்:—"பிராணன் நீங்கிய பிறகு பெண்கள் கட்டி யணைவதிலும், புத்திரன் தகனஞ் செய்வதினாலும் எவ்வாறு மனோ விகார முண்டாகிற தில்லையோ, அவ்வாறு ஜீவனோ டிருக்கையிலேயே தன் தேக விஷயமா யுண்டாகும் நன்மை தீமைகளில் விகார மடையாம லிருக்கவேண்டும்."]

[ஸ்ரீ சங்கரர்:—"ஆசையாவது - தனக்குப் பிரியமா யிருத்தலையுற்று நோக்குதல், கேட்டல் முதலியவைகளா லுண்டாகும் விருப்பம். கோபமாவது எவ்வகைப்பட்ட தெனின், தனக்கு எது துக்கத்தை விளைவிப்பதோ அந்தப் பொருள்களைப் பார்த்தல் கேட்டல் நினைத்தல் முதலியவற்றா லுண்டாகும் வெறுப்பு; மனத்துடிப்பு ஆசையினா லுண்டாதலும், கோபத்தினா லுண்டாதலுமாக இரண்டு வகைப்படும். அவற்றுள் ஆசையா லுண்டாகும் மனத்துடிப்பால், புளகமும், கண்களும் முகமும் மலர்தலும், கண்ணீர் வடிதலும், புன்னகை யுண்டாதலுமாம். இப்படிப்பட்டவைகளினால் மனதி லுண்டாகும் பரபரப்பு, குரோதத்தினா லுண்டாவது, தேக படபடப்பு, வியர்வை, உதட்டைக் கடித்தல், கண்கள் சிவத்தல், வாய் குளறுதல் இவை யுண்டாகும். சகிப்பது எவ்வாறெனில் மேற்கூறிய காமக் குரோதங்களினா லுண்டாகும் மனத்துடிப்பை விவேகத்தினால் நிவிர்த்தித்தலேயாம்."]

[ஸ்ரீ இராமாநுஜர்:—"சரீரம் விடுவதற்கு முன்னரே உபாயத்தை அனுஷ்டிக்கும் நிலையிலேயே ஆத்மாவை அனுபவிப்பதனா லுண்டான பிரீதியினால் காமம் கோப மிவைகளினா லுண்டாகும் வேகத்தைத் தடுப்பதற்கு எவன் வலிமையுற்றவனோ, அவன், ஆத்மாவை அனுபவிக்கத் தகுந்தவன். அவனே சரீரம் விட்டபிறகு ஆத்மாவை அனுபவிப்ப தொன்றினையே சுகமாகப் பெறுகிறான். ஆகையால், வேகமாகப் பிரவாகிக்கும் நதியில் தப்பித்துக்கொள்ளும் கஷ்டமே யன்றிச் சாதாரணமாயோடும் நதியில் அப்படிப்பட்ட துன்பம் உண்டாகா தன்றோ? இவ்வாறு செய்பவனே யோகி, சுகி; முயலுகிறவனே மனுஷ்யன். அல்லாவிடின் மிருகமென்று கருத்து."] 23

"அர்ச்சுனா! எவன் தனது ஆத்மாவி னிடத்திலேயே சுகத்தையுடையவனாகவும், ஆத்மாவையே உத்யான வனமாக உடையவனாகவும் இருக்கின்றானோ, அவ்வாறே தனது ஆத்மாவினிடத்திலேயே பிரகாச முடையவனாக எவன் இருக்கின்றானோ அந்தப் பிரஹ்ம நிஷ்டனான யோகியானவன் ஜீவன் முக்தனாய், அல்லது பிரஹ்ம ஸ்வரூபமாய், பிரஹ்மத்தில் லயத்தை, அல்லது பிரஹ்மானந்தத்தைப் பூரணமா யடைகின்றான்."

[அதாவது, உத்யான வனம் சுகத்தை அனுபவிப்பதற்கு இடமாக விருந்துகொண்டு, நிழல், தளிர், புட்பம், பழம் முதலிய தன் குணங்களினால் சுகத்தை விருத்திசெய்கிறதல்லவா? அவ்வாறு இவ்விடத்திலும் தன்னைப் பற்றிப் பிரசங்கஞ் செய்வது, கிரந்தங்கள் செய்வது முதலிய கிரீடைகளை யுண்டாக்கிக் கர்ம சம்பந்த மற்றிருத்தல், ஞானம், ஆனந்தம் முதலிய தன்னுடைய குணங்களினால் ஆத்மாவே சுகத்தை விர்த்தி செய்கிறபடியினால் உத்யான வன மென்கிற பதத்தினால் உபசாரமாகச் சொல்லப்பட்டது.”] 24

“பாபங்களை நிவிர்த்தித்திருக்கின்ற, சந்தேகம் அஞ்ஞானம் என்பன அற்றிருக்கின்ற, இந்திரியங்கள் மனம் என்பனவற்றைச் சுவாதீனப் படுத்திக்கொண் டிருக்கின்ற சகல பிராணிகளுக்கும், நன்மையைச் செய்துகொண் டிருக்கின்ற ரிஷிகள் பிரஹ்மானந்தத்தை, அல்லது மோக்ஷத்தை, அல்லது பிரஹ்மத்தில் லயத்தை யடைகின்றார்கள்.” 25

“ஆசா வெகுளிகளினின்றும் விடப்பட்டவர்களாயும், மனத்தை யடக்கினவர்களாயும், ஆத்ம தத்துவத்தை யறிந்தவர்களாயு மிருக்கின்ற யதிகளுக்கு பிரஹ்மானந்தம், அல்லது மோக்ஷம், அல்லது பிரஹ்மத்தில் லயம் நாலு பக்கங்களிலு மிருக்கின்றது.” 26

“ஆகலின், தேகத்திற்கு வெளியிலுள்ள விஷயங்களை வெளியிற் றள்ளியும், கண்களைப் புருவமத்தியில் நிறுத்தியும், பிராண அபான வாயுக்களை நாசிக்குள் சஞ்சரிக்கும்படி சமமாகச் செய்தும், இந்திரியங்கள், மனது, புத்தி ஆகிய இவைகளை யடக்கி ஆசை, பயம், கோபம் இவைகளை விட்ட மோக்ஷத்தையே எதிர்பார்த்துக் கொண் டிருக்கிற மௌனத்தோடு கூடிய யோகி யெவனோ அவன் எப்பொழுதும் முக்தனே.”

[கருத்து:—ஒரே வாயுவே மூக்கின் நுனியினால் கிளம்பும்பொழுது பிராணனென்றும், உள்ளே நுழையும்பொழுது அபானனென்றும் சொல்லப்படுகிறது. வியாபாரம், இடம் இவைகளைச் சமமாக்குவது பொருந்தா தாகையினால், வேகத்தைச் சமமாக்க வேண்டுமென்று கூறியுள்ளது. அதாவது, பெரு மூச்சாக விடாமலும், பெரு மூச்சாக உள்ளே யிழுக்காமலும் என்றர்த்தம்.] 27-28

“அர்ச்சுனா! யக்ஞம், தபசு ஆகிய இவைகளின் பலன்களை அநுபவிக்கின்றவனும், அல்லது இரக்ஷிக்கின்றவனும், சகல லோகங்களுக்கும் மகேசுவரனா யிருக்கின்றவனும், சகல பிராணிகளுக்கு முபகாரியாக இருக்கின்றவனும் ஆகிய என்னை யோக நிஷ்டையால் அறிந்து மோக்ஷத்தை அடைகிறான்.” 29

ஐந்தாவது அத்தியாயம்
முற்றுப்பெற்றது.

---

# ஆறுவது அத்தியாயம்

# ஆத்ம ஸம்யம யோகம்

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"கருமபலனை அபேக்ஷியாதவனாய்ச் செய்யவேண்டிய கருமத்தை எவன் செய்கின்றானோ, அவனே சந்நியாசியும் யோகியு மாகின்றான். அக்கினியை விட்டவனும் (சந்நியாசி) அல்லன்; கிரியையை விட்டவனும் (யோகி) அல்லன்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"அக்கினியையும் கிரியைகளையும் விட்டு உலகத்திற் பிரசித்தமா யிருக்கின்ற சந்நியாஸ ஆச்சிரமத்தை நிஷேதிக்கும் பொருட்டு இவ்வாறு கூறப்பட்டதன்று. பலாபேக்ஷையை விட்டுக் கருமங்களைச்செய்து ஈசுவரார்ப்பணஞ் செய்யுங் கருமயோகியுங்கூடச் சந்நியாசி யாகின்றா னென்பதைச் சொல்லி யிருக்கிறதாகத் தாத்பரியம்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"இப்போது ஞான யோகத்தினாலும், கர்ம யோகத்தினாலும் உண்டாகக்கூடிய ஆத்மாவலோகனமாகிய யோகத்தில் அப்பியாசஞ் செய்வது சொல்லப்படுகின்றது. அவ்விடத்தில் கர்மயோகம் வேறொன்றை எதிர்பாராமல் சாதன மென்பதை உறுதிப் படுத்துவதற்காக ஞானரூபமான கர்ம யோகம் ஆத்மா வலோகன யோகத்தை முடிவிலுடையது என்று அனுமதிக்கப் படுகிறது. கர்மங்களுக்குப் பலன்களாகிய சுவர்க்கம் முதலியவைகளை அடையாமல் கர்மங்களின் அனுஷ்டானமே செய்யத்தக்கது. எவ்வாற்றானும் நமக்கு மிகவும் நண்பனாகிய பரம புருஷனுக்கு ஆராதனமாக விருத்தலினாற் கர்மமே எனக்குப் பிரயோஜனம். அதனா லுண்டாகக்கூடிய தொன்றுமல்ல வென்று எவன் கர்மத்தைச் செய்கிறானோ அவனே ஞானயோக நிஷ்டனும், கர்மயோக நிஷ்டனும், அதாவது ஆத்மா வலோகனமாகிய யோகத்திற்குச் சாதனங்களான இவை யிரண்டிலும் நிஷ்டையை யுடையவனென்று பொருள் விளங்கும். சாத்திரங்களில் விதிக்கப்பட்ட யக்ஞம் முதலிய கர்மங்களில் பிரவிர்த்திக்காதவனு மல்ல, கேவலம் ஞான யோகத்தில் மாத்திரம் நிஷ்டை யுடையவனு மல்ல, அவனுக்கு ஞான நிஷ்டை மாத்திரந்தான்; கர்மயோகத்தில் நிஷ்டை யுடையவனுக்கோ இவை இரண்டு முண்டென்று நன்கு விளங்கும்."]

[கருத்து:—அக்கினி யென்றால் பார்வை; பார்வையை விட்ட மாத்திரத்தில் சந்நியாசி யாகா னென்பது கருத்து. நித்திய நைமித்திக கர்மங்களை விட்ட மாத்திரத்திலேயே யோகி ஆகான். காமக் குரோதாதிகளை வென்று ஞான யுக்தனாதலே சந்நியாசி லக்ஷணம். உத்தர கீதையில், "துவிஜர்களுக்குத் தெய்வம் அக்கினியில்" என்றும், "முனிவர்களுக்குத் தெய்வம் ஹிருதயத்தில்" என்றும், "அஞ்ஞானிகளுக்கு அதாவது ஆத்மஞான மில்லாதவர்களுக்குத் தெய்வம் பிரதிமைகளில்" என்றும், "சமதிருஷ்டியுள்ளவர்களுக்கு எங்குந் தெய்வம்" என்றும் கூறப்பட்டுள்ளன. ஆகலின், துவிஜர்கள் ஞான மடைவதற்கு முன்னர் அக்கினியின் துணைபற்றிச் செய்யத்தக்க கிரியைகளை விட்டால், அதனால் பழிப்படைவார்களே யன்றிச் சந்நியாசியாக மாட்டார்கள்] 1

"ஓ! அர்ச்சுனா! எதைச் சந்நியாச மென்று சொல்லுகின்றார்களோ அதை யோக மென்று அறி: ஏனெனின், சகல ஆசைகளையும் விடாத எவனும் கருமயோகி யாகிறதில்லை."

[இந்த வாக்கியத்தில், "சகல ஆசையையும் விடாத" என்கிற பதம் நான் செய்யவேண்டு மென்கிற உறுதியைச் சொன்னதன்று. அஃதில்லாவிடின், கர்மங்களைச் செய்யவே முடியாதாகையினால், பலன்களில் ஆசையையுங் கூறுவதல்ல. அவ்வாறு கூறினாரேனும், கர்ம யோகத்திற்குள் ஞான யோகமு மடங்கியுள்ளதென்று ஸ்தாபிப்பதற்குக் காரண மாகாது. ஆகையினால், மநு ஸ்மிருதியில் "எந்தக் காரணத்தினால் காமமானது சங்கற்பத்தைக் காரணமாக வுடையதோ, யக்ஞங்கள் சங்கற்பத்தின் உண்டானவைகளோ" என்றிவை முதலாக முற்கூறிய ஸ்மிருதிகளில் கூறப்பட்ட காமத்திற்கும் கர்மங்களுக்கும் காரணமாகிய சங்கற்பம் இவ்விடத்தில் சொல்லப்படுகிறதல்ல. ஆகையினால், ஒன்று சேர்த்து எண்ணுதல் சங்கற்பம்: அதுவும் இவ்விடத்தில் தேகம், ஆத்மா இவைகளைப் பற்றியதாம்.]

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—'பரமார்த்த சந்நியாசியையும், நிஷ்காம கரும யோகியையும் இவ்வாறு ஒரே தன்மையாகக் கூறலாமோ?' என்றால், பலன்களில் ஆசையை விட்ட விஷயத்தி லிருவரும் ஒரே தன்மையராம்.] 2

"அர்ச்சுனா! ஞான யோகத்தைப் பெறுவதற்கு அவாவினையுடைய யோகிக்குக் கரும யோகமானது காரணமாகச் சொல்லப்படுகின்றது. ஞானயோகத்தை யடைந்திருக்கின்றவனுக்கு மனத்தை

திருத்தலே அகண்டத் தியானத்திற்குக் காரணமாகச் சொல்லப்படுகின்றது.''

[அதாவது, ஆத்மாவலோகனத்தை அடையவேண்டு மென்று ஆசையை யுடைய முமுக்ஷுவுக்குக் கர்மயோகமே காரணமாகச் சொல்லப்படுகின்றது. நிலைநின்ற யோகத்தை யுடைய அவனுக்கே கர்மங்களைச் செய்யாமை காரணமாகச் சொல்லப்படுகிறது. ஆத்மாவைக் காண்பதாகிய மோக்ஷத்தை யடைகிற வரையிலும் கர்மத்தைச் செய்ய வேண்டும்.] 3

''எப்பொழுது விஷயங்களில் விருப்பம் வைத்த தில்லையோ, கருமங்களைப் புரிவதில் இச்சைவைத்த தில்லையோ, அப்பொழுது சகல அபேக்ஷைகளையும் விட்டவனாகிய அவன் யோகாரூட னென்று சொல்லப்படுகின்றான்.''

[எப்பொழுது இந்த யோகி ஆத்மா வொன்றினையே அனுபவிப்பதே சுவபாவமாக வுடையவனாகையால், ஆத்மாவைத் தவிர பிரகிருதியி லுண்டான விஷயங்களிலும் அவைகளைச் சேர்ந்த கர்மங்களிலும் பற்றுதலை யடையாதவனாகின்றானோ அப்பொழுது அவன் எல்லா ஆசைகளையும் விடப்பட்டவ னென்றும், நிலைநின்ற யோகத்தை யுடையவ னென்றும் கூறப்படுகின்றான். ஆகையினால், யோகத்தை யடையவேண்டு மென்கிற அவாவுடன் விஷயங்களை அனுபவிப்பதற்குத் தகுந்தவனாகையினால், அதில் பற்றுத லில்லாமையைப் பயிற்சி செய்வதாகிய கர்மயோகமே யோகத்தைப் பூர்த்தி செய்யக் காரணம். ஆகலின், விஷயங்களில் பற்றுத லில்லாமையைப் பயிற்சி செய்வதாகிய கர்மயோகத்தையே அடையவேண்டு மென்கிற அவாவுடையவன் செய்ய வேண்டும். மேலும், மோக்ஷம் கிடைக்கிற வரையில் ஏதாவதொரு கர்மத்தைச் செய்யவேண்டியது முக்கியமான கடமையா யிருப்பதால், முமுக்ஷுவுக்கு ஆத்மாவலோகனமே இவ்விடத்தில் மோக்ஷத்திற்குச் சமமா யிருக்கிறபடியால், 'மோக்ஷம்' என்கிற பதத்தினால் உபசாரமாகச் சொல்லப்பட்டது.] 4

''தன்னாலே, அல்லது விவேகமுள்ள மனத்தாலே தன்னைக் கரையேற்றிக் கொள்ளல் வேண்டும்; தன்னைக் கெடுத்துக் கொள்ளல் கூடாது; ஏனென்றால், தனக்குத்தானே, அல்லது தன் மனமே பந்து; தனக்குத்தானே, அல்லது தன் மனமே சத்துரு.''

[கருத்து:—'கரையேற்ற வேண்டும்' என்பதற்கு நிலைநின்ற யோகத்தை யுடையவனாக விருப்பத்தை யுண்டாக்கிக்கொண்டு அத

னால் சம்சாரமாகிற சமுத்திரத்திலிருந்து கரையேற்ற வேண்டுமே யொழிய மீண்டும் கீழே போகும்படிச் செய்தல் கூடாது. ஆத்மாவைக் கரையேற்றுவது, ஆத்மாவைத் துக்கப்படும்படிச் செய்வது இவை யிரண்டிற்கும் மனதே காரணமென்று சொல்லப்பட்டது. மற்றைய பந்துக்கள் மோக்ஷத்திற்கு விரோதிகளாகையால், அவர்கள் பந்துக்களாகார். மற்ற சத்துருக்களும் தன்னுடைய காரியத்தினா லுண்டானவர்களென்று மனதே யென்பதின் அபிப்பிராயம்.] 5

"எந்த ஆத்மாவாலே மனதானது வெற்றி யடையப்பட்டதோ, அந்த ஆத்மாவிற்கு மனம் பந்து; மனதை வெல்லாதவனுக்கு மனம் பகைபோல அபகாரத்திலே யிருக்கும்."

[எந்தப் புருஷனால் தன்னாலேயே தன்னுடைய மனது விஷயங்களிலிருந்து ஜயிக்கப்பட்டதோ அந்த மனது அவனுக்குப் பந்து. ஜயிக்கப்படாத மனதை யுடையவனுக்குத் தன்னுடைய மனதே சத்துருவைப்போல விரோதஞ் செய்வதிலேயே நிற்கும். இவ்வாறே பகவான் ஸ்ரீ பராசர மஹரிஷியாலும், "மனிதர்களுக்குச் சம்சாரம் மோக்ஷம் இவைகளுக்கு மனதே காரணம்: விஷயங்களில் பற்றுதலை யுடைய மனது சம்சார பந்தத்திற்குக் காரணம்: விஷயங்களில் ஆசை யில்லாத மனது மோக்ஷத்திற்குக் காரணம்" என்று சொல்லப்பட்டது.] 6

"மனத்தை ஜயித்தவனையும், காமக் குரோதாதிகளை யடக்கினவனையு மிருக்கின்றவனது மனம் சீதோஷ்ண சுகதுக்கங்களை யடைந்தாலும், அவ்வாறே மானவமானங்களை யடைந்தாலும், அதிகமாய்த் தன் ஆத்மாவில் நிஷ்டையை யுடையதாகவே யிருக்கும்." 7

"அறிவு, அறிந்தபடி அனுபவம் இவைகளினால் திருப்தியான மனதை யுடையவனையும், மனோவிகாரம் அற்றவனையும், இந்திரியங்களைச் செவ்வனே ஜயித்தவனையும், மண் - பொன் - கல் என்பனவற்றைச் சமமாய் நினைத்தவனையு மிருக்கின்ற ஞான யோகியானவன் யோகாரூட னென்று சொல்லப்படுகின்றான்."

[ஸ்ரீ மாத்துவாசாரியர் அபிப்பிராயம்:—"அதாவது, மண் முதலிய சகல வஸ்துக்களையும் அததனுடைய சுவபாவ மெப்படியோ, அவ்வாறே சரியா யுணர்வது என்றால், இம் மத சித்தாந்தப் படிக்கு ஐந்துவித பேதஞானம் மோக்ஷ ஏதுவாயின. அவை

யாவை யெனின், 1. ஜீவேசுவர பேதம், 2. ஜீவபாஸ்பரபேதம், 3. ஜீவஜடபேதம், 4. ஜடபாஸ்பரபேதம், 5. ஜடேசுவரபேதம். இந்த நான்காவது வகுப்பில் இந்த மண், கல், தங்கம் முதலியவை சேருகின்றன. தங்கத்தைத் தங்கமாகவும், கல்லைக் கல்லாகவும், மண்ணை மண்ணாகவும், இவ்வாறே மற்றமுள்ள ஜடவஸ்துக்களை அததன் சுவபாவப்படி அறிவதுதான் சமமான ஞானம்; அவ்வாறன்றி, மண்ணைக் கல்லாகவும், கல்லைத் தங்கமாகவும் இவ்வா றொன்றை யொன்ருக அறிவது விபரீத ஞானம்.”]
8

“அர்ச்சுனு! சுகிருத், மித்திரன், அரி, உதாசினன், மத்தியஸ்தன், துவேஷி, பந்து ஆகிய இவர்களிடத்திலும், சாத்வீக குணமுள்ளவர்க ளிடத்திலும், பாபிகளிடத்திலும், சமமான புத்தியையுடையவன் சிரேஷ்டனு யிருக்கின்ருன்.”

[அதாவது, நற்குணமுடைய ஒருவனுக்கு உபகாரஞ் செய்தால், மீண்டும் அவன் ‘என்னுளில் அவ் வுபகாரத்தைப் பெறலாம்.’ என்று நினைத்தல் கூடாவாம்; அதுபோல, பிரதி உபகாரத்தை நாடாமல் உபகாரஞ் செய்கிற சிநேகிதந்தான் சுகிருத். பிரதி பிரயோஜன உத்தேசத்துடன் சிநேகஞ் செய்கிறவன் மித்திரன். அபகாரஞ் செய்கிறவன் அரி. சண்டை யிடுகிற இரு திறத்தார்களுக்கும் சாதகம் அல்லது பாதகம் செய்ய வேண்டியவனுக விருந்தும் அவ்வாறு செய்யாம லொருபுற மொதுங்கி யிருப்பவன் உதாசினன். சண்டை யிடுகிற இரு கக்ஷியாரையுஞ் சமாதானஞ் செய்கிறவன் மத்தியஸ்தன். வெறுக்கத் தக்கவன் துவேஷி. தன்னிடத்தில் விசுவாசமுள்ள உறவின் முறையான் பந்து. இவர்களிடத்திலும், சாதுக்களிடத்திலும், பாபிகளிடத்திலும் சமமான புத்தியை யுடையவன் சிரேஷ்டனுக விளங்குகின்ருன்.

வயது சமமாக இருக்கவேண்டு மென்கிற நிர்ப்பந்த மில்லாமல் தன்னுடைய ஹிதத்தை விரும்புவோர், சமமான வயதுள்ள தோழர்கள்; ஒரு காரணத்தினுல் தனக்கு அநிஷ்டத்தை விரும்புவோர், இவ் விரண்டிற்கும் காரண மில்லாமையினுல் இவ் விரண்டினையும் விரும்பாதவர்கள், அதாவது, பிறவியினுலேயே இவ் விரண்டு மில்லாதவர்கள், பிறப்பினுலேயே அநிஷ்டத்தை விரும்புகிறவர்கள், தர்மத்தைச் சுவபாவமாக உடையவர்கள் ஆகிய இவர்க ளிடங்களில்தான், ஆத்மா ஒன்றையே பிரயோஜனமாக உடையவனுகையினுல், மேற்கூறிய சுகிருத் முதலியவர்களினுல் பிரயோஜன மில்லாமையினுலும்,

சத்ருரு முதலியவர்களினால் அதிஷ்ட மில்லாமையினாலும், சமமான புத்தியை யுடையவன் யோகாப்பியாசஞ் செய்யத் தகுந்தவர்களுக்குள் சிறந்தவ னாகின்றான். அர்ச்சுனா! இப்போது யோகத்தன்மையின் இலக்கணத்தை யொருவாறு கூறினேன். இனி, அத்தகைய யோகியினுடைய அங்க ரூபமான யோகத்தின் தன்மையைக் கூறுகின்றேன். அதனைச் செவிமடுத்துக் கேட்பாயாக.] 9

"மனம், தேகம், இந்திரியங்கள் இவைகளைச் சுவாதீனப்படுத்திக் கொண்டவனாயும், ஆசை யற்றவனாயும், தனக்கு வேண்டுமென்று எந்த வஸ்துக்களையும் வைத்துக்கொள்ளாதவனாயு மிருக்கிற யோகியானவன் ஏகாந்தமான விடத்தில் ஒருவனாகவே ஸ்திரமாயிருந்துகொண்டு மனதை எப்பொழுதும் தியானத்தில் நிறுத்த வேண்டியது." 10

"பிறகு, பரிசுத்தமான விடத்தில் அதிக உயர மில்லாமலும், அதிகத் தாழ்வில்லாமலும், சமநிலத்தில் தருப்பை, மான்தோல், வஸ்திரம் இவைகளை முறையே ஒன்றின்மே லொன்றாய்ப் போடப்பட்ட ஸ்திரமான ஆசனத்தைத் தனக்காகச் செய்துகொள்ள வேண்டும்." 11

"அந்த ஆசனத்தில் உட்கார்ந்து மனதை ஒரு நிலைபாகச்செய்து, மனது இந்திரியங்கள் இவற்றின் செய்கைகளை யடக்கினவனாய்ச் சித்தசுத்தி காரணமாக யோகத்தைச் செய்யவேண்டும்." 12

"அர்ச்சுனா! இவ்வித தன்மை வாய்ந்த யோகியானவன் தேகம், கழுத்து, தலை இவைகளை யசையாமல் சமமாய் வைத்துக் கொண்டும், ஸ்திரமா யிருந்து கொண்டும், திக்குகளைப் பாராதவனாகத் தன்னுடைய மூக்கு நுனியின்பேரில் திருஷ்டியை நிறுத்தல் வேண்டும்."

"மனச் சமாதானத்தை யடைந்தவனாயும், பயங்களை விட்டவனாயும், பிரம்மசரிய விரதத்தில் இருந்து கொண்டவனாய் மனத்தை விஷயங்களில் போகாமல் திருப்பி என்னிடத்தில் சித்தத்தை வைத்தவனாயும், என்னையே நம்பினவனாய் அல்லது என்னையே தியானஞ் செய்து கொண்டவனாயு மிருக்க வேண்டியது." 14

"அவ்வாறு தியானஞ் செய்து, விஷயங்களி லிருந்து இழுக்கப் பட்டிருக்கிற மனத்தை யுடைய யோகியானவன் எக்காலத்திலும் மேற் கூறியவாறு மனத்தை நிறுத்தினவனாய் மோக்ஷத்தையே நிஷ்

டயாக வுடையதும், என்னுடைய ஆதீனமானதுமாகிய ஆக்கத்தின்
டிவை அல்லது பிறப்பிறப்புக்களின் முடிவை யடைகின்றான்.” 15

“இந்தத் தியான யோகமானது அதிகமாக உணவைப் புசிப்பவ
க்கு மில்லை: முழுதும் உணவற்றவனுக்கு மில்லை; அதிக நித்திரை
சய்பவனுக்கு மில்லை; நித்திரை யற்றவனுக்கு மில்லை.”

[அர்ச்சுனா! இதற்கு முன்னரே ஆகார விஷயத்தைப்பற்றி
னக்குத் தெளிவாகக் கூறியுள்ளேன். மேலும், சக்தியுள்ளவன்:
த்திரை. உணவு, பயம், சுவாசம், சேஷ்டை, சோம்பல் முதலியவை
ளை விட்டு, கண்களை மூடிக்கொண்டு யோகஞ் செய்யவேண்டு
மன்று சொல்லப்பட் டிருக்கிறது. ஆனால், ஆகாரம் முதலியவை
ளை முற்றிலும்விடச் சக்தியற்ற யோக விஷயமாய்ச் சொல்லப்பட்ட
ாக அறிய வேண்டியது.] 16

“மிதமான உணவு நடை இவற்றை யுடையவனும், கிரியை
ளை அவசியமானவரையில் செய்கின்றவனும், மிதமான நித்திரை
ழிப்பு இவற்றை உடையவனு முள்ளவனுக்குத் தியான யோக
ானது உண்டாகின்றது.” 17

“எப்போது மனதானது தன் வசப்பட்டு பரப்பிரம்ம சொரூ
த்திற்றானே அசையாமல் நிற்குமோ, எப்பொழுது சகல விஷயங்
ளிலிருந் துண்டாகும் ஆசையை விட்டிருப்பானோ, அப்பொழுது
வன் யோக சித்தியை யடைந்தவனென்று சொல்லப்படுகின்றான்.”

“அவ்வாறு யோக சித்தியை யடைந்து ஆத்மத்தியானத்தை
ப்பியாசஞ் செய்கிற சுவாதீனமான மனதையுடைய யோகியான
ன் காற்றில்லாத விடத்தி லிருக்கிற விளக்கானது எவ்வாறு அசை
ாம லிருக்குமோ அவ்வாறு தனது மனது தேகேந்திரியாதிகளைச்
லிக்க வொட்டாமல் ஒரே நிலையா யிருந்து யோக நிஷ்டையைச்
சய்தல் வேண்டும்.” 19

“அவ்வாறு யோகத்தை அப்பியாசஞ் செய்வதினால் விஷயங்களி
ிருந்து மீட்கப்பட்ட மனதானது எந்த யோகத்தில் நிற்குமோ,
ந்த யோகத்தி லிருக்கிறவன் மனதினாலே பரமாத்மாவைப் பார்த்
த் தன்னிடத்திலேயே சந்தோஷ மடைகின்றானோ, எந்த யோகத்
ில் ஸ்திரமா யிருக்கின்ற யோகியானவன் இந்திரியங்களுக்குப்
லப்படாததும், புத்தியினாலே அறியத் தக்கதும், அளவிறந்ததும்,
ந்தமில்லாததுமான சுகத்தை அறிகின்றானோ, எந்தச் சுகானுபவத்தி

விருக்கும் பிரிதலே யில்லையோ, எதை யடைந்து பிறகு அதைக் காட்டிலும் மற்றொன்றை அதிகம் பிரயோஜனமாக எண்ணுகிற தில்லையோ, எந்த யோகத்தி லிருக்கின்றவன் விசேஷமான துக்கத்தினாலுங்கூடச் சலிக்கப்படுகிற தில்லையோ, சகல துக்கங்களுடைய சம்பந்தத்தைப் போக்கடிக்கிற அதை (அந்த யோக நிஷ்டை நிலைமையை) யோக மென்கிற பெயரை யுடையதாக அறியவேண்டியது. உறுதியுடன் சலிக்காம லிருக்கிற மனத்தையுடையவனாலே அப்படிப் பட்ட யோகமானது அடையத் தகுந்தது.” 20-23

“சங்கற்பத்தினாலுண்டாகின்ற சகலமான காமங்களை, அதாவது விஷய ஆசைகளை முற்றிலும் விட்டு மனதினாலேயே சகலமான இந்திரியங்களையும் சகல விஷயங்களினின்றும் மீட்டுத் தைரியத்தினால் சுவாதீனஞ் செய்து கொள்ளப்பட்ட புத்தியினாலே மனத்தைப் பரமாத்மாவி னிடத்திலே நிற்கச்செய்து, மெள்ள மெள்ள (அதை) நிறுத்தவேண்டும்: அவ்வாறு நிறுத்திய பின்பு வேறொன்றையுஞ் சிந்திக்காம லிருத்தல்வேண்டும்.”

[ஈண்டுக் காமங்கள்: சங்கற்பத்தினாலுண்டாவது, ஸ்பரிசத்தினாலுண்டாவது என இருவகைப்படும். சங்கற்ப மென்பது: இன்ன காரியத்தைச் செய்யவேண்டும்; அதனால் இவ்வித பலனை யடையலா மென்று மனத்தி லுண்டாகும் தோற்றம், அல்லது மனத்தினா லுத்தேசித்தல். இதனா லுண்டாவது புத்திராதிகள். ஸ்பரிச மென்பது: ஞானேந்திரிய கர்மேந்திரியங்கள் விஷயங்களில் சம்பந்தப்படுவது; இதனா லுண்டாவது சீதோஷ்ணாதிகள். இவ்விரண்டு விதமாய்த்தான் காமங்க ளுண்டாகின்றன. முந்தியதை விட்டு விலகவேண்டும். பிந்தியதை முழுதும் விடுவது அசாத்திய மானதால், அதன் மூலமா யுண்டாகும் சுகதுக்கங்களை விடவேண்டியது.] 24-25

“நிலைபற்றாததும் சஞ்சல சுவபாவமுள்ளதுமான மனம் எந்தெந்த விஷயங்களிற் பிரவேசிக்கின்றதோ, அந்தந்த விஷயங்களினின்றும் இந்த மனத்தை மீட்டுப் பரமாத்மாவி னிடத்தில் அல்லது தன் ஆத்ம ஸ்வரூபத்திற்றானே நிற்கும்படி செய்தல் வேண்டும்.” 26

“சாந்தமான மனத்தையுடைய இரஜோகுண மற்றிருக்கிற பிரஹ்மத்தைத் ஆசிரயித்தவனா யிருக்கின்ற, பாப மற்றவனா யிருக்கின்ற இவ்வாறான யோகி சிரேஷ்டமான சுகத்தை அடைகின்றா னென்பது வேதத்திற் பிரசித்தமா யிருக்கின்றது.”

[குறிப்பு:—ஜீவன் முக்தனென்றால், இறந்த பிறகு அடையும் மோக்ஷ சுகத்தை இந்தத் தேக மிருக்கையிலேயே அடைந் திருக்கிறவ னென்பது பொருள்.] 27

"மேற் கூறியவாறு, எப்போதும் மனத்தைச் சுவாதீனஞ் செய்துகொண்டிருக்கிற பாபங்களற்ற யோகி, பிரயாசை யில்லாமல் பிரஹ்ம தரிசனமாகிய சிரேஷ்டமான சுகத்தை யடைகின்றான்" 28

"பிரமன் முதல் ஸ்தம்ப பரியந்தமுள்ள சகல வஸ்துக்களிலே யுஞ் சமமாக பிரஹ்மத்தைப் பார்க்கின்ற தியான யோகத்திலே மனத்தையுடைய யோகியானவன் தன்னைச் சகல வஸ்துக்களிலு மிருப்பவனாகப் பார்க்கின்றான்; அதாவது, பிரகிருதியைவிட வேறு பட்ட ஸ்வரூபங்களையுடைய தன்னுடைய ஆத்மாவும், மற்ற வஸ்துக் களின் ஆத்மாக்களும், ஞான மொன்றையே சுவபாவமாக வுடைய தாகையாலும், சமமாகையாலும், வித்தியாசங்கள் பிரகிருதி யுள்ள வைகளாகையாலும், யோகஞ் செய்துகொண்டிருக்கும் மனத்தை யுடையவன் பிரகிருதியைவிட வேறுபட்ட ஆத்மாக்க ளெல்லாவற்றி லும் ஞான மொன்றையே சுவபாவமாக இருத்தலினால், சமமென்கிற புத்தியை யுடையவனைத் தன்னை எல்லாப் பிராணிக ளிடத்தி லிருப் பவனாகவும், எல்லாப் பிராணிகளும் தன்னிடத்தி லிருப்பனவாகவும் பார்க்கின்றான்." 29

"எவன் சகல வஸ்துக்களிடத்திலும் என்னைப் பார்க்கின்றானோ, எவன் சகல வஸ்துக்களையும் என்னிடத்தில் பார்க்கின்றானோ, அவ னுக்கு நான் காணமற் போகிறதில்லை. அவனும் எனக்குக் காணமற் போவதில்லை."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"பிரகிருதி விமுக்தர்களாயிருக் கின்ற சகல பிராணிகளின் சொரூபங்களுக்குச் சமமான சொரூ பத்தை யுடையவனாக என்னை எவன் பார்க்கின்றானோ, அல்லது அறிகின்றானோ, என்னுடைய சொரூபத்திற்குச் சமமான சொரூப முடையனவாகப் பிரகிருதி விமுக்தமான சகல ஆத்ம சொரூபங்களையும் எவன் காண்கின்றானோ, அவ்வகைப்பட்ட ஆத்ம தரிசனமுள்ள யோகிக்கு நான் பிரத்தியக்ஷமாகவே யிருக் கின்றேன். அவனும் எனக்குப் பிரத்தியக்ஷமாகவே யிருக் கின்றான்." 30

"சகல பிராணிகளிடத்திலு மிருக்கின்ற என்னை ஒருவனாக ஆசி ரயித்து, அல்லது அபேதத்தை ஆசிரயித்து எவன் பஜிக்கின்றானோ,

அந்த யோகி எந்த மார்க்கத்தில் பிரவிர்த்தித் திருந்தபோதிலும் என்னிடத்திலே யிருக்கின்றான்."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"மேற்கூறிய வாக்கியத்தில், "அபேதத்தை" என்று கூறினமையால், பூர்ணமான ஞானகார மாய் ஒரேவிதமா யிருக்கிற தென்றும், 'எந்த மார்க்கத்தில் பிர விர்த்தித் திருந்தபோதிலும்' என்று கூறினமையால், எந்தக் காலத்திலும், என்றால் தியான காலத்திலும் தியானம் விட்டு எழுந்திருந்த காலத்திலு மென்றும், என்னிடத்திலே இருக் கின்றானே' என்பதற்கு, தன்னையும் இதர பிராணிகளையும் என் ரூபத்திற்குச் சமமான ரூபமுடையவர்களாய்ப் பார்க்கிறா னென்பர்."] 31

"ஓ! அர்ச்சுனா! எல்லாப் பிராணிகளிடத்திலும் சுகத்தையாவது துக்கத்தையாவது தன்னிடத்திற்போலச் சமமாக எவன் பார்க்கின்றானோ அந்த யோகி சிரேஷ்டனென்று நிச்சயிக்கப்பட் டிருக்கின்றான்."

[அதாவது, தன்னுடைய ஆத்மாவும் மற்றவைகளின் ஆத்மாக்களும் சுருக்க மில்லாத ஞான மொன்றையே ஆகாரமாக வுடையவைக ளாகையினால், சமமா யிருத்தலினாலே, தன்னுடைய ஆத்மாவி னிடத் திலும் மற்ற ஆத்மாக்க ளிடங்களிலும் எல்லா இடங்களிலு முண்டா கிற புத்திரன் பிறப்பது முதலிய சுகத்தையும், புத்திரன் மரணமடை வது முதலிய துக்கத்தையும் தன்னோடு சம்பந்த மில்லாமையினால் சமமாகையினால் சமமாக எவன் பார்க்கின்றானோ, அதாவது அயலா னுக்குப் புத்திரன் பிறப்பது இறப்பது முதலியவைகளுக்குச் சமான மாகத் தனக்குப் பிள்ளை பிறப்பது மரண மடைவது முதலியவைகளை எவன் காண்கின்றானோ, அந்த யோகி யோகத்தின் உயர்ந்த நிலையை யடைந்தவனாக எண்ணப்படுகின்றான்.]

[கருத்து:—"விஷ்ணுவாகின்ற நீரே உத்தமமான பரத்துவத்தை யுடைய தெய்வமும், உமது பதவியாகிய வைகுந்தமே உத்தம மான போகைசுவரியத்தை யுடையதும், உம்மை யுபாசிக்கும் தாச ஜனங்களான வைணவமத பக்தர்களே ஞானிகளுமாகச் சுருதிகளிற் சொல்லப்பட்டிருக்க, எல்லா மதங்களும் அபேத மென்று வியவஸ்தையின்றி ஏகமாகக் கூறுவ தெங்ஙனம் பொருந்தும்?" என்கிற கேள்விக்கு உத்தரமாகச் சகலேசுவர சாம்மிய யோகத்தைப் போதிக்கு நிமித்தம் மேலே அறிவித்த லுணர்த்திற்று. எல்லாத் தெய்வ வடிவங்களிலும், பரமாச்

மாவைத் தனது மதத்துக்குரிய (தெய்வத்துக்குள்ள பரமாத்ம தத்துவத்தைப் போலவே) சமமாக எவன் காண்கின்றானோ அந்த யோகி அதீத சமயத்தனு மென்பதாம்.]

[உள்ளுறை:—ஈசுவரன்: ஸாகாரம் நிராகாரம் என இரண்டு பகுதிய தென்று மதத்தர் விவாதப்பட்டு ஒன்றை வழிபடுபவர்; சிலர் இருவிதத்து முபாசிப்பர்; அன்றியும் சிலர், தத்தங் கடவுளைச் சிறப்பித்தலோடு பிற தெய்வங்களையும் மதத்தையும இழிவாகக் கூறி மிகவும் தூஷித்து வருவர். இவ் விபரீத மனைத்தும் விளைவதற்குக் காரணம் சமயங்க ளனைத்தினும் வெவ்வே றிருந்து விளையாடுமவன் ஒருவனென் றறியா அஞ்ஞானமும், இதனால் பேதமும், இதனால் தெய்வ தூஷணையும், இதனாற் சமய பக்திமான்களான பெரியோர்கள் மனப் புழுக்கமும் உண்டாவதன்றி, உண்மை காண்டற் கேதுவின்மையின், இவ் வுண்மையை யுபதேசிக்கும் பொருட்டுச் சமதரிசன யோகத்தை இதிற் குறித்துக் கூறியதாம்.

அறிஞர் தம்முயிர் போல மன்னுயிர் என்பதொக்கத் தம்மதம் போன்றது பிறர்மத மென்றும், தமது தெய்வம் போன்றது பிறர் தெய்வமென்றும், எந்தப் பரப்பிரஹ்மம் சங்கு சக்கர கதா கட்க கோதண்ட பாணியாக ஸ்ரீமந் நாராயண மூர்த்தத்துள் விளங்குகிறதோ அப் பரப்பிரஹ்மமே எல்லா மதங்களினும் வெவ்வேறு நாம ரூபங்களால் விளங்குவ தென்றும், நமது தெய்வத்தை நாம் தூஷிக்கின் அவர் மனம் நோகுமென அறிபவன் சிரேஷ்டனென்றும் நிச்சயிக்கப் படுகின்றா னென்பது மொன்று.] 32

## அர்ச்சுனன் வாக்கியம்

“ஓ! மதுசூதனு! (சமமா யறிவ தென்னும்) சாமியாகிய யாதொரு யோகம் உம்மாலே கூறப்பட்டதோ இந்த யோகத்தினுடைய நிலையான, அல்லது ஸ்திரமான இருப்பை (மனம்) சஞ்சலமுள்ள தாதலால் நான் அறியவில்லை. ஓ! கிருஷ்ணு! மனம் சஞ்சலமுள்ளதாயும், கலங்கச் செய்கின்றதாயும், அடங்காததாயும், விஷயங்களில் விசேஷ பற்றுத லுடையதாயு மிருக்கின்றது. அந்த மனதை யடக்குவதானது, காற்றைச் சஞ்சரிக்க வொட்டாது அடக்குவது போல, மிகவும் அசாத்தியமான தென்று நான் நினைக்கின்றேன்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“சகல வஸ்துக்களையும் பிரஹ்மமாகவும், பிரஹ்மத்தைச் சகல வஸ்துக்களாகவும் சமமா யறிய வேண்டு மென்பதாய்ச் சொன்னீர். மனது சஞ்சல முள்ள

தாதலால், அவ்வகைப்பட்ட அபேத புத்தி நிலைமையா யுண்டா வது மிகுந்த கஷ்ட மென்பது அர்ச்சுனன் அபிப்பிராயம்.”]

[அதாவது பிரகிருதி சம்பந்தத்தினால் தேவதைகள் வேறு, மனிதர்கள் வேறு, மற்ற ஜந்துக்கள் வேறு என்று புலப்படுகிறது. பிரகிருதி சம்பந்தம் விலகினால் எல்லா ஆத்ம ஸ்வரூபங்களும் ஞானாகாரங்க ளானதினாலே தேவமனுஷ்யாதி பேத மில்லாமல் சம மாகவே யிருக்கும். அவ்வாறு பிரகிருதி சம்பந்தம் விலகிய ஞானா காரமயமா யிருக்கிற ஆத்மாவும் பரமாத்மாவும் பேத முள்ளவர்க ளானாலும், பரமாத்மாவிற்கு எவ்வாறு பிரகிருதி சம்பந்தமும் கரு மாதிகளு மில்லையோ, அவ்வாறே பிரகிருதி விமுக்த ஆத்மாக்களுக்கு மில்லை. ஆகலின், ஜீவேசுவர ஆகார பேதமான சமத்துவம் கூறப் பட்டது. அதனை உணர்வதுதான் சமதரிசன யோக மென்பதாக வும் சொன்னீர். இது எனக்கு மிகவும் கஷ்டமாகத் தோற்றுகின் றது. ஏனெனில், ஜீவனுடைய கரும வாசனையினாலே அவனுடைய மனதானது வெகு காலமாய் எப்பொழுதும் விஷயங்களில் முழுகி, அந்த விஷயங்களிலுங்கூட ஒருவித நிலையை யடையாமல் துக்க மாகவே யிருக்கின்றது. இவ்வண்ணம் வெகு காலமாகப் பழக்கத்தி னால் வேரூன்றி யிருக்கின்ற இந்த மனதைத் திருப்பி, என்றைக் கும் காணாததும் - கேட்காததும் - நினைக்காததுமாகிய பிரகிருதி விமுக்த ஆத்ம ஸ்வரூப சாம்ய த்ரிசனமாகிற தியான யோகத்தில் நிலையாய் வைத்திருக்க வேண்டுமென்றால், எவ்வாறு முடிவு பெறும்? மோதிக்கொண்டு வரும் பெருங் காற்றைத் தடுத்து நிறுத்தல் எவ் வாறு அசாத்தியமோ, அதுபோன்று விலகக்கூடியதாயும், பலாத் காரமாய்த் தன்னிச்சையின்படி பிரவேசிக்கிறதாயு மிருக்கிற மனதை நிறுத்துவது அதிகப் பிரயாசையாகும்.] 33-34

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

“அர்ச்சுனா! மனதை அடக்குவதானது மிகவும் பிரயாசையும் சஞ்சலமு முள்ள தென்பதில் (சிறிதும்) சந்தேக மில்லை. அவ்வா றிருந்தபோதிலும், பழக்கத்தாலும் விஷயங்களை வெறுப்பதாலும் மனம் அடக்கப்படுகின்றது. அடக்கப்படாத மன முடையவனாலே யோகம் அடையக்கூடிய தன்று; அடக்கப்பட்ட மன முடையவனாய் முயற்சி செய்பவனாலே அப்பியாசம் வைராக்கியம் ஆகிய உபாயங்களி னாலே அடைதற்குச் சாத்தியமானது.”

['பழக்கத்தாலும்' என்று கூறினதால், ஆத்மா சற்குணகார மென்கிற அப்பியாசத்தினு லுண்டாகிற பிரியம். 'வெறுப்பதாலும்' என்று கூறியதால், விஷயங்கள் தோஷகர மானவை யென்று அப் பியாசத்தினுலே தெரிந்து விஷயங்களை விட்டு மனது விலகுவது தான் வைராக்கிய மாகும்.] 35-36

அர்ச்சுனன் வாக்கியம்

"கிருஷ்ணு! நம்பிக்கையோடு கூடி யோகத்தில் பிரவேசித்து முழுவதையும் முடிக்க முயற்சி யில்லாமல் யோகத்தி னின்றும் நழுவி விஷயங்களில் பிரவேசித்த மனமுடையவன் யோகத்தா லுண்டா கும் பிரயோஜனத்தை யடையாமல் எக்கதியை யடைகின்ருன்?" 37

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"ஓ! புஜபல முடையவனே! கரும மார்க்கம், யோக மார்க்கம் இவ்விரண்டுங் கெட்டு ஆசிரய மற்றுப் பிரஹ்மத்தை யடையு முபா யத்தில் ஞான முதிர்ச்சி யில்லாதவன் சிதறிய மேகம்போல நாச மடையா திருப்பானே? என்ன?"

[இரண்டுங் கெட்டவ னென்ருல், பிரஹ்மத்தை யடையத் தகுந்த யோக மார்க்கத்தை விட்ட அஞ்ஞானி. அஃதன்றி, துறக்கமு மில்லை. மோக்ஷமு மில்லை; அன்றி, துறக்கத்திற்குச் சாதனமான காமிய கருமமு மில்லை; மோக்ஷத்திற்குச் சாதனமான பூரணத் தியான யோகமு மில்லை; அல்லது, இகலோக சுகமுமில்லை, பர லோக சுகமு மில்லை.] 38

அர்ச்சுனன் வாக்கியம்

"ஓ! கிருஷ்ணு! எனக்குண்டான இச்சந்தேகத்தை அடியோடு களைய வேண்டும். இந்தச் சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறவர் உம் மைத் தவிர வேருருவ ரில்லை." 39

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"ஓ! பார்த்தா! யோகப்பிரஷ்டனுக்கு இந்த லோகத்திலும் நாசமான துண்டாகிறதே யில்லை, பரலோகத்திலும் நாச முண்டா கிறதே யில்லை. சத்கருமத்தைச் செய்கின்ற எவனும் கெடுதியை அடைகிறதில்லை. யோகஞ் செய்தும் பூரணமாய்ச் செய்யாமல் விட்டு விட்டவனுகிய யோகப்பிரஷ்டன் புண்ணியஞ் செய்தவர்களின் லோகங்களை யடைந்து, வெகுகாலஞ் சுகமாயிருந்து, சதாசாரமுள்ள

செல்வர்களின் கிருகத்திற் பிறக்கின்றான்; அல்லது, ஞானிகளான யோகாப்பியாசஞ் செய்கின்றவர்களின் குலத்திலே பிறக்கின்றான்; இந்த லோகத்தி லிவ்வாறான பிறவி எதுவோ இது மிகவும் துர்லபமானது.” 40-42

“ஓ! குருநந்தன! அதில் (அந்த ஜன்மத்தில்) பூர்வதேக வாசனையால் தனக்குண்டாய அவ்வாறான புத்தி சம்பந்தத்தை அவன் அடைகின்றான்: அதன் பின்னர், யோக சித்தியை யடைவதற்குப் பிரயத்தனஞ் செய்கின்றான்.” 43

“அந்தப் பூர்வ ஜன்ம அப்பியாசத்தாலே பராதீனனாய் அவன் (விஷயங்களினின்றும் யோகத்திற்கு) இழுக்கப்படுகின்றான்; யோகாப்பியாசஞ் செய்ய வேண்டுமென்னும் விருப்பமுடையவனானுங்கூட வேதோக்த கருமபலத்தை அதிக்கிரமிக்கிறான்.” 44

“அதன் பிறகு, முயற்சியாலே யோகாப்பியாசஞ் செய்கின்ற யோகி பாபத்தினின்றும் விடப்பட்டவனாய் அநேக ஜன்மங்களிற் சித்தியை யடைந்தவனாய், அதற்குப் பின்பு உத்தமமான கதியை யடைகின்றான். யோகி, தவஞ் செய்கின்றவர்களைப் பார்க்கிலும் அதிகன்; சாஸ்திர ஞான முள்ளவர்களைப் பார்க்கிலும் அதிகன்; யோகி கருமஞ் செய்கிறவர்களைப் பார்க்கிலும் அதிகனென்று எண்ணப்பட் டிருக்கின்றான். ஆதலால், ஓ! அர்ச்சுனா! நீ யோகியாகக் கடவாய்.” 45-46

“சகலவித யோகிகளுள்ளும் எவன் என்னிடத்தில் நிறுத்தப் பட்ட மனதாற் பக்தியோடு கூடினவனாய் என்னைப் பஜிக்கின்றானோ அவன் சிரேஷ்டமான யோகியாக எனக்குச் சம்மதனா யிருக்கின்றான்.”

[அதாவது, எனக்குப் பிரீதியைச் செய்கிறதைத் தவிர, சகல வியாபாரங்களையும் விட்டிருக்கிற மனதினாலே, என்றால், பாகியாந்தர (வெளி உள்) விருத்தி யிரண்டிலும் என்னையே அதிகப் பிரியமான வஸ்துவென்று அடுத்து என்னை விட்டு ஒரு க்ஷணங்கூடப் பிரியாமலும், என்னை விட்டு விலகினால் நசித்துப்போவோமென்கிற நினைவு கொண்டதாயு மிருக்கிற மனதினாலே என்னைச் சீக்கிரமாக அடையவேண்டு மென்பதில் அதிக பரபரப்போடு கூடியிருக்கின்றான். ஆகையால், இவன் மேலாகச் சொல்லிவந்த நான்குவித யோகிகளைக் காட்டிலும் சிரேஷ்ட னாவானென் றறியக்கடவாய்.]

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"சில யோகிகள் யோக சமாதியில் தியானத்திற்கு விஷயமாக உருத்திரன், இந்திரன், சூரியன், சுப்பிரமணியன், கணபதி முதலிய தெய்வங்களி லொன்றைக் குறித்துக் கொள்ளுகின்றார்கள். சில யோகிகள், தியானத் திற்கு விஷயமாக வாசுதேவனையே குறித்துக்கொண்டு அதிக பக்தி விசுவாசத்தோடு தியானஞ் செய்கின்றார்கள். இவர் களுள் வாசுதேவனைத் தியானிக்கின்ற யோகியே சிரேஷ் டன்."] 47

ஆறாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.



## ஏழாவது அத்தியாயம்

# விஞ்ஞான யோகம்

### அவதாரிகை

[இப்படிப் பிரதான பலனாய், பரப்பிரம்மமாய், நித்தியனாய், குற்ற மற்றவனாய், எல்லா வுலகங்களுக்கும் முக்கிய காரணனாய், யாவு மறிந்தவனாய், எப்பொருட்கு முயிராய், நினைத்ததைத் தப்பாமல் செய்ய வல்லவனாய், மகத்தான ஐசுவரியவானா யிருக்கும் ஸ்ரீமந் நாராயணனைக் கிட்டுகைக்கு உபாயம், அவனை உபாசிப்பதுதாமென்ன றருளிச் செய்பவராய், இதற்கு ஆத்ம ஞானத்தோடு கூடிக் கர்மத்தைச் செய்து பெறவேண்டிய ஜீவாத்ம தரிசனம் அங்கமா யிருக்கையாலே அதை யருளிச் செய்தார். இப்போது, நடுவிலுள்ள இந்த ஆறு அத்தியாயங்களால் பரப்பிரஹ்மமான பரமபுருஷ ஸ்வரூபத்தையும், அவனை உபாஸிப்பதான எம்பெருமானை உபாஸிக்கும்போது அவ் வுபாயமென்னும் ஞானம் பக்தியாய்த் திரிந்தால் மாத்திரந்தான் பரம புருஷனை யடையலா மென்கிற பக்தியையும் அருளிச் செய்கிறார். அதில் இந்த ஏழாவது அத்தியாயத்தில் உபாஸ்யனான பரம புருஷ ஸ்வரூபத்தின் உண்மையும், அது பிரகிருதியால் மறைக்கப் பட்டிருக்குந் தன்மையும், அம் மறைவு நீங்குகைக்காக எம் பெருமானிடத்தில் பண்ணும் பிரபத்தியும், உபாசிப்பவர்களின் உட்பிரிவும், அதில் ஞானிகளுக் குண்டான சிறப்பும் சொல்லப்படுகின்றன.]

### ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனா! நீ நமது ஸ்வரூபம், குணம், சேஷ்டை, விபூதி ஆகிய இவற்றைப் பிரியும்படி நேரிட்டால், அந்த க்ஷணமே நம்மிடத்தில் விருப்பத்தால் நீர்ப்பண்டம்போல் உருகிப் போம்படியான மனதைக் கொண்டு நம்மையே நாடியவனாய் (அப்படியே நம் பிரிவில் தரிக்கமாட்டாமல்) நம்மையே ஆதாரமாக நம்பியவனாய் யோகஞ் செய்யத் துவக்கி, அந்த யோகத்துக் கிலக்கான நம்மைச் சம்சய மில்லாமல் முழுதும் எப்படியானால் அறிவாயோ அவ்வித ஞானத்தை யுனக்கு உபதேசிக்கின்றோம். அதை ஸாவதானமாகக் கேட்பாயாக."

[கருத்து:—பரமாத்மா மனனத்தினலாவது, தியானத்தினலாவது, பலகாலும் கேட்பதினலாவது அடையக்கூடியவ னல்ல; பரமாத்மா எவனல் வரிக்கின்றனே அவனல் மாத்திரம்தா னடையப்பட்டு தன் ஸ்வரூபத்தை அவனுக்குப் பிரகாசிப்பிக்கின் றன். பரமபுருஷன் இவனை வரிப்பதற்குக் காரணமாய் இவன் செய்யும் இடைவிடாத சிந்தை யென்றும், சிந்திக்கப்படும் பகவான் இனிய னகையாலே அச் சிந்தையும் இனியதா யிருக்க மென்றும் நிச்சயிக்கப்பட் டிருக்கிறது.] 1

"அர்ச்சுன! உனக்கு ஞானத்தை விஞ்ஞான சஹிதமா யுபதேசிக்கின்றேம். ஞானமாவது-பகவத் ஸ்வரூப ஞானம்; விஞ்ஞானமானது-அதைப் பிரித்தறியும் ஞானம். அதாவது, சர்வேசுவரனுகிய நாம் ஈனமான எல்லாப் பொருள்களுக்கும் எதிராய் அளவிலா அதிசயமும், எண்ணற்கரிய கல்யாண குணங்களும், அநந்தமான விபூதியும் உடைத்தா யிருத்தலினல் சேதன சேதனங்க ளெல்லாவற்றிலும் வேறுபட்டிருக்கிறே மென்பதை அறியும்படியான ஞானம்; அதை உனக்கு உபதேசிக்கின்றேம். இதைக் கேட்பாயாகில், பிறகு நம் விஷயமாய்க் கேட்கும்படியான அம்சம் சிறிதுங் கிடைக்கமாட்டாது." 2

"மேலும், அநேக ஆயிரம் மனிதர்களில் ஒருவன் என்னை அறிந்துகொள்ள முயலுகின்றன். (அவ்வாறு முயலினும் பிரகிருதியில் மூன்று குணங்க ளிருந்தால் சத்வ காரியம் நடவாது.) முயன்ற அநேக ஆயிரம் மனிதர்களில் ஒருவன் என்னை அறிந்துகொண் டிருக்கின்றன்." 3

"அவ்வாறு தெரிந்துகொண்டவர்களின் ஆயிரக் கணக்கில் ஒருவன் உண்மையாய்த் தெரிந்துகொண் டிருக்கின்றன். நான், வேதங்களாலாவது, தவத்தாலாவது, தானத்தாலாவது, யாகத்தாலாவது, அர்ச்சுன! நீ இப்பொழுது பார்த்ததுபோல் பார்க்கக் கூடியவனல்லன். பின்னை, என்னையே விஷயீகரித் திருக்கிற பக்தி யொன்றினல் மாத்திரந்தான் என்னை உள்ளபடி யறியவாவது, பார்க்கவாவது, அடையவாவது கூடும். புசிக்கும் பண்டங்களாகவும், புசிக்குங் கருவிகளாகவும், புசிக்கத்தக்க விடங்களாகவும், விசித்திரமாய் எண்ணிறந்தவைகளா யுள்ள இவ் வுலகத்தின் முதற்காரணமா யுள்ள இந்தப் பிரகிருதியானது கெந்தம் முதலான குணங்கள் பொருந்திய பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமென்ற பஞ்ச பூதங்களாகவும், மனம் முதலிய இந்திரியங்களாகவும், மஹத்தென்றும், அகங்

காரமென்றும், இவ்வாறு எட்டு வகையாய்ப் பிரிக்கப்பட்டு நமக்கு ஆதீனமா யிருக்கிற தென்று அறி.'' 4

''அர்ச்சுனா! நமக்கு இரண்டு பிரகிருதிக ளுண்டு: அதில் மேற்சொன்ன பிரகிருதி மிகவும் இழிவானது. இதைக் காட்டிலும் வேறான ஜீவனென்னும் மற்றொரு பிரகிருதியானது இதைப் புசிப்பதாகையால் இதைக் காட்டிலும் சிறந்ததாய் ஞான வடிவமா யிருக்கின்றது. இதுதான் அசேதனமான இவ் வுலகங்க ளெல்லாவற்றையும் தரிக்கின்றது. சேதனமாயும், அசேதனமாயு மிருக்கும் இவ் விருவகைப் பிரகிருதியினின்றுந்தான், பிரமன் தொடங்கித் தாவரமீறாய் ஏற்றமுந் தாழ்வுமாய்ச் சித்தும் அசித்துமாயுள்ள இந்தப் பூதங்கள் யாவும் உண்டாகின்றன. நமது பிரகிருதியால் உண்டானதுபற்றி இவை யாவும் நம்முடையவைகளே; ஆக இப்படிச் சகல லோகங்களுக்கும் பிரகிருதிகள் காரணமா யிருப்பதுபோல் அப் பிரகிருதிகளுக்கு நாம் காரணமாய்ச் சேஷியா யிருக்கையால் எல்லா வுலகங்களுக்கும் நாமே சேதனா சேதனங்களின் தொகையான பிரகிருதி புருஷர்களுக்குப் பரமபுருஷன் காரணமென்றும், நாமே லயத்திற்குக் காரணமென்றும், சேஷியென்றும் அறியக்கடவாய்.'' 5-6

''சர்வ காரணமான பிரகிருதிகளிரண்டிற்கும் காரணமா யிருத்தலாலும், சகல அசேதனத்துக்கும் சேஷியான சேதனனுக்கும் சேஷியா யிருத்தலாலும், எவ்வாறு பராத்பரமா யிருக்கின்றேனோ, அவ்வாறு ஞானம் சக்தி பலம் முதலியவைகளாலும் நானே பராத்பரம். ஞானத்தாலாவது பலத்தாலாவது மற்றெவ்விதத்தாலாவது என்னைப் பார்க்கிலும் மஹா சிரேஷ்டம் வேறொன்றுமில்லை. சேதனா சேதன ரூபமான இவ் வஸ்துக்க ளெல்லாம் காரியமான நிலையிலும், காரணமான நிலையிலும் எப்போதும் எனக்குச் சரீரமாய், ஒரு நூலில் கோர்க்கப்பட்ட முத்து முதலிய இரத்தினங்கள்போல அந்தராத்மாவாய் நிற்கும் நம்மிடத்தில் கோர்க்கப்பட் டிருக்கின்றன.''

[மேற் கூறிய, 'மகா சிரேஷ்டம்' என்பதற்கு ஸ்ரீ இராமாநுஜர் பொருள் கொண்டதாவது எவ்வாறெனின், ஜடசேதனங்களுக்குச் சேஷியாகவும் அவற்றிற்குக் காரணமாகவு மிருத்தலானும், ஞானம்-சக்தி-பலம் முதலிய குணங்களோ டிருத்தலானும் சிறந்ததென்று கூறப்பட்டது. நூலில் மணிகளைக் கோர்த்தாற்போல என்னிடத்தில் இந்தச் சகல பிரபஞ்சங்களும் கோர்க்கப்பட் டிருக்கின்றன. எவ்வாறெனில், காரிய

காரண அவஸ்தைகளோடு கூடிய இந்த ஜடசேதன ரூபமான சகல பிரபஞ்சங்களும் எனக்குச் சரீரம். சகலத்திற்கும் ஆத்மாவான (சரீரியான) என்னிடத்திற் சகல பிரபஞ்சங் களும் ஆசிரயித் திருக்கின்றன வென்பது பெறப்பட்டன.] 7

[அவதாரிகை:—ஆகையால், சகல ஜகத்தும் பிரஹ்மமும் முறையே சரீரமும் ஆத்மாவுமா யிருக்கு மென்கிற விஷயம் அந்தராத்மா வான எம்பெருமானுக்குச் சரீரமாய், குடம் முதலியவற்றை விட்டுக் குடத் தன்மை முதலியவை பிரிக்கப்படாதது போல, பரமாத்மாவை விட்டுப் பிரகிருதியும் ஜீவனும் பிரிக்கப்படாம லிருத்தலாம். அதாவது, அவனே சர்வப் பிரகாரமாகவு மிருக் கிறு னென்றும், ஆனது பற்றியே உலகத்தில் வழங்கும் எல்லாச் சப்தங்களும் அவனையே சொல்லுகின்றன வென்றும், அந்தந்த சப்தங்களைக்கொண்டு பரமாத்மாவைப்பற்றிச் சொல்லுகின்றார்.]

ஓ! பரத்குலத் தரசே! ஜலத்தில் ரஸமும் சூரிய சந்திராதியரில் ாந்தியும், வேதங்களில் பிரணவமும், ஆகாயத்தில் சத்தமும், புரு ஷர்களில் ஆண்மையும் நானாக இருக்கின்றேன்.''

''புவியில் நல்ல மணமும், தீயில் சுடரும், சகல பூதங்களிலும் ஆயுளைத் தரிப்பதும், தவசிகளில் தவமும் நானாக இருக்கின்றேன்.''

''சர்வ பூதங்களுக்கும் அழியாத வேர் முதலாயும், புத்திமான் களுக்குள் புத்திமானும், பராக்கிரம முள்ளவைகளுள் பராக்கிரம மாயும் நான் இருக்கின்றேன்.''

''ஏ! பரதரிஷப! பல முள்ளவைகளுள் ஆசா பாசங்க ளற்ற பலமாயும், பிராணிகளுள் தருமத்திற்கு விரோதமில்லாத ஆசையாயு இருக்கின்றேன்.''

''சத்வகுண ரூபங்களான சமதமாதிகள், ரஜோகுண ரூபங்க ளான கர்ம சந்தோஷாதிகள் தாமஸகுண ரூபங்களான சோக மோகாதிகள் இவ்வாறு பலவாறுயுள்ள பதார்த்தங்கள் யாவும் என் னிடத்தினின்று முண்டாய், எனக்குச் சேஷப்பட்டு, எனக்குச் சரீரமாய் என்னிடத்திலேயே யிருக்கின்றன.''

[கருத்து:—7-வது சுலோகத்தில், நூலில் மணிபோலப் பிரபஞ்சம் என்னிடத்தில் கோர்க்கப்பட் டிருக்கிறதென்று சொல்லப்பட்ட தல்லவா? அஃதெப்படி என்பது 8-முதல் 11-வரையிலுள்ள சுலோகங்களினால் விவரிக்கப்படுகிறது. ஜலத்தில் இரஸாம்ச

மெதுவோ அது என்னுடைய சுவரூபம். அந்த ரஸமான என்னுடைய சுவரூபமாகிற நூலில் மணியாகிற ஜலமானது கோர்க்கப்பட்டிருக்கிறது; ஆகையால், இரஸமே நானென்று சொல்லப்பட்டது மற்ற சந்திர சூரியர் முதலிய விஷயங்களிலும், இது போல அர்த்தங் கிரகிக்க வேண்டியது. 'நல்ல வாசனை' என்று கூறப்பட்டிருக்கிறது. "கெட்ட நாற்றத்தில் ஈசுவராம்ச மில்லையோ?" என்றால், இல்லை யென்று சொல்லும் பொருட்டு ஈண்டுப் புண்ணிய கெந்த மென்று சொன்னதாகக் கருத்தல்ல. பூமியிலும் மற்றப் பொருள்களிலு முள்ளவைக ளெல்லாம் நல்ல வாசனையே. ஆனால், மற்றைய தத்துவங்களுடைய சேர்க்கையினால், நற்கந்தம் துர்க்கந்த மாகிறதே யன்றி அவை சுவபாவமல்ல. அதெப்படி யென்றால், சத்தமும், ஞானப் பிரகாசமு முள்ள ஜீவஸ்வரூபமானது, அவித்தையினுடைய சம்பந்தத்தால் அவித்தையும், அஞ்ஞானத்தையு மடைந்திருக்கிறது போலவாம்.]

[மேற் கூறிய கருத்துக் கிணங்க, ஸ்ரீதர ஸ்வாமிகள் கூறியதாவது:—"இரஸத்தின் சூக்ஷ்ம பாகம் என்னுடைய அம்சம்; அந்த அம்சமானது விபூதி யென்றுஞ் சொல்லப்படும். அந்த என்னுடைய அம்சமாகிய இரஸத்திற்கு நானிருப்பிட மாகையால் "ஜலத்திலுள்ள இரஸம் நான்" என்று கூறப்பட்டது. மற்றவைகளு மிதே அர்த்தத்தில் கிரகிக்கப்பட வேண்டும். கிடைத்த வரையில் உற்சாக மில்லாது இன்னும் வேண்டு மென்கிற ஆசை என்பது இவர் கொள்கை. ஸ்வஸ்திரீ விஷயத்திலுண்டாகும் காம விஷயத்திலுங் கூடத் தருமத்திற்கு விரோதமா யிருத்தல் கூடாது.] 8-12

"அர்ச்சுனா! சத்வகுணத்தினா லுண்டானவைகளும், இரஜோ குணத்தினா லுண்டானவைகளும், தமோ குணத்தினா லுண்டானவைகளும், இந்த உலகத்தில் தேகமாகவும், இந்திரியங்களாகவும், அனுபவிக்கக்கூடிய வஸ்துக்களாகவும், அவைகளுக்குக் காரணங்களாகவும் எங்கெங்கு வஸ்துக்க ளிருக்கின்றனவோ, அவைக ளெல்லாவற்றையும் என்னிடத்திலிருந்தே உண்டானவைகளாக அறி. அவைகள் எனக்குச் சரீரங்க ளாகையினால் என்னிடத்திலேயே இருக்கின்றன வென்று அறியக்கடவாய். நானோ ஒருபோதும் அவைகளுக்கு வசப்பட்ட நிலைமை யுடையவ னல்லன். அதாவது, மற்ற இடங்களில் சரீரம் ஆத்மாவிற்கு வசப்பட்ட நிலைமை யுடையதாக விருக்க போகிலும், ஆத்மாவின் இருப்புக்குச் சரீரத்தினாலும் உபகார மிருக்கின்றது. எனக்கோ வெனின், அவைகளினால் அவ்வா

ருவிதமான உபகாரமு மில்லை. லீலையின் பொருட்டு தேகத்
தக் கிரகின்றேன்.”

[“ஆகையால், இவ்வாறு சேதனு சேதனங்களாகியும் எனக்குச்
சஷ பூதங்களுமான எல்லா லோகமும் அந்தந்தக் காலங்களில்
ன்னிடமிருந்தே உற்பத்தியாகின்றன; என்னிடமே இலயத்தை
அடைகின்றன. ஆதலின், நானே காரண தசையிலும், கார்ய தசையி
லும் எல்லாவற்றையும் சரீரமாக வுடையவனாகையினால் எல்லா
பிரசனங்களையு முடையவனாக விருக்கின்றேன். ஆகையினால், கார
ணமாக இருத்தலினாலும், ஞான முதலிய எண்ணிறந்த கல்யாண
குணங்களின் கூட்டங்களினாலும், மற்றெல்லா விதங்களினாலும்
பார்ந்தவன்: என்னைவிட வேறான வஸ்து ஒரு விதமான கல்யாண
குணத்தினாலும் சிறந்ததில்லை. இவ்வா றுள்ளவனாகியும், மூன்று
விதங்களான சத்துவம், இரஜஸ், தமஸ் என்றும் குணங்களி
னுண்டான வஸ்துக்களைவிட எனக்கு அஸாதாரணங்களான கல்
யாண குண சமூகத்தினாலும் அனுபவிக்கக் கூடியவைகளான எல்லா
வற்றாலும் மிகவும் சிறக்கப் பெற்றவனும், எப்போது மொரே
படித்தான சுபாவத்தைப் பொருந்தினவனுமான என்னை அந்த
மூன்று குணங்களினா லுண்டானதாயும், மிகவும் ஆச்சரியங்க
ளாயும், நிமிடத்திற்குள் அழியக்கூடியவைகளாயும், பூர்விகத்தில்
செய்த கர்மங்களுக்குத் தக்கபடி தேகமாயும், இந்திரியங்க
ளாயும், அனுபவிக்கத் தக்கவைகளாயு மிருக்கிற வஸ்துக்களினால்
மயக்கப்பட்ட தேவதை, பசு, மனிதன், ஸ்தாவரம் ஆகிய இவைக
ளாகப் பிரிந்திருக்கிற இந்த உலக முணர்வதற்குத் தெரிந்து
கொள்ளுகிற தில்லை.”]

[மேற் கூறிய விஷயத்திற்கு அத்வைத கக்ஷியார் வேறே பொருள்
விரிப்பர். அதாவது, “ஏஹிஃ பாவை மோஹிதம்” என்றது, பிர
பஞ்ச மிவ்வாறு தோற்றமுடைய தென்னும் விஷயத்தைப் பற்
றிய மயக்கமாம். என்னை? சிலர், “மாதா வயிற்றி லிருந்து
பிள்ளை உதயமானவாறு ஈஸ்வரனிடமிருந்து உலகம் பிறந்தது”
எனக் கூறுவாரு முளர். இது ஆரம்ப பக்ஷமாம். “இவ்வாறு
சொன்னால் பிழையுண்டோ?” எனின், தாய் கருப்ப மடைந்து
சுதனைப் பெறுவதற்குப் புருடனது பீஜமும், அது வளர்தற்கு
வயிற்று வெளியும், இவ் வெளி யுண்டாதற்குத் தேகமும், இவ்
வெளியிடத்தில் தாயின்மை முதலிய அளவில்லாத அசம்பா
விதங்க ளிருத்தலின் இது கூடாவாம்.

பின்னுஞ் சிலர், "பால் தயிரானதுபோல ஈஸ்வரனே உலகமாயி னான்" என்று கூறுவர். இது பரிணாம பக்ஷமாம். "இவ்வாறு கூறினால் யாது குற்றம் பயக்கும்" எனின், பால் கெட்டே தயி ராக வேண்டுமே யல்லாது கெடாது தயிராத லின்று. இங்ங னம் ஈஸ்வரன் கெட்டு உலகமாயினானெனின், பின்பு ஈஸ்வரன் இல்லையென்றே சொல்ல வரும். ஆதலின், இஃதும் அசம்பா விதமே.

வேறு சிலர், "உலகம் அநாதி நித்தியமாம்" என்பர். இது நித் திய பக்ஷமாம். இங்ஙனம் கூறின் யாது குற்ற மென்றாலோ, உலகம் சிருஷ்டிக்காக ஒருவனை வேண்டுவதில்லை யாதலின், கர்த்தாவான ஈஸ்வரனைப்பற்றி யாரும் நினைக்க வேண்டுவ தில்லை. அல்லாமலும், அகர்த்தா ஜடமான உலகந் தானே வருவதற்குங் கூடாதாகலின் இஃதும் அசம்பாவிதமாம்.

மேலுஞ் சிலர், "மண் கட முதலியவாகத் தோன்றியது போல வும், ஜலம் அலை முதலியவாகத் தோன்றியது போலவும், ஈஸ் வரனே உலகுயிர்களாகத் தோன்றியது" என்பர். இது விருத்தி பக்ஷமாம். மண் கட முதலியனவாக விகார மடைந்தவாறு, ஈஸ்வரனு மாங்கு விகார மடைந்தவனென வரும். அவர் நிர் விகாரி ஆகலின், இஃதும் அசம்பாவிதமேயாம்.

"இவ்வாறாயின் மற்றியாது உண்மை?" என்றால், கானலில் நீரும், கட்டையிற் கள்ளனும், கிளிஞ்சலில் வெள்ளியும், கயிற்றில் அரவும்போலச் சொற்றோற்ற மாத்திரமாய் ஆரோபமாய் சர் வாதிஷ்டான சைதன்னியமான ஈஸ்வரனிடத்தில் ஜீவ ஜடப் பிரபஞ்சங்க ளனைத்தும் விவர்த்த பக்ஷமாய் அநாதி நித்தியம் போலத் தோன்றி நிற்றுமாதலின், சகல சேதன சேதனப் பிர பஞ்சங்களிலும் நானில்லை. அவை யென்னிடத்தி லிருக்கின் றனவென முற்சுலோகத்தினாற் கூறி, உளது இலது என்கிற விவகாரங்களுக்குச் சாக்ஷியாய் அவிகாரியமான என்னை அறிய மாட்டார்க ளென்பதாம். பிரமத்தினிடத்தில் யாவற்றும் விவர்த்தமன்றி யுண்மையில் சகத்தை யுடையனவாய் தனிப் பொருள்கள் அல்லவென்பதி லுண்மை முன்னரே இரண்டா வது அத்தியாயத்தில் கூறப்பட்டதைக் கடைப்பிடித்து ஊகித் துக் கொள்ளுக.]

"கிருஷ்ணா! உலகத்தி லின்பந்தரு மெய்ப்பொருளுக்கும் மேலாய் அந்தமில் பேரின்ப வடிவமாய், எந்நாளும் ஒரே ரூபமா யெழுந் தருளி யிருக்கிற தேவரீரை விட்டு, பிராணிகள் மிகவும் இழி வுற்ற குணங்களின் விகாரமாய் அசாஸ்வதமா யுள்ள பண்டங் களை யனுபவிக்க விரும்புகிறார்களே; இதற்கென்ன காரணம்?"

"அர்ச்சுனா! சத்வம், ரஜஸ், தமஸ் என்கிற முக்குணங்களின் விகாரமான இந்த மாயை யென்பது பொய்யான விஷயத்தைச் சொல்வதல்ல. இந்திரஜால வித்தை முதலிய விடங்களில் கூடப் பொய்யான விஷயத்தை யுட்கொண்ட மெய்யறிவை யுண்டுபண்ணும்படியான சில மந்திரம் ஔஷதம் முதலியவை யுண்டாகையாலே அங்கும் மாயாவி யென்று வழங்குகிறார்கள். எங்கும் ஒரு சொல்லுக்கு ஒரே விதமாய்ப் பொரு ளுரைப்பது யுக்தமாகையாலே இந்திரஜால வித்தையிலும் மாயை யென் கிறது மந்திரம் ஔஷதம் முதலியவைகளைத்தான். அங்கே பொய்யான விஷயத்தை மாயை யென்ப தெதனு லென்றால்; மஞ்சத்தி லிருப்பவர் பேசக் கண்டு மஞ்சம் பேசுகிற தென்று வழங்குவது போல், மாயை யென்று சொல்லப்பட்ட மந்திரம் ஔஷதம் முதலியவைகளின் காரியத்தைக் கண்டு மாயை யென்று வழங்குகிறது. ஆகையால், பிரகிருதி யென்னும் மாயையானது என்னுடைய லீலைக்காக என்றாலேயே ஏற் படுத்தப்பட்ட தாகையால் இதைக் கடப்பதற்கு ஒருவராலு மாகாது."

"கிருஷ்ணா! அதைக் கடக்கும் வழிதா னெது?" 13

"அர்ச்சுனா! சத்திய சங்கல்பனாய்ப் பெருங் கருணை வள்ளலாய் எல்லா வுலகங்களையும் சிறிதும் கைம்முதலைக் கோராமல் காப்பவ னாகிய நம்மையே எவர்கள் சரணாகப் பற்றுவார்களோ அவர்கள் தான் குணவிகாரமான இம் மாயையைக் கடந்து நம்மை உபாசிப் பார்கள்." 14

"ஓ! அர்ச்சுனா! பிராணிகளில் பாவஞ் செய்தார் சிலர்; மூடர் சிலர்; நராதமர் சிலர்; மாயையால் அறிவிழந்தவர் சிலர்; அசுரத் தன்மை யடைந்தவர் சிலர்; இவ்வாறாகிய இவர்கள் நம்மைச் சரண டையார்கள்." 15

"இவர்கள் முதலிலிருந்து ஒருவரைப் பார்க்க ஒருவர் மகா பாபிகள். புண்ணியஞ் செய்தவர்களோ நம்மையே சரணடைந்து நம்மையே சேவிக்கிறார்கள். இவர்களும் அவ்வாறே ஆர்த்த னென் றும், ஜிக்ஞாஸு வென்றும், அர்த்தார்த்தி யென்றும், ஞானி யென் றும் நான்கு வகைப்பட்டுத் தங்கள் தங்கள் புண்ணியச் சிறப்புக்குத் தக்கபடி முதலிலிருந்து ஒருவரைப் பார்க்க ஒருவர் அதிக சுகிர்தஞ் செய்தவர்கள். அவ்வாறு பஜிப்பவர் புண்யாத்மாக்கள். ஆர்த்தன் கஷ்டத்திலிருந்து என்னைத் தியானிப்பவன்;) ஜிக்ஞாஸு (ஞானத்தை

அடைய விரும்பி என்னை நினைப்பவன்;) அர்த்தார்த்தி (பிரயோஜனத்தைக் கோரி பஜிப்பவன்;) ஞானி (எந்தப் பிரயோஜனமு மில்லாமல் பஜிப்பவன்.") 16

"இவர்களில் ஞானிதான் மிகுதியுஞ் சிறந்தவன். ஏனெனில், அவன் என்னை யடையவேண்டு மென்று என்னையே எப்போதும் நாடியவனாய், மற்றொன்றிலும் பற்றின்றி விசேஷமாய் என்னிடத்தில் மாத்திரம் பக்தி யுடையவனா யிருக்கின்றான். மற்றவர்களோ தமது இஷ்டம் சித்திக்குமளவும் நம்மை நாடி யிருந்து என்னையும் தாம் கோரிய பலத்தையும் விரும்பி யிருக்கிறார்கள். ஆகையால், இவர்களைப் பார்க்க அவனே சிறந்தவன். ஏனெனில், அவன் என்னை யடையவேண்டியவனாகையால் எப்போதும் நம்மோடு அவனுக்குச் சேர்க்கை யுண்டு. இவர்களுக்கோ பயன் கைப்படு மளவுந்தான். அவ்வாறே, அவன் என்னைத் தவிர மற்றொன்றை விரும்பான். இவர்களோ, நம்மையும் விரும்பித் தமக்கென்று ஒரு பயனையும் விரும்புவார்கள். ஆகையால், இவர்களைப் பார்க்கிலும் அவனே சிறந்தவன். மேலும், நான் ஞானிக்கு மிகவும் இனியனாகிறேன். அதாவது, இனிமைக்கு இவ்வளவென்கிற முடிவு இல்லாமையால் அவனுக்கு நான் இவ்வளவுதானென்று சர்வக்ஞனான என்னாலும் சொல்லப் போகாதபடி ஞானிகளுக்குத் தலைவரான பிரஹ்லாதனுடைய பிரீதி பெரிய பாம்புகளால் கடிக்கப்பட்டவனாயிருந்தாலும் எப்பொழுதும் பகவானை நினைப்பதினாலுண்டான ஆனந்தத்தி லிருந்துகொண்டு தன்னுடைய தேகத்தை அறியவில்லை யென்று சொல்லப்பட் டிருக்கிறது. அவ்வாறே அவனும் எனக்குப் பிரியன்." 17

"இந்தச் சகலரும் சிலாக்கியமானவர்களே; (அதாவது, என்னிடத்திலிருந்து யாவர்களானால் சிறிதாயினுங் கொள்ளுகிறார்களோ, அவர்களை நான் எனக்கு எல்லாச் செல்வத்தையும் வழங்கிய பெருங் கொடையாளிகளாக நினைக்கிறேன்;) ஞானியோ, எனது ஸ்வரூபத்தைத் தரிக்கின்ற ஆத்மாவென்றே எனக்குச் சித்தாந்தம். அது எதனாலென்றால், அவன் என்னை விட்டுப் பிரிந்தால் தரிக்கமாட்டாததுபோல், நானும் அவனை விட்டுப் பிரிந்தால் தரிக்கமாட்டேன். ஆகையால், அவன் எனக்கு ஆத்மாவே." 18

"இவ்வாறு எம்பெருமானுக்கு ஆட்பட்டிருத்தலே ஆத்மாவிற்கு ஸ்வரூபம்" என்கிற ஞானவானாய் என்னைச் சரணம் புகுவ

ெதன்கிற விஷயம் ஸாமான்னியமாய்ச் சில ஜன்மங்களிற் செய்த புண்ணிய வசத்தால் வருவதல்ல. கேவலம் புண்ணிய ஜன்மங்க ளெத்தனையோ எடுத்த பிறகுதான், "நான் வாசுதேவனுக்கே ஆட்பட்டவன்; எனது ஸ்வரூபம் ஸ்திதி பிரவிருத்தி யெல்லாம் அவனுடைய ஆதீனம்" என்கிற நினைவு பிறந்து, "நான் அடைய வேண்டும் பயனும், அப் பயனை யடைவிக்கு முபாயமும், மற்றும் நான் கோரியவெல்லாம் அந்த வாசுதேவனே" என்று நம்மை உபாசிப்பன். அப்படிப்பட்ட பெருந் தன்மையோடு கூடிய புருஷன் கிடைப்பது லோகத்தில் மிகவும் அரிது." 19

"உலகத்திலுள்ள புருஷர்கள் யாவருமே தங்களுக்குச் சுவபாவமான பூர்வ ஜன்ம வாசனைக்குத் தக்கபடி எப்போதும் சப்தாதி விஷயங்களில் ஆசைகொண்டு, அவ்வாறு தாம் ஆசைப்பட்டவைகளைப் பெறவேண்டிக் கேவலம் (என்னை யொழிந்த) இந்திராதி தேவர்களை யடுத்து, அத் தேவர்களுக்குப் பிரீதிகரமான சில நியமங்களை யனுஷ்டித்து அவர்களை அர்ச்சிக்கிறார்கள்."

[மேற்கூறிய விஷயத்திற்கு ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"சிலர் தமது பூர்வ ஜன்ம வாசனையால் மயக்கப்பட்டவர்களாய் அவரவர்கள் நிச்சயித்துக்கொண்ட தியானப் பற்றினாலே சத்துவ ஞான மற்றவர்களாய்த் தத்தம் நியமத்தை முறையாகக் கொண்டு ஆத்ம சொரூபமாய் விளங்கும் பிரஹ்மத்திற்கு அன்னியமான தேவதைகளைப் பூஜிக்கின்றனர்." 20

"அவ்வாறே அவர்கள் அர்ச்சிக்குந் தேவர்களெல்லாம் நமக்குச் சரீரமென்று எந்த எந்த பக்தன் எந்த எந்தச் சிரத்தையோடு அர்ச்சிக்க விரும்புகிறானோ, (அவன் என்னை யறியாமற்போனாலும் உள்ளபடியே என் சரீரத்தைத் தானே யர்ச்சிக்கிறானென்று நாம் நினைத்து) அவனவனுக்கு அவ்வவ் விதமான சிரத்தையைத் திடப்படுத்துகிறேன். ஆகையால், இத்தகைய ஆராதனம் ஈசுவர ஆராதனமென்பது நன்கு விளங்கும்." 21

"இப்படி நம்மா லருளப்பட்ட (நிர்விக்கினமான) சிரத்தையைக் கொண்டே, அந்த இந்திராதி தேவதையின் ஆராதனத்தைச் செய்து (என் சரீரமான) அத் தேவதையி னிடத்தில் தான் கோரிய பயனை என்னா லளிக்கப்பெற்று அனுபவிக்கிறான். (ஆராதிக்கும் பொழுது) இந்திராதிகள் எனக்குச் சரீர மென்கிற விஷயத்தை அவன் அறியா

மற் பொருளாலும், உள்ளபடியே அது நம் ஆராதனை யாகையால் அவன் கோரிக்கையை நான் நிறைவேற்றுகிறேன்." 22

"ஆனால், இந்திராதிகளை யாராதிக்கும் அல்பமதிகளுக்குக் கிடைக்கும் அந்தப் பயனெல்லாம் அற்பமாயும் முடிவுள்ளதாயு மிருக்கும். ஏனெனில், இந்திராதி தேவர்கள் அநுபவிக்கும் போகங்க ளெல்லாம் இவ்வளவென்றும், இத்தனை காலமென்றும், வரையறை யுற்றவை யாகையால் அவ் விந்திராதி தேவர்கள் போகம் நசித்து நழுவும்பொழுது (அவர்களை யாராதிக்கும்) இவர்களும் நழுவுவார்கள். நம் பக்தர்களோ அதே கர்மங்களை நம் ஆராதனையாக நினைத்து அற்ப பலன்களில் பற்றில்லாமல் நமக் கினிமை செய்வதே பயனாய் நம்மை யடைந்து மீண்டுந் திரும்பாம லிருக்கிறார்கள். ("மாமுபேத்ய கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே" என்று மேலே அருளிச்செய்யப் போகிறா ரன்றோ?)

[குறிப்பு:—"அல்பமேதஸாம்" அதாவது, "அற்ப புத்தி யுள்ளவர்கள்" என்றமையால், இந்திராதி தேவதைகள் பரமாத்மாவிற்குச் சரீர மென்கிற ஞான மில்லாமல் அந்தத் தேவதைகளைப் பூஜிக்கிறவர்கள் அற்ப புத்தி யுள்ளவர்கள். "அந்தவது" அதாவது, "முடிவை யுடையதாகவே" என்பது பொருள்.]

[ஸ்ரீதர ஸ்வாமிகள் அபிப்பிராயம்:—"தேவதைகளுக்கே முடிவு ஏற்பட்டமையால் அவர்களை அடைந்தவர்களுக்கும் முடிவுண்டென்பது திண்ணம்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"முடிவை யுடையது; அல்லது அற்பகால முள்ளது என்ன கூறுவர்.]

[கருத்து:—எந்தத் தேவதையை எவ்வாறாக வழிபடுகின்றார்களோ, அந்தத் தேவதைக்கு அதிகாரமாயுள்ள லோகத்தையும் அந்த லோகத்தில் எந்தச் சுகத்தை யடைய வேண்டுமோ அந்தச சுகத்தையும் பெறுகிறார்கள். அந்த லோகத்தின் சுகமும் நிலைபேறுடையதன்று; அது ஓர் காலத்தில் முடிவை யுடையதாகும். என்னை வழிபடின் எக்காலத்தினு மழிவில்லாத சாஸ்வதமான பலனைப் பெறுவா னென்பதற்கு ஐயப்பாடில்லை] 23

"நான் சர்வ கர்மங்களாலும் ஆராதிக்கப் படுபவனாய், சர்வேசுவரனாய், வாக்குக்கும் மனதிற்கு மெட்டாத சுவரூப சுவபாவமுடையவனா யிருக்கச் செய்தேயும் கரைகடந்த கருணையாலும், அடியார்களிடத்தி லுண்டான அன்பினாலும், யாவரும் என்னைக் கண்டு பற்றவேண்டு மென்று என் சுவபாவத்தை விடாமலே வாசுதேவன்

மைந்தனுய்வந் தவதரித்தேன். இவ்வாறு விகாரமில்லாத என்
ரத்துவத்தை யறியாமல், நான் இதற்கு முன்பு தோன்றுமல் மறைந்
திருந்து இப்பொழுதுதான் கர்ம வசத்தால் ஒரு இராஜகுமாரனுய்ப்
பிறந்து தோன்றியதாய் இம்மூடர்கள் நினைத்து விடுகின்றுர்கள்.
ஆனது பற்றியே அவர்கள் என்னை ஆஸ்ரயிப்பது மில்லை; என்னை
பாராதிப்பது மில்லை.'' 24

"கிருஷ்ண! அவ்வாறுனல் தேவரீர் ஏன் அப்படி யாவர்க்கும் விளங்குவ தில்லை?''

"அர்ச்சுன! (ஜீவர்களுக்கேற்ற மானிடத் தன்மை முதலிய வற்றை யடைந்திருக்கை யென்கிற) மாயையால் நான் மறைக்கப்பட்டமையால் யாவர்க்கும் பிரகாசிக்கிற தில்லை நான் இவ்வாறு மனுஷ்யாதிக ளிடத்தில் வந்து பிறந்த மாத்திரத்தில் இந்த மூடத்தன்மை வாய்ந்த மனிதர் என்னைச் சாதாரணமாய் நினைத்து விடுகின்றனரே யன்றி, இந்திரன் வாயு இவர்களின் செயலையும், சூரியன் அக்கினி இவர்களுடைய தேஜஸையுங் கடந்து, உற்பத்தி நாசங்களற்று எல்லா உலகங்களுக்கும் முக்கிய காரணனுய்ச் சர்வேசுவரனு யிருக்கிற நான், பிராணிகளெல்லாம் ஆஸ்ரயிப்பதற்காக மனுஷ்யாதி ரூபமாய் வந்தவதரித்ததை அறிகிற தில்லை.''

[முக்கிய கவனிப்பு:—இந்த 25-வது சுலோகத்திற்கு ஐந்து பாஷ்யக்காரர்கள் பொருள் வெவ்வேறாகக் கூறியுள்ளார்கள். அதனைப் பின் வருமாறு கண்டு தெளிக.]

["யோக மாயா ஸமாவ்ருத:'' என்றுல், "யோக மாயையினுலே மறைக்கப்பட் டிருக்கிறவன்.'']

இந்த வாக்கியத்திற்கு, [ஸ்ரீதரர் அபிப்பிராயம்:—"மனிதனு லுண்டாக்கத்தக்க தல்லாததும், இன்ன விதமா யுண்டாக்கலா மென்று மனிதன் தனது மனதினுல் நினைக்கத் தகாததுமாகிய விசித்திரமான சிருஷ்டி முதலான சக்தி.'']

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"குணங்களுடைய சேர்க்கையாகிய அல்லது, 'பகவத் சித்தா ஸமாதாநம்' என்பது யோகம். அதனு லுண்டானது மாயை.'']

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"ஜீவனுடைய தகுதியான மனுஷ்ய தேகத்தைப் பொருந்துவது யோகம். அதுதான் மாயை யென்று சொல்லப்படும். இது தருணம் நான் அந்தத் தேகத்தைப் பொருந்தி யிருக்கிறபடியால், லோக மாயை யினுல் மறைவுபட் டிருக்கிறேன்.'']

[ஸ்ரீ மத்வாசாரியர், ஸ்ரீ ராகவேந்திரர் அபிப்பிராயம்:— "யோகத் திறமையாகிய வோருபாயம், அதனாலும் மாயையினாலும் சூழப்பட் டிருக்கிறேன்."] 25

"இதுவரையில் கடந்ததும், இப்பொழுது நிகழ்வதும், இனி வருவதுமான சகல பிராணிகளையும் நான் அறிவேன்; என்னை மாத்திரம் ஒருவனு மறிந்தானில்லை, (அதாவது, என் சிந்தைக் கெட்டிய பிராணிகளி லொருவனாகிலும் பரம புருஷன் தான் இவ்வாறு யாவருந் தன்னை ஆஸ்ரயிக்கும்படி வசுதேவன் மைந்தனாய் அவதரித்திருக்கிறானென்று அறிபவ னில்லை.) ஆகையால், ஞானியானவன் கிடைப்பது மிக அரிது." 26

"விருப்பு வெறுப்பு என்கிற இரண்டாலு முண்டான சீதம் உஷ்ணம் முதலிய துவந்துவ மென்கிற மோகத்தாலே சகல பிராணிகளும் பிறக்கும்பொழுதே மயங்கிப் போகின்றன; (என்றால், குண விகாரமான சுகம் துக்க மென்கிற துவந்துவங்களில் எந்தெந்த விஷயத்தில் பிராணிகள் பூர்வ ஜன்மங்களில் விருப்பமும் வெறுப்பும் பாராட்டி வந்தார்களோ, மறுபடியும் அந்தந்த துவந்துவங்களே விரும்பப் பட்டவைகளாயும் வெறுக்கப் பட்டவைகளாயு மிருந்து கொண்டு ஜனன காலத்திற்றானே சகல பிராணிகளையும் மயங்கச் செய்கின்றன; இதனால் நம்மை அடைந்தபோது சுகித்தும் நம்மைப் பிரிந்த போது துக்கித்தும் இருக்கவேண்டியவைகளான பிராணிகள், அவற்றில் விருப்பையும் வெறுப்பையும் பாராட்டுகின்றன. ஞானியோ நம்மைக் கிட்டியபோது இன்பமும், பிரிந்த போது துன்பமுமே சுவபாவமா யிருப்பன்; அப்படிப்பட்ட சுவபாவத்தோடு கூடிய ஞானியாக ஒரு பிராணியாவது உண்டாகிறதில்லை.") 27

"எவர்கள் பல பிறப்பும் பிறந்து அவைகளில் அளவிறந்த புண்ணியங்களைத் திரட்டி அதனால் (விருப்பத்திற்கும் வெறுப்புக்கும் காரணமாயும், நம்மை நினைக்க வொட்டாமல் விரோதிப்பதாயும், அநாதிகாலமாய்த் தொடர்ந்ததாயு மிருக்கும்) பாவத்தை யொழிக்கிறார்களோ, அவர்கள் முன் சொன்ன புண்ணியத்தின் வாசிக்குத் தக்கபடி நம்மைச் சரண மடைந்து குண விகாரமான மோகத்தினின்றும் விடுபட்டவர்களாய் ஜனன மரணம் இவைகளை யொழிக்கவும் பேரின்பத்தை அடையவும், நம்மைக் கிட்டவுமாக முயன்றவர்களாய்த், திடமான சங்கற்பத்தோடு என்னையே உபாசிக்கிறார்கள்." 28

"ஜனன மரணங்களை யொழித்துப் பிரகிருதிக்குப் புறம்பான
த்மாவைக் காணவேண்டி எவர்கள் என்னை ஆஸ்ரயித்து முயற்சி
செய்கின்றார்களோ, அவர்கள் அந்தக் கருமத்தையும், சகலவித
த்யாத்மத்தையும் அறிகின்றார்கள்."

இதில், ஜனன மரணங்களைப் போக்கடித்துக் கொள்ளுமாறு என்
பதற்கு,

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"பிரகிருதி விமுக்த ஆத்ம
ஸ்வரூப தரிசனத்தின் பொருட்டு, ஞானத்தை அடைய
விரும்பி என்னை நினைப்பான்."]

ஸ்ரீ மாத்துவாசார்யர், ஸ்ரீ இராகவேந்திரர் அபிப்பிராயம்:—'பக்
தர்களில் உத்தமன், மத்திமன், அதமன் என மூன்றுவித பக்
தர்க ளுண்டு. அவர்களில் உத்தம பக்தன்: ஸ்ரீமந் நாராயண
னுடைய சாஷாத்விக்த பக்தியைத் தவிர மோக்ஷ முதலிய
வொன்றிலும் ஆசை யில்லாதவன்; மத்திம பக்தன்: மோக்ஷத்
தில் விருப்புடையவன்; அதம பக்தன்: சுவர்க்காதி பலனை 29
அபேக்ஷிப்பவன்."]

"என்னை அதி பூதமாகவும், அதி தெய்வமாகவும், அதி யக்ஞ
மாகவும் எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் தங்கள் சரீரத்தை விட்
டுப் போகும் காலத்திலும் தங்கள் கோரிக்கைக்குத் தக்கவாறு என்
னையே நினைக்கின்றார்கள். (இம் மூவருக்கும் நித்திய, நைமித்திகங்க
ளான மகா யக்ஞாதிகள் செய்ய வேண்டும் கடமையா யிருக்கின்
றன.") 30

ஏழாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

## எட்டாவது அத்தியாயம்

# அக்ஷர பரப்ரஹ்ம யோகம்

---

### அவதாரிகை

[ஏழாவது அத்தியாயத்தில் யாவரும் உபாசிக்க வேண்டிய பரப்பிரம்மமான வாசுதேவன் சேதநா சேதனங்களுக் கெல்லாம் பதி யென்றும், காரண னென்றும், எல்லாப் பொருளும் சரீரமா யிருக்கையாலே சர்வப் பிரகாரமாகவு மிருக்கின்ற அவன் எல்லா சப்தங்களுக்கும் பொருளென்றும், யாவரையும் ஆள்பவ னென்றும், சகல கல்யாண குணங்களாலும் அவனே மேன்மைப்பட் டிருக்கிறா னென்றும், சத்வ ரஜஸ் தமோ மயங்களான தேகமாயு மிந்திரியமாயும் மற்றும் புசிக்கும் பண்டங்களாயு மிருக்கிற சப்தாதி விஷயங்களால் அவன் மறைக்கப்பட் டிருக்கிறா னென்றும், மிகுந்த புண்ணிய வரத்தால் கிடைத்த பகவத் சரணாகதியாலே அம் மறைவு நீக்கப்படு மென்றும், புண்ணியத்தின் வாசிக்குத் தக்கபடி இவன் பண்ணும் சரணாகதியின் சிறப்பால் ஐசுவரியம், கைவல்யம், பகவத் பிராப்தி யென்று பயன் வேறு படுகையாலே அதற்குத் தக்கபடி பக்தர்களும் வேறுபட் டிருப்பார்க ளென்றும், எம்பெருமானை அடையக் கோரியவர் எப்பொழுதும் அவனையே நம்பி, அவனிடத்தில் விசேஷ பக்தியைச் செய்து, எம்பெருமானுக்கு மிகவு மினியனா யிருத்தலினால் அவன் யாவரிலும் சிறந்தவ னென்றும், அப்படிப்பட்டவன் கிடைப்பது அரிதென்றும் அருளிச்செய்து, இம் மூவர்களும் அறியவேண்டு மவற்றையும் கைப்பற்றவேண்டு மவற்றையும், அவ்வாறு அறிய வேண்டியதாயும், அடைய வேண்டியதாயும், பிரஸ்தாபிக்கப்பட்டவைகள் இந்த எட்டாவது அத்தியாயத்தில் சொல்லப்பட் டிருக்கின்றன.]

### அர்ச்சுனன் வாக்கியம்

"கிருஷ்ணா! ஜனன மரணங்களை யொழிப்பதற்காக எம்பெருமானை யாஸ்ரயித்து யத்தனஞ் செய்யும் மோக்ஷார்த்திகளுக்கு அவசியம் அறியவேண்டிய விஷயமான பிரம்மமாவ தென்ன? ஆதியாத்மிகமாவ தென்ன? கர்மமாவது யாது? இவைகளை அருளிச்செய்ய

வண்டும். மேலும், ஐசுவரியத்தைக் கோரியவர்களுக்கு அறிய வண்டிய விஷயமான ஆதிபௌதிகமாவ தென்ன?'' 1

''இவர்கள் மூவரும் அறிய வேண்டியதான அதியக்ஞமாவ தென்ன? அந்த அதியக்ஞத்தின் தன்மை யெப்படிப்பட்டது? இவர் ள் சரீரத்தை விட்டுப் போகுங் காலத்தில் சலியா மனத்தராய்த் தவரீரை நினைப்ப தெப்படி? இவை யாவற்றையும் விவரமாய் அருளிச் செய்ய வேண்டும்.'' 2

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

''அர்ச்சுனா! பிரமமாவது-பரமாக்ஷரம்; அதாவது, பிரகிருதியி ரின்றும் விடுபட்ட ஆத்ம சுவரூபம். ஆத்யாத்மிகமாவது-பஞ்சாக் னி வித்தையில் அறியவேண்டியதாகச் சொல்லப்பட்டதும், ஆத்மா வோடு சந்திப்பதுமான பூத சூக்ஷ்மமும் அதன் வாசனை முதலான தும். (ஆக இவ்விரண்டினும் ஒன்றைப் பற்றவேண்டியதாயும் ஒன்றை விடவேண்டியதாயும் மோக்ஷார்த்தியானவன் அவசியம் அறியவேண்டும்.) கர்மமாவது-மானிடத்தன்மை முதலியவைகளுக் குக் காரணமாய், சாஸ்திரத்தில் கூறியபடி ஸ்திரீகளுடன் புணர்ந்து வீரியத்தை விடுகை. மோக்ஷார்த்தி இதையும் வெறுக்க வேண்டிய தாயும் ஒழிக்க வேண்டியதாயும் அறியவேண்டும்.''

[அர்ச்சுனா! ஐசுவரியார்த்திகள் அறிய வேண்டியதாகச் சொன்ன அதிபூதமாவது - க்ஷரபாவம்; அதாவது ஆகாச முதலிய பூதங்களில் ஓர் விகாரமாய் வேறுபட்டுத் தோற்றும் சப்தம் பரிசம் முதலிய குணங்களும் அவைகளின் ஆதாரங்களும். (இதை யறிவதாவது:— ஐசுவரியார்த்திகள் இவைகளைத் தங்கள் பேறாக நினைக்க வேண்டு மென்பது.) அதிதைவமாவது - தெய்வத்தின் மீதிருப்பது; அதாவது, இந்திரன் பிரமன் முதலிய எல்லாத் தேவர்களுக்கும் மேலாயிருப் பது: என்றால், இந்திரன் முதலானோர் அனுபவிக்கு மவைகளைக் காட்டினும் விலக்ஷணமான சப்தாதி விஷயங்களை யனுபவிக்கும் புருஷ னென்றபடியாம்; (அதை யறிவதாவது:—அவ்வகைத்தான போகங்களைப் புசிப்பவராகத் தம்மை ஐசுவரியார்த்திகள் நினைக்க வேண்டும்.) அதியக்ஞமாவது - யக்ஞங்களால் ஆராதிக்கப்படுகிற நான் தான். (இந்த என்னை யறிவதாவது)—என் சரீரமான இந்த இந்திராதிகளுக்கு அந்தராத்மாவா யிருக்கும் என்னையே யக்ஞங் களால் ஆராதிப்பதாக இம்மூவரும் மகாயக்ஞம் முதலான நித்திய

நைமித்திக கர்மங்களை அநுஷ்டிக்கும் பொழுதெல்லாம் நினைக்க வேண்டு மென்றபடியாம்.]

[மேற் கூறிய அபிப்பிராயத்திற்கு அத்வைத மதத்தை உலகத்தில் சிறவிய ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் கருத்தை கொண்டு விவரிப்பாம்:—"நிர்க்குண பரப்பிரம்மமே, பிரமம். நிர்க்குண பரப்பிரமத்திற்குச் சரீர சம்பந்தத்தால் அத்யாத்மம்; பிராணிகளின் க்ஷேமத்தின் பொருட்டுச் செய்வது கர்மம்; பிறப்பு இறப்புள்ள பொருள்க ளெல்லாம் அதிபூதம்; சூரியனிடத்தும் எல்லாரிடத்தும் இருப்பவன் அதிதெய்வம்; யக்ஞங்க ளெல்லாவற்றிற்கும் அபிமானியான தேவதையே அதி யக்ஞம்."] 3

"அர்ச்சுனா! மனுஷ்யாதிகளுக்கு மாறுதல்கள் உண்டாகும். சமஸ்த பிராணிகளுக்கும் உற்பத்தி காரணமான விஸர்க்கம் கர்மம் எனப்படும். அதிபூதம் என்பது பரிணமித்த பொருள்கள் சப்தாதி விஷயங்களை அனுபவிக்கும் புருஷன் அதிதெய்வதம். இந்தத் தேகங்களில் நானே அதியக்ஞன் (சர்வ யக்ஞங்களா லாராதிக்கப் பட்டவன்.") 4

"அர்ச்சுனா! இப்பொழுது நாம் சொல்லப்போகிற விஷயம் இம் மூன்று பேருக்கும் வேண்டியதுதான். அந்திம காலத்திலும் என்னையே நினைத்துக்கொண்டு சரீரத்தைவிட்டு எவன் போகிறானோ, அவன் எனது சுவபாவத்தை யடைகிறான். அதாவது, அப்பொழுது என்னை எவ்வாறு நினைத்திருக்கின்றானோ அவ்வகைத்தான சுவபாவத்தை யடைகின்றான். மேலும், (ஆதி பரதன் முதலானோர் அந்திம காலத்தில் நினைத்திருந்தபடி மிருகங்களுக்குச் சமானமான வடிவத்தை யடைந்தாற்போ லென்றபடி.")

[குறிப்பு:—'என்னையே' என்று கூறினதால், இதற்கு, ஸ்ரீதா சுவாமிகள்:—"அந்தர்யாமி ரூபமா யிருக்கிற பரமேசுவரனாகிய என்னையே" என்றும், ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள்:—"பரமேசுவரனாயும், விஷ்ணுவாயு மிருக்கப்பட்ட என்னையே" என்றும் பொருள் வெவ்வேறாக விரித்துக் காட்டினர்.]

[என் சுவபாவத்தை யடைவதற்கு என்னையே நினைக்க வேண்டும். (கூரத்தாழ்வார் ஸ்ரீ வரதராஜ ஸ்தலத்தில் இவ்வாறு கூறினார்.) "நான் இறந்தால் என் பெண்டு புத்திரர்களின் கதி யாதாகுமோ?" என்று தோற்றும். அப்படிப்பட்ட யோசனையால் என்ன லாபம் கிடைக்கும்? நான் இப்போது சரீரத்தை விடின் 'என் கதி யென்னவாமோ?' என்று தோன்ற தன்றோ? இது

வன்றி, எவ்வளவோ கஷ்டப்பட்டுச் சம்பாதித்த செல்வமும் கூட வருமா? வராது. அவ்வாறே, பசுக்கள், பெண்டு, ஜந்ம சிநேகர் எல்லாருடைய சங்கதிகளும், பல காலம் தனக்காகப் பல பாடுகளைப் பட்டானென்று எண்ணிச் சரீரமாயினும் கூடச் செல்லுமா? அதுவும் ஆத்மாவை, "உன் இச்சை போனபடி போக" என்று கூறிச் சுவஸ்தமாகப் படுத்திருக்கும். கடைசியில் ஆத்மா வொன்றே புண்ணிய பாபத்துடன் போகவேண்டியிருக்கும். அப்போது சர்வேஸ்வரனே யன்றி வேறொருவரும் கதியில்லை. இதனாலேயே முடிவில் சுவாமி தன்னை நினைத்தால் தான் அந்தக் கஷ்ட காலத்தில் காப்பாற்றுகிறேன் என்று கூறினார்.] 5

[அவதாரிகை:—அந்திம காலத்தில் நினைக்கும், நினைவுக்கு நினைத்த விஷயத்தைப்போன்ற நிலையை நினைப்பவனுக்குக் கொடுக்கை சுவபாவம் என்கிற விஷயத்தைத் தெளிவா யருளிச்செய்கிறார்.]

"ஏ! கௌந்தேயா! எவன் அந்திம காலத்தில் எவ்வித சுவபாவத்தை நினைத்துக்கொண்டு சரீரத்தை விடுகின்றானோ அவ்வித சுவபாவத்தை மறித்த பின்பு அடைகின்றான். அந்த நினைவோ முன்பு இவன் கோரிய விஷயமாய்த்தா னிருக்கும்."

["கிருஷ்ணா! இந்த ஸ்மரணத்திற்கும் மோக்ஷத்திற்கும் சம்பந்தமென்ன?" அர்ச்சுனா! அந்திம காலத்தில் எந்த ஸ்வரூபத்தையெண்ணிப் பிராணனை விடுகின்றானோ அவனுக்கு அடுத்த பிறவியில் அந்த ஸ்வரூபமே கிடைக்கும். இதற்கு உதாரணம் வருமாறு:—

"ஜடபரதரென்னும் ராஜரிஷி காட்டில் தாயை இழந்த மான்குட்டியைப் பார்த்து அதை ஒரு பொருளாக மதித்துப் பரிதாபமுள்ளவராய் அதைத் தான் கொண்டுபோய்க் காப்பாற்றி வந்தனர். தமது மரண காலத்தில், "இதன் கதி எவ்வாறோமோ?" என்று நினைத்துக்கொண்டு தமது பிராணனை விட்டு, மறு ஜன்மத்தில் பூர்வ ஜன்ம வாசனையின்படி அப்படிப்பட்ட மான் பிறப்பையடைந்து, அந்த ஜன்மத்தில் பூர்வ ஜன்ம புண்ணிய விசேஷத்தால் ஹரியை யெண்ணிக்கொண் டிருந்து மறு பிறவியில் சிரேஷ்டமான மனிதப் பிறப்பை யடைந்து நற்கதி யடைந்தார். ஆகையால், என்னை நினைக்கின் என்னிடம் வரலாகும்."] 6

"கிருஷ்ணா! எதனால் உன் ஞாபகம் உண்டாகும்? மரண காலத்தில் உன்னை நினைக்க அவகாச மிருக்குமா? "பிராணப் பிரயாண

ஸமயே கபவாதபித்தை: கண்டாவரோதன விதௌ ஸ்மரணம் குத ஸ்தே'' என்று ஸ்ரீ குலசேகராழ்வார் அருளிச்செய்தபடிபோல, மரண காலத்தில் கபவாத பித்தங்கள் சூழ்ந்துகொண் டிருக்கையில் உன் ஸ்மரணம் எவ்வா றுண்டாம்?'' "அர்ச்சுன! சர்வ காலம் என்னைப் பட்ட பொருளே மனதில் பற்றியிருக்கும். அவ்வா றிருந்ததனால் எவன் எதனை யெண்ணிச் சரீரத்தை விடுவானோ, அவன் அந்த ஸ்வரூபத்தை யடைவான். ஆகையால், புருஷன் முன்பு தான் எந்த விஷயத்தில் பழகி யிருக்கின்றானோ அந்த விஷயமாகவே அந்திம காலத்தில் நினைவு உண்டாகுமாகையால் எப்போதும் பிரயாணமா மளவுந் தினந்தோறும் நம்மை விடாமல் நினை. நாடோறும் நம் நினைவையே யுண்டாக்குவதான யுத்தம் முதலிய வர்ணாச்ரம மாசா ரத்தைச் சேர்ந்த சாஸ்திரோக்தமான நித்திய நைமித்திக கர்மங்க ளைச் செய். இப்படிப்பட்ட உபாயத்தாலே மனதையும் புத்தியை யும் நம்மிடத்தில் வைத்து அந்திம காலத்திலும் நம்மையே நினைத் திருந்தால் உன் இஷ்டப்பிரகாரம் நம்மை யடைவாய்; இதில் சம்சய மில்லை.'' 7

"பார்த்தா! எவன் அப்பியாசத்தோடு கூடி மனதில் வேறொன்றை நினையாது திவ்விய ரூபனான மஹா புருஷனை ஸ்மரணை செய்கின் றானோ, அவன் அந்தப் பரம புருஷனையே யடைகின்றான்.'' 8

[அவதாரிகை:—இவ்வாறு தம்மை யடைய வேண்டுமானால் அந் திம காலத்தில் நினைக்கவேண்டு மென்று சாதாரணமாய் அரு ளிச் செய்து, அதற்காக முற் கூறிய மூன்று பேரும் வேறு வேறு விதமாய் உபாசிக்க வேண்டு மென்பதை யருளிச் செய் யத் தொடங்குகிறார். அதில் ஐசுவரியார்த்திகள் உபாசிக்க வேண்டும் பிரகாரத்தையு மருளிச் செய்கிறார். தினந்தோறும் நித்திய நைமித்திக கர்மங்களுக்கு விரோத மில்லாத சகல காலங்களிலும் உபாஸ்ய விஷயத்தை நினைத்துக்கொண் டிருப்பதாகிய அப்பியாசத்தோடும், நாடோறும் யோகஞ் செய்யவேண்டுங் காலத்தில் மாத்திரம் கீழ்ச் சொன்னபடி அனுஷ்டிக்கும உபாஸகமாகிய யோகத்தோடும் கூடி யிருத்த லாலே மனது மற்றொன்றையும் நாடாமல் அந்திம காலத்தில் திவ்விய பரம புருஷனான நம்மை இனிச் சொல்லப் போகிறபடி நினைத்திருந்தால் நம்மையே யடையலாம்.]

[கருத்து:—இந்த விஷயத்தை முன்னர்க் கூறியுள்ள விஷயத் துடன் சேர்த்துப் பொருள் கொண்டால், மனதை ஈஸ்வரத்

தியானத்தில் நிலைநிறுத்தப் பயின்றவன், இதர விடயங்களில் சென்ற காலத்தும், மனது ஈஸ்வரத் தியானத்தினின்று நிலை பெயராது என்கிற பொருளே விளக்கிக் காட்டும்.]

"அர்ச்சுனா! சர்வக்ஞனாய், அநாதிகாலமா யுள்ளவனாய், உலகத்தை யாள்பவனாய், அணுவான ஜீவனைக் காட்டிலும் சிறியவனாய், எல்லாவற்றையும் தரிப்பவனாய், யாவையும் படைப்பவனாய், ஒன்றோடும் சேராத ஸ்வரூபனாய், பிரகிருதிக் கவ்வருகாயும், தனக்கேயானதாயு மிருக்கிற திருமேனியோடு கூடியவனா யிருக்கும் அந்தத் திவ்விய புருஷனை நாடோறும் பயில்கின்ற பக்தியுடன் கூடிய யோக பலத்தாலே (நன்றாய்த் திருத்திச் சலியாம லிருக்கிற) மனதைக் கொண்டு எவன் பிரயாண காலத்தில் புருவங்களுக்கு நடுவில் பிராணனை வைத்து அங்கே பகவானை இடைவிடாமல் சிந்திக்கின்றானோ அவன் அந்த பகவானையே யடைவான்." 9-10

"வேதார்த்தங்களை யறிந்தவர்கள் எதை நாசமற்றதாகச் சொல்லுகின்றார்களோ, காமக் குரோதங்களை விட்டிருக்கின்ற யதிகள் எதை யடைகின்றார்களோ, அதை உணர விரும்புவோர் பிரமசரிய விரதத்தை அனுஷ்டிக்கின்றார்களோ, அந்த ஸ்தானத்தைச் சுருக்கமாக உனக்குச் சொல்லுகின்றேன்." 11

"அதாவது, வைதிகர்கள் எதையானால் அக்ஷரமென்று (அதாவது, பருக்காமை முதலிய குணங்களுடன் கூடியதாக) சொல்லுகின்றார்களோ, வைராக்கிய முடையவரான யதிகள் எந்த அக்ஷரத்தைப் பிரவேசிக்கின்றார்களோ, எதை யடையக் கோரியவர்கள் பிரஹ்மசரிய விரதத்தை யனுஷ்டிக்கின்றார்களோ அந்த ஸ்தானத்தைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறோம். ஞானத்திற்கு வழியான செவி முதலிய எல்லாப் புலன்களையும் தம் வியாபாரங்களி னின்று நிவிருத்தி செய்து இருதய கமலத்தில் உறைகின்ற அக்ஷரமென்னும் நம்மிடத்தில் மனதை நிறுத்தி, யோகமென்னுந் தாரணையை யடைந்தவனாய், நம்மிடத்தில் தானே சலியாமல் நிலைத்து, நமக்கு வாசகமான "ஓம்" என்னும் ஓர் அக்ஷரப்பிரஹ்மத்தை உச்சரித்துக்கொண்டு அதற்குப் பொருளான நம்மைச் சிந்தித்துக்கொண்டு, தன் பிராணனைத் தலையில் வைத்துச் சரீரத்தை விட்டவனாய் எவன் போகின்றானோ, அவன் பரமகதியை அடைகின்றான்; அதாவது, பிரகிருதிக்குப் புறம்பாய், நமக்குச் சமமாய், மீண்டும் திரும்ப வேண்டாத பரமாத்ம ஸ்வரூபத்தை யடைகின்றான்."

[கருத்து:—மனுஷ்யர்களுக்கு வெளியிற் செல்ல வாயில்களுள்ளது போல இந்திரியங்கள் மனதிற்குத் துவாரமாயிருக்கின்றன. இந்தத் துவாரங்களை மூடி (எனின்) இந்திரியங்களை அவற்றின் செயல்களினின்று நிறுத்தி, இருதயத்தில் மனதை நிறுத்தி அதைச் சிரத்தில் சேர்த்து, யோகத்தைத் திடமாய் வைத்துக்கொண்டும், ஓம் என்னும் பிரமத்தை ஸ்மரித்துக் கொண்டும், என்னைத் தியானித்துக் கொண்டும் பிராணனை விட்டால் பரம பிராப்ய வஸ்துவை அடையலாகும்.] 12-13

[அவதாரிகை:—இவ்வாறு ஐசுவரியார்த்தியும் கைவல்யார்த்தியும் தாமடைய வேண்டிய பயனுக்குத் தக்கபடி எம்பெருமானை உபாசிக்க வேண்டும் பிரகாரத்தை இதுவரையில் அருளிச் செய்தனர். இனி, மோக்ஷார்த்தியான ஞானியானவன் பகவானை உபாசிக்கவேண்டும் விதத்தை யருளிச் செய்வர்.]

"ஆரம்பித்த நாள்முதல் நித்தியமாய் எப்போதும் மற்றொன்றையும் நாடாமல் நம்மையே எவன் சிந்திக்கின்றானோ (என்றால், நாம் அவனுக்கு மிகவும் இனியோமாகையாலே நம்மை நினைத்தாலொழியத் தன்னைத் தரிக்கமாட்டாதவனாய்க் கேவலம் இன்பமயமான நம் சிந்தையை எவன் செய்கின்றானோ) அந்த நித்திய யோகிக்கு நாம் எளிதில் கிடைக்கின்றோம். (அதாவது, எளிதில் அடையக் கூடிய நம் பாவமானது ஐசுவரியாதிகளையல்ல நாம் கொடுப்பது; மற்றப்படிக் கேவலம் அருமைப்பெரும் பேறான நாமே எளிதில் கிடைக்கிறோம்; என்றால், அவன் பிரிவைச் சகிக்கமாட்டாமல் நாமே அவனை வரித்து நம்மை யடைவதற்கேற்ற பக்குவமான உபாய ஞானத்தையுமளித்து அதன் விரோதியையு மொழித்து நம்மிடத்தில் இனிமையான பக்தியையும் உண்டு பண்ணுகிறோம்.") 14

"அவ்வாறு நம்மைக் கிட்டியவர்கள் மறுபடியும் எல்லாத் துயரங்களுக்குமிருப்பிடமான இந்த அசாசுவதமாயிருக்கின்ற ஜன்மத்தை அடைவதில்லை. ஏனென்றால், இவர்கள் பெரிய மனதோடு நமது சுயரூபத்தை உள்ளபடியே யறிந்து (மிகுதியும் நம்மையே விரும்பியிருத்தலாலே நம்மைப் பிரிந்தால் தரிக்கமாட்டாதவர்களாய் நம்மைப் பற்றிக் கிடக்கிற மனதோடு நம்மையே ஆதாரமாக நம்பி) உபாஸ்வனை நம்மையே பெரும்பேறாக அடைகிறார்கள். 15

[அவதாரிகை:—ஐசுவரியத்தை யடைந்தவர் மீண்டும் திரும்புவதற்கும் பகவானை யடைந்தவர் திரும்பாமைக்கும் காரணம் இங்கே தெளிவாக விளக்கிக் காட்டப்படுகிறது.]

"ஓ! அர்ச்சுன! பிரம்மாண்டத்திற் குட்பட்ட சகல லோகங்
ளும் ஜீவர்களுக்கு மீண்டும் ஜனனங்களைக் கொடுக்கக் கூடியவை; ஓ!
களந்தேயா! என்னை யடைந்தாலோ மறுபிறப் பில்லை."

[அதாவது, பிரம்மாண்டத்திற் குட்பட்ட போகைசுவரிய
தானமான சகல லோகங்களும் திரும்புதலோடு கூடியவைகள்.
கையால், ஐசுவரிய கதியை யடைந்தவருக்குப் பேறுன அந்த
தானங்கள் நசிக்கும்போது அவர்களுக்கும் நாச முண்டாகாமற்
ாகாது. (சர்வஜ்ஞனுய், சத்ய சங்கல்பனுய், சகல ஜகத்திற்கும்
ற்பத்தி ஸ்திதி லயங்களைச் செய்பவனுய், பரம காருணியனுய், எப்
பாழுதும் ஒரே ரூபனு யிருக்கிற) நம்மை யடைந்தவர்களுக்கோ
சமென்கிற வார்த்தையே யில்லாமையோடு மறு ஜன்மமுங்
டைக்க மாட்டாவாம்.]

[மேற் கூறிய 16-வது சுலோகத்தில் 'மாமுபேத்யது' எனின், 'என்னை யடைந்தால்' என்று ஒரு பொருள் அன்றி, மாம்-லக்ஷ்மியை, உபேத்யது-ஆஸ்ரயித்தால், என்றுல், தாயான லக்ஷ்மியை புருஷாகார பூதையாய்ச் செய்துகொண்டால் பகவான் அவரது புருஷாகாரத்தால் நமது தவறுகளை மன்னித்துத் தனது இடத்தில் வைத்துக் கொள்வன்.] 16

[அவதாரிகை:—பிரம்மலோக பரியந்தமான உலகங்களுக்கும் அவற்றுக் குட்பட்டவைகளுக்கும் எம்பெருமானுல் ஏற்படுத்தப் பட்ட உற்பத்தி விநாச காலங்களின் ஏற்பாட்டை அருளிச் செய்கிறுர்.]

"மானிடர் முதல் பிரமனளவாகப் பிராணிகளுக்கு நம்மா லேற்
டுத்தப்பட்ட "பகல் இரவு" என்கிற ஏற்பாட்டை யறிந்தவர்கள்
யிரம் சதுர்யுகததைப் பிரமனுக்கு ஒரு பகலென்பார்கள். அவ்
ாறே இராத்திரியும்." 17

"அதில் பிரமனுக்குப் பகல் வரும்போது மூவுலகத்துக்
ட்பட்ட (சரீரம், இந்திரியம், மற்றும் போகிய வஸ்துக்கள் போக
தானங்கள் ஆகிய) இவ்வியக்தங்க ளெல்லாம் அவ்வியக்த மென்கிற
ிரமன் சரீரத்தி லுண்டாகின்றன; இரவாகும் பொழுது அவை அச்
ரீரத்தில் தானே லயித்துப் போகின்றன." 18

"கர்மத்திற்கு வசப்பட்ட அந்த பூதக்கூட்டம் பகற் காலத்தி
லுண்டாகி, இராக்காலத்தில் லயமடைந்து, மீண்டும் பகல் வந்தால்
ண்டாகின்றன."

[அவ்வாறு நூறு வருடமானால் கடையான ஆயிர யுகத்தில் பிரம்ம லோகத்தளவான உலகங்களும் பிரம்மாவும் கிரமமாய் அவ்யக்தம் அக்ஷரம் தமசு என்கிற வரையில் நம்மிடத்தில்தானே லயமாகின்றன. இவ்வாறு நம்மை யொழிந்த எல்லாவற்றிற்குங் கால விடவஸ்தையின்படி நம்மிடத்தில் உற்பத்தியும் நம்மிடத்தில் தானே லயமு மாகையால் உற்பத்தி விநாசங்கள் ஒன்றாலு மொழிக்கப்போகாது; ஆகையால், ஐசுவரிய கதியைப் பெற்றவருக்கு மீண்டுந் திரும்புதல் வந்தே தீரும்; நம்மை யடைந்தவர்க்கோ அவ் வார்த்தையே கிடையாது.] 19

"அந்த அசேதன பிரகிருதியைக் காட்டிலும் புருஷார்த்த மாகையா லுத்தமமாயும், ஞானாகாரத்தினாலே வேறேயாயும், பிரமாணத்தினாலும் தெரியக்கூடாததினாலே காணப்படாததாயும், நித்தியமாயு மிருக்கிற அந்த வஸ்துவானது காரிய காரணங்களுடன் கூடிய பஞ்சமகாபூதம் முதலியவை நாசமடையுங் காலத்திலும் நாசமடைகிறதில்லை."

[அந்தச் சேதன பிரகிருதியான புருஷன் அக்ஷரனென்று சொல்லப்படுகிறான். அவனைப் பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபமாகிய பரமமான கதியென்று வேத மறிந்தவர்கள் சொல்லுகின்றார்கள். எந்தப் பிரகிருதி விமுக்தமான (ஜீவ) ஆத்ம சுவரூபத்தை அடைந்து மீளுவதில்லையோ அந்த சுவரூபம் எனக்கு ஏவுதலுக்கு முக்கியமான பாத்திரமானது. அதாவது, மற்ற ஜட சேதனங்களும் என்னுடைய கட்டளைக்குப் பாத்திரமானாலும், பிரகிருதி விமுக்தாத்மா என்னுடைய ஏவுதலுக்கு முக்கிய பாத்திர மென்பது கருத்து.]

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"அவ்வியக்த மென்பது பிரகிருதி யென்றும், ஈண்டுக் கூறிய சுலோகத்தில் அவ்வியக்த மென்பது பரப்பிரம்ம மென்றும் அறியத்தக்கது. 'ஓ மித்யகாக்ஷரம் ப்ரஹ்ம" என்ற சுலோகம் முதல் முந்திய 18-வது சுலோகம் வரையில் அக்ஷரத்தை (பிரஹ்மத்தை) அடைய உபாயஞ் சொல்லப்பட்டது"] 20

எவர் (எந்தப் பரமாத்மா) காணப்படாதவ ரென்றும், நாசரஹித ரென்றுஞ் சொல்லப்பட் டிருக்கின்றாரோ அவரைப் பரமபுருஷார்த்தமாக (மேலான பிரயோஜனமாக) வேதங்கள் கூறு கிற்கும். எதை யடைந்து திரும்புத லில்லையோ அந்த உத்தம சொரூபம் என்னுடையது."

[அர்ச்சுனா! அது எனக்கு உத்கிருஷ்டமான இருப்பிடமாக
ருக்கிறது. பகவானுடைய அதிகாரத்தி லிருப்பது பிரகிருதி, பிர
ருதி பத்தாத்மா தத்விமுக்தாத்மா ஆகிய இந்த மூன்றும் பகவா
னுடைய நியமன ஸ்தானங்களாக விருக்கின்றன. இவைகளில் மிகுந்த
திகாரத்தைச் செலுத்துமிடம் பிரகிருதி பந்தரஹித சுத்தாத்மா;
வ்வகைச் சுத்தாத்மா வாயினும் பகவானுக்கு அடங்கினதே யாம்.]

“எந்தப் பரம புருஷனிடத்தில் சகல பூதங்களும லய மடைகின்
றனவோ, எந்தப் பகவானாலே இவை யாவும் வியாபிக்கப்பட் டுள்ள
வோ, அந்தப் பரம புருஷன் வேறு பற்றில்லாத பக்தியாலே
அடையத் தகுந்தவன்.” 21-22

“தேகத்தை விடுகிறதான அந்தக் காலமானது எந்தத் தேவதைக்
குரியதோ, அந்தக் காலாபிமான தேவதைகள் வசிக்கப்பட்ட உல
கங்களின் மார்க்கமாகச் சென்று நிஷ்காம கரும யோகிகள் பிறவாமை
யாகிய ஜன்ம ரஹிதத்தையும், காமிய கரும யோகிகள் தேவலோக
பாக முதலியவற்றைப் புண்ணியத்திற்குத் தக்க காலமாகவும் அனு
பவித்து மீண்டும் பிறவியை யடைவார்கள்.” 23

“அக்கினி, தேஜஸ்ஸு, பகல், சுக்லபக்ஷம், ஷண்மாசம், உத்த
ராயணம், சம்வத்ஸரம் முதலாகச் சொல்லப்படும் அத் தேவதைக
ளுடைய லோகங்களின் வழியாய்ப் போகும் பிரம்மஞானிகள் பர
பிரமத்தை அடைகின்றார்கள்.”

[கருத்து:—முக்தி: சத்தியோ முக்தி, கிரம முக்தி என இருவகைப்
படும். சத்தியோ முக்தி என்பது, ஆகாயத்தில் பறக்கும் பக்ஷி
யானது தனக்குப் பசி யெடுத்தபோது திடீரென்று தனக்கு
வேண்டிய பலாதிகளுள்ள விருக்ஷத்தைப் பார்த்துப் பறந்து
பழவர்க்கங்களைப் புசித்துத் திருப்தி யடைவதுபோல, அதிதீவிர
வைராக்கிய சாலியாகிய புருஷன் தனக்கு முமுக்ஷுத்துவம்
என்ற லக்ஷண மாத்திரத்தில் திடீரென்று பற்றுக்களை யெல்லா
முதறிவிட்டுப் பிரம்ம ஞானத்தைக் கைப்பற்றிப் பிரஹ்மானு
பூதியில் பேரின்ப நிலையினின்றும் பெயராமல் வீற்றிருக்கும்
நிலைமையாகும்.]

[கிரம முக்தி என்பது:—ஒரு எறும்பானது மெல்ல மெல்ல ஒரு விரு
க்ஷத்தின்மீது கொம்புகளிலும் இலைகளிலும் சுற்றிக் கடைசி
யாகப் பழத்தைக் கண்டு பிடித்து உண்டு திருப்தி யடை
வது போல, மெல்ல நானாவிதத் தொழில்களிலும் உழன்று
முடிவில் உண்மைப் பதத்தை யடைந் தொடுங்கி உபசாந்த

நிலைமையைப் பெறுவதாம். இந்த மார்க்கந்தான் மோக்ஷ லோகத்திற்குச் செல்லு மார்க்கம். இது அர்ச்சிராதி மார்க்கம்.] 24

“தூமம், இரவு, கிருஷ்ணபக்ஷம், ஷண்மாசம், தக்ஷிணாயனம் முதலாகச் சொல்லப்படும் தூமாதி மார்க்கமாய்ச் சொல்லுகின்ற புண்ணிய கர்மஞ் செய்தவன், சந்திர சம்பந்தமான காந்தியை யடைந்திருந்து மீண்டுந் திரும்பி விடுகிறான்.”

[நமக்கு ஆறு மாதங் கொண்ட தக்ஷிணாயனம், தேவருக்கு ஒரு இராப்போதாகலின் சந்திரப் பிரகாசத்தோடு கூடிய சுவர்க்க மென்றதற்குத் தேவர்களுக்கு இராக்காலமெனப் பொருள் கொள்க. புண்ணிய கருமங்களைச் செய்தவர்கள் சொர்க்க மநுபவித்துத் திரும்பவும் பிறப்பார்க ளென்றதனால் பாப கருமங்களைச் செய்தவர்கள் நரக மநுபவித்துத் திரும்புவார்க ளென்பதும், சுவர்க்க நரகாதிகளை அடையத்தக்க மிக்க புண்ணிய பாவ கருமங்களை யியற்றாத க்ஷுத்திர கருமிகள் இங்குத்தானே பிறந்து பிறந்து உழன்றுகொண் டிருப்பார்க ளென்பதுங் கொள்க.] 25

“மேற் கூறியவெல்லாம் சுக்கிலகதி யென்கிற அர்ச்சிராதி மார்க்கமும், கிருஷ்ணகதி யென்கிற தூமாதி மார்க்கமும் உலகத்திற்குச் சாசுவதமாய் ஏற்பட்டவைகள். இவற்றுள் சுக்கில கதியாற் சென்றவன் மீண்டும் புனர்ஜனன மடைகிறதில்லை; கிருஷ்ண கதியாற் சென்றவன் மீண்டும் ஜன்மத்தை அடைகின்றான்.” 26

“மேற் கூறிய இரு வகையான மார்க்கங்களையு மறிந்த யோகியானவன் மோகத்தை யடையமாட்டான்; மற்றப்படி தனக்கென்று வகுத்த அர்ச்சிராதி மார்க்கத்திலேயே போவான். ஆகையால் அர்ச்சுனா! நீ தினந்தோறும் அர்ச்சிராதி மார்க்கத்தைச் சிந்தித்திருக்கை யென்கிற யோகத்தோடு கூடியிரு.” 27

“வேதம், யாகம், தவம், தானம் முதலிய புண்ணியங்களுக்கு என்ன பலன்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவற்றைப் பகவான் மகிமையை யறிந்த யோகியானவன் உல்லங்கனஞ் செய்கின்றான்: அதாவது, இப் பலன்கள் புநர்ஜனன ஹேது என்று கருதி அவற்றை அற்பமாக நினையான்: ஆதிகாரணமாய்ப் பரமோத்கிருஷ்டமாய் விளங்கும் பரப்பிரமத்தை யடைவான்.” 28

எட்டாவது அத்தியாயம்
முற்றுப்பெற்றது.

---

## ஒன்பதாவது அத்தியாயம்

# இராஜ வித்யா இராஜகுஹ்ய யோகம்

---

### அவதாரிகை

[உபாஸிப்பவர்களின் வேறுபாட்டுக்குக் காரணமான விசேஷங்கள் சொல்லப்பட்டன. இப்பொழுது உபாசிக்கவேண்டும் பரம புருஷன் மகிமையையும் ஞானிகளுக்குண்டான விசேஷத்தையும் விசாரித்து, பக்தி ரூபமான உபாசனத்தின் சுவரூபம் சொல்லப்படுகிறது.]

"அர்ச்சுனா! அசூயை கொள்ளாம லிருக்கிற உனக்கு மிகவும்
ரஹஸ்யார்த்தமான பக்தியென்னும் உபாசன ஞானத்தை அந்த
ஞானத்தின் சுகி விசேஷத்தோடு கூட இப்பொழுது சொல்லுகின்
றேன். இதை யறிந்து அனுஷ்டித்தாயாகில் நம்மைச் சேரவொட்
டாமல் தடுக்கிற சகல பாபங்களினின்றும் நீ விடுபடுவாய்" 1

"அர்ச்சுனா! நாம் சொல்லப்போகிற இந்த பக்தியானது வித்தை
களுக் கெல்லாம் இராஜா வாகையாலே இதற்கு இராஜவித்தை யென்
றும், இரஹஸ்யங்களுக் கெல்லாம் மேலா யிருக்கையாலே இராஜ
ரஹஸ்ய மென்றும் பெயர். நம்மோடு சேரவொட்டாமல் தடை செய்
கின்ற சகல பாபங்களையும் போக்கும்படி மிகவும் பரிசுத்தமானது;
அறியவேண்டும் பொருளான நம்மைப் பிரத்யக்ஷமாய்க் காட்டக் கூடி
யது; அப்படி யிருக்கச் செய்தேயும் தர்மத்தினின்று நீங்காதது;
என்றால், தர்மமானது மோக்ஷத்தைச் சாதிக்குமது; இந்த பக்தி
யானது தானே மிகவும் இனியதாய்க் கொண்டு அப்பொழுதே எம்
பெருமானைப் பிரத்தியக்ஷமாய்க் காட்டுகின்றமையால் தானே மோக்ஷ
த்தைக் கொடுத்தாலும் அதுவே தனக்குப் பயனாய் அத்துடன்
நில்லாமல் உத்தம மோக்ஷமான நம்மையு மடைவிக்கு மென்றபடி
யாம்.) இவ்வாறு இனியதா யிருக்கையாலே செய்வதற்கும் எளியதா
யிருக்கும். மற்றச் சாதனங்களைப்போலப் பலனை யளித்தபோதே
அழிந்துபோகாமல் மோக்ஷத்தைக் கொடுத்த பின்பும் அழியாம லிருக்
கும்; என்றால், இப்படிப்பட்ட பக்தி ரூபமான உபாசனத்தைச்
செய்பவனுக்கு நம்மைத் தந்த பின்பும் நாம் என் செய்தோமென்று
எண்ணும்படியா யிருக்கு மென்றபடியாம்."

[குறிப்பு:—ஆரிய மகா ஜனங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள வித்தைகள் பதினான்காம். இந்தப் பதினான்கு வித்தைகளாலும் கொண்டாடப்பட்டுள்ளதும் துதிக்கப்பட்டுள்ளதும் மேற்குறித்த பிரஹ்ம ஞானமே யாதலின் இதனையே வித்தைகளுக் கெல்லாம் இராஜா வென்பார் 'ராஜவித்யா' என்றும்; இந்தப் பதினான்கு வித்தைகளும், வெவ்வேறு பல சமயங்களால் மோகிக்கும் அச்சீவர்களைப் பரிபாகப்படுத்தி, முமுக்ஷுத்துவம் மேலிட்ட உத்தமாதிகாரிகட்கே தமது இரகசியப் பயனைச் சேமித்து வைத்திருத்தலின் இதனை இரகசியங்களுக் கெல்லாம் இராஜ ரகசிய மென்பார் 'ராஜ குஹ்யம்' என்றும்; சரியை, கிரியை, யோகம், ஞானங்க ளென்கிற உத்தமமான சாதனங்களுக் கெல்லாம் சிரேஷ்டமான தென்பார் 'உத்தமம்' என்றும்; சுத்த மென்று சொல்லப்பட்ட அனைத்தையும் பரிசுத்த மாக்குவ தென்பார் 'பரிசுத்தமானது' என்றும், (அத்-2, சு-16-ல்) என்றுமுள்ள இயற்கையாஞ் சொரூபத்தை உள்ளவாறு பிரத்தியக்ஷமாய்க் காட்டுவ தென்பார் 'நானே நீ யெனப் பிரத்தியக்ஷமாகக் காட்டவல்ல' என்றும்; இதுவே ஆரியர்கட்குரிய உயர் ஞான மென்பார்; 'திரவியம்' என்றும்; சகல கருமங்களையும் நீக்கியும் நீக்காமலும் சும்மா விருத்தவல்ல தென்பார்; 'கர்மம்' என்றும்; எண்விதங்களாகக் கூறப்பட்ட ஆனந்தங்களும் போலி யெனத் தீர்ந்த விடத்துண்டாம் நிரதிசய சுகப்பேறென்பார் 'தனதியற்கை இன்பமான நிரதிசயமானது' என்றும்; உதயம் அஸ்தமனம் என்பதின்றிச் சதோதயமாக விளங்கப்பட்ட தொன்றென்றுங் கூறியதாம்.] 2

"இவ்வாறு மிகவும் இனியனான நம் விஷயத்தில் செய்யும் பக்தியானது இனியதாயும் நம்மை யடைவிப்பதாயும் அழிவற்றதாயு மிருக்க, இதைக் கைப்பற்றும்படியான நல்ல நிலைமி லிருந்தும், விரைவில் ஆதாரத்தோடு கைப்பற்றாதவர்கள் நம்மை யடையாமற் போவதோடு யமனான சம்சாரத்தில் தாமே அழுந்திப்போகின்றார்கள்" 3

"சேதனம் அசேதனம் என் றிருவகையாயுள்ள இவ்வுலகங்கள் யாவும் எங்கும் மறைந்துறைகின்ற அந்தர்யாமியான நம்மால் வியாபிக்கப்பட் டிருக்கின்றன; (என்றால்; இவைகளைத் தரிப்பதற்காகவும் ஆள்வதற்காகவும் பதியாயிருந்து வியாபித்திருக்கிறோ மென்றபடியாம்.) ஆகையால், சகல பூதங்களும் அந்தரியாமியான நம்மிடத்தி லிருக்கின்றன; நாமோ அவைகளி லிருப்பதில்லை. அதாவது, நம் நிலைமையைப்பற்றி அவைகளாற் சிறிதும் உபகாரமில்லை யென்றபடியாம்." 4

"நாம் (அவைகளைத் தரிக்கும்பொழுது ஜலம் முதலியவற்றைத் தரிக்கிற குடம் முதலியவைகளைப்போல்) ஆதாரமாய்த் தரிக்கிறோமென்பதல்ல; மற்றப்படி கேவலம் நமது சங்கற்பமென்கிற இச்சையினாலே தரிக்கிறோம். பார்த்தையோ சர்வேசுவரனான நம்முடைய யோக மகிமையை. நம்மைத் தவிர யாருக்காகிலும் எங்காகிலும் இப்படிப்பட்ட சக்தி யுண்டா? சகல பூதங்களையும் தரிப்பவனாகிய நாம் அவைகளாற் சிறிதும் சகாயத்தைப் பெறாமல் கேவலம் சங்கற்ப மாத்திரத்தால் அவைகளைத் தரித்தும் ஆண்டும் பரிபாலித்தும் வருகிறோமே; இதுவே நம்முடைய யோகமாவது." 5

"அர்ச்சுனா! நிராதாரமான ஆகாசத்தில் பெருத்த வாயுவானது இருந்துகொண்டு எங்கும் வீசுகிறதைப் பார்த்தால் அந்த வாயுவின் நிலைமை நம் ஆதீனமென்று அவசியம் ஒப்புக்கொள்ள வேண்டியதா யிருக்கின்ற தல்லவா? அதுபோல், எல்லாப் பூதங்களும் அவைகளாற் காணப்படாத நம்மிடத்தில் நிலைபெற் றிருக்கும்." 6

"தாவரமாயும் ஜங்கமமாயு முள்ள எல்லாப் பூதங்களும் நாமரூபங்கள்கொண்டு பிரிக்கப்போகாமல் கேவலம் தமசு என்று சொல்லப்பட்ட (நம் சரீரமான) பிரகிருதியால் நான்முகனுக்கு முடிவு நாளான கல்ப க்ஷயத்தில் நம் சங்கல்பத்தால் லயிக்கின்றன. மீண்டும் கல்பாதியில் அவைகளை நாம் படைக்கின்றோம்."

[குறிப்பு:—"மாயாப பிரதிபிம்பரான ஈசுவரனுக்கே பஞ்ச கிருத்திய கர்த்தத்துவ மாகையால், பிரமம் பந்த முத்தி விவகாரங்கள் கடந்தது" என்பது ஸ்ரீ சங்கரர் கருத்தாகும்.] 7

"விசித்திரமாய் விகாரப்படும் நம் பிரகிருதியை எட்டு வகையாக விகாரப்படுத்தி, தேவர், திரியக்கு, மனிதர், தாவரம் என்கிற நால் வகைப் பூதங்களையும் குணமயமான அந்தப் பிரகிருதியினின்றும் அந்தந்தக் காலத்தில் சிருஷ்டிக்கிறோம்." 8

"அர்ச்சுனா! வித்தியாசமாய்ச் சிருஷ்டி முதலிய தொழில்களைச் செய்வதனால் நமக்குக் கருணையின்மை முதலிய குற்றங்கள் வர மாட்டா." 9

"ஏனென்றால், தேவனும் மனிதனும் பிராணிகளின் வித்தியாசமா யுண்டாவதற்குக் காரணம் ஜீவர்கள் செய்த பூர்வ கர்மமாகும்; நாமோ அந்த வித்தியாச விஷயத்தில் தட்டாம லிருக்கிறோம். ஆகையால், ஜீவர்களின் கர்மத்திற்குத் தக்கபடி நம் பிரகிருதியானது

சத்திய சங்கல்பனாகிய நம்மால் கடாக்ஷிக்கப்பட்டதாய்ச் சராசரமா யுள்ள இச் சகத்தை யுண்டாக்குகின்றது.''

[இவ்வாறு கர்மாநுகுணமான நாம் சங்கல்பிக்கிறோ மென்கிற இந்த ஹேதுவினால்தான் உலகம் வித்தியாசமா யிருக்கின்றது. இந்த ஜீவாத்மாக்களின் கர்மங்களுக்குத் தக்கபடி என்னுடைய பார்வை யாகிற காரணத்தினால் உலகம் மாறி மாறி வருகிற தாகையினால் நான் எஜமானனென்பதும், சத்திய சங்கல்பனென்பதும், தயை இல்லாமை முதலிய தோஷங்க ளற்றவ னென்பதும், மற்று மிவை முதலிய வசு தேவருக்குத் திருக்குமாரராக அவதாரஞ் செய்த பகவானாகிய என் னுடைய அசாதாரணமான சுவபாவங்களைப் பார். அவ்வாறே சுருதியி லும் மாயைக்கு எஜமானனாகிய யான் இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ் டிக்கின்றேன். அந்தப் பிரபஞ்சத்தில் மற்றொருவன் மாயையினால் தடுக்கப்பட் டிருக்கின்றான். மாயையைப் பிரகிருதியென்று தெரிந்து கொள்ள வேண்டும்.] 10

''இவ்வாறு பூதங்களுக் கெல்லாம் மகேசுவரனாய், சர்வக்ஞனாய், சத்திய சங்கல்பனாய், சகல ஜகத்திற்கும் முக்கிய காரணனா யிருக்கும் நாம் மிகவும் தயாளு வாகையாலே யாவரும் நம்மைப்பற்றிக் கடைத் தேற வேண்டுமென்று மனுஷ்யனாய் அவதரித் திருக்கின்றோம். இதைத் (தீவினையால் மதிகெட்ட) இந்தப் பிராணிகள் என்னை அறிய மாட்டாமல் கேவலம் உலகத்திலுள்ள மனிதரில் இவனுமொருவ னென்று சாதாரணமாய் நினைத்து விடுகின்றன. என்றால், பூதங்களுக் கிறைவனாகிய நாம் கருணையாலும் ஔதாரியத்தாலும் அன்பினாலும் இவ்வாறு மனிதனாய்த் தோன்றினோ மென்கிற இம் மேன்மையைச் சிறிது மோராமல், கேவலம் மனிதனாய்ப் பிறந்ததினாலேயே நம்மை இகழ்கிறார்கள்.'' **11**

''தயை முதலிய நம் மேன்மைக் கீடாக நாம் மனிதனாய் அவ தரிக்கிறோ மென்பதை யறிய வொட்டாமல் மறைக்கின்றதாய், அரக் கர் தன்மையும் அசுரத் தன்மையும் பொருந்தியதாயுள்ள இப் பிரகிரு திக்குள் அகப்பட்ட இந்தப் பிராணிகள், தாம் கோரிய கோரிக்கை யொன்றும் நிறைவேறாமலும், எடுத்த காரிய மெதுவும் தலைகாட் டாமலும், நினைத்ததெல்லாம் பழுதாய், (சராசரமாயுள்ள பதார்த் தங்களில் ஒன்றையும் உள்ளபடியே அறிய மாட்டாமையால்) எல் லாம் வியர்த்தமா யிருப்பதற்காக நினைத்துக் கெட்டுப் போகின்றார் கள்; என்றால் சர்வேஸ்வரனான நம்மைப் பிறருக்குச் சமமாக

ண்ணுமவன் நம் விஷயத்தில் எந்தக் காரியத்தைச் செய்ய முயன்
ிலும் பயன் படாவாம்."

[குறிப்பு:—பிரக்கியானம் பிரமம், அஹம் பிரமாஸ்மி, தத்துவமஸி, அயமாத்மா பிரமம் என்கிற இருக்கு, யஜுர், ஸாமம், அதர்வணமாகிய நான்கு வேத மகா வாக்கியங்களில் ஸாம வேத மகா வாக்கியத்தில் மற்றைய மூன்று மகா வாக்கியார்த்தங்களும் அடங்கி யிருத்தலால் தத்துவமஸி யென்ற அவ்வொன்றையே முக்தி யுபதேச முடிவுரை யெனக் கொண்டு ஸ்ரீமத் பரமஹம்சாளான ஸ்ரீ சங்கராசாரியர், "தத்துவமஸி" என்றதற்கு "அது நான் ஆகிறேன்" எனச் சத்தமே பிரமாணமாகத் தமது அத்துவித பாஷியத்திற் செம்பொருள் விதித்தனர். ஸ்ரீமத் பரமஹம்சாளான இராமாநுஜாசாரியரும், ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியரும் தமது விசிஷ்டாத்வைத பாஷ்யங்களில் "தத்துவமஸி"க்கு "அதுபோல நீ யாகிறாய்" என்றும், "அதன் தர்மமாக நீ ஆகிறாய்" என்றும், 'இவர்' துவம் என்கிற உருபுகளை வருவித்துப் பொருள் விரித்தனர். ஆயின், இவ் வத்தியாயம் மூன்றாவது சுலோகத்திற் கூறிய பிரம சாயுச்சியமானது 'அது நீ யாகிறாய்' என்கிற செம்பொருட் பொருத்த முடைத்தாதலால் 'அதுபோல நீ யாகிறாய்' என்னும் விசிஷ்டாத்வைத ஞானமானது பரமபத மடைந்து சாரூப மடைவதான பதமுதத்தி ஞானமன்றிப் பகவா னிங்குக் கூறும் இயல் ஞானமான பிரம ஞான மன்றென்பதை யறிவுடையோர் உய்த்துணர்ந்து கொள்வர். பரமபதத்தில் ஸ்ரீமந் நாராயணனது சரீரத்திற்குச் சமமாகிய அப்பிராகிருத திவ்விய தேகங்களை யுடையவர்களாய், பகவத் சன்னிதி முதலிய வைபவங்களினு லுண்டாகும் பரமானந்தத்தை யனுபவிக்க நேர்ந்த தருணத்தில் சங்கு, சக்கர, கதா, கட்க, கோதண்டபாணியாய் ஸ்ரீ லக்ஷ்மி சமேதரரா யிருக்கும் திவ்விய திருவிழாவைக் கண்ணுற்றுக் களிப்பதன்றி, அங்கும் அவனது ஆத்ம சொரூபமாகிய அவ்வியக்த அக்ஷரப் பிரம சொரூபத்தி லிரண்டறக் கலத்தலாகிய சாயுச்சிய மின்றாதலாற் பூரண முக்தியாகிய பிரம்ம சாயுச்சியத்தைக் கூறும் 'அது நீ ஆனாய்' என்ற ஸ்ரீ சங்கர பாஷியம்போல் மற்றையோர் பாஷியங்கள் சிறவா வென்பதாம். அன்றியுங், "பிரக்கியானம் பிரமம்" என்பதும் அந்த பிரக்ஞை நானாதலால் "அஹம் பிரமாஸ்மி" "அந்தப் பிரமம் நானாகிறேன்" என்பதும் அங்ஙனம் வாய்ந்த பிரமமாகிய ஆத்மாவே நானாதலால், "அயமாத்மா பிரமம்" அவ் வாத்மாவான நானே பிரம மென்கிற மூன்று மகா வாக்கியத்தைத்

தம்மு ளடக்கி நிற்கும் "தத்துவமஸி"க்குச் செம்பொருள் விரிக்காது மயக்கப் பொருள் கூறியது சாமானிய பதங்களின் பொருட்டாதலால் இவ்விடத்தில் பகவான் கூறிய வியல் ஞான மான பிரம ஞானத்தை இவ் வந்வய முணராமையின் 'அது நீ யாஞய்" என்ற அத்துவிதப் பயனே எவ்விதத்துஞ் சிறந்தமை வச்சிரலேபமாக நாட்டப்பட்டது.

ஆனல், தத்துவமஸிக்கு ஸ்ரீ இராமாநுஜராதிய பெரியோர்கள் கூறிய பாஷ்யங்களுக்குக் கீதையில் ஆதார மின்றோ வெனின், வாச்சியம், இலக்ஷியம் என் றிருவகையாம். அவற்றில், தத்துவமஸிக்கு வாச்சியப் பொருள் விரிக்குமிடத்து தத் - அது, ஈசுவரனுகிய சமஷ்டி காரணோபாதிக மாய்ப் பிரதிபிம்ப சைதன்னிய மென்றும், துவம்-நீ, ஜீவனுகிய வியஷ்டி காரியோபாதிக அவித்தியாப் பிரதிபிம்ப சைதன்னிய மென்றுமாம். ஆயின் காரண காரிய உபாதிகட்கு ஐக்கியங் கூடாமையின் நீ யது வாகிறு யென்னமல், நீ அதுபோ லாகிறு யென்றும், நீ அதன் தர்ம மாகிறு யென்றும் அவர்கள் கூறியது பசுமரத்திற் கடாவியதோ ராணிபோன்ற உறுதியே யென்க. இதனை மறுப்பதும் கூடாமையே யாம். பகவான் தத்துவமஸிக்கு, வாச்சியார்த்தமாகிய தனது விஷ்ணு சம்பந்தமான பரமபதத்தைப் பக்தர்கள் அடைவதாக உபாசன மார்க்கங்களை யுணர்த்தும் இடங்கள்தோறும், அதுபோல நீயாகிறுய் என்கிற பாஷ்யமே மகா பொருத்த முடையதால் கீதையில் ஆதார மவர்க்கு மிகவு முளது.

பின்னுந் தத்துவமஸிக்கு. இலக்ஷியப் பொருள் விரிக்குமிடத்து, தத்-அது, சமஷ்டி காரணோபாதிகளை நீக்கியவிடத்துக் காணப் படுவதாம். நிருபாதிக பிரம சைதன்னிய மென்றும், துவம்-நீ, வியஷ்டி காரியோபாதிகளை நீக்கியவிடத்துக் காணப்படுவதான நிருபாதிக பரமாத்ம சைதன்னிய மென்றுமாம். ஆயின் அது வெனற்கும் நீ யெனற்கும் சர்வஞ்ஞ உபாதி நாட்டத்தால் முன்னர் வாச்சியத்தி லுண்டுபோற் காணப்பட்ட பேதமுற்று மிறந்து அதுவே நீ, நீயே அதுவாகிறுய் என்கிற "அஸி" பத அர்த்தமான ஐக்கிய ஞானமுண் டாதலின் இலக்ஷியார்த்தத்தில் அதுவே நீ யாகிறுய் என்கிற ஸ்ரீ சங்கராருடைய அந்வயமே கீதையில் வித்தைகளுக் கெல்லாம் இராஜ வித்தையாகவும், இரகசியங்களுக்குள்ள இராஜ ரகசியமாகவும் பிரம்ம ஞானத் தைச் சொல்லு மிடங்கள் தோறும் முற்றும் ஆதரிக்கப்பட்டுச் சிறப்படையும் சர்வேசுவரனுகிய ஸ்ரீ பகவான், அர்ச்சுன நிமித்தமாக உலக ரக்ஷணர்த்தம் இந் நூல் சொன்னமையின்

சாமானியமான வாச்சியார்த்தமட்டுங் கூறிவிடாது உண்மை முடிபுரையான இலக்ஷியார்த்தமுங் கூறியது அவர் தம் முழு முதற் றன்மைக் குரித்தேயா மென்க. மேற் கூறிய விஷயங் களைப் பெரியோர்பாற் கேட்டுத் தெளிக.] 12

“ஓ! அர்ச்சுனா! மஹாத்மாக்களோ, தேவதைகள் சம்பந்த ான சுவபாவத்தை (சாத்துவிக சுவபாவத்தை) ஆசிரயித்தவர்க ாய்ப் பிரபஞ்சத்திற்குக் காரணமானவனும் நாசமற்றவனுமான ன்னை யறிந்து வேறிடத்தில் மனதைப் பற்றாதவர்களாய்ப் பூஜிக் ன்றார்கள்.”

[அதாவது, எவர்கள் தங்களால் செய்யப்பட்ட புண்ணியங்க ின் கூட்டத்தினால் என்னையே சரணமாக அடைந்து எல்லாப் ாவங்களின் பந்தத்தைப் போக்கிக் கொண்டவர்களாகித் தேவதை ளி னுடையதான சுவபாவத்தை அடைந்த மஹாத்மாக்களோ அவர் ள் வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத பேர் - வியாபாரம் - சுவ ரூபம் இவைகளை யுடையவனும், மிகுந்த தயை யுடையவனாகையி னால் சாதுக்களைக் காப்பாற்று நிமித்தம் மனிதனாக அவதாரஞ்செய்து இருக்கிற என்னை யறிந்துகொண்டு, என்னிடத்தி லுண்டான ரீதியின் மிகுதியினால் தங்களுடைய ஆத்மா மனது வெளி இந்திரி ங்கள் இவைகளைத் தரிப்பதையே அடையாதவர்களாய், என்னைக் றித்துப் பக்தி செய்வதையே பிரயோஜனமாக உடையவர்களாய்ப் க்தி செய்கின்றார்கள்.] 13

“இந்திரிய நிக்கிரகம், சமம், தமம், தயை என்னுந் தருமங்க ளோடு கூடினவர்களாய், எப்போதும் பிரம்ம ஸ்வரூபியான பகவா னாகிய என்னைக் கீர்த்தனஞ் செய்கின்றவர்களாயும், ஸ்திரமான விரத முடையவர்களாயும், ஜாக்கிரதை யுடையவர்களாயும், பக்தியாலே என்னை நமஸ்காரஞ் செய்கிறவர்களாயும் உபாசிக்கிறார்கள்.”

[அதாவது, மிகவும் (நம்மையே விரும்பியவ ராகையால்) நம் மைக் கீர்த்தனஞ் செய்தல், நம்மை யடைவதற்காகப் பிரயத்தனஞ் செய்தல், நம்மடிகளில் முடி சாய்த்தல் முதலிய செயல்களைச் செய் யாதபோது ஒரு க்ஷணமுந் தரிக்கமாட்டாதவர்களாய், என்றால் நற்குணங்களைப் பிரகாசப்படுத்தும் நமது திருநாமங்களை நினைத்துச் சரீரம் புளகித்து, சந்தோஷாதிசயத்தால், (நாராயணா! கிருஷ்ணா! வாசுதேவ!) என்றிப்படிச் சொல்லிக்கொண்டும், அப்படியே 'அர்ச் சனை முதலிய நமது ஆராதனத்திலும் அதற் கனுகூலமாகத் திருக்

கோயில் திருநந்தனவனம் முதலிய திருப்பணிகள் செய்வதிலும் திடமான உத்தேசத்தோடு யத்தனஞ் செய்து கொண்டும், பக்தியின் மிகுதியால் அஷ்டாங்கமும் படியும்படிப் பூமியில் தும்பு சேறு மணல் என்று ஒன்றையும் பாராமல் நம்மைக் கண்டவுடனே தடிபோல் விழுந்து தண்டஞ் சமர்ப்பிப்பவர்களாய், எப்போதும் நம் சன்னிதியி லிருக்க வேண்டுமென்று அதற்காகத் தாமுள்ள நாளெல்லாம் நமக் கடிமை செய்வதே தொழிலா யிருப்பார்கள்.] 14

"வேறு சிலர், 'ஸர்வமும் வாசுதேவனே' என்னும் ஞானயோகத் தாலும், சர்வம் பிரம மென்னும் அத்துவித பாவத்தாலும்; வேறு சிலர், உபாசிய உபாசக பாவத்தாலும், சமஸ்த தெய்வ சொரூப பாவத்தாலும் நானாவிதமாக என்னைச் சேவிக்கின்றார்கள்."

[அநேக விதமாகவும் தனித்தனியாகவும், ஏகதாகாரமாகவும், சமஸ்தப் பிரகாரமாகவும் நாமிருப்பதாக நம்மை உபாசிப்பார்கள். அதாவது, எம்பெருமான், சிருஷ்டிக்கு முன்பு சூக்ஷ்மமாய் நாம ரூபங்களில்லாம லிருந்த சேதனா சேதனங்களைச் சரீரமாய்த் தரித் திருந்து, ஒரு கால விசேஷத்தில் "அநேக விதமான நாமரூபங்க ளோடு கூடிய ஸ்தூலமான சேதனா சேதனங்களைச் சரீரமாய்த் தரிக் கக் கடவேன்" என்று சங்கற்பித்து, தாமொருவனே தேவர் திரி யக்கு மனிதர் தாவரம் என்று விசித்திரமாயுள்ள உலகத்தை யெல் லாம் சரீரமாகத் தரித்திருக்கிறானென்று நினைத்தவர்களாய் நம்மை உபாசிக்கிறார்கள்.] 15

"அர்ச்சுனா! ஜியோதிஷ்டோமம் முதலிய யக்ஞமும், மஹா யக்ஞ மும் யானே; பித்ருக்களை வளரச்செய்யும் 'ஸ்வதை' என்கிற அன்னமும் யானே; தேவர்களுக்குப் பிரீதிகரமான அவிசும் யானே; மந்திரமும் யானே; வேள்விக்குரிய நெய் முதலிய ஓமத் திரவியங் களும் யானே; ஆஹவநீயம் முதலான அக்கினியும் யானே; ஹோம மும் யானே." 16

"மேலும், சராசர ரூபமான இவ் வுலகுக்கெல்லாம் தாயுந் தந் தையும் பாட்டனும் நானே; அல்லாமல் வேதங்களா லறிய வேண்டிய தான பரிசுத்த வஸ்து எதுவோ அதுவும் நானே; வேதத்திற்கு முதற்காரணமான ஓங்காரமும், இருக்கு - யஜுஸ் - சாமம் என்கிற வேதமும் நானே." 17

"அர்ச்சுனா! ஆங்காங்கு அடையப்படும் இடமான சுவர்க்காதி களும் நானே; தரிப்பவனும், ஆள்பவனும், பிரத்யக்ஷமாய்ப் பார்ப்

வனும், உறைவிடமும், இஷ்டத்தைத் தந்து அநிஷ்டத்தை யொழிக்கும் புகலிடமும், இதஞ் செய்யுந் தோழனும், வஸ்துக்களின் உற்பத்தி லய ஸ்தானமும், உண்டாவதும், அழிவதும், அழிவற்ற முதற் காரணமும் நானே.” 18

“அக்கினி யென்றும், சூரியனென்றும் நானே தபிக்கிறேன்; கோடை முதலிய காலங்களில் நானே நீரை வறட்டுகிறேன்; அவ்வாறே மழை காலத்தில் மழையைப் பொழிகிறேன்; பிராணிகள் எதனால் மறிக்குமோ அதுவும், எதனால் பிழைக்குமோ அதுவும் நானே; பல வார்த்தை சொல்லி யென்ன? சத்தும் நானே, அசத்தும் நானே என்றால், முக்காலத்திலு முள்ள சேதனா சேதனங்களைச் சரீரமாக உடையவனா யிருப்பவன் நானே) யென்பது திண்ணம்.” 19

[அவதாரிகை:—இவ்வாறு எம்பிரானை அனுபவிப்பதே போகமென்றிருக்கும் ஞானிகளான மஹாத்மாக்களின் செயல்களைச் சொல்லி, அவர்கள் பெருமையையே பின்னும் பெருக்குவதற்காக இங்கே அஞ்ஞானிகளான காமியார்த்திகளின் செயலை யருளிச் செய்கிறார் ]

“முற் கூறியவர்களைப் போல வேதாந்த நிஷ்டையில் இல்லாமல் கேவலம் இருக்கு முதலிய மூன்று வேதங்களில் மாத்திரம் நிஷ்டையுடையோருக்குத் திரைவித்தியர்க ளென்று பெயர். அவர்கள் வேதத்தில் சொல்லப்படும் கேவலம் இந்திராதியர்களை நோக்கிச் செய்யும் யாகங்களில் மிச்சமான சோமலதை என்கிற ஆட்டாங் கொடியினது சாற்றை வேத மந்திரங்களினால் ஓமஞ் செய்து, அந்த ரஸத்தைக் குடித்து, அதனால் சுவர்க்கத்துக்கு விரோதமான சகல பாவங்களையு மொழித்து, கேவலம் இந்திராதியர்களை மாத்திரம் உத்தேசித்துச் செய்த யக்ஞங்களைச் செய்து முடித்துச் சுவர்க்கத்தைக் கோருகிறார்கள். பிறகு அவ்வாறே துயர் தீர்ந்த சுகமாயுள்ள அந்த சுவர்க்க லோகத்தை யடைந்து, அங்குண்டான திவ்யபோகங்களை நுகர்ந்து, பிறகு அந்த நுகர்ச்சிக்கு ஏதுவான புண்ணியங்கள் அழிந்தவாறே மறுபடியும் இம் மானிடலோகத்தில் வந்து சேருகிறார்கள். இப்படி இவர்கள் வேதாந்தத்தில் தேறின ஞானத்தையடையாமல் கேவலம் வேதத்தில் மாத்திரஞ் சொன்ன தருமங்களை யநுஷ்டிப்பதினால் சுவர்க்காதிகளான அற்ப பலன்களை யடைந்து அடிக்கடி போக்கு வரத்துமா யிருக்கிறார்கள்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“சுவர்க்காதி அனுபவத்தில் பிரியமுள்ளவர்கள் வேதங்களில் பிரதிபாதிக்கப்பட்ட யக்ஞங்

களிலே ஸ்வாமி தேவதா ரூபனாயிருக்கிற என்னைப் பூஜிக்கிறார்கள்.”]

[ஸ்ரீதரர் அபிப்பிராயம்:—“மூன்று மறைகளையும் அத்தியயனஞ் செய்கிறவர்கள் அன்றி, அதில் அடங்கியுள்ள அர்த்த விசாரஞ் செய்கிறவர்கள் ‘திரை வித்தியாள்’ என்றால், அந்த வேதங்களில் கூறியிருக்கிற விதமாய் யக்ஞாதிகளை அனுஷ்டிக்கிறவர்கள் தேவதா ஸ்வரூபமாய் நானிருக்கிறேனென்பதை யறியாமல் பூஜிக்கிறார்கள்.”] 20-21

“அர்ச்சுனா! யாதொரு பயனையும் நாடாமல், (நம்மை நினையாமற் போனால் தரிக்க மாட்டாமையால்) எந்த வேளையும் கேவலம் நம்மையே சிந்தித்திருக்கும் மகாத்மாக்களோ, சமஸ்த கல்யாண குண ஸ்வரூபனாய், சகல ஐசுவரிய சம்பன்னனாயுள்ள நம்மைப் பலபடியாலும் பரவுகின்றார்கள். அப்படி நம்மோடு நித்தியமான நிலை தங்களுக்கு வேண்டுமென்று கோரின அவர்களுக்கு, நாம் (நம்முடன் சேர்க்கையாகிற) யோகத்தையும் (மீண்டுந் திரும்பாமை யாகிற) க்ஷேமத்தையும் தருகிறோம்.” 22

“இந்திராதி தேவதைக ளிடத்தில் பக்தி சிரத்தையோடு கூடின யாதொரு ஜனங்கள் அந்தத் தேவதைகளை ஆராதித்தாலும் அவர்களு மென்னையே ஆராதித்தவர்களாகிறார்கள் எவ்வாறெனில், இந்திராதி தேவதைகள் என்னுடைய சரீரமாகையாலும், இந்திரியாதி சப்தங்களுக்கு நானே விஷய னாகையாலும், அந்தத் தேவதா சரீர ஆராதனையானது சரீரியான என்னை யாராதித்ததாகிறது. ஆனால், அவர்கள் சாக்ஷாத்கார ஆத்மாவான என்னை யாராதிக்கவில்லை; அந்தத் தேவதைகள் என்னுடைய சரீரமென்று தெரிந்து ஆராதிக்கவில்லை. ஆகையால், இவர்கள் கிரமமான விதமாய் என்னை ஆராதிக்கவில்லை.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“அன்னிய தேவதைக ளிடத்தில் பக்தியுள்ள யாதொரு ஜனங்கள் (பலன் கிடைக்கிறதென்கிற) நம்பிக்கையுடன் கூடி ஆராதிக்கிறார்களோ அவர்களும் என்னையே ஆராதிக்கிறவர்களானாலும் அஞ்ஞான மார்க்கமாய் ஆராதிக்கிறார்கள்.”] 23

“சமஸ்த சிரௌத ஸ்மார்த்த கருமங்களை யநுபவிப்பவனும் அவற்றிற்குப் பிரபுவும் நானே. என் யதார்த்த பிரதம தத்துவத்தை யுணராதவன் மேற்கூறிய கரும பலானுபவத்திற்கு ஸ்தானமான

வர்க்க லோகத்திலிருந்து மீண்டும் மத்திய லோகத்திற்கு வருகின்றன்.” 24

[“கிருஷ்ணா! இஃதென்ன ஆச்சரியம்? எல்லாரும் கர்மத்தைச் செய்யா நிற்க, அதில் நினைவு வேறுபட்டால் சிலர் அற்ப பலன்களை யடைந்து தவறிப்போவதும், சிலர் நித்தியானந்த பதமான மோக்ஷத்தைப் பெற்று மீட்சி யில்லாமற் போவதுமா யிருக்கிறார்கள். அஃதென்ன?”

“அர்ச்சுனா! நீ கேட்ட வினாவிற்கு மிகவும் மனமகிழ்ந்தேன். ஆனால், நான் கூறுவதைக் கேட்பாயாக.”]

“இந்திராதிகளைக் குறித்துச் செய்கிறோ மென்கிற சங்கற்பத்தோடு யக்ஞம் முதலிய கர்மங்களைச் செய்யுமவர்கள் இந்திராதிகளை யடைகின்றார்கள்; பித்துருக்களைக் கோரிச் செய்யு மவர்கள் பித்துருக்களை யடைகின்றார்கள்; யக்ஷ ராக்ஷஸ பிசாசாதிகளைக் குறித்துச் செய்யுமவர்கள் அந்த பூதங்களையே யடைகின்றார்கள். எவர்கள் அந்த யக்ஞங்களையே, “அந்தத் தேவ பித்துரு பூதங்களுக்கு அந்தராத்மாவா யுள்ள பரமாத்மாவை யாராதிக்கக் கடவோம்” என்கிற சங்கற்பத்தோடு நம்மை ஆராதிக்கின்றார்களோ அவர்கள் நம்மையே யடைகின்றார்கள்.” 25

“தேவாதிகளைப் பூஜிப்பவர்கள் அவர்களை யடைந்து, அவர்களோடு இன்பத்தை யனுபவித்து, அவர்கள் அழியும்போது தாமும் அழிகின்றார்கள். நம்மைப் பூஜிப்பவரோ ஆதியந்த மில்லாமல் சர்வஜ்ஞனாய், சத்திய சங்கற்பனாய், எல்லையில் சீரான அநந்த கல்யாண குணங்களுக்குப் பெருங் கடலாயுள்ள ஈறி லின்பமான நம்மை யடைந்து மீண்டுந் திரும்பாம லிருக்கின்றார்கள். மேலும், எளிதில் சம்பாதிக்கக்கூடிய திருத்துழாய் முதலிய பத்திரத்தையோ, புஷ்பத்தையோ, பழத்தையோ, ஜலத்தையோ, எதையாகிலும் எவனாகிலும் பக்தியோடு நமக்குச் சமர்ப்பித்தானாகில், (அவ்வாறு சமர்ப்பிக்கிறதே புருஷார்த்த மென்கிற பரிசுத்த நினைவோடும் பக்தியோடுங் கூடிச் சமர்ப்பித்த) அதை நாம் சர்வேசுவரனாய், சகல லோகங்களையும் படைத்துக் காத்து அழித்து விளையாடுபவனாய், ஆசைப்பட்ட தெல்லாம் அடைந்தவனாய், நினைத்ததைச் செய்து முடிக்க வல்லவனாய், எல்லை யில்லாத பெருமையும் எண்ணிக்கையுமற்ற கல்யாண குணங்களை யுடையவனாய்த், தனக்குத்தானே ஈறி லின்பமான சுவரூபத்தில் இன்புற்றவனா யிருந்தோ மாகிலும் கிடை

யாதது கிடைத்தாற்போல மிகவும் ஆதரவோடு அவற்றை அங்கீகரிக்கிறேம்."

[குறிப்பு:—பகவானுக்குப் பத்திரம் முதலியவற்றினால் சமர்ப்பித்துப் பேறு பெற்றவர் பலருள ராயினும் நால்வரைக் குறிப்பிடமென்பதே பெரியோர்களின் துணிபு. மேற்கூறிய 'நால்வரின்' சிறப்பைப்பற்றி ஈண்டு அடியிற் குறிப்பிட்ட கதைகளினுற் கண்டு தெளிக. அவையாவன:—

திரௌபதியினிடம் அவள் உண்பதற்கு முன் எத்தனை பெயர் ஆனாலும் அவர்களுக்குப் போஜன மிடுவதற்குத் தகுந்த பாத்திர மொன்றுளது. துரியோதனனுடைய பிரேரணையால் துர்வாச முனிவர் பாண்டவர்களைச் சபித்தற் பொருட்டுத் திரௌபதி உண்ட பிறகு அநேக ரிஷிக்கூட்டங்களுடன் அவ் வனத்தில் எழுந்தருளினர். அது தருணம் திரௌபதி, "பசியின் கொடுமையால் நலிந்திருக்கும் இப் பெரியோர்களை எவ்வாறு ஆராதிப்பேன்?" என்று விசனமுறுகையில், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இவ்விதத்தை யுணர்ந்து, அவ்விடத்திற்கு வந்து தமக்குப் பசி யெடுக்கிற தென்றும், இது தருணம் ஏதேனும் கொடுக்கும்படியும் கேட்டனர். அவள், "ஒன்று மில்லை" என்று கூறச் சமையல் செய்த பாத்திரத்தைப் பார்க்கும்படி கட்டளையிட்டனர். அவள் தான் சுத்தஞ் செய்த பாத்திரத்தில் அவ்வாறிராதென் றெண்ணி, ஆயினும் அவ்வாறே பார்க்கையில் ஒரு நாத்துண்டு அகத்திக்கீரை அகப்பட்டது. அதுவும் ஸ்ரீ கிருஷ்ணனது மாயை யென்று எண்ணினவளாய் அந்த இலையைக் கிருஷ்ணனது கரத்தில் தந்தனள். ஸ்ரீ கிருஷ்ண பகவான் அதனை யுண்ட வளவில் துர்வாசாதிகளின் வயிறுகள் வெடிக்கும்படி ஆயாஸ முண்டாகி, இவர்களைப் பங்கப்படுத்த வந்த தாங்களே பங்கப்பட்டுப் போயினர். இக் கதையினால் ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஒரு பத்திரத்தினால் திருப்தி யடைந்தாரென்பது பெறப்படும்.

கஜேந்திர ஆழ்வான் தடாகத்தில் தாமரைப் புஷ்பத்தைக் கண்ணுற்றுப் பூர்வ ஞானத்தால் அந்தப் புஷ்பத்தைப் பகவானுக்குச் சமர்ப்பிக்க வேண்டுமென்று விருப்புற்று மடுவில் இறங்கிய போது, முதலையால் அநேக நாளாகப் பீடிக்கப்பட் டிருந்தும் அந்தப் புஷ்பத்தை மாத்திரம் விடாமல், "ஓ! தயாநிதியே! எவ்வாற்றாலும் இந்தப் புஷ்பத்தைக் கொண்டு போம்" என்று பலவாறு இரங்குகையில், பகவான் கருணை கூர்ந்து பிரத்தியக்ஷமாய் முதலையைக் கொன்று கஜேந்திரனை ஆட்கொண்டான் என்பது சரிதம்.

சபரி என்னும் வேடப்பெண் ஸ்ரீராமனிடத்துள்ள அன்பின் மிகுதியால் காட்டிலுள்ள பழங்களைப் பறித்துக் கடித்து ருசி பார்த்து 'நல்ல கனிவர்க்கங்களை எம்பெருமானுக்குச் சமர்ப்பிக்க வேண்டும்' என்று கருதிச் சேமித்து வைத்து, பிறகு ஸ்ரீராமருக்குச் சமர்ப்பிக்க அவர் அந்தப் பழங்களை உவகையுடன் புசித்தனர்.

ரந்தி தேவன் தான் அடைந்திருந்த சகல செல்வங்களையுந் தானஞ் செய்துவிட்டு, நாற்பத்தெட்டுத் தினங்கள் அன்னம் புசியாமல் ஜலத்தைக் குடிக்கச் சித்தமா யிருக்கையில், பகவான் வேற்றுருவமாக வந்து பசியென்று முறை யிடுகையில், 'அதிதியின் உயிரைக் காத்தலே சிரேஷ்டம்' என்றெண்ணி அந்தப் புனலை அரசன் பகவானுக்குச் சமர்ப்பித்தான். அதனால் பகவான் கிருபை கூர்ந்தனர். இந்தத் திருஷ்டாந்தங்களினால் எந்தப் பொருளாயினும் பக்தியுடன் செய்தால் பகவானுக்கு எவ்வளவு சந்தோஷம் உண்டாமென்பது உணரற்பாலது.] 26

"கௌந்தேயா! நீ செய்யும் கருமத்தையும், புசிக்கும் பதார்த்தங்களையும், செய்யும் அவிசையும், தானங்களையும், தவத்தையும் எனக்கு அர்ப்பிதஞ் செய்க." 27

"நீ மேற்கூறிய வகையே, நிவிருத்தி மார்க்கத்தோடு கூடிய ஆத்மா வுடையவனாயின் கர்ம சம்பந்தமான சுபாசுப பலன்களினின்று தப்பித்துக்கொள்வாய்; அப்படிக் கர்ம பலன்களினின்று விமுக்தனான பின்னர் என் இடமான மோக்ஷத்தை யடைவாய்." 28

"நான் சர்வ பூதங்கட்கும் சமமானவன்; எனக்குப் பிரியனாயினுந் துவேஷியாயினுங் கிடையான். எவன் பக்தி சிரத்தையுடன் என்னைத் துதிக்கின்றானோ அவன் என்னிடத்தி லிருப்பவன்; அவனிடத்தில் நான் அனுக்கிரக ரூபனா யிருப்பேன்." 29

"அதிக துராசார முடையவனாயினும் அன்னிய தேவதையை பஜியாதவனாய் என்னையே துதிப்பானாயின் அவன் தெளிவான மனநிச்சய முள்ளவ னாகையால் அவன் சிரேஷ்டனாகவே தெரிந்துகொள்ளத் தக்கவன்."

[அதாவது, அந்தந்த ஜாதிகளில் பிறந்தவனுக்கு, எந்தெந்த நன்னடத்தை அங்கீகரிக்கத் தக்கதோ, எது விடத் தக்கதோ அவை அவைகளை மீறி நடப்பவனாக விருந்தபோதிலும், கீழ்ச் சொல்லியபடி பக்தி செய்வ தொன்றையே பிரயோஜனமாக வுடையவனாய்ப் பக்தி செய்கிறானே யானால், அவன் வைஷ்ணவர்களுக்

ளுள் சிறந்தவனாகவே பஹுமானஞ் செய்யத்தக்கவன்; அதாவது, கீழ்ச் சொல்லியவர்களுடன் சமானமானவன். அதெப்படி யென்றால், அவன் செய்யும் வியவசாய மப்படிப்பட்டது. அதாவது, "சகல ஜகத்திற்குங் காரணமாய் பரப்ரஹ்மமான ஸ்ரீமந் நாராயணனே சராசரங்களுக்கு மிறைவன், எனக்குத் தெய்வம், என் ஆசான், என் தோழன், எனக் கினியன்" என்றிவ்வாறு ஒருவராலும் அடையப்படாத விவசாயத்தை யடைந்து அதற் கேற்றபடி யாதொரு பயனையும் விரும்பாமல் நம்மையே கதியாய் அடைந்திருக்கின்றான். ஆகையால், இப்படிப்பட்ட விவசாயமும் அதற்கேற்ற செயலுமா யிருக்குமவன், அற்ப ஆசாரத்தைக் கைவிட்டா னென்று அதற்காக அவனை ஆதரிக்காம லிருக்கப் போகாது; மற்றப்படி வெகு மதிக்கத்தக்கவனே யாம். நம்மிடத்தில் பிரீதியால் நம்மை யடைந்தவன் தன் பாவத்தை யொழிக்கின்றமையால் இரஜோ குணத்தையும் தமோ குணத்தையும் வேரோடு களைந்து தர்மாத்மாவாய் விடுகின்றான்; என்றால், யாதொரு விரோதமு மின்றி நம்மை யடையவேண்டு மென்கிற எண்ணங்கொண்டு அதனால் நம்மை யடைவதற்கு விரோதமான துராசாரத்தினின்று நீங்குகிறான்.] 30

"ஓ! குந்திபுத்திரா! இவ் விஷயத்தில் நீயே பிரதிக்ஞை செய்யலாம். நம் பக்தியி லிழிந்தவன் விரோதமான நடவடிக்கையைச் செய்து வந்த போதிலுங் கெடுதி யடையமாட்டான். மற்றப்படி பக்தியின் மஹிமையால் சகலமான விரோதிகளையும் போக்கடித்து எந்நாளும் துராசாரத்தினின்று விலக்கினவனாய் விரைவில் பரிபூரண பக்தியை யடைவான."

மேலே கூறியவாறு துராசார முடையவனாயினும் பகவத் பக்தன் கெடாததற்குக் காரணம் யாதெனின்,

திருச்சந்த விருத்தம்

"இரந்துரைப்ப துண்டுவாழி யேமநீர் நிறத்தமா
வரந்தருந் திருக்குறிப்பில் வைத்ததாகில் மன்றுசேர்ப்
பரந்தசிந்தை யொன்றிநின்று நின்னபாத பங்கயம்
நிரந்தரம் நினைப்பதாக நீநினைக்க வேண்டுமே."

[என்றவாறு தன் பக்தன் பிரார்த்தித்தால் குற்றத்தையுங் குணமாகவே கொண்டருளுவான். பகவான் அவ்வா றருளிய பின்னர்ப் பக்தன் ஒரு விதத்தானுங் கேடடைத லில்லை. ஆயின்,

பகவான் தன் பக்தனது குற்றத்தை நோக்காது அவன் பிரார்த்தித்தவாறே யருளுவானோ வெனின்,]

முதலாயிரம்

"தன்னடியார் திறத்தகத்துத் தாமரையா ளாகிலுஞ் சிதை ரைக்குமேல், என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தா ன்பர்போலும், மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசை ாக்கி மலர்க்கண் வைத்த, என்னுடைய திருவரங்கர்க் கன்றியு மொருவர்க்கா ளாவரே."

என்றவாறு பக்தனிடத்திற் குற்றங் கண்டு கிருபா சொரூபி யான பிராட்டி விண்ணப்பஞ் செய்யினும் பகவான், "என்னடியா ரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்றருளும் பரம காருணிக னானமையாலே பக்தன் பிரார்த்தித்த வாறே யருளுவா' னென்க. ஆதலால், பகவத் பக்தன் துராசார முடையனாயினுங் கேடடைத லில்லை.

தேவதாந்திர பக்தர்களாகிய பாணாசுரனாதியாய அசுரர்களும், இராவணனாதியாய இராக்கதர்களுங் கேடடைந்தவாறும் பிரகலாதாழ்வானும் விபீஷணாழ்வானும் அவ் வசுர ராக்கத குலத்தினரேனும் பகவத் பக்தி செய்து ஒரு சிறிதுங் கேடடையாது பரம பாகவதர்களாகிப் பேறு பெற்றவாறு முணர்க. அன்றியும், பகவத் துவேஷியான கண்டாகருணன் போலத் துராசார முடையவன் யாவன்? கொடிய துராசாரமுடைய அக் கண்டாகருணனுந் தேவதாந்திர பக்தி விட்டுப் பின்பு பகவத் பக்தனாகிப் பேறு பெற்றவாறு முணர்க. கண்டாகருணன் பகவத் பக்தி செய்து பரம பாகவதனாகிப் பேறு பெற்ற பின்பு, பகவத் பக்தியாலே பேறு பெறாது கேடடைவோர் யாவர்?] 31

"ஓ! குந்திபுத்திரா! ஸ்திரீகளும், வைசியர்களும், சூத்திரர்களும் இன்னும் பாவ ஜென்மமெடுத்தவர் யாவரேயாகினும் நம்மை ஸ்ரயித்து பக்தி செய்வார்களாயின் அவர்களும் உத்தமமான தியை யடைவார்கள்." 32

"பதிவிரதைகளும், பக்தியுடைய பிராமண சிரேஷ்டர்களும், ாஜரிஷிகளும் சிறந்த கதியடைவோ ரென்பதற்குச் சந்தேக மில்லை. ஆகையால், இராஜ ரிஷியான நீ அசாசுவதமாய்த் தாபத்திரயத்தால் டைப்பட்டுச் சிறிதும் இன்ப மற்றதா யிருக்கு மிவ்வுலகத்தில் என் னைச் சரணடைந்து துதிக்கக்கடவாய். எப்பொழுதும் நம்மிடத்தில்

தானே மனதை வை: அதாவது, சர்வேசுவரனாய், சகல தோஷங்களுக்கு மெதிரான கல்யாணமே சுவரூபமாய், சர்வக்ஞனாய், சத்திய சங்கல்பனாய், சகல ஜகத்திற்கும் முக்கிய காரணனாய், பரப்பிரம்மமாய், புருஷோத்தமனாய், தாமரை யிதழ்போல் அமலங்களான திருக்கண்களுடையவனாய், தெளிந்த நீருண்ட மேகம்போன்றவனாய், ஆயிரம் சூரியர்கள் ஒரே முறையாய்த் தோன்றினதுபோல் ஒளிர்கின்றவனாய், லாவண்ணிய மென்னும் அமுத வெள்ளத்திற்குக் கடலாய், நீண்டு பருத்துள்ள நான்கு திருத்தோள்களை யுடையவனாய், மிகவும் பிரகாசமான பீதாம்பர முடுத்தவனாய், அதி நிர்மலமான கிரீடம், மகர குண்டலம், ஹாரம், தோள்வளை, கடகம் முதலிய ஆபரணங்களா லலங்கரிக்கப்பட் டுள்ளவனாய், அபாரமான கருணை, தண்ணளி, அழகு, இனிமை, அடக்கம், வன்மை முதலிய குணங்களுக்குப் பெருங் கடலாய், பிராணிகளிடத்தில் யாதொரு விசேஷமுமில்லாம லிருக்கச் செய்தே அவை யாவைக்கும் புகலிடமாய், சர்வசுவாமியாய் இருக்கும் நம்மிடத்தில் தைலதாரைபோல் இடைவிடாத சிந்தையைச் செய். அச் சிந்தையும் நம்மிடத்தில் மிகுந்த பிரீதியுடன் கூடி யிருக்கட்டும்; அவ்வாறு நம்மை அனுபவித்து, ஈறி லின்பமான அவ்வனுபவத்தால் நம்மை ஆராதிப்பதே தொழிலா யிரு. அவ்வாராதனமாவது யாதெனில், பரிபூர்ணமான அடிமைத் தொழில், அதாவது ஔபசாரிகம், (அர்க்கியம், பாத்தியம்) ஸாம்ஸ்பர்சிகம், (திருமாலை முதலியன) ஆப்யவஹாரிகம், (அன்னம் தண்ணீர் முதலியன) இவை முதலிய வெல்லாப் போகங்களையும் கொடுத்தலாம். இதனால், நம்மை யனுபவத்தி லுண்டான பிரீதிக்குப் போக்கு விடாக நமது கைங்கரியமே தொழிலாகும்படி நம்மிடத்தில் மனம் வை யென்றதாயிற்று. இவ்வாறு, நமக்கு எல்லா அடிமைகளும் செய்வதோடு அந்தராத்மாவான நம்மிடத்தில் மிகுதியும் வணக்கத்தோடும் கூடியிரு; அதுவுமன்றி, நம்மைப் பிரிந்தால் தரிக்க மாட்டாதபடி நாமே கதியா யிரு; இவ்வாறு, எல்லையி லின்பப் பெருக்கான நம் அனுபவத்திற்கு யோக்கியமாம்படி மனதைத் திருத்தினையாகில் பிறகு நம்மையே யடைவாய், என்றால். இப்படிப்பட்ட மனதைக் கொண்டு நம்மைத் தியானஞ் செய்து, நம்மை அனுபவித்து, நம்மை யாராதித்து வணங்கி, நாமே கதியா யிருந்தாயாகில் நம்மையே யடைவாய்.”

[ஆக இவ்வாறு சரீரத்தைக் காப்பதற்காகச் செய்யும் லௌகிக கருமங்களும், (நித்திய நைமித்திகங்களான) வைதிக கர்மங்

களும் நம் பிரீதிக்காக நமக் கடிமையா யிருக்கிற உன்னைக் கொண்டு நம்மால் செய்விக்கப்பட்டன வென்று நினைத்துச் செய்தவனாய், எப்போதும் நம் விஷயத்தில் கீர்த்தனம் முதலியவைகளைச் செய்துகொண்டு நம்மா லாளப்படும் இவ் வுலகிற் கெல்லாம் நமக் காட்பட்டிருத்தலே சுவரூப மென்று நினைப்பதோடு மிகவும் இனியவைகளான நமது குணங்களையும் சிந்தித்துக்கொண்டு நாடோறும் மேற் கூறியபடி இவ் வுபாசனத்தைச் செய்து வந்தாயாகில் நம்மையே யடைவாய் என்றருளிச் செய்ததாயிற்று.] 33-34

ஒன்பதாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.



பத்தாவது அத்தியாயம்

# விபூதி யோகம்

---

## அவதாரிகை

[பக்தி யோகம் சாங்கமாக விதிக்கப்பட்டது. இப்பொழுது பக்தி யுண்டாவதற்காகவும், அது வளருவதற்காகவும் எம்பெருமானுடைய நிகரற்ற ஐசுவரியம் முதலிய கல்யாண குணத்தொகையின் முடிவின்மையும், ஜகமெல்லாம் அவனுக்குச் சரீரமா யிருக்கையாலே அவனுருவாய் அவன் ஏவச் செல்லும்படியா யிருக்கின்றமையும் விஸ்தரித்துச் சொல்லப்படுகின்றன.]

“பார்த்த! நம் மகிமையைக் கேட்டுச் சந்தோஷிக்கின்ற உனக்கு நம் விஷயத்தில் பக்தி பிறந்து வளரும்படி உனக்கு இதஞ்செய்ய வேண்டி மறுபடியும் நம் மகிமையையே விளக்குவதான சிறந்ததொரு வாக்கியத்தைச் சொல்லுகின்றோம். இதனைக் கவலை யில்லாத மனத்தோடுங் கேட்பாயாக.” 1

“அதாவது தேவதைகளும் மகரிஷிகளும் புலன்களுக் கெட்டாத விஷயங்களைப் பார்க்கக் கூடியவராய் மிகுந்த அறிவுடையவரா யிருந்தாராகிலும் நம்முடைய நாமம் - கருமம் - சுவரூபம் - சுவபாவம் முதலியவைகளை அறியமாட்டார்கள். ஏனென்றால், அத் தேவாதிகளுக் கெல்லாம் நாம் சகல விதத்திலும் ஆதியா யிருக்கின்றோம். ஏனெனில், நாம் ஆதியாகையால் அவர்களுடைய தேவத்தன்மைக்கும் ரிஷித்தன்மைக்குங் காரணமான புண்ணியத்திற்குத் தக்கபடி அவர்களுக்கு நாம் கொடுத்திருக்கு மறிவு கொஞ்சம்: அதைக் கொண்டு அவர்கள் நமது அளவற்ற சுவரூபாதிகளை யுள்ளபடியே எவ்வாறு அறியக்கூடும்?” 2

[அவதாரிகை:—இப்படித் தேவாதிகளாலு மறியப்போகாத தம்மை உள்ளபடி யறிந்தால் அது பக்தி யுண்டாவதற்கு விரோதியான பாவத்தைப் போக்கு மென்பதைத் தெரிவிப்பது.]

“நாம் பிறப்பிலி யென்றும், (அதாவது, விகாரப்படுகின்ற அசேதனமென்ன, அதனோடு கலந்திருக்கையாகிற பிறப்புடன் கூடிய சம்சாரி சேதனர்களென்ன இவர்களைக் காட்டிலும் வேறுபட்

.வனென்றும்,) அநாதி யென்றும், (அதாவது, ஹேயமான பிர
ருதியோடு முற்காலத்தில் கலந்திருந்த முக்தாத்மாக்களைக் காட்டி
றும் வேறுபட்டவ னென்றும்,) லோகேசுவரர்களான பிரம்மாதிக
ருக்கு ஈசுவரனென்றும் மனிதருக்குள் எவனொருவன் அறிகின்
ானோ அவன் நம பக்திக்கு விரோதமான சகல பாவங்களி னின்றும்
விடுபடுகின்றான்.''

[''என்றால் 'உலகத்தில் அரசன் மற்ற மனிதர்களி லொருவனா
யிருக்கச் செய்தே சில கர்ம விசேஷத்தால் அம் மனிதருக் கிறைவ
னாகின்றான்; அவ்வாறுதான் தேவேந்திரனும், அண்டாதிபதியும்,
அணிமை முதலிய ஐசுவரியத்தை யடைந்த மற்றவரும். ஆனால்,
இந்த லோக மகேசுவரனோ, காரியம் காரணமென் றிரண்டு நிலை
பொருந்திய அசேதன மென்ன? சம்சாரிகள் முக்தர்க ளென்கிற
சேதனர்க ளென்ன? இவர்க ளெல்லாவற்றையும் காட்டினும் அள
பிறந்த கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாய், ஆயுள்வேத சுவபாவ
னாய் வேறுபட் டிருக்கின்றான்' என்றிவ்வாறு எவன் நம்மை யறிகின்
றானோ அவன் சகல பாவங்களினின்றும் விடுபடுகின்றான்''] 3

[அவதாரிகை:—இவ்வாறு தம் சுவபாவத்தைச் சிந்தை செய்வத
னால் பக்தி யுண்டாகாம லிருக்கும்படி விரோதிக்கின்ற பாவங்
கள் நசிக்கு மென்றும், விரோத மொழிந்ததாகில் தன்
னிடையே பக்தி யுண்டாகு மென்றும் அருளிச் செய்து, தமது
ஐசுவரியத்தையும் கல்யாண குணங்களின் விஸ்தாரத்தையும்
சிந்திப்பதால் அந்த பக்தி விருத்தி யடையு மென்பதை யருளிச்
செய்கின்றார்.]

''அதாவது, பத்தி, நிரூபிக்கும்படி மனதிற் குண்டான திறமை.
ஞானமானது, சித்து அசித்து விஷயமாய் உண்டாகும் நிச்சயம்.
அஹம்மோஹமாவது, சிப்பியைக் கண்டு இது வெள்ளியைச் சேர்ந்த
தென்று பிரமித்தவன், பிறகு இது வெள்ளியைச் சேர்ந்த தல்ல
வென்று அந்நினைவை யொழித்தல். பொறுமை யென்பது, மனதிற்கு
விகார முண்டாகும்படியான தருணத்தில் விகார மடையாம லிருத்
தல். சத்தியமாவது, தான் கண்டது கண்டபடியே பிராணிகளுக்கு
இதமாகப் பேசுதல். தமமாவது, புறக்கரணங்களை அனர்த்தங்களில்
செல்லவொட்டாமல் தகைவது. சமமென்பது, அந்தக் கரணத்தை
யவ்வாறு தகைவது. சுகமாவது, தனக்கு இஷ்டமாய் அனுபவிப்
பது. துக்கமாவது, தனக்கு அநிஷ்டமாய் அனுபவிப்பது. பவமா
வது, விருத்தி; அதாவது இஷ்டத்தை யனுபவிப்பதால் மனத்திற்

குண்டாகும் இரக்கம். பயமாவது, துக்கமுண்டாவதற்குக் காரணத்தைக் காண்பதால் வருந் துன்பம். அபயமாவது, அந்தப் பயமில்லாமை. அஹிம்சையாவது, பிறனுடைய துயரத்திற்கு ஆட்படாமை. சமதையாவது, தான், தனது இஷ்டன், தன் விரோதி யாவரிடத்திலும் நன்மை தீமைகளில் ஒரு மனதா யிருத்தல். துஷ்டியாவது, ஆத்மாக்களை யெல்லாம் கண்டு சந்தோஷித்தல். தவமாவது, சாஸ்திரத்தில் கூறியபடி போகத்தைச் சுருக்குகை யாகிற காயக் கிலேசம். தானமாவது, தான் புசிப்பதைப் பிறருக் களித்தல். கீர்த்தி, குணமுடையவ னென்கிற பிரசித்தி. அபகீர்த்தி, குணவீன னென்கிற சொல். இவை முதலிய பிராணிகளின் மனோ வியாபாரங்க ளெல்லாம் நம் சங்கற்பத்தாலே உண்டாகின்றன." 4-5

"அர்ச்சுனா! சென்ற மனுவந்தரத்தில் பிருகு முதலான சப்த ரிஷிகள் நித்திய சிருஷ்டிக்காகப் பிரமனுடைய மனதி லுண்டானார்களே அவர்களும் நித்திய சக்தியைப் பிரவிருத்திப்பிக்கைக்காக ஏற்பட்ட சாவர்ணி முதலிய நான்கு மநுக்களும், நம்முடைய நினைவின்படி யிருப்பவர்கள். அப்படிப்பட்ட அவர்களுடைய சந்தான மயமாயுள்ள இவ் வுலகத்தி லிருக்கும் பிரஜைகள் யாவும் பிரளயம் உண்டாகின்றவரையில் க்ஷணந்தோறும் ஸந்தானத்தை யுண்டுபண்ணி வளர்த்து வருகின்றன."

[குறிப்பு:—இந்த அத்தியாயம 6-வது சுலோகத்திற்கு ஸ்ரீதர ஸ்வாமிகளும், ஸ்ரீ மாத்துவாசாரிய ஸ்வாமிகளும் தங்களுடைய அபிப்பிராயங்களை வெவ்வேறாகக் காட்டி யுள்ளார்கள். அதனைக் கீழ் வருமாறு கண்டு தெளிக.]

[ஸ்ரீதரர் அபிப்பிராயம்:—உலகத்திலுள்ள பிரஜைக ளெல்லாம், எவர்களுடைய சம்பந்தமாய் (எவர்களிடத்தி லிருந்து) உண்டாயிருக்கிறார்களோ, அந்த ஏழு ரிஷிகளும், அவர்களுக்கு முந்தியவர்களான சனகாதி நால்வரும், அவ்வாறே சுவாயம்புவர் முதலிய மநுக்களும் என்னுடைய பிரபாவத்தை யுடையவர்களாய், இரண்ணிய கர்ப்ப ரூபனான என் மனச் சங்கற்பத்தினாலுண்டானவர்கள். இவர்கள் உலகங்களைப் புத்திர பௌத்திர சிஷ்யாதி மூலமாய்ச் சிருஷ்டித்தார்கள்."]

[ஸ்ரீ மாத்துவாசாரியர் அபிப்பிராயம்:—"பூர்வீகர்களான மரீசி, அத்திரி, ஆங்கீரஸர், புலஸ்தியர், புலகர், கிரது, வசிஷ்டர் ஆகிய இந்த ஏழு ரிஷிகளும்; பூர்வீகர்களான சுவாயம்புவர், சுவாரோசிஷர், ரைவதர், உத்தமர் ஆகிய இந் நான்கு மநுக்க

ளும் என்னுடைய மனச் சங்கற்பத்தால் என்னிடத்தி லிருந்து பிறந்தவர்கள். இவர்கள் சதுர்முகப் பிரம்மாவினிடத்திலிருந்து பிறந்ததாகச் சொல்லும் புராணோக்திகளுக்குப் பிரம்மாவினுடைய அந்தராமியான நான், பிரம்மா மூலமா யுண்டாக்கினேன்." 6

"இவ்வாறு எல்லாருடைய உற்பத்தியும் ஸ்திதியும் பிரவிர்த்தியும் நமது சங்கற்பாதீன மென்கிற இந்த நம் ஐசுவரியத்தையும், நம்முடைய கல்யாண குணங்க ளுடைமையையும் எவன் உள்ளபடி அறிகின்றானோ அவன் சலியாத பக்தியை யடைந்து வாழ்வான். இதில் சம்சய மில்லை" (என்றால், நமது ஐசுவரியத்தையும் கல்யாண குணத்தையும் அறிந்தால் அது பக்தியோகத்தை வளர்க்கு மென்கிற விஷயத்தை நீயே பார்க்கப்போகிறா யென்று திருவுள்ளம்.") 7

"சித்தும் அசித்துமாய் விசித்திரமா யுள்ள இவ் வுலகத்திற்கெல்லாம் நானே உற்பத்தி காரண மென்றும், இவை நம்மாலேயே பிரவிருத்தி செய்யப்படுகின்றன வென்றும் இப்படிப்பட்ட என்னுடையதாகிய சுவபாவத்திலேயே ஏற்பட்ட தடையில்லாத ஐசுவரியத்தையும், ஸௌஸீல்யம் - ஸௌந்தர்யம் - வாத்ஸல்யம் முதலிய கல்யாண குணங்களின் சேர்க்கையையும் தெரிந்துகொண்டு ஞானிகள் என் பாவனையோடு கூடியவர்களால் எல்லாக் கல்யாண குணங்களுடைய என்னைக் குறித்து பக்தி செய்கின்றார்கள்." 8

"மேலும், சித்தத்தை நமக்கென்றே பரிகொடுத்தும், அவ்வாறே நம்மைப் பிரிந்தால் தரிக்கமாட்டாமல் பிராணனையும் நம்மாதீனஞ் செய்தும், தாம் தாம் அனுபவித்த நம்முடைய குணங்களை யெடுத்து ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டும், அப்படியே நாம் செய்த திவ்விய சேஷ்டிதங்களையு மெடுத்துப் பேசிக்கொண்டு சந்தோஷத்தும் ஆனந்திக்கிறார்கள்." 9

"அஃதல்லாமல், சொல்லும்போது இனிமையால் அதுவே பிரயோஜனமாக விருத்தலாலே சொல்லு மவர்களும், கேட்டபோது செவிக்கினிமையா யிருத்தலாலே கேட்பவர்களும் சந்தோஷிக்கின்றார்கள். அப்படிப்பட்ட அவர்கள் நம்மோடு எப்போதும் சேர்ந்திருக்க வேண்டுமென்று நம்மைச் சேவிக்கிறபடியால் அவர்களுக்கு அப்படிப்பட்ட புத்தி விசேஷத்தை, அதாவது பக்தி ரூபமாய்ப் பக்குவமான ஞான விசேஷத்தை நாம் பிரீதியுடன் கொடுக்கின்றோம்; அதைக்கொண்டு அவர்கள் நம்மை யடைகின்றார்கள்." 10

"அப்படிப்பட்ட அவர்கள் நம்மோடு எப்போதுஞ் சேர்ந்திருக்க வேண்டுமென்று நம்மைச் சேவிக்கிறபடியால் அவர்களுக்கு அப்படிப்பட்ட புத்தி விசேஷத்தை அதாவது பக்தி ரூபமாய்ப் பக்குவமான ஞான விசேஷத்தை நாம் பிரீதியுடன் கொடுக்கிறோம். அதைக்கொண்டு அவர்கள் நம்மை யடைகின்றார்கள். மேலும், அவர்களை அனுக்கிரகிக்கிறதற்காகவே நாம் அவர்க ளுள்ளத்திலிருந்து நம்முடைய கல்யாண குணங்களைப் பிரகாசப்படுத்திக் கொண்டு, அவர்கள் நம்மை யறிவதென்கிற பிரகாசமான தீபத்தாலே அஞ்ஞானத்தா லுண்டானதாய் நம்மை யொழிந்த மற்ற விஷயங்களைக் கண்டால் விடமாட்டாததாய் முன் பழகியதா யுள்ள கலக்கத்தைப் போக்கடிக்கிறோம்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"ஞான தீப மெப்படிப்பட்ட தென்றால், பக்தியாகிற எண்ணெய், தியானிக்க வேண்டு மென்கிற எவுதலாகிய (தீபத்தை விளங்கச் செய்கிற) காற்று, பிரமசாரியம் முதலிய ஸாதன ஸம்ஸ்காரத்தினு லுண்டான பிரக்ஞை (விவேகம்) யாகிய திரி (வர்த்தி) அல்லது வத்தி, விரக்தியை யுடைய அந்தக்கரணமாகிற பாத்திரம், விஷயங்களில் பற்றாமல் இராகத்துவேஷங்க ளற்றிருக்கிற சித்தமாகிற காற்றினால் அலைக்கப்படாத இடம், நிரந்தரமாயுள்ள தியானத்தினு லுண்டாகிற நிச்சயமான ஞானமாகிற பிரகாசம் இவைகளை யுடைய தீபம்."] 11

[அவதாரிகை:—இவ்வாறு சகல வஸ்துக்களிலும் வேறுபட்டு எம்பெருமானுக்கே உரியனவாய்க் கேட்பவர்களின் செவிக்கு மிகவு மினியவையா யுள்ள திருக்கல்யாண குணங்களையும் அவனுடைய ஐசுவரியச் சிறப்பையுங் கேட்டு அர்ச்சுனன் அதை விஸ்தாரமாய்க் கேட்கவேண்டு மென்கிற அவாவினால் வினவுகிறான்.]

அர்ச்சுனன் வாக்கியம்

"கிருஷ்ணா! உயர்ந்த பிரஹ்மமும், தேஜஸாம், மேலான பரிசுத்தியை யுண்டாக்குகிற வஸ்துவும், நீர் உம்மை அழிவில்லாத புருஷனாகவும், பரமபதத்தி லிருப்பவராகவும், லோகங்களுக்குக் காரணமான தேவனாகவும், பிறப்பில்லாதவனாகவும், எங்கும் நிறைந்தவனாகவும் எல்லா ரிஷிகளும் சொன்னார்கள்; அவ்வாறே தேவரிஷியாகிய நாரதரும், அஸிதரென்கிற ரிஷியும், தேவலரும், வேத வியாசரும் (சொன்னார்கள்); நீரும் எனக்குச் சொல்லுகின்றீர்." 12

"ஓ! கேசவா! என்னைக் குறித்து எவைதச் சொல்லுகின்றீரோ ...அந்தச் சகலத்தையும் உண்மையென்று அறிகிறேன். ஓ! பகவானே! ...ம்முடைய ஆகாரத்தை, அல்லது அவதாரத்தைத் தேவதைகள் ...அறியவில்லை. இராக்கதர்களு மறியவில்லை." 13

"உனதாத்மாவே நானெனத் தேவரீர் கூறிய பிரமோபதேச ...ான்மியத்தை யுணராமல் சங்கை செய்ததைக் குறித்து என்னை ...க்ஷமித்தருளல் வேண்டும். எனக்காகப் பூரண கடாக்ஷத்தோடும் ...ீர் நவில்வதை இனிச் சங்கித்தலின்றி, எவற்றையும் சத்திய புத்தி ...யுடன் கேட்டறிந்து கொள்வேன். தேவரீரது அவதார மகிமை ...தேவ தானவர்களாலும் அறியப்படாதெனின், அடியேனு லறியப் ...படத் தக்கதன்று." 14

"ஓ! புருஷோத்தமா! சகல பிராணிகளையு முண்டுபண்ணுகின்ற ...காரணப் பொருளே! சகல பூதங்களையும் ஆள்பவனே! தேவர்களுக் ...கெல்லாம் தேவனே! அதாவது, சௌந்தரியம் முதலிய கல்யாண ...குணங்களில் தேவர்கள் மனுஷ்ய மிருக பக்ஷியாதிகளை விஞ்சி யிருப் ...பதுபோல் அத் தேவர்களை யெல்லாம் அந்தந்தக் குணங்களாலே ...விஞ்சி யிருப்பவனே! ஓ! ஜகதீசா! தேவரீருடைய பெருமையைத் ...தேவரீர் அறியவேண்டுமே யல்லது மற்றவரா லாகாது."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"தேகாதிப் பிரபஞ்சங்களை யறிவது கண்ணுதியான ஞானேந்திரியங்கள்; இவற்றை யறிவது மனம்; இதை யறிவது புத்தி; இவை யாவும் ஆத்மாவினு லறிவிக்கப்பட்டறிந்திருத்தலின் ஆத்மாவை யறிய மாட்டா. ஆதலின், அவ்வாத்மாவானது தன்னுலே தானே தன்னை யறிவதென்பான், உம்மாலே நீரே உம்மை யறிந்தீர் என அர்ச்சுனன் அங்ஙனம் கூறியது."]

[ஆகையால், எந்த விபூதி ரூபங்களினுலே இந்த உலகங்களை வியாபித்துக் கொண்டிருக்கிறீரோ அவைகளை முழுதும் சொல்வதற்கு நீரே தகுந்தவரா யிருக்கிறீர். அதாவது ஆத்ம சொரூபியான உம்முடைய விபூதி ரூபங்கள் அற்புதமானவை யன்றோ? எந்த ஆத்ம சிற்சத்தியினது மான்மிய விசேடத்தாலே இந்த உலகங்களாக வியாபித்துக்கொண் டிருக்கின்றீரோ அந்தச் சத்தியின் விபூதி விலாசத்தை முற்றும் அறிவித்ததற்கு நீரே அருகரா யிருக்கின்றீ ரென்பதாம். அதாவது: பிரம, விஷ்ணு, உருத்திராதிகளான திரிமூர்த்திகள் சுத்த மாயையிற் பிரதிபலித்த பிரம சைதன்னிய பிரதிபிம்ப ராதலின், அவர்கள் அதிகாரத்தி லேற்றத்தாழ்வு வுடையராதல் குண தாரதம்மியத்தா

லன்றி ஆத்ம தாரதம்மியத்தா னன்றாகவே, மூவரும் சுவாநுபூதி யால் தம்மைப் பிரமமாகக் கண்டு கூறியிருப்பதை இக் கீதை யோடு மற்றும் பிரம கீதை, சிவகீதைகளானு முணரப்பாற்று.

அது அவ்வாறிருக்க, சட்டி, குடம், சாலென்ன உருவத்தானும் உபயோகத்தானும் ஏற்றக்குறைவு தாரதம்மியப் படினும பொருள் நாட்டத்தில் அவை மூன்றும் ஒரு மண்ணை எனக் கண்டவிடத்து சட்டி குடமாதலும், குடம் சட்டியாதலும், அது போன்று சால் மற்றவையாதலும் ஒவ்வாதாயினும், தனித்தனி குடம் மண்ணை என்றும், சட்டி மண்ணை என்றும், சால் மண்ணை என்றும் கூறின் தத்துவமாகக் குழந்தையு மொப்பத் தக்கதோர் உண்மையாதலால் இது மறைக்கத்தக்க தன்று. இது போன்று பிரமன், அரி, அரன், ஒன்று மற்றொன்றாகா விடினும் இம் மூவரும் பிரம சாயைக ளாதலின் தனித்தனி ஒவ்வொருவருந் தன்னைப் பிரம மென்றும், இந்தப் பிரமமாகிய நானே அரனாகவும் - அரியாகவும் - பிரமனாகவும் - மற்றுமுள்ள வனைத்தாகவு மிருக்கிறே னெனின், யாவரு மொப்பத்தக்கதோ ருண்மையாதலின் ஸ்ரீ சங்கரர் எல்லாப் பிரம ஞானிகளும் ஒப் பத்தக்கதுபோல அங்ஙனம் கிருஷ்ண சுவாமியைப் பிரம மெனக் கண்டு ஒப்பியதே யாம். கீதா சாரியரான ஸ்ரீ பகவா னும் இவற்றானன்றோ இனி வரும் சுலோகங்களில் நான் ஏகாதச உருத்திரர்களில் சங்கரனாகவும், துவாதசாதித்தர் களுக்குள் விஷ்ணுவென்கிற ஆதித்தியனாகவும், யாதவர்களில் வசுதேவனாகவும், பாண்டவர்களில் அர்ச்சுனனாகவும் மற்றும் யாவுமாகவும் இருக்கின்றே னென்றார். இது அத்வைதக் கொள்கை யென் றறிக.] 15

"திவ்யங்களாகவும் உமக்கே அஸாதாரணங்களாகவு மிருக்கிற நியமனங்கள் எவைகளோ அவை யெல்லாவற்றையும் நீரே சொல்லத் தகுந்தவ ராகின்றீர்; அதாவது, அவைகளை நீரே யருளிச்செய்ய வேண்டும்." 16

"ஓ பகவானே! அடியேன் பக்தியாக நிஷ்டனா யிருந்து எப் போதும் சிந்திக்க யத்தனித்தேனாகில் தேவரீரைச் சகல கல்யாண குண பரிபூர்ணராக எவ்வாறு அறிவேன்? முன் சொன்ன பக்தி ஞானம் முதலிய பாவனைகளைக் காட்டினும் இன்னு மெந்தெந்த பாவனைகளி லிருப்பவராகத் தேவரீரைச் சிந்திக்கலாம்." 17

"ஓ! ஜனார்த்தனா! உம்முடைய யோகத்தையும் விபூதியையும் விரிவாக மீண்டும் சொல்லவும்; ஏனென்றால், உம்முடைய வாக்காகிய

யுமிர்தத்தைக் கேட்கிறவனுகிய எனக்குத் திருப்தியானது கிடை
யாது.'' 18

[அவதாரிகை:—இவ்வாறு கூறின அர்ச்சுனனுடைய வார்த்தை யைக் கேட்டு பகவா னருளுவா ராயினர்.]

''அர்ச்சுனு! அப்படியே சுவபாவமா யுள்ள நம் விபூதிகளில் சிறப்புற்றவைகளைச் சொல்லுகின்றேன். விவரித்துச் சொல்வதென் றல் அளவில்லாமையாலே சொல்வதுங் கேட்பதும் சாத்தியமன்று.''

[கருத்து:—விபூதியாவது-ஆளப்படுவது. எப்படியெனில், பிராணி களின் பித்திமுதல் தனித்தனியா யுள்ள பாவனைகளெல்லாம் தம்மிடத்தி னின்றமே யுண்டாகின்றன வென்று சொல்லி, 'இந்த என் விபூதியையும் யோகத்தையும் உள்ளபடியே எவன் அறிகின்றுனே' என்று சொல்லுதலால் அவ்வாறே யங்கு யோக சப்தத்தால் சொன்னது சிருஷ்டிக்குந் தன்மை முதலி யன வென்றும், விபூதி சப்தத்தால் சொல்லப்பட்டது அவனல் ஏவப்படுந் தன்மை யென்றுங் கூறுவதாயிற்று.] 13

[அவதாரிகை:—அதில் சகல பிராணிகளையும் முன்பு யோக சப்தத் தாலே சொல்லப்பட்ட பகவான் நியமிப்பதாவது பிரவர்த்திப்பிக் கிறது. இந்த ஆளுகையை ஈசுவரன் ஆத்மாவாய் நின்று செய்கிறு னென்றும், இது படைக்குந் தன்மை, காக்குந் தன்மை, அழிக் குந் தன்மை யென்னு மூவகை யென்றுந் தெளிவாக விளக்கிக் காட்டுகின்றுர்.]

''ஓ! அர்ச்சுனு! நான் எனக்குச் சரீரமாயுள்ள சகல பிராணிகளி னுள்ளத்திலும் ஆத்மாவா யிருக்கின்றேன். இப்படிப்பட்ட நானே அவைகளுக்கு ஆதியும் மத்தியமும் அந்தமும், அதாவது உற்பத்தி ஸ்திதி லயங்களுக்கு நானே காரணமாம்.'' 20

[அவதாரிகை:—இவ்வாறு எம்பெருமான் தம்முடைய ஆளுகைக் குட்பட்ட எல்லாவற்றுள்ளும் தாம் ஆத்மாவா யிருக்கிறதாகச் சொல்லி அதனுல் அந்தந்த வஸ்துக்களின் பெயரான சொற்க ளாலே தம்மைச் சொல்லலா மென்பதற்குப் பகவான் சர்வ பூதங்களுக்கும் ஆத்மாவா யிருந்தால் மாத்திரந்தான் சகல சப் தங்களும் அவனையே பொருளாகக் கொண்டு முடியும். எதுபோலெனில், மனுஷ்யன் பக்ஷி விருக்ஷம் முதலிய எல்லாச் சொற்களும் சரீரங்களைச் சொல்லாநிற்கச் செய்ததே அந்தந்த ஆத்மாவைக் கொண்டு முடிகின்றன வல்லவா? அதுபோல், ஈசு வரன் ஆத்மாவா யிருத்தலானது எல்லாச் சொற்களுக்கும்

பொருளாவதற்குக் காரணங் காட்டி, இனித் தம்மா லாளப் பட்ட அவ் வவைகளோடு தம்மைக் கூட்டி அந்தந்தச் சொற்க ளாலே உபதேசிக்கிறார்.]

"அர்ச்சுனா! ஆதித்தியர்கள் பன்னிருவரில் பன்னிரண்டாவ தாகச் சொல்லப்பட்ட விஷ்ணு நானே. லோகத்தில் ஜோதியுள்ள வைகளில் ஆதித்ய கணத்தைச் சேர்ந்த சூரியன் நானே. வாயுக்க ளில் மரீசி யென்னும் வாயு நானே. நக்ஷத்திரங்களில் அவைகளை யாள்கின்ற சந்திரன் நானே." 21

"இருக்கு யஜுஸ் ஸாமம் அதர்வண மென்கிற வேதங்களுள் சிறந்ததான ஸாமவேதம் நானே. தேவர்களுக்குள் இந்திரன் நானே. இந்திரியங்களுக்குள் சிறந்ததான மனது நானே. பூதங்க ளெல்லா வற்றிற்கும் அறிவு நானே." 22

"உருத்திரர்கள் பதினொருவரில் சங்கரன் நானே. யக்ஷ ராக்ஷஸ ருக்குள் குபேரன் நானே. அஷ்ட வசுக்களுள் பாவகன் நானே. கொடிமுடிகள் கூடிய பர்வதங்களுக்குள் மேரு பர்வதம் நானே"

["ஏகாதச உருத்திரர்களின் பெயர்:—அஜன், ஏகபாதன், அஹிர் புத்தியன், துவஷ்டா, உருத்திரன், அரன், சம்பு, திரியம்பகன், அபராஜிதன், ஈசானன், திரிபுவன் என்பவையாம்."] 23

"ஓ! குந்தி புத்திரா! புரோகிதர்களுக்குள் முக்கியமான பிரகஸ் பதி நானே சேனாதிபதிகளுக்குள் கந்தன் நானே. ஜலாசயங்களுக் குள் கடல் நானே" 24

"மரீசி முதலான மஹரிஷிகளுக்குள் பிருகு மஹரிஷி நானே. பொருளைக் குறிக்குஞ் சொற்களுள் பிரணவ மென்னு மொற்றை யெழுத்து நானே. யக்ஞங்களுக்குள் சிறந்த ஜபயக்ஞம் நானே. பருப்பதமா யுள்ளவைகளில் இமய மலை நானே." 25

"விருக்ஷங்களில் அசுவத்த விருக்ஷம் என்கிற அரச மரமாகவும், தேவ ரிஷிகளில் நாரதராகவும், கந்தருவர்களில் சித்திரரத னென்பவ னாகவும், பிறவி தொடங்கி ஞான முடையவர்களுக்குள்ளே கபிலராக வும் இருக்கிறேன்." 26

"அசுவங்களில் திருப்பாற் கடலில் அமிர்தத்தோடு பிறந்த உச்சைச்சிரவ மென்கிற அசுவமாகவும், சிறந்த யானைகளில் ஐராவத மாகவும், மானுடரில் இராஜாவாகவும் என்னை யறியக்கடவாய்." 27

"சாதாரணமான ஆயுதங்களுக்குள் நான் வஜ்ராயுதம். கறக்கும் பசுக்களுக்குள் காமதேனு வென்னும் பசு நான். பிறப்புக்குக் காரணனான மன்மதனும் நான். ஒருதலைப் பாம்புகளுக்குள் வாசுகி நான்."

"பலதலைப் பாம்புகளுக்குள் நான் ஆதிசேஷன். ஜல சரங்களில் நான் வருணன். பித்ருக்களுக்குள் அரியமா என்பவன் நான். தண்டிப்பவருள் வைவஸ்வத னென்னும் யமன் நான்." 29

"தைத்தியருக்குள் நான் பிரஹ்லாதன். அநர்த்தந் தேடுமவர்களுள் மிருத்யு நான். மிருகங்களுக்குள் சிம்மம் நான். பக்ஷிகளுக்குள் கருடன் நான்." 30

"செல்கையே சுபாவமானவைகளுக்குள் யான் வாயு. அஸ்திர சஸ்திரங்களில் தேர்ந்தவர்களுக்குள் யான் ஸ்ரீராமன். மத்ஸ்யங்களுக்குள் யான் முதலை. நதிகளுக்குள் யான் கங்கை." 31

"அர்ச்சுனா! சிருஷ்டிக்கப்படும் பதார்த்தங்களின் ஆதியும் மத்தியமும் அந்தமும் நானே: (அதாவது, சகல பிராணிகளையும் ஆங்காங்குச் சிருஷ்டிக்குமவர்களும், அப்படியே ஆங்காங்குப் பரிபாலிக்குமவர்களும், நாசஞ் செய்யுமவர்களும் யானே என்றபடி) வித்தைகளுக்குள் யான் வேதாந்த வித்தை; ஜல்பம் விதண்டை முதலிய வாதஞ் செய்வோர்களில் தத்வ நிர்ணயம் செய்யத் தொடங்கிய வாதம் நான்."

[வாதமாவது:—மூன்று விதம். அவை: வாதம், ஜல்பம், விதண்டாவாதம். வாத மென்றால், இராகத்துவேஷ நீங்கி யிருக்கிற குரு சிஷ்யர்களாயினும், வேறு எவராயினும் உத்தரப் பிரத்தியுத்தர ரூபமாய்ச் செய்கிற சம்பாஷணை. ஜல்பம் என்றால், சாஸ்திரப் பிரமாணங்கள் யுக்திகள் இவைகளினாலே தன் வாதத்தை ஸ்தாபித்துக்கொண்டு எதிரி பக்ஷத்தைக் கண்டிப்பதான இரு கக்ஷியாருடைய வாதம். விதண்டாவாதம் என்றால், தன் மத மின்ன தென்பதைச் சொல்லாமல் எதிரியினுடைய மதத்தைத் தூஷணையினால் நிராகரிப்பது.] 32

"அக்ஷரங்களில் எல்லா எழுத்துக்களுக்கும் முதற் காரணமான அகாரம் யான். ஸமாஸங்களுக்குள் யான் த்வந்த்வ ஸமாஸம். கலை முகூர்த்தம் முதலாயுள்ள அழிவற்ற காலமும் யானே. சகல பிராணிகளையும் சிருஷ்டிக்கும் நான்முகனும் யானே."

[கவனிப்பு:—அகாரம் நானே யென்று பகவா னருளியதை யுட்கொண்டே "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன்

முதற்றே யுலகு" என்று திருவள்ளுவர் கூறியதற்கு ஆசிரியர் பாரத்துவாசர் நச்சினார்க்கினியர் "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" என்னுஞ் சூத்திரவுரையில் இறைவன் இயங்குதிணைக் கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கு மொப்ப முடிந்தாற்போல, அகரமும் உயிர்க்கண்ணுந் தனி மெய்க்கண்ணுங் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமென்பது சான்றோர்க் கெல்லா மொப்ப முடிந்தது. அகர முதல என்னுங் குறளான் அகர மாகிய முதலையுடைய வெழுத்துக்க ளெல்லாம், அதுபோல இறைவனாகிய முதலையுடைத் துலகமென வள்ளுவனருவமை கூறியவாற்றாலும், "எழுத்துக்களில் அகர மாகின்றேன் யானே' எனக் கூறியவாற்றால் கண்டு தெளிக.] 33

"சகல பிராணிகளையும் சம்மரிக்கின்ற இயமனும் யானே. இனி உண்டாகும் பதார்த்தங்களுக் கெல்லாம் உற்பத்தியும் யானே. பெண்களுக்குள் இலக்குமியும் கீர்த்தியும் வாக்கும் ஸ்மிருதியும் புத்தியும் திருதியும் (தைரியமும்) க்ஷமையும் யானே. (இவை யாவும் எம்பெருமானுக்கே அசாதாரணமான சக்திகள் என்று அறிக.") 34

"ஸாமங்களுக்குள் யான் பேரிய ஸாமம்; சந்தஸுக்களுக்குள் யான் காயத்திரி; மாதங்களுக்குள் யான் மார்கழி; ருதுக்களுக்குள் பூக்குங் காலமான வஸந்த ருது யான்." 35

"அர்ச்சுன! பலவித மோசஞ் செய்பவர்களுடைய சூதாட லென்கிற மோசமாயிருக்கின்றேன். தேஜஸுடையவர்களின் தேஜஸ் யான்; (ஜயத்தை யுடையவர்களுடைய) ஜயமாக விருக்கின்றேன். முயற்சி யுடையோரின் பிரயத்தனமாக விருக்கின்றேன். சாத்துவீகர் களின் சத்துவ குணம் நான்."

[கருத்து:—காய்களை நடத்துகிறதினால், ஜயம் தோல்வி இவை களை ஆரோபித்து விடுகிறபடியினால் மோச மென்று கூறி யிருப் பது உசிதந்தா னென்கிற அபிப்பிராயத்தில் 'காய்களைக் கொண்டு ஆடுகிற' தென்று சொல்லப்பட்டது. சொக்கட்டா னாடுகிறவர்களின் சொக்கட்டா னாட்டம் நான் என்று கூறாமல், மோசஞ் செய்வதை மாத்திரம் சொன்னதனால், மோசத்திற்கு இடமாகிய விற்றல்-வாங்குதல்-கடன் வாங்குதல்-பங்கு பிரித் தல்-பிரதிக்ஞை செய்தல் முதலிய மற்றக் காரியங்களை விடச் சொக்கட்டானாடுதல் மேலான தென்று சொல்லப்படுகிற தென்கிற அபிப்பிராயத்தினால் மோசத்திற் கிடமாகிய காரி யங்களுக்கென்று சொல்லப்பட்டது. காய் முதலியவைகளை

என்பதனால் ஜீவனோடு கூடியதும் ஜீவ னில்லாததுமான வஸ்துக்களைக் கொண்டு ஆடுகிற எல்லா ஆட்டங்களும் சேர்த்துக் கொள்ளப் படுகின்றன. அல்லாமல் ஜீவனில்லாத வஸ்துக்களை மாத்திரஞ் சொல்வதற்காகக் 'காய் முதலியவைகளை' என்று சொல்லப்பட்ட தாகவுமாம். அதற்கு மேன்மையாவது பிரயாச மில்லாமலும், தர்மத்திற்கு விரோத மில்லாமலும் ஒப்புக் கொள்வதினாலேயே எல்லாப் பொருள்களையு மபகரிக்க முடியு மென்று கருத்தாகும்.] 36

"விருஷ்ணி வம்சத்தாருக்குள் யான் வசுதேவன் மைந்தன்; பாண்டவர்களுக்குள் யான் அர்ச்சுனன்; சிந்தை செய்வதனாலேயே விஷயங்களை உள்ளபடி அறிய வல்லவரான ரிஷிகளுக்குள் யான் வேதவியாஸன்; வித்வான்களுக்குள் யான் சுக்கிரன்." 37

"கட்டளையைத் தவிர்ந்த பேர்களைத் தண்டிக்கும் விஷயத்தில் யான் தண்டனை யாகிறேன். ஜயம் கோருபவர்களுக்குள் ஜயிப்பதற்கு மான நீதி யாகிறேன். மறைக்க வேண்டிய விஷயங்களில் யான் மௌனமா யிருக்கிறேன். அவ்வாறே ஞானவான்களுக்கு ஞான மாகவு மிருக்கிறேன்."

[கருத்து:—வசுதேவர் என்னும் பதம் இவ்விடத்தில் இலக்ஷணையினால் வசுதேவர் வீட்டில் நான்கு கைகளை யுடையவராக அவதாரஞ் செய்தது முதலாக மனிதர்களை விடச் சிறந்த குணங்கள் விக்ரஹம் பராக்கிரமம் முதலிய இடையர்கள் வரையிலும் பிரசித்தமான மேன்மையைக் குறிக்கிறது; அதை அர்ச்சுனனுக்குச் சொன்னது உதாரணம் காட்டுவதற்காக. சர்வ நாமமாகிய நீ என்பதை விட்டு நேராகப் பெயரையே கூறினமையால், மிகவும் சமீபத்தி லிருப்பது முதலியவைகளால் மேன்மை இங்கே சொல்லப்படுகிறது. தர்மத்தில் தருமபுத்திரனும், பலத்தில் பீமசேனனும், அழகு முதலியவைகளில் மாத்ரீயின் பிள்ளைகளாகிய நகுல சகாதேவர்களும் சிறந்தவர்களாகையினால் அர்ச்சுனன் என்கிற பிரசித்த பெயரினாலே விவரிக்கப் பட்டது.] 38

"அர்ச்சுன! சகல பூதங்களுக்கும் காரணம் அல்லது விதை எதுவோ அது நான். ஜங்கம ஸ்தாவரமான எந்தப் பூத மிருக்கின்றதோ அது என்னை யன்றி யில்லை."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—'என்னாற் றோன்றிய சராசர ரூபமான அனைத் துலகிற்கும் என்னை யன்றிக் காலத்திரயத்திலும், தமக்கென யதார்த்தமின்று, அனைத்தும் நானே யென்றதாம்.

என்னை? மண்ணையன்றிக் கட கலசாதிகளின்றாகியும், அம்மண் அவற்றி லொன்றாகியும், தானே அனைத்து மாயதுபோல, ஆன் மாவே பிரமமாம். இப் பிரமமே பிரம விஷ்ணு உருத்திராதி மும்மூர்த்திகளாய் உலகங்களுக்கு உற்பத்தி ஸ்திதி லய காரண மாகி விளங்கும். இங்ஙன மனைத்தாயும் ஆகாமலு மிருந்த அவ் வாத்மாவினது சாமர்த்திய சக்தியின் விபூதி விஸ்தாரத்தை யுணர்த்தியதாம். "இது மகா விஷ்ணுவினது விபூதி விஸ் தாரமாக விருக்க எங்ஙனம் பிரமத்தினது விபூதி யென்பது?" எனின், "பகவான் தனது சுவானுபூதியிற் றோன்றியபடி விபூதி விஸ்தாரத்தைக் கூறிய இவ்விடத்தில் மகா விஷ்ணுவை நீக்காமல் அவரையும் விபூதிகளில் ஒன்றாக ஈண்டு அகப்படுத்தி வுணர்த்தியதா லென்க." ஆயின், "ஆன்மாவும் அங்ஙனமே பிரமத்தினது ஏகதேச அவசர மாகாதோ?" எனின், 'பிரமத்தி னது சொரூபமே ஆன்மாவெனக் கூறப்படுதலினாலும், ஆன் மாவே பிரமம் பிரமமே ஆன்மா வாதலினாலும் அன்றென்க." என்னை? 'பிரக்கியானம் பிரமம்' என்கிற சுருதியானும், இவ் வத்தியாயத்தின் 20-வது சுலோகத்தில் ஆத்மா நானே எனச் சொரூப லக்ஷணை கூறப்பட்டதானு மென்க."]

[ஸ்ரீ இராமானுஜர் அபிப்பிராயம்:—"சகல பூதங்களுக்கும் எது பீஜமோ, ஆதாவது காணப்படுவதும் காணப்படாததுமான இரண்டு விதமாயுள்ள உற்பத்தி காரணம் எதுவோ அது யான். பூதங்களுக்குள் ஒன்றாகிலும் அந்தராத்மாவாகிய என்னை யொழியத் தரித்திருப்பது கிடையாது. எல்லா வஸ் துக்களும் எல்லா நிலைகளிலும் அந்தராத்மாவா யுள்ள நம் மோடு கூடியே யிருக்கும். இதனால் எல்லாப் பொருள்களும் பகவத் சுவரூபங்கள் என்று சொன்னதற்குக் காரணம், அவன் ஆத்மாவா யிருக்கைதா னென்று வெளியிடப்பட்டது."] 39

"ஓ! பரந்தாம! எனது அற்புதங்களான இந்த விபூதி ரூபங்க ளுக்கு முடிவு கிடையாது. அவ்வாறிருக்க இப்போது விவரித்ததோ வென்றால், சில உத்தேசங்களைக் கொண்டு சிறிது மாத்திரம் சுருக்கிச் சொல்லப்பட்டது." 40

"அதாவது, எந்தெந்தப் பிராணிகளின் கூட்டம் நியமிக்கப் படும் வஸ்துக்களை யுடையதோ, காந்தியை யுடையதோ, அல்லாமல் பணமும் தானியமும் நிறைந்ததோ, நல்ல காரியங்களில் ஆரம்பிப்ப தில் பிரயத்தனஞ் செய்துகொண் டிருக்கின்றதோ, அதை என் னுடைய தேஜஸ்ஸினுடைய அம்சத்தி லுண்டானதாக அறி."

[தேஜஸ்ஸாவது அயலாரை நிராகரிக்கும் சக்தி. "ஒருவராலும் நினைக்க முடியாத சக்தியை யுடைய என்னுடைய நியமன சக்தியின் ஒரு பாகத்தினு லுண்டானதென்று பொருள்படும். மேலும், ஐசுவரியத்தை யுடையதும், காந்தியை யுடையதும், குணதிசயங்களை யுடையதுமான வஸ்துக்கள் யாவையோ அவையெல்லாம் எனது தேஜஸ்ஸினது பாகத்தா லுண்டாயின வென்றே நீ அறி."] 41

"ஓ! அர்ச்சுனு! இவ்வாறன்றியும் விஸ்தாரமாகத் தெரியப்பட்ட இந்த விபூதியினுலே உனக்கு என்ன பிரயோஜனம்? நான் சகலமான இந்த ஜகத்தை பொரு அம்சத்தினுலே வியாபித்து, அல்லது தரித்துக்கொண் டிருக்கிறேன்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—'சத்து அசத்து என அத்தியாயம் 2, சுலோ-66-ல் விவரிக்கப்பட்டுள்ளது. அர்ச்சுனு! இவ்வளவு தூரம் சொல்வ தென்ன? ஒரு சொல்லாய்ச் சொல்லுகிறோம். இவ் வுலகெல்லாம் காரணமான நிலையிலும் காரியமான நிலையிலும் ஸ்தூலமாயும் சூக்ஷ்மமாயும் இருப்பதிலும் தரிப்பதிலும் பிரவிர்த்திப்பதிலும் எப்படியானல் நமது இச்சையைக் கடக்க மாட்டாதோ அவ்வாறே, நமது மகிமையின் லக்ஷத்தி லொரு பங்கினுல் இதைத் தரித்துக்கொண் டிருக்கிறோம்.

சத்து அசத்து என அத்-2, சுலோ-66-ல் விரிக்கப்பட்டுள்ளது. இவ் விரண்டும். பாவம்-உள்ளது, அபாவம்-இல்லது என்கிற அர்த்தத்துக் கியையும் அவையே தமக்கு அன்னியமாகவும், உன்னியமாகவும், யாவர்க்குந் தோன்றியும் தோன்றமலும், இவ் விரண்டு வகையானும் திருக்கு திரிசியம் என விரண்டாகச் சத்துக்களாற் பகுக்கப்பட் டுள்ளது. இவையே மீட்டும் அறிவு அறியப்படு பொருள் அல்லது காண்பான் காணப்படு பொருளெனக் கூறும் பொருத்த முடையனவாம். ஆகிய இவ்விரண்டே பிரமத்திற்கு இரண்டு அம்சங்களாம். இவ்விரண்டிற்கும் வேருன அப் பிரமப் பொருள் மாயையிற் பிரதி பலித்த அவசரத்தில் பரப்பிரம மெனப்படும். அதுதும் முக்குண வியாபாரத்தால் மூன்று மூர்த்திகளாக முத்தொழில் காரணத்தால் விவகரிக்கப்படும். இனி இப்பிரமமென்பது மும்மூர்த்திகளும் ஒன்ருக ஒரு மூர்த்தியாய் வியக்தப்படாமல் அவ் வியக்தமாக அடங்கி யிருந்த அவசரத்தின்மேல் நின்ற ஒன்ருயதால் இதுவே சத்தென்றும், அப் பிரமத்தின் பிரதிபிம்ப மென்றும் அத்-14, சுலோ-27-ல் சுருதி யுக்திகளுக் கிணங்கக் கூறத்தக்கதாம். அந்தராத்மாவான இப் பரப்பிரம்மமே வியக்கப்பட்ட அவசரத்தில் முத்தொழில் வல்ல

மூவருள்ளும் பரமாத்மா வெனவும், ஜீவ கோடிகளில் ஜீவாத்மா வெனவும் விவகரிக்கப்பட்டு நிகழும். பாரமார்த்தத்தில் ஜீவாத்ம பரமாத்ம அந்தராத்ம விவகாரங்கள் நசித்தவிடத்து நிர்விசேஷ கேவலாத்மாவான பிரமமே அத்துவிதமாகச் சேடிப்பதாம். இதுவே சத்தசத்து விவகாரங்கள் கடந்த சுத்தப் பிரமமெனவும் சுருதிகளிற் கூறப்படும். இனிக், கேவலாத்மாவான சுத்தப் பிரமத்தின் பிரதி பிம்பமான எனது விபூதி ரூபங்கள் மண்ணிற் கடம்போல எனது சத்தையிற் கற்பனையாகத் தோற்றுவதால் சத்தா மாத்திரமான என்னை யறிய வேண்டிய உனக்கு அசத்தியாகிய எனது விபூதி விஸ்தாரத்தை எவ்வளவு கேட்பினும் ஒன்று மின்றென்பார் "அதவா பஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தபார்ச்சுந" என்று கூறப்பட்டது. இது அத்வைதக்
கொள்கையாம்."] 42

பத்தாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.





ஸ்ரீ கிருஷ்ணபகவான் விஸ்வரூபம்.

## பதினொராவது அத்தியாயம்

# விசுவரூப ஸந்தர்ஸன யோகம்

---

### அவதாரிகை

[இவ்வாறு பக்தி யோகம் உண்டாவதற்காகவும், அது விருத்தி யடைவதற்காகவும், மற்றெல்லாவற்றையுந் தவிர வேறுபட்ட தாயும், சுவபாவத்திலே ஏற்பட்டதாயும், ஈசுவரனுக்கே அஸாதாரணமாயு மிருக்கிற கல்யாண குணங்களின் கூட்டத்துடன் கூட பகவான் எல்லாவற்றிற்கும் ஆத்மா என்பதும் அவனைத் தவிர மற்றெல்லாச் சேதநு சேதனங்களாகிய பொருள்களின் கூட்டமும் அவனுக்குச் சரீரமாகையினால் அவனுக்கு அடங்கிய சுவரூபம், ஸ்திதி, பிரவிருத்தி இவைகளை யுடையதென்று கூறப்பட்டது. இவ்வாறான பகவானுக்கு அஸாதாரணமான சுவபாவத்தையும், எல்லா மவனுக்கு வசப்பட்ட சொரூபத்தையும்-ஸ்திதியையும் - பிரவிர்த்தியையும் உடையது என்பதையும், பகவானிடத்திலிருந்து கேட்டு இது இவ்வாறே என்று நிச்சயஞ் செய்து அவ்வாறான பகவானை நேரில் பார்க்கவேண்டுமென்கிற பிரீதியை யுடைய அர்ச்சுனன் சொன்னான். அவ்வண்ணம் பகவானுடைய கிருபா கடாக்ஷத்தினால் பகவானுடைய சொரூபத்தைப் பார்க்கப் போகிறான்.]

### அர்ச்சுனன் வாக்கியம்

"தேகமே ஆத்மா வென்று பிரமித்திருக்கிற அடியேன் விஷயத்தில் கிருபை செய்வதற்காகவே பரம ரஹஸ்யார்த்தமாகிய ஆத்ம சுவரூபத்தைத் தேவரீர் அருளிச் செய்தது: அதைக் கேட்டதினால் அடியேனுக்கு ஆத்மாவின் விஷயத்தில் உண்டாயிருந்த கலக்கங்களெல்லா மொழிந்தன." 1

"தாமரைப் புஷ்பங்களின் இதழ்களைப்போன்ற கண்களையுடைய கிருஷ்ணா! ஏழாவது அத்தியாயந் தொடங்கி பத்தாவது அத்தியாயம் வரையில் தேவரீரைத் தவிர மற்றெல்லாப் பிராணிகளும் பரமாத்மாவான தேவரீரிடத்தி னின்றுமே உண்டாய் லயிக்கின்றன வென்கிற விஷயம் விஸ்தாரமாய்க் கேட்டே னன்றோ?" 2

"தேவரீர் எந்நாளும் சேதனு சேதன ரூபமான சகல வஸ்துக்க ளுக்கும் ஆதாரமா யிருக்குந் தன்மையும், ஞானம் பலம் முதலிய சகல கல்யாண குணங்களாலும் தேவரீரே மேலாயிருக்குந் தன்மையை யும், சகல வஸ்துக்களுக்கும் ஆதாரமா யிருக்குந் தன்மையையும், இமை கொட்டுகிற தென்கிற அற்பப் பிரயத்தனமும் தேவரீருடைய ஆதீன மென்கிற மஹாத்மியத்தின் தன்மையையும் அவ்வாறே கேட் டேன். தேவரீரைப்பற்றி அருளிச் செய்த தெல்லாம் அறிந்து கொண்டேன். ஆஸ்ரிதா ளிடத்தி லுண்டான அன்புக்குக் கடலாய் விளங்குகின்ற ஹே! புருஷோத்தம! யாவரையும் படைக்குந் தன்மையி லும், பரிபாலிக்குந் தன்மையிலும், அழிக்குந் தன்மையிலும், தரிக் குந் தன்மையிலும், கல்யாண குணங்களுக்கு இருப்பிடமா யிருக்குந் தன்மையிலும், மேன்மையிலும், எல்லாவற்றிலும் வேறுபட்டிருக்குந் தன்மையிலும் தேவரீர் எழுந்தருளி யிருக்கும் நிலையைக் கண்ணுற் காணவேண்டு மென்று ஆசைப்படுகிறேன்." 3

"இவ்வாறு எல்லாவற்றையும் படைத்தும் ஆண்டுந் தரித்து மிருக்கிற தேவரீருடைய ரூபத்தைச் சேவிக்கும்படி அடியேனுல் கூடுமென்று தேவரீருக்குத் திருவுள்ளமானுல், ஓ! யோகேசுவர! மற் றொருவருக்கும் கிடைக்க மாட்டாத ஞானம், பலம், ஐசுவரியம், வீரியம், சக்தி, தேஜஸ் இவைகளுக்கு நிதியானவரே! தேவரீரை முழுதும் அடியேன் கண்டனுபவிக்கும்படி சேவை சாதித்தருள வேண்டும்." 4

[அவதாரிகை:—இவ்வாறு குதூகலத்தோடு கூடினவனுய்ச் சந்தோ ஷத்தால் தொண்டையில் வார்த்தை யெழாமற் றடரும்படி அர்ச்சுனனுல் பிரார்த்திக்கப்பட்ட பகவான் அருளிச்செய் கிறுர்.]

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"எல்லா வஸ்துக்களுக்கும் ஆதாரமாகிய என்னுடைய ரூபத் தைப் பார். மேலும், நூறுகளாகவும், ஆயிரங்களாகவும், அநேக விதங்களாகவும், பிரகிருதி சம்பந்த மில்லாதவைகளாகவும், வெளுப்பு கறுப்பு முதலிய அநேக வர்ணங்களை யுடையவைகளாகவும், அநேக ஆகாரங்களை யுடையவைகளாகவும் இருக்கிறேன். அவைகளைப் பார்."

[கருத்து:—நூறுகளாகவும், ஆயிரங்களாகவும் என்பதனுல், பரம், வ்யூஹம், விபவம் என்கிற பெயர்களினுல் சேர்த்துச் சொல்லப்

பட்ட எண்ணிறந்த பிரகிருதி சம்பந்த மில்லாத விக்கிரகங்களை யுடையவனாக இருப்பது காட்டப்பட்டது.] 5

“ஓ! பரதவம்சத்தி லுதித்தவனே! துவாதசாதித்தர்களையும், அஷ்ட வசுக்களையும், ஏகாதச உருத்திரர்களையும், அசுவினி தேவர்களையும், சப்த மருத்துக்களையும் பார். அவ்வாறே அநேகங்களாயும் முன் பார்க்கப் படாதவைகளாயு முள்ள ஆச்சரியங்களைப் பார்.”

[இந்திரியங்களுக்குப் புலப்படாத வஸ்து சாஸ்திரத்தினால் அறியப்பட்ட போதிலும், அதில் நேராகப் பார்ப்பதினாலேயே தெரிந்துகொள்ளக்கூடிய விசேஷங்கள் அநேக மிருக்கின்றனவென்று காட்டப்பட்டது. மேலும், என்னுடைய ஒரு ரூபத்தில் பன்னிரண்டு சூரியர்களையும், எட்டு வசுக்களையும், பதினொரு உருத்திரர்களையும, இரண்டு அசுவினி தேவர்களையும், நாற்பத்தொன்பது மருத்துக்களையும் பார்.

இது குறித்துக் காட்டுவதற்காக, இந்த லோகத்தில் பிரத்தியக்ஷத்தினால் பார்க்கப்பட்டவைகளும், சாஸ்திரங்களினால் அறியப்பட்ட வஸ்துக்களும் எவைகளோ, அவை எல்லாவற்றையும், மற்றும் எல்லா லோகங்களிலும் எல்லா சாஸ்திரங்களிலும் அறியப் படாதவைகளாகிய அநேக ஆச்சரியங்களையும் பார்.] 6

“இந்த என்னுடைய ஒரு சரீரத்தில், அதிலும் ஓரிடத்தில் சேதனாசேதன ரூபமான உலகத்தை யெல்லாம் நன்றாய்ப் பார். இன்னும் ஏதாகிலும் பார்க்க வேண்டுமானால் அதையும் இந்தச் சரீரத்தின் ஏகதேசத்தில்தானே பார். நான் என்னுடைய சரீரத்தின் ஒரு பாகத்தில் எல்லா லோகங்களையும் காட்டப்போகிறேன். ஏனாவெனில், சிற்சில வஸ்துக்களைக் கிரகிக்கக் கூடியதாகிய பிரகிருதி சம்பந்தமுள்ள இந்தக் கண்களினால் அப்படிப்பட்டவனாகவும், மற்றெல்லா வஸ்துக்களையும் விட வேறுபட்டவனாகவும், அளவில்லாதவனாகவு மிருக்கிற என்னைக் காண்பதற்குச் சக்தி உள்ளவனாகப் போகிறாயில்லை. உனக்குப் பிரகிருதி சம்பந்த மில்லாததும், என்னைப் பார்ப்பதற்குச் சாதனமுமாகிய கண்களைக் கொடுக்கிறேன். எனக்கே அஸாதாரணமான சுவபாவத்தைப் பார்; அதாவது, என்னுடைய அளவில்லாத ஞான முதலியவைகளின் சம்பந்தத்தையும், அளவில்லாத விபூதி முதலியவைகளின் சம்பந்தத்தையும் பார்.”

சஞ்சயன் வாக்கியம்

"இவ்வகையாகக் கூறித் தேரோட்டுவதி லிருந்த அர்ச்சுனனுக்கு மாமன் மகனான அந்தக் கண்ணன், மகா யோகங்களுக் கெல்லாம் ஈசுவரனாய், பரப்பிரஹ்மமான நாராயணனாகையாலே தம்முடைய பரமேசுவரத் தன்மைக் கிடான ரூபத்தை அத்தை மகனான பார்த்தனுக்குக் காண்பித்தருளினார்." 9

"அதுவோ நானாவிதமாய், விசித்திரமாய், சகல லோகங்களுக்கு மிடமாய், எல்லாவற்றையு மானுவதாயுள்ளது; அதாவது, அநேக முகங்களும் கண்களுமுடையதும், அநேக அற்புதங்களைக் காட்டுவதும், அநேக திவ்வியாபரணங்க ளுடையதும், திவ்வியங்களான அநேக ஆயுதங்களை யுடையதும், திவ்விய மாலைகளும் வஸ்திரங்களு மணிந்ததும், திவ்விய கந்தம் பூசியதும், சகல ஆச்சரியமானதும், பிரகாசமானதும், முற்காலத்தில் உள்ள சகல ஜகத்திற்கு மிடமாயிருந்தலால் தேசத்தாலாவது காலத்தாலாவது அளவிடப் போகாததும், எந்தத் திக்கிலும் முகங்களோடும் கூடியதுமாயிருந்தது." 10-11

"ஆகாயத்தில் அநேக ஆயிரஞ் சூரியர்களின் காந்தி ஏககாலத்தி லுண்டானால் அது அந்த விசுவரூபத்தைத் தரித்த மஹாத்மாவின் பிரகாசத்திற்குச் சமமாகும்." 12

"அப்பொழுது அளவில்லாத அகலமு நிகளமு முள்ளதாய், அனந்தமான திருத்தோள்கள், திருவயிறுகள், திருமுகங்கள், திருக்கண்களை யுடையதாய், அளவற்ற ஒளியோடு கூடியதாய், அளவற்ற திவ்யாயுதங்க ளணிந்ததாய், தனக்குத் தக்கபடி அபரிமிதமான திவ்யாபரணங்களை யுடையதாய், அற்புதமான திருமாலைகளும் திருப்பீதாம்பரங்களும் அணிந்ததாய், திவ்வியமான சந்தனம் பூசியதாய், அனந்த ஆச்சரியமாயுள்ள அத் தேவதேவனுடைய திவ்வியத் திருமேனியில் நானா விதங்களாய்ப் பிரிக்கப்பட்டுப் பிரமன் தொடங்கி அநேக விசித்திரங்களான தேவர் திரியக்கு மனுஷிய தாவரங்களென்கிற புசிப்பவரின் தொகையாகவும், பூமி, ஆகாயம், சுவர்க்கம், பாதாளம், அதலம், விதலம், ஸுதலம் முதலிய போகஸ்தானங்களாகவும், புசிக்கும் பண்டங்களாகவும், புசிப்பதற்கு வேண்டுங் கருவிகளாகவும், பலவாறாகப் பிரிக்கப்பட்டுப் பிரகிருதி புருஷ ரூபமாயுள்ள சகல லோகத்தையும் எங்கேயோ ஓரிடத்தி லிருப்பதாக அர்ச்சுனன் பகவத் கடாக்ஷத்தா லடைந்த திவ்விய நேத்திரங்களாலே கண்டு சேவித்தான்." 13

"பிறகு தனஞ்சயனானவன் மகா ஆச்சரியமுள்ள சகல லோகங்
களையும் தமது திருமேனியில் ஓரிடத்தில் வைத்து அவைகளை யேவு
கின்றவராய், அதிக ஆச்சரியமான அளவிறந்த ஞானம் முதலிய கல்
யாண குணங்களுக் கிடமாயுள்ள பகவானைப் பார்த்து ஆச்சரியத்
தோடு கூடியவனாய், திரேகத்தில் மயிர்க் கூச்சறையும்படித் தடி
போல் விழுந்து சேவித்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு அடியிற்
கண்டவாறு விண்ணப்பஞ் செய்கின்றான்." 14

அர்ச்சுனன் வாக்கியம்

"ஸ்வாமின்! தேவரீருடைய திருமேனியில் சகலமான தேவர்
களையும், மற்று முண்டான பிராணிகளின் கூட்டங்களையும், அண்
டாதிபதியான சதுர்முகப் பிரம்மாவையும், அவ்வாறே அவருடைய
இச்சானுவர்த்தியான சிவனையும், தேவரிஷிகள் தொடக்கமான
எல்லா ரிஷிகளையும், வாசுகி தக்ஷகன் முதலான அநேகம் சர்ப்பங்
களையுங் காண்கின்றேன்." 15

"அநேகம் கை கால் முதலிய கரணங்களுடன் கூடி அனந்த
ரூபனாயுள்ள தேவரீரை யெங்கும் பார்க்கின்றேன். ஏ! விசுவேசுவர!
விசுவ சரீரனா யிருக்கிற தேவரீருக்கு ஆதி இது வென்றும், மத்திய
மிது வென்றும், அந்த மிது வென்றும், தேவரீரளித்த இந்தத் திவ்
விய நேத்திரங்களைக் கொண்டும் பார்க்கச் சக்தியற்றவனா யிருக்கின்
றேன்." 16

"மேலும், தேஜோராசியாய் எங்கும் ஒளி விடுகின்றவராய் எந்
தப் புறத்திலும் பார்ப்பதற்குக் கூடாதவராய், ஜ்வலிக்கின்ற சூரி
யன் அக்கினி இவர்களுடைய காந்தியோடு கூடியவராய், அளவிட்
டறியக் கூடாதவரா யிருக்கும் தேவரீரைக் கிரீடம் கதை சக்கரம்
இவைகளைத் தரித்தவராகச் சேவிக்கின்றேன்." 17

"உபநிஷத்துக்களில் அறியவேண்டியதாகச் சொல்லப்பட்ட
பரமமான அக்ஷரம் தேவரீரே! இந்த ஜகத்திற்கு முக்கியமான ஆதார
மும் தேவரீரே! தேவரீர் எந்த ஸ்வரூபத்தோடு எவ்வித குணங்க
ளோடும் எவ்வித விபவத்தோடும் கூடி இருக்கின்றீரோ அவ்வாறே
எந்நாளு மிருக்கின்றது. நித்தியமான வைதிக தருமங்களை யெல்லாம்
தேவரீரே இப்படி அவதாராதிகளைச் செய்து காப்பாற்றுகின்றீர்."

"ஆதி மத்தியம் அந்தம் அற்றவராய், ஞானம் பலம் வீரியம் முத
லிய குணங்கள் பொருந்தியவராய்க், கணக்கில்லாத கை கால் கண்

முதலிய அவயவங்களோடு கூடியவராய்ச், சந்திரனைப்போல் அடுத்தவரைக் குளிர நோக்கிச், சூரியனைப்போல் கடுத்தவரைக் கடுக்கின்ற திருக்கண்களை யுடையவராய்ப், பற்றி யெரியும் காலாக்கினிபோல் சம்சாரத்திற் கேற்ற முகங்களோடு கூடியவராய் எல்லாம் தபிக்கின்ற தேவரீரைப் பார்க்கின்றேன்.''

[இவ்வாறு சர்வத்திற்கும் கர்த்தாவாயும், ஸர்வாதாரராயும், சர்வத்தையும் ஆள்பவராயும், சர்வத்தையும் அழிப்பவராயும், ஞானம் முதலிய அபாரமான குணங்களுக்குக் கடலாகிய ஆதிமத்தியாந்தரகிதராயு மிருக்கிற தேவரீரை இப்படிப்பட்ட திருமேனியோடு கூடியிருப்பவராகத் தேவரீர் உபதேசித்தபடி கண்டு களிக்கிறேன்.] 19

''மேலேயுள்ள ஆகாயம், கீழேயுள்ள பூமி, இதற் கிடையிலுள்ள வெளிகள் இவைகளில் நிலைத்திருக்கின்ற எல்லா உலகங்களையும் தேவரீர் வியாபித்துக்கொண் டிருக்கின்றீர். அளவில்லாத நிகளம், விசாலம் இவைகளை யுடையதாயும், மிகவும் ஆச்சரியமாயும், மிகவும் பயங்கரமாயு மிருக்கின்ற உம்முடைய இந்த ரூபத்தைப் பார்த்து யுத்தத்தைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையினால், பிரம்மாதி தேவதைகள், அசுரர்கள், பிதுருக்கள், சித்தர்கள், கந்தருவர்கள், யக்ஷர்கள், இராக்ஷஸர்கள் இவர்களிற் சிலர் பாண்டவர்களுக் கனுகூலராயும், சிலர் துரியோதனாதிகளுக் கனுகூலராயும், சிலர் மத்தியஸ்தர்களாயு மிருக்கிறார்கள். இம் மூன்று வகை ஜனங்களும் பயப்பட்டார்கள்.''

[கருத்து:—'ஞானக்கண் ணன்றியில் விசுவரூபத்தைப் பார்க்கக் கூடாதே! விசுவரூபத்தைப் பார்த்தாலன்றிப் பயப்படக் காரண மில்லையே' என்றாலோ, அவர்களுங் கண்ணுற்றுப் பயங் கொண்டார்க ளென்பதை அர்ச்சுனன் தெரிந்துகொள்ளும் பொருட்டுப் பகவான் அந்த மூன்று வகை ஜனங்களுக்கும் அர்ச்சுனனுக்குத் தாம் ஞானக் கண் அளித்தவாறு அவர்களும் உற்று நோக்குவதற்காக ஞானக் கண் பிரசாதித்தருளினர். ஆகையால், அந்த மூன்று வகை ஜனங்களும் பயப்பட்டதாக அர்ச்சுனன் உணர்வதற்குக் காரண முண்டாயிற்று.]

[குறிப்பு:—இந்த 20-வது சுலோகத்திற்கு ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் வேறு விதமாக அபிப்பிராயப்பட்டுப் பொருள் கொண்டனர். அதாவது:—'மூன்றுலகத்தி லுள்ளவர்களும் அச்சங் கொண்டன ரென்றால், மூன்றுலகத்தி லுள்ள பக்த சிரோமணிகள் பயமடைந்தா ரெனத் தாத்பரியம். அஃதாவது, ஈசுவரனிடத்தில் பிரீதி யில்லாத பக்தர்க ளெல்லாதவர்க

னுக்குக் காண்கிற யோக்கியதை யில்லாதபடியால் அவர்கள் பயப்படக் காரணமில்லை; அல்லது மூன்றுலகத்தி லுள்ளவர்கள் இந்த ரூபத்தைக் கண்ணால் பாராவிட்டாலும், மனத்தினால் அனுசந்தானஞ் செய்து, அதனால் அவர்கள் பய மடைந்ததை அர்ச்சுனன் பார்த்து அவர்களும் தன்னைப்போன்று பார்த்து பயப்படுகிறதாக எண்ணினானென்றாவது கிரகிக்கத்தக்கது.''] 20-21

"உயர்ந்தவர்களான இந்தத தேவர்களின் கூட்டங்கள் பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகிய உம்மைப் பார்த்துச் சந்தோஷத்தோடு கூடிய மனதை யுடையவர்களாய் உம்முடைய சமீபத்தை யடைகிறார்கள். அவர்களுள் சிலர் பயங்கரமாகவும் மிகவும் ஆச்சரியமாகவு மிருக்கிற உம்முடைய ரூபத்தைப் பார்த்துப் பயந்தவர்களாய்க் கைகளைக் குவித்துக்கொண்டு, தங்கள் ஞானத்திற்குத் தகுந்தபடி தோத்திரங்களா யிருக்கிற வாக்கியங்களைச் சொல்லுகிறார்கள். இன்னுஞ் சிற்சிலர் பரத்துவம் தாழ்ந்த தத்துவம் இவைகளின் உண்மையைத் தெரிந்துகொண்ட மஹரிஷிகளின் கூட்டங்களும் சித்தர்களின் கூட்டங்களும், 'மங்கள முண்டாகக் கடவது' என்று கூறி உமக்குத் தக்கவைகளான ஸ்தோத்திரங்களினால் துதிக்கிறார்கள்.'' 22

"ஏகாதச உருத்திரர், துவாதச ஆதித்தியர், அஷ்ட வசுக்கள், ஸாத்தியர், விசுவதேவர், அசுவினி தேவர்கள், மருத்துக்கள், சப்த வாயுக்கள், பிதுருக்கள், கந்தருவர், யக்ஷர், அசுரர், சித்த கணங்களாகியோர் பரமாச்சரியத்தோடு கூடி உன்னைச் சேவிக்கிறார்கள்.'' 23

"மேலும், அநேக கோரமான பற்களோடு கூடிய தேவரீருடைய சொரூபத்தைக் கண்டு முன் சொன்னவர்களும் அடியேனும் மிகவும் பயந்திருக்கிறோம்.'' 24

"பரமபத மென்கிற பரமாகாசம் வரையில் வியாபித்து, மகா பிரகாசமாய், அநேக வர்ணங்களுடன் கூடித் திறந்த வாய்களோடும் விசாலமான நேத்திரங்களோடுங் கூடிப் பயங்கரமா யிருக்கிற ஓ! விஷ்ணுவே! தேவரீரைப் பார்த்து அடியேன் கொஞ்சமும் தரிக்ககில்லேன்; மனம் பதறுகிறது; புலன்கள் கலங்குகின்றன.'' 25

"பிரளய கால அக்கினிபோல் எல்லாவற்றையும் நாசஞ் செய்யும்படி கோரமா யிருக்கின்ற நும் திருமுகங்களைப் பார்த்து அடியேனுக்குத் திக்குத் தெரியவில்லை. சுகம் சிறிதும் உண்டாக வில்லை. உலகத்திற் கெல்லாம் இருப்பிடமாய். பிரம்மாதி தேவர்களுக்.கெல்லாம் ஈசனாகிய ஓ! பகவானே! அடியேனிடத்தில் கிருபை செய்து

அருளவேண்டும். என்றால், அடியேன் தரிக்கும்படி கடாக்ஷிக்க வேண்டும்.'' 26

[அவதாரிகை:—பிராணிகளின் இருப்புத் தரிப்பு முதலியவெல்லாம் தம் ஆதினமென்று காட்டுவதற்காக எம்பெருமான், துரியோதனன் படையில் இராஜ வேஷம் பூண்ட அசுரப் படைகளை யெல்லா மொழித்துப் பூமியின் பாரத்தைத் தாமே தீர்க்கப் போகிற தென்கிற தம்முடைய திருவுள்ளத்தை அர்ச்சுனனுக்கு காட்டி யருளினார். அவனும் எம்பெருமானுடைய படைக்குந் தன்மை முதலிய ஈசுவரத்தன்மை யெல்லாம் பார்த்து, அந்தப் பகவானிடத்தில்தானே இனி யழியப் போகிற துரியோதனாதிகள் மடியும் விதத்தையுங் கண்டவனாய்ச் சொல்லத் தொடங்கினான்.]

''ஓ! கிருஷ்ணா! இந்தத் துரியோதனன் முதலிய திருதராஷ்டிரன் பிள்ளைகள் எல்லோரும், பீஷ்மரும், துரோணரும், கர்ணனும் அவர்கள் பக்ஷத்திற் சேர்ந்த எல்லா இராஜாக்களின் கூட்டமும், நம்முடைய பக்ஷத்தில் சேர்ந்த சில பிரதானர்களான யுத்த வீரர்களும், கோரப் பற்களினால் விகாரமாயும் பயங்கரமாயு மிருக்கின்ற உமது வாய்களில் அவசரத்தோடு பிரவேசிக்கின்றார்கள். சிலர், பற்களின் சந்துகளி லகப்பட்டுப் பொடியான தலைகளோடு காணப்படுகின்றார்கள்.'' 27

''இராஜாக்க ளெல்லாம் ஆற்று வெள்ளம் கடலிற் புகுவது போலும், விட்டில் பூச்சி பெருந் தீயிற் புகுவது போலும் தேவரீருடைய வாயில் தாமாய் அழிந்து போவதற்காக வெகு வேகமாய் வந்து வீழ்கிறார்கள்.'' 28-29

''அப்படிப்பட்ட அவ் வரக்கர் கூட்டங்களை யெல்லாம் ஜ்வலிக்கின்ற திருவாயில் விழுங்கும்போது அதிக கோபத்தோடு கூடிய மேலுதட்டையும் கீழுதட்டையும் அடிக்கடி நக்குகின்றீர். தேவரீருடைய அதி பயங்கரமான கிரணங்கள் தம் பிரகாசங்களாலே உலகங்க ளெல்லாம் பரவ, அதனால் பிராணிகள் தவிக்கின்றன. தேவரீருடைய நிரங்குசமான ஈசுவர ஸ்வரூபத்தைக் காட்டவேண்டு மென்று அடியேன் வேண்டிக்கொண்டபடி அப்படியே தரிசனங் கொடுத்தவர், மறுபடி இந்தக் கோரமான ரூபத்தைத் தரித்தீரே. எதற்காகவோ? இதை அடியேனுக்குத் தெரியச் சொல்வதோடு சாந்தமான வடிவத்தையும் அங்கீகரித் தருளவேண்டும்'' 30-31

[அவதாரிகை:—"அடியேனிடத்தில் பிரீதியினாலே விசுவைசுவரியத்தைக் காட்டினவர் கோர ரூபத்தை யெடுப்பதற்கு என்ன காரணம்" என்று வினவினதற்குப், பகவான் அர்ச்சுனனைப் பார்த்துத் தம் திருவுள்ளத்தை யருளிச் செய்கிறார்.]

### ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனா! துரியோதனன் முதலிய சகல இராஜாக்களுடையவும் வாழ்நாளின் இறுதியை நாம் கண்டிருக்கையாலே அவர்களை யெல்லாம் நாசஞ் செய்வதற்காகக் கோரமான உருவத்தோடு வளர்ந்து அவர்களை யழிப்பதே பயனாக இப்பொழுது ஆரம்பித்திருக்கிறோம். உன்னுடைய முயற்சி யில்லாமலே இந்தத் துரியோதனாதிகளும் மற்றும் உனக்கு எதிரிகளாய் நின்ற இவ்வீரர்கள் யாவரும் என்னுடைய சங்கற்ப மாத்திரத்தால் நாசமடையப் போகிறார்கள். ஆகையால், அவர்களை எதிர்ப்பதற்காக நீ எழுந்திரு. சத்துருக்களான அவர்களை ஜயித்து, கீர்த்தியைப் பெற்று, தர்மமாய்க் கொல்லப்பட்டபடியால், இரண்டு கைகளாலும் போர் புரிபவனே நீ அதற்குக் காரணமா யிருத்தல் வேண்டும்." 32-33

"மேலும், துரோணர், பீஷ்மர், கர்ணன் முதலானோர்களும் அபராதிகளானமையாலே நம்மாலேயே கொல்லப்படுவார்கள்; ஆகையால், அவர்களைப் பந்துக்களென்றும், ஆசிரியர்களென்றும், யோகத்தில் பற்றுடையவர்களென்றும் நினைத்து, 'இவர்களை நான் எவ்வாறு வதைப்பேன்?' என்று மனதிற் சிறிதும் வருத்த மின்றி ஜயிக்கப் பார். இவர்களைக் கொல்வதில் உனக்குச் சிறிதும் தயை யென்பதே வேண்டாம். மேலும், யுத்தத்தில் ஜயமும் உனக்கே கிடைக்கும்."

[கருத்து:—துரோணர், பீஷ்மர், ஜயத்திரதன், கர்ணன் இவர்களின் பெயரை இங்குக் கூறுவதற்குக் காரணம் யாதெனில், துரோணாசாரியர், க்ஷத்திரியகுல காலனாகிய தனுர்வேதத்தில் மகா அதிகாரியுமான பரசுராமரிடத்தில் வில்வித்தை பயின்ற தனுர்வேத நிபுணரும், தனக்குக் குருவாயு மிருப்பது கொண்டு இவர் விஷயத்திலும்; பீஷ்மாசாரியர் தனுர்வேத புஞ்சமும், தாம் சாகவேண்டித் தாமே யத்தேசித்து உயிர் விட்டா லன்றி மற்றெவ்விதத்தாலும் சாகா வரம் பெற்றிருப்பவ ராதலாலும், தனக்குப் பாட்டனாவது கொண்டு இவர் விஷயத்திலும்; ஜயத்திரதன் தனது சிரசை யறுத்துப் பூமியிற் றள்ளப்பட்டவனது தலை ஓராயிரஞ் சுக்கலாக வெடிக்கும்படியாகத் தனது பிதாவினால் வரம் பெற்றிருப்பவ னாதலால் அவ

னது சிரத்தை அறுத்துப் பூமியில் விழவொட்டாமலதை என்ன செய்வதென இவன் விஷயத்திலும்; காண்டவ வன தகன காலத்தில் உயிர் தப்பி அர்ச்சுனனைக் கொல்லப் பிரதிக்ஞை செய்துகொண்டு கர்ணனிடத்தில் வளர்ந்துகொண் டிருக்கும் நாகபாசத்திற்கு எவ்வாறு தப்பிப் பிழைப்பதெனக் கர்ணன் விஷயத்திலும் அர்ச்சுனனுக்குச் சங்கை யுண்டா யிருப்பது கொண்டு இந் நால்வரை மட்டும் குறிப்பித்ததாம்.] 34

ஸஞ்சயன் வாக்கியம்

"இவ்வாறு எம்பெருமான் அருளிச்செய்யக் கேட்டு அர்ச்சுனன் அவரைத் தெண்டன் சமர்ப்பித்து மிகவும் பயத்தாலே நடு நடுங்கி மறுபடியும் கீழ் விழுந்து கைகளைக் கூப்பிக்கொண்டு எடுத்த சொல்லை முடிக்க மாட்டாதபடி இந்த விண்ணப்பஞ் சொல்லாநின்றனன்." 35

"ஓ! ரிஷிகேசா! இந்த யுத்தத்தைக் காண்பதற்காக வந்த தேவர், கந்தருவர், சித்தர், இயக்கர், வித்தியாதரர், கின்னரர், கிம்புருடர் முதலானோ ருள்ளிட்ட சகல லோகத்தாரும் தேவரீருடைய அனுக்கிரகத்தாலே சர்வேசுவரனான தேவரீரைச் சேவித்து தங்களுடைய கீர்த்தியைக் கண்டு சந்தோஷிக்கின்றனர். தேவரீருடைய ரூபத்தைக் கண்டு பயந்தவர்களான இவ் வரக்கர் குழாங்கள் மூலைக்கு மூலை பத்துத் திக்குகளிலும் பயந்தோடுகின்றன. எல்லாச் சித்த புருஷர்களும் தேவரீரை நமஸ்கரிக்கின்றனர்." 36

"ஆனால், தேவரீருடைய பெருமைக்கு இவையெல்லாந் தகுந்தவைகளே யாம். ஓ! ஜகந்நிவாச! அழிவற்ற ஜீவ ஸ்வரூபமும் தேவரீரே; சத்தும் அசத்தும் தேவரீரே; அதாவது, நாம ரூபங்களாலே பிறித்தறியப்படுவதால் காரியமான நிலையில் 'சத்' என்றும், அவ்வாறே நாம ரூபங்களாலே பிறித்தறியப் போகாமையாலே காரணமான நிலையில், 'அசத்' என்றும் சொல்லப்படுகிற பிரகிருதியும் தேவரீரே; இவ்வகைத்தான பிரகிருதி தத்துவமென்ன? இந்தப் பிரகிருதியோடு வந்த ஜீவ தத்துவமென்ன? இவ் விரண்டையுங் கடந்த முக்த ஸ்வரூபமான தத்துவமெதுவோ அதுவுந் தேவரீரே." 37

"ஆகலின், தேவரீரே ஆதி தேவனும், புராண புருஷனும், இவ்வுலகிற் கெல்லாம் ஆத்மாவாய் நின்று தரிக்கின்ற ஆதாரப் பொருளும், தேவதைகளுக்கு ஆதியானவனும், பரம புருஷனும் நீரே; இந்தப் பிரபஞ்சத்திற்குச் சிரேஷ்டமானதாகிய பிரளய காலத்தி லடை

கின்ற ஸ்தானமும் அறிகின்றவனும் அறியத் தகுந்த வஸ்துவும் உத்தமமான (விஷ்ணு) ஸ்தானமும் நீராகவே இருக்கின்றீர்; சகல பிரபஞ்சங்களும் உம்மாலே வியாபிக்கப்பட் டிருக்கின்றன.''

[கருத்து:—பிரளய காலத்தி லடைகின்ற ஸ்தானம் என்று மேலே கூறினமையால் உத்தமமான ஸ்தானம் என்றருளியது மோக்ஷத்தை யென்று கொள்ளற்பாற்று.] 38

''கிருஷ்ண! வாயு, அக்கினி, வருணன், சந்திரன் எல்லாம் தேவரீரே. சகலமான பிரஜைகளுக்கும் பிதாக்களான பிரஜாபதிகளுக்கும் பிரமனர் பிதாவாகையாலே அவர் சகல பிரஜைகளுக்கும் பிதாமகன்; அத்தகைய அவருக்கும் தேவரீர் பிதாவாகையாலே எல்லாருக்குந் தேவரீர் பிரபிதாமகன்; அப்படிப்பட்ட தேவரீருக்கு நமஸ்காரம்.'' 39

''ஓ! அமிதமான சாமர்த்திய முடையவரே! உமது முன் பக்கத்திலும், பின் பக்கத்திலும் உம் பொருட்டு நமஸ்காரம். அவ்வாறே சகலமான திக்குகளிலும் உம் பொருட்டு நமஸ்காரமாகக் கடவது. ஓ! சர்வாத்மாவே! அளவிடத்தகாத பராக்கிரமத்தை யுடைய நீர் சகலத்தையும் வியாபித்திருக்கிறீர்; அதனாலே சர்வ ஸ்வரூபராயிருக்கிறீர்.'' 40

''மேலும், இந்த விசுவ ரூபமாகிய மான்மிய வைபவத்தை அறியாதவனாக, என்றால், சகல பிராணிகளுக்கும் ஆத்மாவா யிருப்பவரும் இன்னு மிப்படிப் பலவிதமாகவு மிருக்கின்ற தேவரீருடைய மகிமையைத் தெரியாமல் அடியேன் அஞ்ஞானத்தாலும், அதிக பரிச்சயத்தாலும் தேவரீரைத் தோழனென்று நினைத்து, அடா கிருஷ்ணா! அடா தோழா! அடா யாதவா!'' என்று சிறிதும் விநயமில்லாமல் அழைத்து வந்தேன். இவ் விஷயத்தில் அடியேனை க்ஷமிக்க வேண்டும்.'' 41

''என்னையனே! சர்வ விதத்திலும் சத்கரிக்க வேண்டிய தேவரீரை இவ்வாறு இழிவாகப் பேசினேன். இன்னும் படுக்கும் பொழுதும், கூடி யிருக்கும்பொழுதும், சஞ்சரிக்கும்பொழுதும், போஜனஞ் செய்யும் பொழுதும் அடியேன் செய்த பிழைகளுக்குக் கணக்கில்லை. ஆகையால், அவைகளை யெல்லாம் கிருபையாய்ப் பொறுத்தருள வேண்டும்; ஆகையால், என்னை க்ஷமிக்கும் படியாகப் பிரார்த்திக்கின்றேன்.'' 42

"ஒப்புயர்வற்ற பெருந்தகையோய்! சராசர ரூபமான சகல லோகத்திற்கும் தேவரீரே பிதாவாயும் குருவாயும் இருப்பதால் எல்லாராலும் பூஜிக்கத் தகுந்தவ ராகின்றீர். ஆகையால், இம்மூவுலகத்திலும் கருணை முதலிய எவ்வித குணங்களாலும் தேவரீருக்குச் சமானமானவர் கிடையாது. அவ்வாறிருக்க, அதிகனாய் ஒருவ னிருப்பனோ வென்கிற சந்தேகத்திற்கு இடந்தானுண்டோ?" 43

"ஆகலின், ஈசனும் துதிக்கத் தக்கவனுமான தேவரீரைத் தண்டன் சமர்ப்பித்து க்ஷமிக்கும்படி பிரார்த்திக்கின்றேன். குற்றஞ் செய்தவனாயினும், புத்திரன் பிதாவை வணங்கினானாகில் அந்தப் பிதாவும், அப்படியே இஷ்டமானவன் அவன் தோழனைத் தண்டனிட்டு வேண்டிக்கொண்டானாகில் அந்தத் தோழனும் இரங்குவது போல அடியேனிடத்தில் விசேஷ கடாக்ஷமுள்ளவரான தேவரீர் பிரியனான அடியேனுக்காக எல்லாவற்றையும் பொறுத்தருள வேண்டும்." 44

"ஜகந்நாயகா! ஒருநாளுங் கண்டிராத தேவரீருடைய உக்கிரமான விசுவரூபத்தைக் கண்டு அடியே னுள்ளங் களி கூர்ந்தது; மறுபடியும் பயத்தால் நடுக்க முண்டாகிறது. ஆகையால், சகல லோகங்களுக்கும் இருப்பிடமாய் பிரம்மாதிகளான சகல தேவர்களுக்கும் ஈசனான எனதாண்டவனே! அடியேனுக்கு முன்போலவே தேவரீர் சுப்பிரசன்னமான திருமேனியோடு சேவை சாதித்தருள வேண்டும். முன்போலவே, கிரீடமும் கதையும் திருச் சக்கரமுமாகத் தேவரீரை வணங்க விரும்புகிறேனாகையால் ஆயிரந் திருக் கைகளுள்ள இந்த விசுவரூபத்தை மாற்றிச் சதுர்ப்புஜனாக இருந்த முன் சேவையையே காண்பித்தருள வேண்டும்." 45-46

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனா! பிரகாச ரூபமானதும், சகல பிரபஞ்சத்தையும் வியாபித்ததும், நாச மற்றதும், ஆதியி லுள்ளதும், உன்னைத் தவிர மற்றொருவராலும் முன் பார்க்கப் படாததுமான எனது இந்த உத்தமமான ரூபம் எதுவோ அது, அனுக்கிரகஞ் செய்ய விரும்பிய என்னாலே உனக்கு எனது ஆத்ம யோகத்தாலே காண்பிக்கப்பட்டது."

[குறிப்பு:—'ஆத்ம யோகத்தாலே' என்றமையால், ஸ்ரீ சங்கரர்: "எனது ஈசுவர சம்பந்தமான சாமர்த்தியத்தாலே" என்றும், ஸ்ரீ இராகவேந்திரர்: "சொரூப சாமர்த்தியத்தாலே" என்றும்,

ஸ்ரீ இராமாநுஜர்: "எனது சத்திய சங்கற்பத்தாலே" என்றுங் கூறியுள்ளார்கள்.] 47

"குருகுல சிரேஷ்டா! மனுஷ்ய லோகத்தில் உன்னைத் தவிர மற்றவராலே இந்த விசுவரூபத்தை யுடையேனாகிய நான், வேதங்கள் கல்ப சூத்திரங்கள் முதலிய யக்ஞ சாஸ்திரங்களை அப்பியாசஞ் செய்தவர்களாலும் பார்க்கச் சாத்தியமானவ னல்லேன்; யக்ஞங்களாலும் சாத்தியமானவ னல்லேன்; குரூரமான தவங்களாலும் சாத்தியமானவ னல்லேன்." 48

"அர்ச்சுனா! இத்தகைய பயங்கரமான எனது இவ் விசுவ ரூபத்தைத் தரிசித்ததால் உனக்குப் பயம் வேண்டுவதில்லை. நீ, பயம் நீங்கினவனாய், மனதில் ஆனந்த முடையவனாய் எனது பூர்வ ரூபத்தைத் தானே முன்போலச் சந்தோஷமாகக் காணக்கடவை." 49

ஸஞ்சயன் வாக்கியம்

"திருதராஷ்டிர மகாராஜனே! வாசுதேவரானவர் அர்ச்சுனனை நோக்கி இவ்விதங் கூறித் தமது சொந்த ரூபத்தை மீண்டுங் காண்பித்தார்; அபரிமிதமான அருளுடைய அவர் சாந்த ரூபத்தோடு கூடினவராய்ப் பயந்திருக்கின்ற அர்ச்சுனனை மீண்டும் தைரியப்படுத்தினார்." 50

அர்ச்சுனன் வாக்கியம்

"ஓ! ஜனார்த்தனா! அளவில்லாத அதிசயம் பொருந்திய லாவண்யம் ஸௌந்தரியம் ஸௌகுமாரியம் முதலானவைகளோடு கூடியதாய், தேவரீருக்கே உரியதாய், மிகவும் ஸௌம்யமா யுள்ள மனுஷ்யகாரமான இத் திருமேனியைச் சேவித்த பின்புதான் அடியேனுக்குப் பிராணனும் நிலைத்துப் பிரக்ஞையும் வந்தது." 51

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

இவ் வார்த்தையைக் கேட்ட பகவான் அர்ச்சுனனை நோக்கி, "இப்பொழுது உனக்குக் காட்டிய இந்த ரூபத்தை, யாவரும் மாணும்படியான ரூபத்தைக் காண்பதற்கு ஒருவராலும் முடியாது. இதைத் தரிசிக்க வேண்டுமென்று தேவர்களெல்லாம் அளவில்லாத காலமாய் எதிர்பார்த் திருக்கிறார்களே யல்லது ஒருவராவது சேவித்ததில்லை."

"அது யாதெனில், என்னிடத்தில் பக்தி யில்லாத 'கேவலங் களா யிருக்கிற, பிறருக்கு அத்யயனஞ் செய்வித்தல், அர்த்தம் உபதேசித்தல், தான் அத்யயனஞ் செய்தல், அர்த்தத்தைத் தெரிந்து

கொள்ளுதல், ஜபம் முதலியவைகள் செய்தல், இவற்றாலும், வேதங்களினாலும், யாகம் - தானம் - ஹோமம் - தபசு இவற்றாலும் உள்ளபடியே யிருக்கிற நான் அறியத்தக்கவ னல்லன்.'' 53

''வேறொரு பிரயோஜனத்தையும் விரும்பாத பக்தியினாலோ வெனில், உள்ளபடியே சாஸ்திரங்களைக் கொண்டு அறியவும், உள்ள படியே நேராகப் பார்க்கவும், பிரவேசிக்கவும் தகுந்தவன். அவ்வாறே இந்த ஆத்மா பிரவசனம் செய்வதினாலும் அடையத்தக்கவ னல்லன்; தியானிப்பதினாலும் அடையத் தக்கவ னல்லன். அநேக விதமாக கேட்பதினாலும் அடையத் தக்கவ னல்லன்; எவன் எவனை வரிக்கின்றானோ அவனால் அடையத் தக்கவன். 'அவனுக்கு இந்த ஆத்மா தன்னுடைய ரூபத்தை விசதமாகக் காட்டுகிறான்' என்றர்த்தமுள்ள சுருதி வாக்கியத்திலும் சொல்லப்பட்டது.'' 54

''ஆகையால், அர்ச்சுனா! என் பொருட்டுக் கருமங்களைச் செய்கிறவனும், என்னையே பரம புருஷார்த்த மென்று நம்பி யிருக்கிறவனும், என்னிடத்திலே உறுதியான பக்தியை யுடையவனும், சகல விஷயாபிமானங்களையும் விட்டவனும், சகல பிராணிகளி னிடத்திலும் துவேஷம் அற்றவனும் எவனோ அவன் என்னை அடைகிறான்.''

[அதாவது, வேத மோதுதல் முதலான சகல கர்மங்களும் நம்முடைய ஆராதன ரூபமென்று செய்பவனும், எத்தொழிலைச் செய்தாலும் எல்லாம் கிருஷ்ணார்ப்பண மென்று செய்பவனும், நம்மிடத்தில் மிகுந்த பக்தியாலே நம்மைப் பாடியும் சிந்தித்தும் அர்ச்சித்தும் பணிந்தும் பொழுது போக்குபவனும், இன்னு மிப்படி நம் விஷயமாகவே காலத்தைக் கழிக்காவிடில் தரிக்கமாட்டாம லிருப்பவனும், நம்மையே பற்றி யிருத்தலால் மற்றவைகளிற் பொருந்ாதவனும், ஒரு பிராணியையும் பகைக்காதவனும் (அதாவது, நம்மைப் பிரிந்தால் துயரமும், நம்மைக் கூடினால் கொண்டாட்டமுமா யிருப்பவனாகையால் தனக்கு ஏதேனும் துயரம் நேரிட்டால் அது தான் செய்த பிழையின் பயனென்று நினைப்பதாலும், சகல பூதங்களும் பகவானாகிய நமக்கு ஆட்பட்டனவென்று நினைப்பதாலும், ஒரு பூதத்தையும் பகைப்பதற்குக் காரண மில்லாமையாலே பகைக்காதவனும்) எவனோ, அவன் தோஷங்கள் யாவையு மொழித்து எப்போதும் நம்மையே அனுபவிப்பவ னாவான்.] 55

பதினொராவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

பன்னிரண்டாவது அத்தியாயம்

# பக்தி யோகம்

---

## அவதாரிகை

[பக்தியோக நிஷ்டர்களுக்குப் பயனாய், பரப்பிரமமாய், பரமபுருஷனாய் இருக்கின்ற ஸ்ரீமந் நாராயணனுடைய தடையற்ற ஐசுவரியத்தைக் காண ஆசைப்பட்ட அர்ச்சுனனுக்கு, அளவில்லாத அதிசயம் பொருந்திய கருணை, தண்ணளி, வண்மை முதலிய கல்யாண குணங்களுக்குக் கடலாய் விளங்குகின்ற, சத்திய சங்கல்பனான ஸ்ரீ கிருஷ்ண பகவானால் தம்முடைய ஈசுவரத்தன்மையானது உள்ளபடியே காண்பிக்கப்பட்டதென்றும், அப்படியே எம்பெருமானை உள்ளபடியே சாஸ்திரமுகத்தா லறிவதும், பிரத்தியக்ஷமாய்க் காண்பதும், மற்றப்படி எப்போதும் அவன் சந்நிதியி லிருப்பதும் ஆகிய இவை எல்லாம் அவனைவிட்டு நீங்காத பக்தி யுண்டானால் மாத்திரமே கிடைக்குமென்றுஞ் சொல்லப்பட்டது. இப்பொழுது ஆத்மப் பிராப்திக்குச் சாதனமான ஆத்மோபாஸத்தைக் காட்டிலும் பக்தி ரூபமான பகவத் உபாசனம் பலனை வருத்தமின்றி விரைவில் அளிக்குமாகையால் சிறந்ததென்றும் அதைச் செய்யச் சக்தியற்றவன் அக்ஷர மென்கிற முக்தஸ்வரூப நிஷ்டையி லிருக்கவேண்டு மென்றும், மற்றும் அவனுக்கு வேண்டும் விஷயங்களிவை யென்றுஞ் சொல்லப்படுகின்றன.]

## அர்ச்சுனன் வாக்கியம்

"ஓ! பகவானே! தேவரீர் அருளிச்செய்தபடியே தேவரீரையே எப்பொழுதும் பெரும் பயனாக நினைக்க பக்தர்களாய்த், தேவரீரை சகல ஐசுவரியத்தோடு கூடி யிருப்பவராகவும், அளவில்லாத அதிசயம்பொருந்திய ஸௌந்தரியம் ஸௌசீல்யம் ஸர்வக்ஞத்துவம் சத்ய சங்கல்பத்வம் முதலிய எண்ணிறந்த குணங்களுக்குக் கடலா யிருப்பவராகவும் எவர்கள் உபாசிக்கின்றார்களோ அவர்களும், எவர்களானால் அக்ஷர மென்கிற பிரத்யக் ஆத்ம சுவரூபத்தை (அதாவது, முக்த ஸ்வரூபமான ஜீவனை) கண் முதலிய புலன்களா லறியப்படாதென்பதாக உபாசிக்கின்றார்களோ அவர்களுமாகிய இவ் விருதிறத்தாரில் தாம் கோரின பலனை விரைவில் கிடைக்கப் பெறுவோர் யாவர்? அதை அருளிச்செய்ய வேண்டும்".

ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"இரண்டாவது அத்தியாய முதல் பத்தாவதான விபூதி யோக அத்தியாயம் வரையும், ஆத்ம தத்துவத்தை யறிவதற்கான கேவலம் சாங்கிய யோகத்தைக் கூறி, இதையே பரியாயமாக நிர்க்குண நிர்விசேஷ பிரமோ பாசனை என்றும், 6-வது அத்தியாயம் 21-வது சுலோகத்தில் தெரிவித்தீர். அன்றியும், கேவல சாங்கிய ஞானிகளில் ஆரூடர்களான ஆத்ம ஞானிக ளாவார்க்குத் திரிசியங்க ளெவற்றினும் ஆசிரியமின்றிச் சுவானுபூதி விலாசத்தாற் றமது ஆத்மாவிற்றானே திருப்தி, ஆனந்தம், கிரீடை முதலியன உடையோராகத் தன்னையே பிரம முதற் றம்ப பரியந்த மெவற்றினுங் காண்பார்க ளென்றும், தம்மில் அவ் வனைத்தையுங் காண்பார்களென்றும், அவர்கள் எவற்றினு மிக்க ஐந்தாம் பதவியான கைவல்ய மென்கிற பிரம நிர்வாணத்தை இந்தப் பிராரத்த சரீரத்தில் இருக்கையில்தானே அடைவார்க ளென்றுஞ் சிரேஷ்டமாகக் கூறினீர். இந்நிலை அதிவர்ணாச்சிரமிகளுக்கன்றி தேவர்க்கும் அரிய தொன்றாதலின் ஈண்டிது நீங்கலாகத் தேவரீர் கூறியுள்ள அந்த அவ்வியக்த அக்ஷர பிரமோ பாசகர்களான சுத்த நிர்க்குண பிரம உபாசனை செய்பவர்களிலும், சர்வைசுவரிய சர்வக்கியான சர்வ சக்தி முதலியனவுடைய மாயாப் பிரதி பிரம்பரான வாசுதேவ பரப்பிரம்மமாகிய தேவரீரது சகுணோ பாசகர்களிலும் யாவர் சிரேஷ்டரென இங்கு அர்ச்சுனன் பகவானைக் கேட்ப துணர்த்திற்று."]

[ஸ்ரீ மாத்துவாசாரியரின் அபிப்பிராயம்:—இந்த சுலோகத்தின் முதல் பாகமானது பரமாத்மாவான நாராயணனைப் பற்றியதென்றும், பிந்திய பாகமானது ஸ்ரீ தேவியான லக்ஷ்மியைப் பற்றிய தென்றும் அறியத்தக்கது. எவர்கள் பிரம்மமாகிய உம்மை யுபாசிக்கின்றார்களோ, எவர்கள் அவ்யக்தம் அக்ஷர மென்று சொல்லப்படுகின்ற லக்ஷ்மியை யுபாசிக்கின்றார்களோ, இவர்களிற் சிரேஷ்டர்கள் யார் என்பது அர்ச்சுனனுடைய கேள்வி. அவ்யக்தம் அக்ஷரம் என்ற பதங்கள் லக்ஷ்மியைக் குறித்தன வென்று எவ்வாறு சொல்லக்கூடு மெனின், இந்திரியங்களிலும் சிறந்தது பொருள்; பொருளிலும் சிறந்தது மனம்; மனதிற் சிறந்தது புத்தி; புத்தியில் சிறந்தவர் சதுர்முகப் பிரம்மா; சதுர்முகப் பிரம்மாவிலும் சிறந்தது அவ்யக்தம் (லக்ஷ்மி); அவ்யக்தத்திலும் சிறந்தவன் புருஷன் (நாராயணன்); புருஷனில் சிறந்தது ஒன்றுமில்லை; இவ்வாறு கூறும் கடோபநிஷத்திலுள்ள வாக்கியங்களால் அவ்யக்தம் லக்ஷ்மி என்று சொல்லக்கூடும். இலக்ஷ்மியை யுபாசித்தால் மோக்ஷமடையலாமென்றால், கடோப நிஷத்திலும், ருக்வேதத்திலும், ஸாம

வேதத்திலும், யஜுர் வேதத்திலு முள்ள வாக்கியங்களால் அவ்யக்த உபாசனை மோக்ஷ காரணமென்று சொல்லப்பட்டிருத்தலால் லக்ஷ்மி யுபாசனையால் மோக்ஷம் பெறலாமென்க."] 1

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுன! மிகவும் பிரீதியாலே மனதை நம்மிடத்தில் வைத்து, மிகுந்த சிரத்தையோடு கூடி, சகல கருமங்களையும் என் பொருட்டுச் செய்து, பலனை எனக்கு அர்ப்பணஞ் செய்கின்றவர்களும், சிரேஷ்டமான சிரத்தையோடு கூடினவர்களுமான எவர்கள் என்னை யுபாசிக்கின்றார்களோ, அவர்கள் அத்யந்த சிரேஷ்டர்களென்று எனக்குச் சம்மதமானவர்கள்" 2

"எவர்கள் பிரத்யகாத்ம சுவரூபத்தை (அதாவது ஜீவனை) தேவனென்றாவது மனிதனென்றாவது மற்றும் எந்த விதமாகவாவது குறிக்கத் தகாததாகவும், ஆனதுபற்றியே கண் முதலிய புலன்களுக்குப் புலப்படாததாகவும், தேவர் முதலிய சரீரங்களி லெல்லா மிருக்கச்செய்தே அவ்வவ்விதமாக நினைக்கத் தகாததாகவும், ஆனதினாலே அந்தந்தத் தேவாதிகளுக்கடுத்த உருவங்களில் கட்டுப்படாததாகவும், ஆகையால் நித்தியமானதாகவு மிப்படி யெல்லா மிருப்பதாக உபாசிக்கின்றார்களோ, அதுவுமன்றி, உபாசிக்கும்போது கண் முதலிய புலன்களை யெல்லாம் தத்தம் வியாபாரங்களி னின்றும் அடக்கி, சம புத்தியோடும் (அதாவது, ஆத்மாவானது ஞானமே வடிவமாய் எங்கும் ஒரே விதமா யிருக்கிறதென்று நினைத்தவர்களாய்) அதனால் சகல பூதங்களிடத்தும் பிரியத்தை யொழித்தவரா யிருக்கிறார்களோ அவர்கள் சம்சாரத்தி னின்றும் விடுபட்டு நமக்குச் சமமாய் விளங்குகின்ற முக்த ஸ்வரூபத்தை யடைகின்றார்கள்." 3-4

"எவர்களானால் தேகத்தைத் தரிப்பதற்காகச் செய்யவேண்டுஞ் சில லௌகிக கர்மங்களையும்; யாகம், தானம், தவம், ஓமம் முதலிய வைதிக கர்மங்களையும் அவற்றின் காரணங்களோடும் உத்தேசத்தோடும் நம்மிடத்தில் சமர்ப்பித்து நம்மையே பெரும் பயனாக எண்ணி வேறு யாதொன்றையும் விரும்பாமல் நம்மைத் தியானஞ் செய்து உபாசிக்கின்றார்களோ, அதாவது தியானம், அர்ச்சனம், பிராணாயாமம், ஸ்துதி, கீர்த்தனம் முதலியவைகளை ஸ்வயம் போக்கிய

மாயும் பரமப் பிராப்பியத்திற்கு சமமாயுஞ் செய்து வருகிறார்களோ அவர்களை, நம்மோடு சேரவொட்டாமல் விரோதிக்கின்ற யமனை சம்சாரத்தினின்றும் வெகு சீக்கிரத்தில் விடுவிக்கின்றோம்.'' 5-6-7

''ஆகையால், எளிதில் விரைவில் கிடக்கின்ற, ஈடில்லாத பெரும் பயனாயிருக்கின்ற நம்மிடத்தில் தானே மனதை வைத்து, நாமேதான் அடைய வேண்டும் பேறென்கிற எண்ணம் கொள். இவ்வாறானால்தான் அதற்குமேல் நம்மிடத்தில்தானே நித்தியமா யிருந்தும் வாழ்வாய். இதில் சிறிதும் சந்தேகமில்லை.'' 8

''அர்ச்சுனா! விரைவில் நம்மிடத்தில் சலியாத மனம் வைக்க உன்னால் ஆகாத பக்ஷத்தில் அப்பியாச யோகத்தாலே நம்மையடைய விரும்பு. அதாவது, சுவபாவமாகவே எல்லை யில்லாத அதிசயம் பொருந்திய ஸௌந்தரியம், ஸௌகுமாரியம், ஸௌஹார்த்தம், வாத் ஸல்யம், காருண்யம், மாதுரியம், காம்பீரியம், ஔதாரியம், சௌரியம், வீரியம், பராக்கிரமம், சர்வஜ்ஞத்வம், ஆசைப்படாததை யடையுந் திறமை, நினைத்ததைச் செய்து முடிக்குந் திறமை, ஸத்திய ஸங்கல்பத்வம், ஸர்வேசுவரத்வம், ஸகல காரணத்வம் முதலிய கல்யாண குணங்களுக் கெல்லாம் ஸாகரமாய், ஸகல ஹேயங்களுக்கு மெதிர்த் தட்டாம லிருக்கும் நம்மிடத்தில் எல்லை யில்லாத பிரீதியை யுட் கொண்ட ஸ்மிருதி ரூபமான அப்பியாச யோகத்தாலே மனதை ஸ்திரமாக நிறுத்தி நம்மை யடைவதற்கு முயற்சி செய்.'' 9

''இனி, இப்படிப்பட்ட அப்பியாசஞ் செய்வதிலும் உனக்குச் சாமர்த்திய மில்லாத பக்ஷத்தில் நம்முடைய கைங்கரியங்களைச் செய். அதாவது, திருக்கோயில் சமைப்பது, திருநந்தனவனம் வளர்ப்பது, திருவிளக்குச் சமர்ப்பிப்பது, திருவலகிடுவது, திருநீர் தெளிப்பது, திருமாலை தொடுப்பது, திருவாராதனஞ் செய்வது, திருநாம சங்கீர்த்தனஞ் செய்வது, திருப்பிரதக்ஷிணஞ் செய்வது, திருப்பல்லாண்டு பாடுவது, தண்டன் சமர்ப்பிப்பது முதலான நம் கைங்கரியங்களை மிகவும் பிரீதியோடும் செய். மிகவும் பிரியத்தோடு நமது திருத்தொண்டைப் புரிந்துவந்தால் வெகு விரைவாக அப்பியாச யோகத்தை யடைந்து, அதனால் நம்மிடத்தில் நிலைபெற்ற மனதுடன் கூடிப் பிறகு நம்மை யடைவதென்கிற சித்தியைப் பெறுவாய்.'' 10

''மேற்கூறிய சரியை மார்க்கத்தை ஆசிரயிப்பதற்கும் சக்தியற்றவனாயின், பின்னர் நீ செய்யும் சகல காரியங்களையும் என்னையே

நினைத்துச்செய்ய நிச்சயித்துக்கொண்ட மனதுடையவனாய், எல்லாம் அவன் செயலெனவிட்டுப் பயனைக் கருதாமற் செய்யக்கடவை.''

[அதாவது, எனது குணாநுசந்தானஞ் செய்துகொண்டு, எனக்குப் பிரியமான பக்தி யோகத்தை யாசிரயித்தவனாய், அந்த யோகத்திற்கு மூலமா யிருக்கின்ற கருமத்தைச் செய்ய அசக்தனானால், அதற்குப் பின்பு மனத்தை யடக்கினவனாய் ஆத்ம சுவரூபாநு சந்தான ரூபமாயும், பரம பக்தியை விளைவிக்கிறதாயும், இதன் முதல் ஆறு அத்தியாயங்களிற் சொல்லப்பட்டதாயு மிருக்கின்ற அக்ஷர யோகத்தை ஆசிரயித்து, அதற்குபாயமான சகல கருமங்களின் பலன்களைத் தியாகஞ் செய். நானே மிகப் பிரியமான வஸ்து, நானொருவனே முக்கியமாயடையத் தகுந்தவ னென்னும் புத்தி, இவை சகல பாபங்களும் நசித்திருக்கின்றவனுக் குண்டாகு மாதலால், பலாபேக்ஷையன்றி எனது ஆராதன ரூபமா யிருக்கின்ற கருமத்தா லுண்டாகுந் தனது ஆத்ம தியானத்தாலே பிரத்தியகாத்தும சுவரூப சாக்ஷாத்கார மாகிறது. அதாவது, என்னுடைய சேஷபூதமான பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபத்தை அடைகின்றான். அவ்வா றடைந்தால், என்னிடத்தில் சிரேஷ்டமான பக்தி தானாகவே யுண்டாகின்றது.]

[ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகளின் அபிப்பிராயம்:—''சகல ஜபம் ஆசமனம் முதலிய விஷ்ணு சம்பந்தமான கருமங்களைச் செய்யச் சக்தி யற்றவனானால், அதன் பிறகு அன்னிய தேவதைகளைக் குறித்துக் கருமங்களைச் செய்து அதை எனக்கு அர்ப்பணஞ் செய்வதாகிய யோகத்தை ஆசிரயித்து, மனதை யடக்கிச், சகல கரும பலன்களின் தியாகத்தைச் செய்; அதாவது, எவ்விதமாயாவது என்னை உபாசிக்கவேண்டு மென்பதே யாம்.''] 11

''அப்பியாச யோகத்தைக் காட்டிலும் ஞானம் சிரேஷ்டம்; ஞானத்தைக் காட்டிலும் தியானம் சிரேஷ்டம்; தியானத்தைக் காட்டிலும் கருமபலத்தைப் பகவ தர்ப்பணஞ் செய்வது சிரேஷ்டம்; கரும பலத்தைப் பகவ தர்ப்பணஞ் செய்வதால் விரைவாகப் பந்த நிவாரண முண்டாகும்.''

[இந்த 12-வது சுலோகத்தின் வரலாறு:—காண்பன அனைத்துஞ் சத்திய மென்கிற அஞ்ஞானத்தோடு கூடிய அப்பியாச யோகத்தினும் பிரமம் சத்தியம், பிரபஞ்ச மித்தை யென்னுஞ்

தத்துவ ஞானமானது சிறப்புடையதாம். அஞ்ஞானம் அனைத்தையும் நீக்கிப் பர நிஷ்டையில் மனதை நிலைத்திருக்கச் செய்வது சிறப்புடையதாம். சமாதி காலத்தில் மாத்திரம் நிர்விஷயமாக இருந்து சமாதி நீக்கத்தில் விஷயா காரமாகப் பரிணமித்தற்காகிய அவ் விவேகத்தை யுடைய தியானத்தினும், விஷயங்களிற் பிரவிர்த்தித்திருக்குங் காலத்தினும் அவற்றில் தாக்கின்றி, ஆத்ம உல்லாசனுய், உதாசீனமாக அனைத்தையுஞ் செய்தல் மிகச் சிறப்புடையதாம். கருமங்க ளனைத்தையும் செய்தும் ஒன்றையுஞ் செய்யாதவன்போல அதில் பற்றின்றி யிருக்கும் அத் தியாகத்தினுல் அப்போதே பந்த நிவர்த்தியாகிற கடையற்ற மோக்ஷானந்தமானது அடையப் பெறுவதாம். தத்துவ வுணர்ச்சி யின்றிய யோகாப்பியாசத்தைக் காட்டினும் அவ் வுணர்ச்சிக்குடைய ஞானத்தோடு கூடிய அக்ஷர யோகமானது சிரேஷ்டமாம். சிரவணத்தா லறிந்துள்ள பரோக்ஷ ஞானத்தைப் பார்க்கிலும் அபரோக்ஷமாகக் காணக்கூடிய தியான சமாதி சிறப்பாகும். இந்தச் சமாதி யுக்தனுன ஆத்ம நிஷ்டன் சர்வ கர்மத் தியாகஞ் செய்து கொள்ளுவதைப் பார்க்கிலும் சகல கருமங்களையும் செய்தும், கருமத்தில் அகருமத்தைக் கண்டிருப்பதான கருமபலத் தியாகி யாவதே சிறப்புடைய தாதலால் அக் கருமபலத் தியாகத்தினுல் அப்போதே உபசாந்த ஸ்தானமாகிய கைவல்ய பிராப்தி சித்திக்கு மென்பதாம். இஃது, அத்வைதக் கொள்கை.]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"அதிகமான பிரீதி யில்லாததாயும் கடினமாயு மிருக்கின்ற தியானத்தின் அப்பியாசத்தைப் பார்க்கிலும் ஜீவாத்மாவின் உண்மையை அனுசந்தானஞ் செய்வதை முன்னிட்டு அந்த ஜீவாத்மாவை நேரில் பார்ப்பதாகிய ஞானம், ஆத்மாவிற்கு இதமாக இருக்கையில் விசேஷமானது. முடிவு பெறுத அந்த ஆத்மத் தியானத்தைப் பார்க்கிலும் அதற்குபாயமா யிருக்கிற பல தியாகத்துடன் அனுஷ்டிக்கப் படுகிற கர்மமே விசேஷமானது. பலத்தை ஆசைப்படாமல் அனுஷ்டிக்கப் படுகிற கர்மத்தினுல் உடனே நீக்கப்பட்ட பாவங்களை யுடைத்தா யிருத்தலினுல் மனதிற்குச் சாந்தி உண்டாகின்றது. அந்தத் தியானத்தினுல் ஆத்மாவை நேராகப் பார்ப்பது உண்டாகின்றது. அந்த ஆத்ம சாக்ஷாத்காரத்தினுல் பயபக்தி யுண்டாகின்றது. ஆகையினுல், பக்தி யோகத்திலும் அப்பியாசத்திலும் சக்தி யில்லாதவனுக்கு ஆத்ம நிஷ்டையே சிறப்புடைத்து. ஆத்மாவினிடத்தில் நிஷ்டையை யுடையவனுக விருந்தபோதிலும் சாந்தி யில்லாத மனதை யுடையவனுக்கு

ஆத்ம நிஷ்டையை அடைவதற்காக ஆத்மாவின் ஞானத்தை யுள்ளடக்கிக்கொண் டிருக்கிற பலன்களில் ஆசைப்படாத கர்ம நிஷ்டையே சிறந்தது.”] 12

“மேலும், தன்னைப் பகைத்தாலும், தன் விஷயத்தில் உபகாரஞ் செய்தாலும் ஒரு பிராணியையும் பகைக்காமல், ‘என்னுடைய பிழைக்குத் தக்கபடி எம்பெருமானால் ஏவப்பட்ட இவைகள் விரோதிக்கின்றன’ என்றும், அப்படியே ‘இவைகள் உபகாரஞ் செய்கின்றன’ என்றும் நினைத்தவனாயும், தன்னைப் பகைப்பதோ தனக்கு உபகாரஞ் செய்வதோ ஆகிய எந்தப் பிராணியினிடத்திலும் ஸ்நேக புத்தியைச் செய்தவனாய், அவைகளுக்குத் துயர் நேரிட்டால் அவைகளிடத்தில் கருணை புரிபவனாயும், சரீரம், இந்திரியம் மற்றும் அவைகளைச் சேர்ந்தவை யெல்லாவற்றிலும் எனதென்கிற அபிமான மில்லாமல், தேகமே ஆத்மாவென்கிற பிராந்தியற்றவனாய், இன்பத் துன்பங்களை முறையே விரும்பாமலும் வெறுக்காமலும் சமமாக எண்ணினவனாய், அவ்வாறே இவன் எண்ணினாலும் இவனை யொழியப்போகாமல் வருகின்ற சீதோஷ்ணாதிகளைப் பொறுத்தவனாய், தன்னிடையே கிடைத்ததைக் கொண்டு சந்தோஷித்தவனாய், எப்போதும் பிரகிருதிக்குப் புறம்பான ஆத்ம ஸ்வரூபத்தையே சிந்தித் திருப்பவனாய், மனதைக் கண்டபடி ஓடவொட்டாமல் அடக்கி, (அத்யாத்ம சாஸ்திரத்தில் சொன்ன அர்த்தங்களில்) திடமான நிச்சயத்தோடு, ‘பகவானை வாசுதேவனை, பலாபேக்ஷை யின்றி யனுஷ்டிக்கப்படுங் கர்மத்தால் ஆராதிக்கப்பட்டவனாய் எனக்கு ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை யுண்டு பண்ணிக் கொடுக்கப்போகின்றான்’ என்று மனதையும், புத்தியையும் நம்மிடத்தில் வைத்தவனாய் எவனிருக்கின்றானோ அந்தப் பக்தன் நமக்கு இஷ்டன்.” 13-14

“மேலும், கர்ம நிஷ்டனான யாவனொருவன் லோகத்திற்குப் பிரதிகூலமா யிருக்கும்படி சிறிதுஞ் செய்யமாட்டானோ, எவனைக் குறித்து ஒரு பிராணியும் விரோதஞ் செய்யமாட்டாதோ, (என்றால், இவன் ஒன்றையும் விரோதமாக நினைப்பவனல்ல னென்றபடி.) இவ்வா றிருப்பதால் ஒரு வஸ்துவி னிடத்திலும் சந்தோஷமாவது கோபமாவது பயமாவது பயங்கரமான செயலாவது செய்யாதவனா யிருக்கின்ற அப்படிப்பட்ட இவனும் எனக்கு இஷ்டன்.” 15

“மேலும், ஆத்மாவைத் தவிர மற்றொன்றிலும் அபேக்ஷை யில்லாமல் சாஸ்திரத்தில் கூறிய திரவியங்களைக் கொண்டு சரீரத்தை

வளர்த்தவனாய், சாஸ்திரோக்த வியாபாரங்களைத் தேர்ந் தனுஷ்டிப்பதில் சமர்த்தனாய், மற்றவைகளில் தட்டாதவனாய், சாஸ்திரோக்தமான காரியங்களைச் செய்யும்பொழுது இவனால் ஒழிக்கப் போகாதபடி வருகின்ற சீதம் உஷ்ணம் முதலியவைகளில் துயரப்படாதவனாய், சாஸ்திரத்தில் சொன்னதைத் தவிர மற்றெந்தக் கருமத்தையுங் கைவிட்டவனாய், இவ்வாறு எவனிருக்கின்றானோ அந்தப் பக்தன் எனக்கு இஷ்டன்.'' 16

''யாவனொருவன் லோகத்திலுள்ள மனுஷ்யர்களுக்குச் சந்தோஷ ஹேதுவா யிருப்பதைக் கொண்டு தான் சந்தோஷியாமலும், த்வேஷ ஹேதுவா யிருப்பதைக் கொண்டு தான் த்வேஷப்படாமலும், துயரத்திற்குக் காரணமான பெண்டு பிள்ளைகளின் நாசத்தைக் கண்டு துயரப்படாமலும், அவ்வாறு ஒன்றும் நேராத பக்ஷத்தில் அதை வரட்டுமென்று கோராமலும், பாவம்போல் புண்ணியமும் சம்சார ஹேது வாகையால் இரண்டையும் விட்டவனாய் எவன் என்னிடத்தில் பக்தியோ டிருக்கின்றானோ அவன் எனக்கு இஷ்டன்.'' 17

''பகவானிடத்திலும் நண்பனிடத்திலும் அவ்விதமே மானாவமானங்களில் சமமா யிருக்கிறவனும், சீதோஷ்ண சுக துக்கங்கள் முதலியவற்றிற் சமமா யிருக்கிறவனும், ஒன்றிலும் பற்றில்லாதவனும், இகழ்ந்தாலும் புகழ்ந்தாலும் சமமா யெண்ணுகின்றவனும், மௌனியா யிருப்பவனும், பிரயாசை யில்லாமல் உணவு முதலிய எந்த வஸ்து எவ்வளவு கிடைப்பினும் அதனால் சந்தோஷ முடையவனும், ஓரிடத்தில் ஸ்திரமாய் வாசஞ் செய்யாதவனும், பக்தியை யுடையவனுமான மனிதன் எனக்குப் பிரியன்.''

[குறிப்பு:—19 - வது சுலோகத்தில், 'அநிகேதஃ—'ஓரிடத்தில் நிலையாய் வாசஞ் செய்வது.' இதற்கு ஸ்ரீ சங்கரர்: ''எப்போதும் வாசஞ்செய்ய ஓரிடத்தை ஏற்படுத்திக் கொள்ளாதவன்'' என்று பொருள் கொண்டனர். ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள்: ''அ-விஷ்ணு, நிகேதஃ—வாசஸ்தானம் என்றால், விஷ்ணுவையே வாசஸ்தானமா யுடையவன்'' என்று பொருள் விரித்தனர்.] 18-19

''மேலும், தானாய்க் கிடைத்த எவ்விதமான வஸ்திராதிகளைத் தரிப்பதும், எது கிடைத்ததோ அதை யுணவாகக் கொள்வதும், எந்தவிடத்தில் நித்திரை யுண்டாகிறதோ அந்த இடம் எப்படிப்

பட்ட தென்பதைக் கவனியாமலே, அந்த இடத்தில் படிக்கிறதுமாயிருக்கிறவனெவனோ அவனைப் பிரம்ம ஞானி யென்று சொல்லுவார்கள். மேலே கூறப்பட்ட இந்த சாஸ்திர விதியை விட்டு விலகாத மோக்ஷ தர்மத்தை நம்பினவர்களாயும், என்னையே உத்தமமென்றடைந்தவர்களாயும் எவர்கள் அனுஷ்டிக்கிறார்களோ அந்த பக்தர்கள் எனக்கு மிகவும் பிரியர்கள்.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—''தருமத்தோடு கூடினதாயும், மோக்ஷத்திற்குக் காரணமாயு மிருப்பதால், 'தர்மாம்ருதம்' என்று சொல்லப் பட்டது.'']

[ஸ்ரீ மாத்துவாசாரியர் அபிப்பிராயம்:—''தர்ம்ய:—விஷ்ணு விஷயமானதால் இது தர்ம்யம் என்றும், மருதம்-மரணம் முதலிய சகல துக்கங்களையும் போக்கடித்து முக்தியைக் கொடுக்கக் கூடிய தாகையால் அமிர்தம் என்றும் சொல்லப்பட்டது.''] 20

பன்னிரண்டாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.



## பதின்மூன்றுவது அத்தியாயம்

# க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்

---

### அவதாரிகை

[முதல் ஷட்கத்தில் முக்கியமாக அடைய வேண்டிய பிரயோஜனமாயும், பரப்பிரம்மமாயும், பகவானுமாயு மிருக்கிற வாசுதேவனை யடைய வேண்டியதற்கு, உபாயமாகிய பக்தியென்கிற பகவானைப்பற்றிய உபாசனத்திற்கு அங்கமாயும், ஞான யோகம், கர்ம யோகம் ஆகிய இவ் விரண்டுவித நிஷ்டைகளாலு முண்டாக்கப்படுகிற ஜீவாத்மாவின் உண்மையைப்பற்றிய சாக்ஷாத்காரம் சொல்லப்பட்டது. நடு ஷட்கத்தில் முக்கியமாக அடைய வேண்டிய பிரயோஜனகரமாகிய பகவானுடைய உண்மையான சுவபாவங்களும், அந்த மகிமையைத் தெரிந்து கொண்ட பிறகு உண்டாகக் கூடியதாயும், ஒரே நிச்சயத்துடன் கூடியதாயும், எப்பொழுதும் இடைவிடாம லிருப்பதாயு மிருக்கிற பக்தி யோகத்தில் நிஷ்டை சொல்லப்பட்டது. மேலான ஐசுவரியத்தில் விருப்ப முடையவர்களுக்கு, ஜீவாத்மாவின் கைவல்யத்தில் மாத்திரம் ஆசை யுடையவர்களுக்கு இந்த பக்தி யோகமே அவரவர்களுக்கு வேண்டிய பலன்களுக்கு உபாய மென்பதுஞ் சொல்லப்பட்டது. இப்போது கடைசி ஷட்கத்தில் மேற்கூறிய இரண்டு ஷட்கங்களில் சொல்லப்பட்ட 'பிரகிருதி' ஜீவன் இவைகளின் சேர்க்கையினு லேற்பட்ட பிரபஞ்சம், ஈஸ்வரன் இவைகளின் உண்மையான சுவபாவங்களும்; கர்ம யோகம், ஞான யோகம், பக்தி யோகம் ஆகிய இவைகளின் சுவரூபமும், இவைகளை அனுஷ்டிக்கும் முறைகளும் நிரூபிக்கப்படுகின்றன. அதில், இப்பொழுது இந்தப் பதின்மூன்றுவது அத்தியாயத்தில் தேகத்தினுடையதும் ஆத்மாவினுடையதும் ஸ்வரூபங்களும், தேகத்தின் உண்மையை நிரூபித்தலும், தேகத்தைவிட வேறுபட்ட ஆத்மாவை அடைவதற் குபாயமும், தேகத்தைவிட வேறுபட்ட ஆத்மாவின் சுவரூபத்தை நிரூபித்தலும், அவ் வகைத் தான ஆத்மாவிற்கு அசேதனத்துடன் சேர்க்கை யுண்டாவதற்குக் காரணமும், அந்தத் தேகத்தைவிட வேறுபட்ட தென்று தெரிந்து கொள்ளுகிற விதங்களும் கூறப்படுகின்றன. முதல் ஷட்கம் இந்த சாஸ்திரத்தின் உபயோகத்தையும் சாஸ்திரம் உண்டாவதற்குக் காரணமாகிய ஆத்ம சாக்ஷாத்காரத்தையும்

சொல்லுகிற இரண்டு அத்தியாயங்கள் ஒரு பாகமாகவும், அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்குச் சாதனத்தையே விவரமாகச் சொல்லுகிற நான்கு அத்தியாயங்கள் ஒரு பாகமாகவும், ஆக இரண்டு பாகமாகப் பிரிக்கப்பட் டிருக்கிறது. இரண்டாவது ஷட்கமும் அங்கங்கள், அதிகாரி, பலம் முதலிய வித்தியாசங்களுடன் கூடிய பக்தி யோகத்தின் சுவரூபத்தைச் சொல்லுகிற மூன்று அத்தியாயங்கள் ஒரு பாகமாக எவ்வாறு பிரிக்கப்பட் டிருக்கிறதோ அவ்வாறே இந்த மூன்றாவது ஷட்கமும் மூன்று மூன்று அத்தியாயங்க ளடங்கிய இரண்டு பாகமாகப் பிரிக்கப் பட் டிருக்கிறது. அதில், முதல் மூன்று அத்தியாயங்கள் அடங்கிய பாகம் பிரகிருதி, ஜீவன் இவைகளின் சேர்க்கையாகிற பிரபஞ்சம் இவைகளுக்கு ஈசுவரனாகிய பகவான் இவைகளாகிற வஸ்துக்களைப் பிரித்துக் காட்டுகிறது.]

அர்ச்சுனன் வாக்கியம்

"கேசவா! பிரகிருதி யென்று லென்ன? புருஷ னென்பவன் யாவன்? க்ஷேத்திர மென்பது யாது? க்ஷேத்திரஜ்ஞனா னெவன்? ஞான மென்ப தெது? ஞேய மென்ப தெது? இவை யாவற்றையும் நன்று யுணர நிச்சயித் திருக்கிறேன்." 1

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"அர்ச்சுனா! இந்தச் சரீரம் (அதாவது, நான் தேவன், நான் மனிதன், நான் பருத்தவன், நான் இளைத்தவன் என்று போக்தாவான ஆத்மாவோடுகூட ஒன்றுபட்டுத் தோற்றுகிற இந்தச் சரீரம்) 'இதைக் காட்டிலும் வேறுபட்டுப் போக்தாவா யிருக்கிற ஆத்மாவின் போகத்துக்காக ஏற்பட்ட க்ஷேத்திரம்' என்று சரீரத்தின் உண்மையை யறிந்தவரால் சொல்லப்படுகிறது."

[இதைப் பிரித்துப் பிரித்தும் மொத்த மொத்தமாயும், 'இதை நான் அறிகிறேன்' என்று எது அறிகிறதோ, அது (அறியப்படுகின்ற) இந்த சரீரத்தைக் காட்டிலும் (அறிவதான) குடம் முதலியவைகளை யறியும்போது, 'தேவனாகிய நான், அல்லது மனிதனாகிய நான் குடத்தை யறிகிறேன்' என்று தேகத்தையும் ஆத்மாவையும் ஒன்று படுத்தி நினைத்தாலும், தேகத்தை யறியும்போது இதை நான் அறிகிறே னென்று அறியப் படுவதாய்ப் பிரித்தறிகையாலே, சரீரங்கூடக் குடம் முதலியவைகளைப் போல் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதே. ஆனால், தேகமும் அதுவும் ஒன்றாய்த் தோற்றுவானே னென்றால் உண்மையில் பசுவும் பசுத்தன்மையும் போல்

ஆத்மாவை விட்டுப் பிரிந்தால் நிலைக்க மாட்டாமல் சரீரம் சேர்ந்திருக்கையாலே ஒன்றெனத் தோன்றக் கூடும். வேறு பொருளென்று ஆத்மாவின் உண்மையை யறிந்த பேர்கள் சொல்லுகின்றார்கள். (ஆனால், அறிகிற வஸ்துவான இதன் சுவரூபத்தை யோகத்தால் திருந்தியிருக்கிற மனதினு லறியலாமே யல்லது கண் முதலியவைகளா லறியப் போகாமையாலே, மூடர்கள் பிரகிருதி விகாரமான சரீரத்தையே ஆத்மாவென்று நினைத்து விடுகிறார்கள்.]

[அர்ச்சுன! தேவர் மனிதர் முதலான எல்லாச் சரீரங்களினும் அறிவதே வடிவாயுள்ள அந்த வஸ்துவும், (அதாவது, க்ஷேத்திரஜ்ஞனென்கிற ஜீவனும்) நானென்பதை அறியக் கடவாய்; என்றால், சரீரமாவது ஆத்மாவோடு சேர்ந்திருப்பதே சுவபாவமாய், தனித்து நில்லாமை கொண்டு அதை ஆத்மாவோடு ஒன்று படுத்தியே குறிப்பிடுவதுபோல், ஆத்மாவும் பகவானோடு சேர்ந்திருப்பதே சுவபாவமாய்த், தனித்திராமையாலே பகவானோடு ஒன்று படுத்தியே குறிக்கத் தக்கது.]

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"அபராப்பிரகிருதி என்றும், பராப்பிரகிருதி என்றும் இருவகைத்து. இதில் அபராப்பிரகிருதியின் தன்மையாவது, சமுசாரத்திற்கு ஏதுவானதும், எண்விதமாகச் சொல்லப்பட்டதும், முக்குணங்களை யுடையனவுமாம். இது க்ஷேத்திர மென்று கூறப்படுகிறது. பராப்பிரகிருதி: ஜீவபாவத்தை யடைந்த ஈசுவரனுடைய சுவரூபமா யிருக்கிறது. இவ்வித இரண்டு பிரகிருதிகளால், ஈசுவரன் ஜெகத்தின் உற்பத்தி ஸ்திதி லயங்களுக்குக் காரணராகின்றார். க்ஷேத்திரம் க்ஷேத்திரஜ்ஞன் என்கிற இரண்டு பிரகிருதிகளை யுடைத்தா யிருக்கிற ஈசுவரனுடைய தத்துவ நிச்சயத்தின் பொருட்டும், ஞானிகளெந்தத் தருமத்தை யனுஷ்டிக்கிறதினால் பகவானுக்குப் பிரியமானவர்களோ அதனை யுணர்த்தும் வண்ணம் இந்த அத்தியாயம் ஆரம்பிக்கப்படுகின்றது. முக்குணமுள்ள பிரகிருதியானது காரிய காரண ரூபமாய்ப் பரிணமித்துத் தேகேந்திரியாதி ஆகாரங்களாய்ப் புருஷனுக்குப் போகம் மோக்ஷம் இவைக ளுண்டாக வேண்டியதற்காக க்ஷேத்திரமாயாகின்றது. அந்த க்ஷேத்திர மென்கிற தேகமானது குறைதல் முதலிய விவகாரத்தை யடைகிறபடியினாலேயும், பூமியானது பயிர் முதலிய பலன்களைக் கொடுப்பதுபோல் கருமபலனைக் கொடுப்பதினாலேயும், க்ஷேத்திர மென்று கூறப்படுகிறது. இந்த க்ஷேத்திரத்தை யாவனொருவன் நன்று யுணரத் தகுந்தவன் சுவபாவ ஞானத்தினாலாவது, உபதேச ஞானத்தினா

லாவது, பாதமுதல் சிரசுவரையிலிருக்கிற அந்தந்த அவயவங்களோடு கூடியிருக்கிற சரீரம் இவ்வாறென்பதை அறிகின்றானோ, அவன் க்ஷேத்திரஜ்ஞனென்று க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞர்களைத் தனித்தனியாய் அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—‘இந்த அத்தியாயத்தில், தேகாத்மாக்களின் சொரூபமும், தேகத்தின் உண்மையான ஞானமும், தேகத்தைவிட்டு ஆத்ம சொரூபத்தை அடைய வேண்டிய உபாயமும், விமுக்தாத்மாவின் சோதனையும், ஆத்மாவுக்குப் பிரகிருதி சம்பந்த முண்டானதற்குக் காரணமும், இவற்றை யுணர்ந்து விவேகத்தோடு அநுசந்தானஞ் செய்ய வேண்டிய விதமும் சொல்லப்படுகின்றன. கருத்து யாதோவெனின், யோகத்திற்குக் காரணமானது தேகம்; போகத்தை யனுபவிப்பது ஜீவாத்மா. தேகமும் ஆத்மாவும் வெவ்வேறாகவும் அஞ்ஞானிகள், ‘நான் தேவன், நான் மனிதன், நான் பருத்திருக்கிறேன், நான் இளைத்திருக்கிறேன்’ என்று தேகத்தை ஜீவனோடு சேர்த்துத் தேகமே ஆத்மா வென்று விவகரிக்கின்றார்கள். தேகம் வேறு, ஆத்மா வேறு என்றறிந்தவர்கள், அந்த தேகத்தை க்ஷேத்திரமென்று கூறுகின்றார்கள். எவன் அவயவங்களோடு கூடிய தேகம் தனதென்றும், தேகமே தானென்றும் அறிகின்றானோ அவனைத் தேகம் வேறு ஆத்மா வேறு என்றுணர்ந்தவர்கள் க்ஷேத்திரஜ்ஞன் என்று சொல்லுகின்றார்கள். ஜீவாத்ம சொரூபம் இந்திரியங்களா லறியப்படாததாயும், மனத்தால் தியானித்து அறியத் தகுந்ததாயு மிருத்தலால், தியானித்து மனத்தா லறியச் சக்தியற்ற அவிவேகிகள் தேகமே, ‘ஆத்மா’ என்று நினைக்கிறார்கள்.”] 2

“ ! பாரதகுலத்தி லுதித்தவனே! சகல க்ஷேத்திரங்களிலும் என்னையே க்ஷேத்திரஜ்ஞனாக அறியக்கடவாய். தேகம் ஆத்மா ஆகிய இவற்றின் விவேக ஞானம் யாதோ அதுவே ஞான மெனப்படும்.”

[இவ்வாறு கிருஷ்ண பகவான் மேற் கூறியதற்கு ஆசங்கை நிகழும். அவை வருமாறு:—‘சகல க்ஷேத்திரங்களிலும் க்ஷேத்திரஜ்ஞன் நானே’ எனப் பகவான் கூறியதனால், பகவானுக்குப் பந்த மோக்ஷமென்றாகிறது; ‘ஈசுவரன் அனாதிமல முக்த சித்துருவாகிய தன்மையினால் சமுசாரமும் அதிற் பிரவிருத்தி நிவிருத்திகளும் அவர்க்கே யாமென்பது எங்ஙனம் பொருந்தும்? தேகாபிமானியாகிய ஜீவனுக்கே யன்றோ க்ஷேத்திரஜ்ஞனென்பது பொருந்துமெனின்’ கூறுதும்:

பிறவி தொடங்கி யாவரும் இங்ஙனமே ஜீவன் வேறு, ஈசன் வேறெனக் கொண்டிருப்பதே அவித்தை யெனப்படுவதாம். இவ்வவித்தையாகிய அஞ்ஞானமே ஜீவத்வ மென்றும், இதனாலுண்டாகிய பேத பாவனையால் ஓயாது பிறந்திறத்தல் ஜீவ தருமமென்றுமாம். முமுக்ஷுக்கள், "நான் யார்? உலகு எது?" என்கிற விசாரத்தோடு சுருதி குருமுகமா யாராய்ந்து, "அகம் பிரமாஸ்மி" எனத் தெளிந்து, முன் தடிப்பேறப் பெற்றிருந்த அவித்தை யிருளானது கதிர்முன் இருள்போல் நீங்கிச் சுவானுபூதிச் செல்வர்களாய் அக் கைவல்யப் பிராப்தி சுதந்தரமுடைய ஜீவன் முக்த ராவர். என்னை?

பிரகதாரண்யகோபநிஷத்தின் கருத்து யாதெனில், "யாவனிவ்விதமாய் நான் பிரமமாக விருக்கின்றேனென் றறிவானோ, அவனே யாவுமாக விருக்கின்றான்" என்கிற பிரமாணத்தாலுணர்க. இந் நிலைமை யுலகோ ரடைந்து பிழைப்பதன் பொருட்டன்றோ உபதிஷ்டமாகிய இந் நூல் அர்ச்சுனனைக் காரணமாக்கி உலகோர்க் கருளினன் பகவான். ஈண்டும் இதனைக் குயுக்தி வாதங்களினாற் புறம் போக்கி விடுவது மதத்தர் கருமமாகக் கொண்டிருப்ப தன்றி மோக்ஷதாகிகள் இதில் சந்தேக மடைவது இல்லை யென்க. ஆனாலும், "இது சுருதி சம்மத மென்ற தெங்ஙனம்?" எனின், ஈண்டுக் கூறுவாம்:

நிராலம்போபநிஷத்தில், "ஈசுவரனே நாம ரூப அத்தியந்த பேதத்தால் பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரன் முதலிய தேவதா வடிவங்களிலும், இன்னும் எழுவகைப் பிறவி சரீரங்களினும் ஓரறிவு முதல் எண்ணறிவாம் ஜீவனாகப் பல தேசங்களினால் பலவாக எண்ணப்பட் டிருக்கின்றான்" என்பதை யுணர்த்திற்றாயினும், இங்ஙன மொன்றை மற்றொன்றாகக் காட்டும் அஞ்ஞானமாவ தென்னை?" எனின், மேற்படி உபநிஷத்தில் கூறுவதாவது: "கயிற்றி லரவின் பிராந்தி யுண்டாதல் போலப் பிரமத்தில் ஜீவேசுவர துவிதத்தையும், தேவ திரியக் ஸ்தாவராதி ஸ்திரீ புருஷ வர்ணாச்சிரம பந்தமோக்ஷ முதலிய அநேக பேதங்களையுங் கற்பிக்கு மறிவினது அறியாமையே" என்றதனாலும், "அன்றேல், அந்தப் பிரமத்தினிடம் இவை தோன்றுவதற்கு எது என்னை?" எனின், "இல்லாமையை யுண்டுபோற் காட்டும் பிரகிருதியால்" என்க. என்னை? மேற்படி உபநிஷத்தில், "சிதாகாசத்தில் நானாவித சித்திரங்களை யுடைய உலகங்களை நிர்மாணஞ் செய்யும் சாமர்த்தியமுடைய மனோரூபமான பிரம சக்தியே பிரகிருதியாம்" என்றதனானு முணர்க.

மேலும், தைத்திரீயோபநிஷத்தை பிரமாணமாகக் காட்டியுள்ள இவரது (ஸ்ரீ இராமாநுஜர்) பாஷ்யத்தில் ஆனந்தமயனே பரமாத்மா என்றதனால், அவ் வானந்த மயனான பரமாத்மாவே மூன்றவத்தையினும் பஞ்ச கோசங்களினும் நானேனென விருக்கும் விசுவ, தைசதம் பிராக்ஞர்க ளென்றுதலின், பரமாத்மா ஜீவாத்மாக்களுக்குப் பரமார்த்தமாகத் துவைதஞ் சித்தியாதெனக் காண்க.

அன்றியும், ஸரஸ்வதி ரஹஸ்யோபநிஷத்தில், "என்னிடம் ஜீவத்துவமும் ஈசுவரத்துவமும் கற்பிக்கப்பட் டிருக்கின்றது; உண்மையிலின்று என எவனறிகின்றானோ அவன் முக்தனே, சந்தேகமில்லை." இதனால் 'ஜீவாத்மா வேறு, பரமாத்மா வேறென்றும், பரமாத்மாவினது வியாபாரத்தில் ஜீவாத்மா வியாப்பியமாக இருப்பதென்றும், பிரகிருதி விமுக்தமாயின் பரமாத்மாவைப் போல ஜீவாத்மாவு மாகின்றது' எனக் கூறும் துவைதமும் விசிஷ்டாத்வைதமும் முறையே சோபானங்களாக, அத்துவித மொன்றே வேதாந்தத்தின் உண்மை முடிவாய் விளங்கற்பாலது. இது அத்துவைதக் கொள்கை யென்று அறிக.]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"க்ஷேத்திரஜ்ஞன் ஜீவனென்று முதலிற் கூறியதற்கு விரோதமாக க்ஷேத்திரஜ்ஞன் தானென்று இதில் சொல்லப்பட் டிருக்கின்றதே" எனின், விரோத மன்று. எவ்வாறென்றால், ஜீவன் பகவானது சரீரம்; அவனுக்குப் பகவான் சரீரி. ஆதலால், தன் சரீரமே தானென் றருளினன். 'அவ்வாறு புகலலாமோ?' என்றால், ஜீவனும் பகவானும் வேறாயினும் ஜீவனை விட்டுப் பரமாத்மாவும் பரமாத்மாவை விட்டு ஜீவனும் பிரியா திருத்தலாகிய அபிருதக் சித்தத்துவத்தினாலேயும், விசேஷண விசேஷிய பாவத்தினாலேயும், ஜீவனைத் தானென்றே பகவான் அருளினன். எவ்வாறெனின், 'நான் தேவன், நான் மனுஷியன்' என்று சொல்லுகையில், தேவ மனுஷ ஆகாரம் தேகத்தைப் பற்றியதே யன்றி ஆத்மாவைப் பற்றிய தன்று. தேகமும், ஆத்மாவும் வேறா யிருக்க அந்தத் தேகத்தை நானென்று சொல்லுதல் போலத் தன்னையும் ஜீவனையும் அபேதமாகக் கொண்டு பகவான் தானே க்ஷேத்திரஜ்ஞனென்றருளினன். க்ஷேத்திரஜ்ஞன் தானென்று எந்தக் காரணத்தினால் பகவான் கூறினரோ அதே காரணத்தினால் க்ஷேத்திரமும் தானென்று பகவான் சொன்னதாக இந்த சுலோகத்திலுள்ள 'அபி' சப்தத்தினால் கிரகிக்கவேண்டியது. க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞர்களுடைய ஸ்வரூப பேதத்தையும், அவைகள் பரமாத்மாவை ஆத்மாவாக வுடையன வென்பதையும் அறி

வதுதான் உத்தம மானதும் இந்த சுலோகத்தில் சொல்லியதுமான ஞானம்.”] 3

“அர்ச்சுன! அந்த க்ஷேத்திர மென்பது என்ன திரவியமோ, எவைகளுக்கு ஆதாரமானதோ, அதற்கு விகார மெப்படிப்பட்டதோ, எந்தப் பிரயோஜனத்திற்காக அது உண்டாயிற்றோ, அது எதன் ஸ்வரூபமோ அதையும்; அந்த க்ஷேத்திரஜ்ஞன் எப்படிப்பட்ட பிரபாவத்தோடு கூடியவனோ அவைகளையும் அர்ச்சுன! உனக்குச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேள்” 4

“மேலும், வெகு விதமாய் இருடிகளினாலேயும், பிரத்தியேகமாய் பல விதங்களால் வேதங்களினாலே புத்திகளுடன் கூடின சந்தேகமற்ற அர்த்தங்களை ஸ்தாபிக்கிற பிரஹ்ம சூத்திர பதங்களினாலேயும் சொல்லப்பட் டிருக்கிறது.”

[பிரஹ்மசூத்திர மென்பது பிரஹ்மத்தின் சுவரூபத்தைக் காண்பிக்கிற உபநிஷத்துகளில் தடஸ்த லக்ஷணங்களாகிய, “யாதோவா இமானி பூதானி ஜாயந்தே” முதலிய வாக்கியங்கள். பத மென்பது, சுவரூப லக்ஷணங்களாகிய “ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம்” முதலிய வாக்கியங்கள், அல்லது வேதவியாசர் செய்திருக்கிற வேதாந்த சூத்திரங்களிலுள்ள பதங்கள். தடஸ்த லக்ஷணம் என்றால், சில காலத்தி லுள்ளதும், சில காலத்தி லில்லாம லிருப்பதுமாகிய சகுணப் பிரஹ்ம லக்ஷணம். சுவரூப லக்ஷணம் என்றால் எப்போதும் மாறாம லிருப்பதாகிய நிர்க்குணப் பிரஹ்ம லக்ஷணம்.

க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ சுவரூபமானது பராசரர் முதலிய ரிஷிகளால் கூறப்பட் டிருக்கிறது. ஸ்ரீ விஷ்ணு புராணத்தில், “அரசனே! நானும் நீயும் மற்றவர்களும் தேகங்களாய் மாறி நிற்கிற பிருதிவி முதலான பஞ்ச பூதங்களாலே காக்கப்படுகிறோம். இந்தப் பூதவர்க்கமும், குணங்களின் வெள்ளத்திலே வீழ்ந்து அதன் வசத்தினாலே நடத்தல் முதலிய வியாபாரங்களைப் பெற்றிருக்கின்றன; சத்துவ முதலான அந்தக் குணங்களும் கருமங்களுக்கு வசப்பட்டிருக்கின்றன. அந்தக் கருமங்கள் அவித்தையினாலே சம்பாதிக்கப்பட் டிருக்கின்றன; அவ்வவித்தை சகல பிராணிக ளிடத்திலு மிருக்கின்றது. ஆத்மாவோ சுத்தமாயும், நாச மில்லாததாயும், பசி முதலான ஷடூர்மிகளு மற்றதாயும், சத்துவாதி குண ரகிதமாயும், குணமயமான பிரகிருதியைக் காட்டிலும் வேறானதாயு மிருக்கின்றது. “தேகமே ஆத்மா” என்றால். அந்தத் தேகம்: தலை,

கால், கை முதலான அநேக வஸ்துரூப மாயையால், எந்த அவயவத்திலே அந்த வார்த்தையைப் பிரயோகிக்கக் கூடும்?'' இன்னும்,

"நீ யார்? சிரசா? கழுத்தா? வயிறா? அல்லது கால் முதலியவற்றுள் எதானுலுமா? சொல்! இவ் வுடம்பிற்கு நீ யார்? உனக்கு இவ் வுடம்பு யாது? ஓ இராஜாவே! இவ்விதமாய்ச் சகல அவயவங் களுக்கும் வேருய் நிற்கிற நீ நன்ருய் ஆலோசித்து, 'நான் யார்?' என்று சிந்தித்துக்கொள்.'' [ஸ்ரீ விஷ்ணு சகஸ்ர நாமத்தில், "இந்திரியாதி சகலமும் வாசுதேவ சுவரூபம்'' என்றும் சொல் லப்பட்டிருக்கிறது. இவ்வாறு ரிஷிகளால் வெகு விதமாய்ச் சொல்லப்பட் டிருக்கிறது.

வேதங்களாலே பிரத்தியேகமாயும் பகுவிதமாயும் கூறப்பட்டிருக் கின்றன வென்ருல், நான்கு வேதங்களாலும் க்ஷேத்திர க்ஷேத் திரஜ்ஞ சொரூபமும் சொல்லப்பட் டிருக்கின்றது. தைத்திரீ யோப நிஷத்திலே, "ஆத்மாவி னின்றும் ஆகாசம், அதினின் றும் வாயு, அதினின்றும் அக்கினி, அதினின்றும் ஜலம், அதி னின்றும் பிரதிவி, அதினின்றும் பயிர்கள், அவற்ருல் அன் னம், அவ் வன்னத்தாலே தேகமென்று க்ஷேத்திரமாகிய தேகத்தைக் கூறி, இந்தத் தேகத்தைப் பார்க்கிலும் அன்னிய னுய் உள்ளே யுள்ளவன் பிராணமயன்; அவனுக்கு முள்ளே யுள்ளவன் மனேமயன்'' என்று சொல்லி, "இவனைப் பார்க்கிலு முள்ளே யுள்ளவன் விஞ்ஞானமயன்; இவனே க்ஷேத்திரஜ்ஞன்; இவனே ஜீவன்; க்ஷேத்திரத்தையும் அதற்கு அன்னியனுகிய ஜீவனைப் பார்க்கிலும் அன்னியன் ஆனந்தமயன்; இவனே பரமாத்மா.'' க்ஷேத்திரஜ்ஞனைப் பற்றி இவ்வாறு வேதாதி களிற் சொல்லப்பட் டிருக்கின்றது.] 5

"ஆகாசாதி பஞ்ச மகா பூதங்கள், அகங்கார தத்துவம், மக தத்துவம், மூலப் பிரகிருதியாகிய மாயை, ஞான கருமேந்திரியங்கள் பத்து, மனம், இந்திரியங்களின் விஷயங்களான சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்கள் ஐந்து; இச்சை, துவேஷம், சுகம், துக்கம், சரீரம் ஞானத்மகமான பரிணவிர்த்தி, தைரியம் ஆகிய விகாரங்களோடு கூடிய இந்த க்ஷேத்திரம் சம்க்ஷேபமாகச் சொல்லப்பட்டது.''

[சூக்குமபஞ்ச பூதங்கள், அகங்கார தத்துவம், மக தத்துவம், மூலப் பிரகிருதி யென்கிற அவ் வியாகிருதம், ஞானேந்திரிய பஞ்சக மும் கருமேந்திரிய பஞ்சகங்களுமான தசேந்திரியங்கள், மன தொன்று, சப்தாதி தன்மாத்திரைக ளைந்து, விருப்பு, வெறுப்பு,

சுகம், துக்கம், பஞ்ச கோசங்கள், மனோவிருத்தி, தைரியம் ஆகிய தத்துவங்களாற் றிரண்ட இந்த க்ஷேத்திரமானது சுருக்கமாகச் சொல்லப் பட்டது.]

[அவ்யக்தம், பிரதானம், மூலப் பிரகிருதி, அவ் வியாகிருதம், ஈசுவர சக்தி, மாயை என்பன ஒரு பொருட் கிளவி.]

இந்த அவ் வியக்தத்தி லிருந்து நிச்சயாத்மக புத்தி ரூபமான மகதத்துவம் உண்டாயிற்று. இந்த மகதத்துவத்தி லிருந்து அகங்கார தத்துவம் உண்டாயிற்று. இந்த அகங்கார தத்துவமானது வைகாரிகாகங்காரம் தைசதாகங்காரம், பூதாதிகாகங்காரம் என மூவகைப்படும். இவற்றில், வைகாரிகாகங்காரம் சாத்வீகம் என்றும், தைசதாகங்காரம் இராசதம் என்றும், பூதாதிகாகங்காரம் தாமதம் எனறுஞ் சொல்லப்படும்.

இனி, வைகாரிக மென்கிற சாத்வீகாகங்காரத்தி லிருந்து மனமும், தைசத மென்கிற இராசதாகங்காரத்தி லிருந்து தசேந்திரியங்களு முண்டாயின. அவ்வாறே புத்தியும், பிராணவாயுவும் இதிலுண்டாயினவாம். பூதாதி யென்கிற தாமஸாகங்காரம் விகாரப்பட்டுச் சப்த தன்மாத்திரையை யுண்டாக்கியது. அந்தச் சப்ததன் மாத்திரையினின்றும் ஆகாய முண்டாயிற்று. அவ் வாகாயத்திற்குச் சப்தமே குண மெனப்படும். அவ் வாகாயம் விகாரப்பட்டுப் பரிச தன் மாத்திரையை யுண்டாக்கியது. அந்தப் பரிச தன் மாத்திரையி னின்று வாயு உண்டாயிற்று. அவ் வாயுவுக்குச் சப்தம், பரிச மிரண்டுங் குணங்களாயின. அவ் வாயு விகாரப்பட்டு ரூப தன் மாத்திரையை யுண்டாக்கிற்று. அந்த ரூப தன் மாத்திரையினின்று தேயுவுண்டாயிற்று. இந்தத் தேயு விகாரப்பட்டு இரஸ தன் மாத்திரையை யுண்டாக்கியது. இந்த இரஸ தன் மாத்திரையினின்று அப்பு உண்டாயிற்று. இந்த அப்புவுக்குச் சப்தம், பரிசம், ரூபம், இரச மிந் நான்குங் குணங்களாயின. இந்த அப்பு விகாரப்பட்டுக் கந்த தன் மாத்திரையை யுண்டாக்கியது. அந்தக் கந்த தன் மாத்திரையினின்றும் பிருதிவி யுண்டாயிற்று. இந்தப் பிருதிவிக்குச் சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் இவ் வைந்துங் குணங்களாயின. இனி இந்தச் சப்தாதி தன்மாத்திரைகள் அந்தப் பூதங்களுக்குக் காரணமான சூக்ஷ்ம பூதங்களெனப்படும். இவ்விடத்தில் இந்தச் சூக்கும பூதங்களையே மகா பூதங்களெனப் பகவான் கூறியதாம். மகா பூதங்க ளென்றதே முதல் இந்திரிய கோசரம் என்றவரையும் எண்ணிய தொகை 24-ம் தேக தத்துவங்களாம். இஃது அத்வைதக் கொள்கை.]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"க்ஷேத்திரத்தை யுண்டாக்குந் திரவியங்களான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாய மென்கிற மகா பூதங்களும், பூதங்களுக்கு ஆதியான அகங்காரமும், புத்தி யென்கிற மகானும், அவ்வியக்த மென்கிற பிரகிருதியும் இவையெல்லாம் க்ஷேத்திர மென்கிற சரீரத்தைப்பற்றிக் கிடக்கும். (வாய், கை, கால், ஆஸனம், உபஸ்தம் என்னும் ஐந்தும் கர்மேந்திரியங்கள்; செவி, உடல், கண், நாக்கு, மூக்கு என்னும் ஐந்தும் ஞானேந்திரியங்கள்; மனமொன்று ஆகப் பதினொரு இந்திரியங்களும், இந்திரிய விஷயங்களான சப்தம் - பரிசம் - உருவம்-ரஸம்-கந்தம் இவைகளும் இச்சை-துவேஷம்-சுகம்-துக்கம் என்கிற க்ஷேத்திர விகாரங்களும் கூடி, சுக துக்கங்களைப் புசித்துப் போக மோக்ஷங்களைச் சாதிக்கும் ஜீவனுக்கு ஆதாரமாய் ஏற்பட்டிருக்கின்றன;) என்றால், பிரகிருதி முதல் பிருதிவி வரையிலுள்ள திரவியங்களாலுண்டாய், இந்திரியங்களுக்கு ஆதாரமாய், இச்சை, துவேஷம், சுகம், துக்கம் என்று விகாரப் பட்டுப் பூதங்களின் தொகையாய், சேதனனுடைய சுக துக்க போகத்திற்கு ஆதாரமாயிருத்தலே பயனாயுள்ளதுதான் க்ஷேத்திர மெனப்படு மென்றபடி."] 6-7

"தன்னைத் தான் புகழ்ந்து கொள்ளாமையும், டம்பமின்மையும், பரஹிம்சை செய்யாமையும், பொறுமையும், கபடமின்மையும், சற்குருசேவையும், (அதாவது, மோக்ஷத்திற்குச் சாதனமான ஞானத்தை யுபதேசித்த குருவினுடைய சேவையும்) மனச்சுத்தியும், சரீர சுத்தி அதாவது மண்ணினாலும், ஜலத்தினாலும் தேகத்திலுள்ள அழுக்குகளைச் சுத்தஞ் செய்து கொள்ளுதலும், மனத்திலுள்ள காமக்குரோதாதிகளை விட்டு நிர்மலமாயிருத்தலும், சன்மார்க்கத்தில் விடாமுயற்சியும், அதாவது வேதாந்த சாஸ்திரத்தில் எப்போதும் திடமான நம்பிக்கையுடனிருத்தலும், தேக ஸ்வாதீனமும் அதாவது ஆத்ம சுவரூபத்தைவிட வேறான விஷயத்தில் மனத்தைச் சுவாதீனஞ் செய்து ஆத்மாவிடத்திலே வைத்தலும், இந்திரியங்களுடைய விஷயங்களில் வெறுப்படைதலும், நானென்கிற அகங்காரமின்மையும், அதாவது தேகேந்திரியங்களில் நானென்கிற அகங்காரமற்றிருப்பதும், தன்னுடைய தல்லாத வஸ்துக்களில் தன்னுடைய தென்கிற அபிமானமற்றிருப்பதும்; பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய் இவைகளில் துக்கத்தையும், தோஷத்தையு மறிதலும், (அதாவது பிறப்பிலுள்ள தோஷம் கெர்ப்பவாசம்முதலியனவாம்;) புத்திரன், தாரகம், கிருகம் முதலியவைகளிலே பிரியமற்றிருத்தலும், புத்திர தாராதிகளுடைய சுக துக்கங்

களில் அபிமானமற் றிருத்தலும், இஷ்டா நிஷ்டங்கள் நேரிட்ட காலங் களிலேயும் எப்போதும் ஒரேவிதமான மனத்தோடு கூடியிருத்தலும், பரமேசுவரனாகிய என்னிடத்தில் சர்வமும் ஆத்ம சுவரூபமென்று தெரிந்து ஸ்திரமான அல்லது சலனமற்ற பக்தி செய்தலும், ஜனங்க ளில்லாத தனி யிடத்தில் வாசஞ் செய்தலும், மூடர்களாயும், அசுத் தர்களாயும், வணக்க மற்றவர்களாயு மிருக்கிற பிராகிருத ஜனங்க ளுடைய கூட்டத்தில் விருப்பமற் றிருத்தலும்; ஆத்ம ஞானத்தி லெப்போது மிருத்தலும், தத்துவ ஞானத்திற்கு உத்தம பலன் மோக்ஷமென் றறிதலும், ஆகிய இவை யாவும் ஞான மென்பதாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. இவற்றிற்கு அன்னியமானவை எவையோ அவை அஞ்ஞான மெனப்படும்.''

[உள்ளுரை:—அர்ச்சுன! அமானித்வம் முதலிய உபாயங்களினால் அடையக்கூடியதாகிய ஜீவாத்மாவின் சுவரூபத்தைச் சொல் லப் போகிறேன். அதாவது, எதைத் தெரிந்து கொண்டு பிறப்பு, கிழத்தனம், மரணம் முதலிய பிரகிருதியின் சுவபா வங்க ளில்லாத ஆத்மாவை யடைகிறானோ, எதற்கு ஆதி யில் லையோ அது அனாதி. இந்த ஜீவாத்மாவிற்கு உற்பத்தி யில்லை யல்லவா? ஆகலின், நாசமு மில்லை; சுருதியிலும், 'அறியுந் தன்மையுள்ள ஜீவாத்மா யிருக்கிறதுமில்லை; மரண மடைகிறது மில்லை' என் றர்த்தமுள்ள வாக்கியஞ் சொல்லப்பட் டிருக்கி றது; எதற்கு நான் மேலானவனோ அது, ''மத்பரம் இதஸ்த்வந் நாயாம் ப்ரகிருதிம் வித்தியபாரம் ஜீவபூதாம்'' என்றல்லவோ மேலே சொல்லப்பட்டது. பகவானுக்கு சரீர மாகையினால் பகவானுக்குச் சேஷமா யிருத்தலே சுவபாவமாக உடையா தல்லவோ ஜீவாத்மாவின் சுவரூபம். அவ்வாறே சுருதியிலும், ''எவன் ஆத்மாவி லிருந்துகொண்டு ஆத்மாவினுள்ளே யிருக் கிறானோ, எவனை ஆத்மா தெரிந்து கொள்ளவில்லையோ, எவ னுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவை உள்ளே யிருந்து கொண்டு நியமிக்கிறானோ'' என்றும்; அப்படியே ''அவன் காரணம்; இந்திரியங்களுக்கு எஜமானனாகிய ஜீவனுக்கும் எஜமானன்; அவனை உண்டு பண்ணுகிறவனும் அவனுக்கு எஜ மானனும் ஒருவருமில்லை; பிரகிருதி ஜீவாத்மா எஜமானன், இவைகளுக்கு'' என்றர்த்தமுள்ள வாக்கிய முதலியவைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. பிரமம் பெரிதாக இருக்கையால் அது குணத்தை யுடையது; அதாவது, சரீரம் முதலியவை களால் அளவிடப் படாததாயு மிருக்கிறது ஜீவாத்மா என்றர்த் தம். மேலும், ''அவன் அளவிடப்படாம லிருக்கத் தகுந்தவ

ஞகிருன்" என்றர்த்தமுள்ள சுருதி வாக்கியம் கோஷிக்கிற தல்லவா? சரீரத்தினல் அளவிடப்படக் கூடியதா யிருத்தலும் இவனுக்குக் கர்மத்தின லுண்டானது. கர்மங்களாகிற பந்தங் களினுல் விடுபட்டவனுக்கு அளவிடப்படக் கூடாமை யுண்டா கிறது. ஜீவாத்மாவி னிடத்திலும் பிரம்ம மென்னும் பதம் என்றிவை முதலிய விடங்களில் பிரயோகிக்கப்படுகிறது. காரிய தசையில் தேவன் முதலிய பெயர்களையும் ரூபங்களையு மடைகிறதினல் ஸத் என்று சொல்லப்படுகிறது. அவ்வாறே அவைகளை அடையத் தகாதிருப்பதினுல் காரண தசையில் அஸத் என்று சொல்லப்படுகிறது. அப்படியே சுருதி வாக்கி யங்களில் "இது முதலில் அசத்தாக விருந்தது; அதிலிருந்து ஸத் உண்டான" தென்றும் கூறப்படுகின்றது. காரியதசை, காரணதசை யாகிற இவ் விரண்டு தசைகளின் சம்பந்தம் ஜீவாத்மாவிற்குக் கர்மமாகிய அவித்தையினல் கட்டுப்பட் டிருப்பதின லுண்டானது. ஸ்வரூபத்தின லுண்டான தல்ல. ஆகையினல், சத் அசத் என்னும் பதங்களினுல் ஜீவாத்மாவின் சுவரூபம சொல்லப்படுகிற தில்லை. "இது முன்னரே அஸத் தாகவே யிருந்தது" என்றர்த்தமுள்ள சுருதி வாக்கியத்தில் காரணதசையோடு கூடிய பரப்பிரம்மமே சொல்லப்படுகிறது. பேர் ரூபம் முதலிய இவைகளால் பிரிக்கத் தகாத சூக்ஷ்மங்க ளாகிய சேதன சேதன வஸ்துக்களைச் சரீரமாகவுடைய பரப் பிரம்மமே காரணவஸ்தையை யுடைய தாகையினல் சரீரம் ஜீவாத்மா இவைகளின் சுவரூபங்களும் காரணதசையில் அசத் என்னும் பதத்தினல் சொல்லப்படுகின்றன. அவ்வா றிருந்த போதிலும், ஜீவாத்மாவிற்கு அந்தக் காரணத்தையும் கர்மத்தி லுண்டான தாகையினல் பரிசுத்தமான ஜீவாத்மாவின் சுவ ரூபம சத், அசத் என்னும் பதங்களினுல் சொல்லத் தகாதது.] 8-12

"ஞேயமென்பது (அறிய வேண்டிய தென்பதை) யாதோ எதை யறிந்து மோக்ஷத்தை யடைவானே அதைச் சொல்லுகின்றேன்; ஆதியற்ற பரப்பிரம்மமாகிய அது சத்தாகச் சொல்லப் படுதலில்லை. அசத்தாகச் சொல்லப்படுதலு மில்லை."

[உள்ளுரை:—தெரிந்துகொள்ள வேண்டிய பிரமம் சத்து மன்று, அசத்து மன்று; சத்தென்றுல் இருப்பது; அசத்தென்றுல் இல்லாதது; ஆதலால் பிரமம் இருப்பது மன்று, இல்லாதது மன்று என்றுகின்றது; 'இவ்விதஞ் சொல்லலாமோ' எனின், சில சுருதி வாக்கியங்களாலே சொல்லலாம்; எந்த வஸ்து இருக்கின்றதே அது இருக்கிற தென்று சொல்லப்படு

கின்றது. இருக்கிறது என்று எது சொல்லப்படுத லில்லையோ அது எக்காலத்திலுமில்லை. ஆகையால், சகல வஸ்துக்களும் இருக்கிறதென்பதையாவது, இல்லை யென்பதையாவது அனுசரித்தே யிருக்கின்றன. அவ்வாறாக, 'பிரமம் இருக்கின்றதென்னும் புத்திக்கு விஷயமானதா? இல்லை யென்னும் புத்திக்கு விஷயமானதா?' என்றால், எப்பொழுது இந்திரியங்களுக்கு விஷயமாதல் இல்லையோ அப்பொழுது இரண்டு புத்திக்கும் விஷயமான தன்று; அறிந்து கொள்ள வேண்டிய பிரமம் இந்திரியங்களுக்கு விஷய மல்லாதபடியால், அது சப்தத்தாலே (வேதத்தாலே) அறியத் தகுந்தது; அதனாலே சத்து மன்று, அசத்து மன்று என்று சொல்லப்பட்டது. கேனோபநிஷத் வாக்கியத்தில், "பிரமம் தெரிந்த பொருளுக்கும், தெரியாத பொருளுக்கும் அன்னியமாயது" என்று கூறப்பட்டுள்ளது; ஒரு வஸ்துவைக் குறித்துக் கூறவேண்டுமாயின், மாடு, குதிரை, பாடகன், பாகஞ் செய்கிறவன், சிவப்பு, கருப்பு, அதிகச் செல்வ முடையவன், அதிகப் பசுக்களை யுடையவன் எனச் சாதி, கிரியை, குணம், சம்பந்தம் ஆகியவற்றை யொட்டிக் கூறவேண்டும். பிரமமோ ஜாதி முதலியவற்றாற் சொல்லப்படத் தக்கதன்று; இரண்டு வஸ்துக்க ளிருந்தாலல்லவோ ஒன்றோடு மற்றொன்றுக்குச் சம்பந்தஞ் சொல்லக் கூடும் என்கிற சுருதி வாக்கியப்படி பிரமம் ஒன்றே யன்றி இரண்டாவதாகிய வஸ்து இல்லையாகலால் பிரமத்திற்கு வேறொன்றோடு சம்பந்தஞ் சொல்லுதல் கூடாது; ஆதலால் பிரமத்தைச் சத்தென்றாவது அசத்தென்றாவது சொல்லுதல் கூடாது; எதற்கு லக்ஷணங் கூறமாட்டாமல் வாக்கு, மனத்தோடு பின்னடைகின்றதோ அந்தப் பிரமம் தனது ஆத்மா வாதலால் அதை யொரு பிரமாணமுங் குறித்துக் காட்டமாட்டாது. "இது அத்வைதக் கொள்கை."]

ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"எந்தப்பிரத்தியகாத்ம சொரூபத்தை (ஜீவசொரூபத்தை) அறிந்தால் ஜனன மரண முதலிய பிரகிருதி சம்பந்தத்திலிருந்து நீங்கிச் சுத்தாத்ம சொரூபத்தை யடைவானோ, அந்த அறிய வேண்டிய முக்தாத்ம சொரூபம் ஆதி யற்றது; இதனாலே அந்த மற்றதென்றுங் கொள்ள வேண்டும்" என்ற சுருதி வாக்கியத்தோடு, 2-வது அத்தியாயம், 20-வது சுலோகத்தையும் கவனிக்கவும். ஜீவ சொரூபம் வேறென்றும், அது என்னைப் பரமாகவுடையதென்றும் அருளிய 7-அத், 5-வது சுலோகத்தையும் கவனித்தல் வேண்டும். "ஆத்மாவும், ஜட வஸ்துக்களும், பரமாத்மாவுக்குச் சரீரம்" என்றும், "பரமாத்மா ஜீவாதிகளுக்குச் சுவாமி"

என்றும் இந்தச் சுருதி வாக்கியங்களாலே சொல்லப்பட் டிருக்
கின்றன. "ஆத்மா பூரணத்வம் அல்லது மகத்துவ முடைமை
யாலே அதற்குப் பிரமமென்னும் பதம் பிரயோகிக்கப்பட்
டிருக்கின்றது. ஜீவன் தனது பிரகிருதி விமுக்தாத்ம சொரூ
பத்தை யடைந்தால் அப்போது அவனைக் காரிய மென்றாவது
காரண மென்றாவது சொல்லக்கூடாது. இந்தக் காரிய காரணா
வஸ்தை, கரும சொரூபமான அவித்தையின் சம்பந்தத்தாலே
யுண்டானபடியால், சத், அசத், சப்தங்களாலே ஆத்ம சொரூபம்
சொல்லப்படுத வில்லை."] 13

"அர்ஜுனா! அந்தப் பிரமமானது எவ்விடத்திலேயும் கைகளை
யுங் கால்களையு முடையது: எவ்விடத்திலேயும் கண்களையு முகங்
களையும் உடையது; எவ்விடத்திலேயும் காதுகளை யுடையது; உல
கத்தில் சகலமானதையும் வியாபித்துக்கொண் டிருக்கிறது."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"பிரமம் சத் தென்பதற்கு விஷய
மல்ல வென்று சொல்லப்பட்ட தாகையினாலே அசத்தென்று
எண்ணப்படும். அவ்வாறு, எண்ணாம லிருக்கும் பொருட்டும்
பிரம்மமானது சகல பிராணிகளுடைய தேகேந்திரியாதி கர
ணங்க ளாகிற உபாதி மூலமா யிருக்கிற தென்பது சொல்லப்
படுகிறது. அந்த உபாதி அத்யாரோபிதம் (கல்பிதம்) ஆகை
யால், அது (உபாதி) மித்தை (பொய்) அந்த உபாதியை நீக்கிச்
சுத்தப் பிரமத்தைத் தெரிவிக்க இது ஆரம்பிக்கப் படுகிறது."]

[ஸ்ரீ ராமாநுஜர் அபிப்பிராயம்:—"கை முதற்கொண்டு காதள
வாகச் சொல்லப்பட்டவைக ளெல்லாம் பரிசுத்த ஆத்மாவுக்
குண்டென்ப தல்ல எவ்விடத்திலும் கை கால் முதலிய அவய
வங்க ளிருந்தால் அந்த அவயவங்களினால் செய்துகொள்ள
வேண்டியது. காரியங்கள் எவ்வாறு செய்துகொள்ளக்
கூடுமோ, அவ்வாறு பிரகிருதி விமுக்தாத்ம சுவரூபத்தை
யடைந்த ஜீவனானவன், அவயவங்க ளில்லாமலே அவைகளைச்
செய்துகொள்ள சக்தி யுள்ளவ னென்பது தாத்பரியம். "அந்த
முக்தாத்ம ஜீவன் சகலத்தையும் வியாபித்துக் கொண்டிருக்கி
றான்; காலில்லாமல் நடக்கிறவன் கையில்லாமல் கிரகிக்கிறவன்,
கண்ணில்லாமல் பார்க்கிறவன், காது இல்லாமல் கேட்கிறவன்"
என்ற சுருதி வாக்கியத்தினாலே மேற்கண்ட சக்திக்குச் சொல்
லப்பட் டிருக்கையில், ஆத்மாவிற்கு எவ்வாறு அவ்வித சக்தி
களைச் சொல்லலா மென்றால், பிரகிருதி விமுக்த ஆத்மாவிற்குப்
பரமாத்மாவுடன் பரம சாம்மியம் சொல்லப்பட் டிருக்கிற

படியால், அப்படிப்பட்ட சக்தி யுண்டு. "நிரஞ்ஜநஃ பரமம் ஸாம்ய முபைதி" என்கிற சுருதி வாக்கியத்தினாலேயும், "இதம் ஜ்ஞாந முபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதாஃ என்கிற கீதா வாக்கியத்தினாலேயும் முக்தாத்மாவுக்குப் பரமாத்மாவுடன் பரம சாம்மியம் சொல்லப்பட் டிருக்கிறது."] 14

"அர்ச்சுனா! அறியத்தக்க அந்த வஸ்துவான பிரமம்: சகல இந்திரியங்களையும் குணங்களையும் அவ்வவற்றின் விஷயங்களையும் பிரகாசிப்பிக்கிறதாயும், சகலவித இந்திரியங்க ளற்றதாயும், ஒன்றிலு மொட்டாததாயும், சகலத்திற்கும் ஆதாரமாயும், சத்துவாதி குணங்க ளற்றதாயும், சத்துவாதி குணங்களை ரக்ஷிப்பதாயும், சராசர வஸ்துக் களின் வெளியிலும் உள்ளிலு மிருக்கின்றதாயும், ஸ்தாவரமாயும் ஜங்கமமாயுஞ் சூக்ஷ்மமாயு மிருத்தலால் அறியக் கூடாததாயும், அந்த பிரமம் அஞ்ஞானிகளுக்குத் தூரத்தி லிருக்கின்றதாயும், ஞானிகளுக் குச் சமீபத்தி லிருக்கின்றதாயும், ஸ்தாவர ஜங்க மங்களாயுள்ள பூதங் களிலே (காரண சொரூபத்தாலே) அது பிரிவற்றதாயினும் (காரிய சொரூபத்தாலே) பிரிந்திருத்தல் போலத் தோற்றுவதாயும், (சம் ரக்ஷணை காலத்தில்) பூதங்களை ரக்ஷிக்கின்றதாயும், (சிருஷ்டி காலத் தில்) சகலத்தையும் உண்டாக்குவதாயும், பிரளய காலத்தில் சகலத் தையும் விழுங்குகின்றதாயும் சூரிய சந்திராதி பிரகாசங்களுக்கும் அந்தப் பிரமம் பிரகாசங் கொடுக்கின்றதாயும், அஞ்ஞானத்திற்குப் புறம்பானதாயும், ஞான சொரூப மானதாயும், ஞானத்திற்கு விஷய மானது யாதோ அந்த விஷய சொரூபமாயும் ஞானத்தாலே அடை யத் தகுந்த ஸ்தானமாயும், சகல பிராணிகளின் இருதயத்தில் விசேஷமா யிருக்கின்றதாயுஞ் சொல்லப்படுகிறது." 15-18

"அர்ச்சுனா! இவ்விதமாய் க்ஷேத்திரமும், அவ்வாறே ஞானமும் ஞேயமும் சங்கிரகமாகச் சொல்லப்பட்டன. என் பக்தன் இவற்றை யறிந்து என்னைப்போல் அஸம்சாரித்வ தர்மத்தை யடைதற்கு அல்லது என்னிடத்தி லிருப்பை யடைதற்கு, அல்லது மோக்ஷத்தை யடைதற்கு யோக்கிய னாகின்றான்." 19

"பிரகிருதியையும் புருஷனையும் ஆகிய இருவரையும் அநாதிக ளாக அறி; தேகேந்திரியாதி விகாரங்களையும், சுக துக்க மோகாதி களையும் பிரகிருதியினின்று முண்டானவைகளாக அறி."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"7-வது அத், 4-வது சுலோகத்தில் கூறியவாறு மாயை ஈசுவரனுக்கு அபரப்பிரகிருதி; மேற்படி

அத்தியாயம் 5-வது சுலோகத்தில் கூறிய விதம் ஜீவன் ஈசுவரனது பரப்பிரகிருதி இந்த மாயை ஜீவன் என்னு மிவர்களே முறையே பிரகிருதி புருஷர்களாகவும் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்க ளாகவும் கூறியது மன்றி, அனாதிகளாகவும், இந்திரியர்களாகவும் இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்டார்கள். ஈசுவரனை நித்தியனாகவும் அநாதியாகவும் அங்கீகரிக்க வேண்டியநாம், அந்த ஈசுவரனது பராபரப் பிரகிருதிகளாகிய மாயை ஜீவன் என்போரையும் நித்தியர்களாகவும் அநாதியர்க ளாகவு மொப்புக்கொள்ள வேண்டியதை இந்த விரண்டு பிரகிருதிகளாலே ஈசுவரனுக்குச் சிருஷ்டி, ஸ்திதி, சங்கார முதலிய காரணத்துவஞ் சொல்லப்படுகிறது. இந்தப் பிரகிருதி புருஷர்களுக்கு அநாதி நித்யத்துவஞ் சொல்லக்கூடா தென்றால், பிரமத்திற்கு ஈசுவரத்துவம் ஜகத் காரணத்துவஞ் சொல்லக் கூடாது. பிரகிருதி புருஷர்களே யுடையவ னெவனோ அவனே ஈசுவரன். எவுதற்கு வஸ்து; இல்லாவிட்டால் எவும் எஜமானத்துவ மென்பதில்லை; பிரகிருதி புருஷர்கள் அநாதியல்லர். உண்டானவர்களே' என்னும் பக்ஷத்தில் அவர்களுண்டாவதற்கு முன் ஈசுவரத்துவ மில்லாதிருக்க வேண்டும். புருஷனுக்கு அநாதியான கருமபந்த மென்பதுவுங் கூடாது. அல்லாமலும், ஈசுவரன் ஒரு ஜீவனைச் சுகியாகவும், மற்றொருவனைத் துக்கியாகவும் பூர்வ கர்மமாகிய காரண மில்லாது சிருஷ்டிக்கும்பக்ஷத்தில் அவ் வீஸ்வரனுக்குப் பக்ஷபாதமுந் தயையின்மையுஞ் சம்பவிக்கு மாதலாற் பந்தமில்லையே யென்றாகும். பந்தமில்லாவிட்டால் மோக்ஷமேது? ஆகையால், பிரகிருதி புருஷர்கள் அநாதிகளென்று நவில்வது உண்மையே.”]

[ஸ்ரீ இராமானுஜர் அபிப்பிராயம்:—“அர்ச்சுனா! ஒன்றோடொன்று சேர்ந்தவைகளாக விருக்கிற பிரகிருதி ஜீவாத்மாவாகிய இரண்டையும் அநாதிகளென்று அறி; சம்சார பந்தத்திற்குக் காரணங்களாகிய ஆசை, த்வேஷம் முதலிய விகாரங்களையும் மோக்ஷத்திற்குக் காரணங்களாகிய அமானித்துவ முதலிய குணங்களையும், பிரகிருதியி லுண்டானவைகளாக அறி. அதாவது, ஜீவாத்மாவுடன் சேர்ந்துகொண்டே அநாதிகாலமா யிருக்கிற சரீரமாக மாறி யிருக்கிற பிரகிருதி தன் விகாரங்களாகிய ஆசை த்வேஷம் முதலியவைகளினால் ஜீவாத்மாவின் சம்சார பந்தத்திற்குக் காரணமாகிறது அதுவே அமானித்வம் முதலிய தன்னுடைய விகாரங்களினால் ஜீவாத்மாவிற்கு மோக்ஷத்திற்குக் காரணமாகிறது என்றர்த்த மென்று கூறுவர்.”]

[கருத்து:—பிரகிருதியும், புருஷனென ஜீவனும், அநாதியாக விருக்கிறவர்களே யல்லாமல் ஒரு காலத்தி லுற்பத்தியானவர்களல்ல எது உண்டானதாகச் சொல்லப்படுமோ. அவையெல்லாம் பிரகிருதியினு லுண்டானதே. அந்தப் பிரகிருதியையு முண்டானதாகவே சொல்லுவோ மென்றால், பிரகிருதியை நியமிக்க வேறே யொரு பிரகிருதி யல்லவா விருக்கவேண்டும். அவ்வா றிருக்கிற தென்றால், அந்தப் பிரகிருதியை யுண்டாக்க வேறொரு பிரகிருதி யிருக்கவேண்டும். இவ்வாறே, ஒன்றுக் கொன்று தொடர்ந்து முடிவற்றதாக ஆய்விடும். ஆகையால், பிரகிருதி உண்டான தென்று சொல்வது கூடாது. இவ்வா றிருப்பதனால் பிரகிருதியானது ஆதியை யுடையதல்லவென்று சொல்லப்பட்டது. புருஷனோ வென்றால், அவன் பிரம்மத்தினுடைய அம்சமாகையாலும் நித்தியனாகையாலும் அன்னையும் ஆதியற்றவனாகச் சொல்லுவதாயிற்று.] 20

"பிரகிருதிக்கு மாயை யென்னும் பெயருமுண்டு, அம் மாயை சரீர துக்காதிகளை யுண்டு செய்தற்குக் காரணமென் றறிக. க்ஷேத்திரக்ஞ னென்னும் புருஷன் சுக துக்கங்க ளநுபவிப்பதில் காரணமென் றறிவாயாக."

"கிருஷ்ணா! பிரகிருதி செய்யும் உபகாரம் எப்படிப்பட்டது?"

"அர்ச்சுனா! பிரகிருதி, புருஷன் இருக்கச் சரீரத்தையும், காரியங்களைச் செய்வதற்கு இந்திரியங்களையும், விஷயங்களை அறிவதற்கு ஞானேந்திரியங்களையும், செய்து கொடுக்கும். புருஷன் இதனை வைத்துக்கொண் டனுபவித்துக்கொண் டிருப்பன். இவற்றின் சேர்க்கையே சம்சார மெனப்படும்."

"கிருஷ்ணா! பிரகிருதியால் அல்லவா பாவ வழியில் விழ வரும்; இதனை விடக்கூடாது."

"அர்ச்சுனா! புருஷன் இதனைச் சம்பந்தப்பட்டா லன்றோ அவற்றின் குணங்களை அநுபவிக்கலாகும். அதனை விட்டாலன்றி அதனா லுண்டாகும் துர்க்குணங்கள் போமேயன்றி, குணங்கள் உண்டாக மாட்டா பகவத் பாகவதர்களை ஆராதிப்பதற்குச் சரீரம் போதாதா? நேத்திரம், கர்ணம் முதலிய இந்திரியங்கள் விஷயங்களில் பிரவேசிக்கின்றன வென்று இவற்றைக் கொடுத்தால் சத் கிரந்தங்களை யெவ்வாறு ஆராயலாகும்? சத் கதைகளை யெவ்வாறு கேட்கலாகும்? ஆகையால், பிரகிருதி யிருக்க வேண்டும். ஆயினும், சரீரத்தையும் இந்திரியங்களையும் ஜாக்கிரதையாக வைத்துக்கொள்ள

வேண்டும். "துர்லபோ மானுஷோதேஹ" எனவும், "சரீரமாத்யங்க ளும் தர்மசாதனம்" எனவும் இருக்கின்றதல்லவா? பிரகிருதி புரு ஷர்களின் சம்பந்தம் பார்ய பர்த்தாக்களின் சம்பந்தம்போன் றிருக் கிறது. பார்யை யிருக்கிறுளென்று விதி நிஷேதங்களைப் பாராட் டாமல் அவளுடன் போகித்துக்கொண்டு சத் காரியங்களைச் செய்யா தவன் அந்தப் பார்யையால் தீய பலன்களை அனுபவிப்பன். அந்தப் பார்யையை வைத்துக்கொண்டே ஔபாசனுதி சத் கிரியைகள் அதிதி அப்யாகதர்களுக்கு ஆதித்யங்கள் பகவதாராதனஞ் செய்து கொண் டிருந்தால் அவளால் சௌக்கியம் அடைவன். பிரகிருதியால் தீமை யிருக்கிற தென்றிடின், அதனுல் உண்டாக வேண்டிய இலா பம் உண்டாகாமற் போகு மல்லவா?"

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"உலகத்தைக் காரண காரிய ரூப மாகப் பிரமத்தினிடம் ஆரோபிக்கச் செய்வதால் மாயையானது கர்த்ருத்துவ முடையதாகவும், பிரகிருதி பரிணமமான அத் தேகங்கடோறும் பிரதிபலித்துள்ள ஆத்ம சைதன்னியமான புருடன் அந்தத் தேகத்தில் உணர்வு மயமாக இருந்து சகல சுக துக்கங்களை யறிவதால் போக்திருத்வ முடையவனுகவும் விவ கரிக்கப் படுமென்றும், அடுசலத்திற் பட்ட சூரியனது பிரதி பிம்பத்தைப் போலப் பிரகிருதி சம்போகத்தால் தேகங்க டோறும் பிரதிபலித்த சுயஞ் சைதன்னியனுன புருடன் அசமுயாரித்துவ சுவபாவத்தையே யுடையவனுயினும், சுகதுக் காதிகளை யறிவதனுல் அதைப் புசிக்கும் போக்தாவென்றும், அகர்த்தா சடமான மாயை புருட சந்நிதி உபகாரத்தால் மனதோடு பதினெரு இந்திரியங்களும், மகா பூதங்க ளைந்தும் ஆகிய பதினுறு விகாரங்களான காரியங்கட்கும்; புத்தி, அகங் காரம் சப்தாதி தன் மாத்திரைக ளைந்து ஆகிய ஏழு பிரகிருதி விகாரங்களான காரணங்கட்குக் கர்த்தாவென்றுஞ் சொல்லப் படுகின்றது."]

[ஸ்ரீ இராமானுஜர் அபிப்பிராயம்:—"காரியமாவது சரீரமும். காரணங்களாவது மனதோடு கூடிய ஞானேந்திரியங்களும், கர்மேந்திரியங்களும். இவைகள் காரியத்தைச் செய்வதில் ஜீவாத்மாவினுல் அதிஷ்டானஞ் செய்யப்பட்ட சரீரமாக மாறி யிருக்கிற பிரகிருதியை ஆதாரமாக வுடையவைகள். சுக துக் கங்களை யனுபவிப்பதற்குக் காரணமாகிய கிரியைகளென்று அர்த்தம். ஜீவாத்மாவிற்கு அதிஷ்டாதாவா யிருக்கையே யுண்டு. சரீரத்தை அதிஷ்டானஞ் செய்வதாகிய பிரயத்தனத் திற்குக் காரணமாக இருத்தலே ஜீவாத்மாவிற்குக் கர்த்திருத

துவம். பிரகிருதியோடு சேர்ந்திருக்கிற ஜீவாத்மா சுக துக்கங் களை யனுபவிப்பதற்குக் காரணம்; அதாவது, சுகதுக்கங்களின் அனுபவத்திற்கு இருப்பிடமென் றர்த்தம்.''

[''இரண்டாவது விஞவிற்கு விடை யாதோவெனின், ஜீவன் ஞானத்தையே சுவரூபமாக வுடையவன். அவனுடைய ஞான மானது சுக துக்காதி சம்பந்தமான விடயஞான மல்ல. ஆஞ லும், தேகேந்திரியாதிகள் மூலமாய் விடயஞான முண்டாகிறது. அந்தத் தேகேந்திரியாதிகள் கருமத்திஞ லுண்டாகின்றன. தேக முண்டான பின்னரே சுகதுக்கங்களை அறிகிறதாகிய விஷய ஞானத்தை அடைகிருன். இவ்வாறு சுக துக்காதி விடய ஞானத்தை அடைகிறதிஞல் அவன் சுக துக்காதிகளை யனுபவிக்கிறதற்குக் காரணமாகச் சொல்லப்படுகிருன். புருஷ சந்நிதானத்தில் பிரகிருதிக்குக் கர்த்திருத்துவமும், பிரகிருதி சம்போகத்திஞல் புருஷனுக்குப் போக்கிருத்துவமு முண்டாகிற தென்பது தாத்பரியம்.'']

[ஸ்ரீ மாத்துவாசாரியர் அபிப்பிராயம்:—''காரிய மென்றது தேகம். காரண மென்பது இந்திரியங்கள். கர்த்திருத்துவ மென்பது கிரியை பிரதிகிருதிதான் இம்மூன்று ரூபமா யிருக்கிறது. ஆகை யால், இம் மூன்றுக்கும் பிரகிருதியை ஹேதுவாகச் சொல்லு கிருர்கள். ஜீவன் ஞான சுவரூபி யானதாலும், சுக துக்கங்களை யறிகிறவ ஞனதாலும் சுக துக்கானுபவத்திற்கு ஏதுவாகச் சொல்லப்பட்டது.''] 21

''பிரகிருதி காரியமாகிய தேகத்தி லிருக்கிற ஜீவன், தேகத்தா லுண்டாகின்ற சுக துக்காதிகளை யனுபவிக்கின்ருன். குணசங்கம், அதாவது சத்துவாதி குணசம்பந்தம் அல்லது இந்திரிய குணசம்பந் தம். இந்த ஜீவனுக்குத் தேவ மிருக ஜாதிகளிற் பிறப்படையக் காரணமாகிறது.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—''காரிய காரண ரூபமா யிருக்கின்ற அவித்தையா லக்ஷணமான பிரகிருதியைத் தானென்று நினைக் கின்ற சுக துக்காதிகளை அனுபவிக்கின்ற புருஷன், பிரகிருதியா லுண்டான சுக துக்க மோக காரணங்களாய்க் காணப்படுகின்ற குணங்களை யடைகின்ருன். தான் தனதென்னும் மமகார அகங்காரமாகிய குண சம்பந்தம், அனுபவிக்கின்றவஞகிய ஜீவ னுக்குத் தேவ மனுஷிய பசு பக்ஷி முதலிய ஜன்மங்களிலே காரணமாக விருக்கின்றது. இவ்வாறு கூறியதின் கருத்து யாதோவெனின், இவைகளை யெல்லா முணர்ந்து பந்தத்தி னின்று நீங்க முயற்சி செய்ய வேண்டு மென்பதே யாம்.'']

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"குணமென்னும் பதம் அந்தக் குணங்களின் காரியங்களை ஔபசாரிகமாகச் சொல்லப்படுகிறது. சுவபாவத்தில் தன்னை யனுபவிப்ப தொன்றையே சுகமாகவுடைய ஜீவாத்மா பிரகிருதியோடு சேர்ந்தவனாய் பிரகிருதியின் சம்பந்தத்தைக் காரணமாகவுடைய சத்வம் முதலிய குணங்களின் காரியங்களாகிய சுக துக்க முதலியவைகளை யனுபவிக்கின்றான். முன்பிருந்த பிரகிருதியின் மாறுதலாகிய தேவன், மனுஷ்யன் முதலிய ஜாதிகளில் இருந்துகொண் டிருந்த இந்த ஜீவாத்மா அந்தந்த ஜாதிகளினு லேற்பட்ட சத்வம் முதலிய குணங்களின் காரியங்களாகிய சுகதுக்க முதலியவைகளில் பற்றுதலை யடைந்தவனாய் அவைகளுக்குச் சாதனங்களாகிய புண்ணிய பாவ கர்மங்களில் பிரவிர்த்திக்கிறான். ஆகையினால், அந்தப் புண்ணிய பாவங்களின் இலாபத்தை யனுபவிப்பதற்காக நல்லதாகவும் கெட்டதாகவு மிருக்கிற ஜாதிகளில் பிறக்கின்றான். பிறகு மறுபடியும் கர்மங்களைச் செய்கிறான். மறுபடியும் பிறக்கின்றான். எப்பொழுது அமாநித்வ முதலிய ஆத்மாவை அடைவதற்குக் காரணங்களாகிய குணங்களை அடைகின்றானோ அதுவரையில் சம்சாரத்தை யடைகின்றான். அதுதான் இங்கே காரணம் என்று சொல்லப்பட்டது."] 22

"ஜீவன் இந்தத் தேகத்தி லிருப்பினும், தேகத்தைக் காட்டினும் அன்னியனாகவும், சமீபத்திலிருந்து பார்க்கின்றவனாகவும், ஆமோதிக்கின்றவனாகவும், தேகத்தைத் தரிக்கின்றவனாகவும், சுக துக்காதிகளை அனுபவிக்கின்றவனாகவும், பிரம்மாதிகளுக்கு எஜமானனாகவும், பரமாத்மாவாகவும் சொல்லப்பட் டிருக்கிறான்."

[புருஷன், ஜீவன் இந்தச் சரீரத்தி லிருப்பினும் இந்தப் பிரகிருதி குண கருமங்களிற் சேராத விலக்ஷணமான பரமேயாகவும், எக் கருமங்களினும் தான் சம்பந்தமில்லாது செய்யப்படுங் கருமங்களின் குண தோஷங்களை எதிர் நின்று பார்த்துக்கொண் டிருக்கும் அன்னியன்போலத் தேகாதிகளின் பிரகிருதி (சுவபாவ) சேஷ்டைகளில் தான் தோய்தலின்றி, அறிவே சொரூபமாக விருத்தலின் சுவபாவத்தில் அறிந்து நிற்கும் உபத்திரஷ்டாவாகவும், தேகேந்திரியங்கள் தத்தமக்குச் சுவபாவமான எக் காரியங்கள் செய்யினும், தனக்கோ ராகத்வேஷமின்றிச் சாக்ஷியைப்போல வெறித்திருக்குமவனாகவும், பொய்யாகிய சர்ப்பப் பிராந்திக்கு இரச்சு அதிட்டான மாயதுபோலத் தனது சொரூப ஞானத்தினால் பொய்யாக்கப்பட்ட தேகேந்திரிய மனோ புத்தியாதிகட்கு அதிஷ்டானமாய், அவை

தோன்றுதற்கு ஆதாரமாக இருப்பவனும், அஞ்ஞானத்திலுல் உண்டாய்த் தோன்றும் தேகாங்காரியினது, 'நானனுபவித்தேன்' என்கிற புத்தியும், விடயாநுபவ சுகதுக்கங்களும் பரிணமித்தற்குத் தானே உபாதானமாக உள்ளும் புறம்பும் வியாபித்துக்கொண்டு நிற்றலின், போக்தாவாகவும், சர்வேந்திரியங்களையுந் தானின் றுணர்த்தி இயங்கச் செய்யும் சர்வேந்திரியாமியாகவும், சேஷியாகவும் இருத்தலின் மகேசுவரனுகவும், க்ஷராக்ஷர உபாதிகளில் தாக்கற்ற நித்த சுத்த புத்த முத்த சுவபாவ முடைமையின் பரமாத்மாவாகவும் சொல்லப்பட் டிருக்கின்றான்.

ஒரு ஆன்மாவே தனது புடை பெயர்ச்சியாகிய பகிர்முக திருஷ்டியான அறியாமை காரணமாக விவகாரிக தசையில் ஜீவனெனவும், தேவ மனுஷ்ய பசு பக்ஷி மிருகஜாதி ஜன்மங்க ளடைபவனெனவும், ஜடதுக்க சுவபாவ முடையோ னெனவும், அந்தர்முக திருஷ்டியான ஞானங் காரணமாக அவ் வொருவனே சச்சிதானந்த கனமான பரமாத்மாவாகப் பாரமார்த்திக தசையிலும் சொல்லப்படுகின்றா னென்றது கருத்தென் றுணர்க. இதுவே ஞாயம். சோதனை, பொருத்த முகத்தாற் றுணிந்த சுருதி யுத்தி சுவானுபவத்திற் கியைந்த சித்தாந்த மென்பது பெற்றாம். அன்றி, இதற்கு விரோதமாகக் கூறுதல் மரபன்று.''] 23

''இவ்விதமாயப் புருஷனையும், சுக துக்க மோகாதிகளோடு கூடிய பிரகிருதியையும் எவன் அறிகின்றானோ அவன் எவ்விதமாயிருந்தபோதிலும் மீண்டும் பிறப்படைத லில்லை.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—''ஜீவத்வம் அதாவது சிதாபாஸத்வம், புருஷனாகிய பிரமத்தினிடம் அவித்தையினு லாரோபிக்கப்பட்டது. இது, மித்தையென்றும், அப்பிரமமே தானென்றும் அறிந்தவனாகிய பரமாத்மாவுக்குச் சுகதுக்க மோகாதி சொரூபமான பிரகிருதி கானனீர்போல் பிரயோஜன மில்லாது நீங்கி விடுவதால் அவன் மீண்டும் பிறவி யடைவதில்லை யென்று கூறப்பட்டது. 'ஆயின், இங்ஙன முண்டாகிய அகம் பிரமமென் றறிந்த ஞானத்திற்கு முன்னும் பின்னும் ஒருவன் செய்துள்ள ஆகாமிய சஞ்சித கருமங்கள் பிறவி யெய்துவிக்காவோ?'' எனின், 'ஜ்ஞாநாக்நிஸர்வாணி தஸ்மஸாத் குருதேர்ஜுந'' என்ற 4-வது அத்தியாயம் 37-வது சுலோகத்தில் கூறியுள்ளவாறு ஞானக்கினியால் சகல கருமங்களும் பஸ்மமாக எரிந்துபோ மென்றதால், பிராப்த க்ஷயமான நிர்வாணத்தை யடைகிறா னென்பதாம்.'']

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"முன் சொன்ன சுவபாவங்களை யுடைய ஜீவாத்மாவையும், மேற்கூறிய சுவபாவங்களை யுடைய பிரகிருதியையும் இனிச் சொல்லப்போகிற சுவபாவங்களோடு கூடிய சத்துவம் முதலிய குணங்களோடுகூட எவன் அறிகின்றானோ, அதாவது உள்ளபடியான பகுத்தறிவினா லறிகின்றானோ அவன் தேவன், மனுஷ்யன் முதலிய தேகங்களில் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண் டிருந்தபோதிலும், மறுபடியும் பிரகிருதியோடு சேரத் தகுந்தவ னல்லன். அளவில்லாத ஞானத்தையே லக்ஷணமாக வுடையதாயும் கர்ம சம்பந்தங்களில் லாததாயு மிருக்கிற ஜீவாத்மாவை இந்தத் தேகம் முடிகிற சமயத்திலேயே அடைகிறா னென்பதாம்."]

[முன் சொன்னவாறு 'எவன் பரமாத்மாவை பிரத்தியக்ஷமா யறிகிறானோ அவன் பிறக்கிற தில்லை' என்பதற்கு, 'எவன் தானே பிரமமென்று அறிகிறானோ அவன் பிறக்கிற தில்லை' என்று சிலர் பொருள் கொள்வது சரியன்று. புருஷனே நானென்று சொல்லுதல் கூடாது. ஸ்ரீ மகா பாரதம், மோக்ஷ தர்மத்தில் ஜனமேஜயனுக்கும் வைசம்பாயனருக்கும் நடந்த பிரதி யுத்தரங்கள் அடியிற் குறிக்கப்பட் டுள்ளன. அவற்றைக் கண்டு தெளிக]

[அதாவது:—"பிராமணோத்தமரே! புருஷர்கள் அநேகரா? அல்லது புருஷன் ஒருவனோ? அநேகர்களானால் அவர்களிற் சிரேஷ்டன் யார்? அவனை நீரெனக்குச் சொல்ல வேண்டும். புருஷர்க ளெல்லோரும் ஒருவ னென்னும் மதத்தை, ஞானிகள் ஒப்புக் கொள்ளுகிற தில்லை. அநேக புருஷர்களிற் சகலத்திற்கும் காரணமா யொருவனே சொல்லப்படுகிறான். அவ்வாறு சகலத்திற்கும் காரணமாயும் அநேக குணங்களோடு கூடியு மிருக்கின்ற புருஷனை ஞானிகள் அங்கீகரிக்கின்ற பிரகாரம் நானுமக்கும் சொல்லுகின்றேன் கேளும்" என்று கூறியுள்ளார். அவ் விஷயத்தைப் பாரதத்திற் கண்டு தெளிக.] 24

"பரமாத்மாவைச் சிலர் தியானத்தினாலேயும், தேகத்திற்குள்ளே மனதினாலேயும், மற்றுஞ் சிலர் சாங்கிய யோகத்தினாலேயும், வேறு சிலர் கரும யோகத்தினாலேயும் அறிகிறார்கள்."

["கரும யோக மென்றதற்கு இராஜ யோக மெனப் பொருள் கூறிய தெங்ஙனமெனின், சாங்கிய ஞான யோகிகள் கருமத்தை அகத்தும் புறத்தும் முற்றத் துறந்த முனிவர்க ளாயினும் கரும யோகிகள் ஆத்ம ஞான திடத்தால் அகத்தின் கருமவாசனை முழுவதும் நசித்தவர்களாய்ப் புறத்தில் "எத்தொழிலைச் செய்தாலு

மேதவத்தைப் பட்டாலு முத்தர் மனமிருக்கு மோனத்தே" என்ற படி ஜனக மகாராஜாவைப் போன்றுள்ளாரென இராஜ யோகிகளான கரும யோகிகளைச் சாங்கிய ஞான யோகிகளுக்குச் சமானமாகக் கூறப்பட் டிருத்தலினாலும், ஞான யோகியைப் பார்க்கிலும் இராஜ யோகியான இவ்வித கரும யோகியை ஒருவாறு மேம்படச் சிறப்பித்துள்ளதினாலு மென்க.

துறவறத்திலும் இல்லற மிக் குயர்த்தப்பட் டிருப்பதால் இல்லற ஞானியே துறவற ஞானியினு மிக்கோ னென்பதைப் பல இதிகாசங்கள் கூறுவதினாலு முணர்க. இந்த ஞானமானது அரசியலுக்குரிய அர்ச்சுன ராஜனுக்குப் போதிக்கப் பட்டமையின், கரும சந்நியாசமான ஞான யோகத்தில் அதிகார மின்றாதலால், இங்ஙனமாகக் கரும யோகத்தை யவனிடத்துச் சிறப்பித்தன ரென்பதும் சிலர் கொள்கை; அவர்கள் கர்ம யோகமென்றதற்கு எக் கருமங்கள் செய்யினும் ஞானாகாரமாக அவற்றை வியாபித்துக்கொண்டு கமலபத்தி ரோதகம் போலப் பற்றற்று விளங்கும் இராஜ யோகத்தை எனப் பொருளமைதி கொள்ளாமல் ஈசுவரார்ப்பணமாகச் சித்த சுத்தியின் பொருட்டாகச் செய்வதாய சாமானிய கரும யோகமெனக் கொண்டதற் கிணங்க அங்ஙனம் பொருள் கொண்டதும் குற்ற மல்ல. ஆத்ம ஞானத்தால் சகல கருமங்களையும் விடாது உலகோர் பொருட்டுத் தாம் செய்தும் செய்வித்தும் வந்தால், சகல கருமங்களும் பிரகிருதி காரிய மென்றும், ஆத்மா ஒன்றைச் செய்வதும் செய்விப்பதும் இல்லை யென்றும், ஜீவாத்மாவானது பிரமத்தி னிடமாக அவித்தையால் ஆரோபிக்கப் படுவதால் இது பொய்க் கற்பனை யென்றும், அப் பிரமம் தானே யென்றும் அறிந்துள்ள பரமாத்மாவானவன் 24-வது சுலோகத்தில் சொல்லி யிருத்தலின், இஃதும் கருமஞ் செய்வதால் கருமயோகமெனப் பொதுவாகச் சொல்லப்படினும், இலக்கணத்தால் கருமபல சந்நியாச யோக மென்கிற இராஜ யோக மென்றே அறியத் தக்கதாம்.

கரும யோகமானது ஞான ஞானங் காரணமாக இருவகைத்தாய், அதில் ஞானங் காரணமாகச் செய்கிற கரும யோகத்தை இராஜ யோக மென்பதாம். இஃது உலக வருணாச்சிரம தரும பரிபாலனத்தின் பொருட்டு இராஜாக்களாலும், மற்றை இல்லற ஞானிகளாலும் இன்றி யமையாததாக அநுட்டிப்ப தென்றும், அஞ்ஞானங் காரணமாக மற்றொரு கரும யோகமானது முத்தி மார்க்கத்தில் தீவிர முயற்சிக்கு அசக்தர்களான அஞ்

ஞானிகள் பொருட்டு அதம பக்ஷமாகச் சோபான முறையில் சகல கருமங்களையுந் தத்தமக்கு வேண்டிய மட்டுஞ் செய்து கடைசியாக ஈசுவரார்ப்பணஞ் செய்து விடுவது முதலிய சில ஏதுக்களைக் கரும யோக மென்னும் பெயராற் கூறப்பட் டிருப்ப தாம் இனிக் கரும யோக மென்னும் பெயராற் கூறினும் பிர யோக விலக்கண தாரதம்மியங்களினுற் பகுத்தறிந்து உரை செயின் கரும யோக சாமானியத்தை இவ்விடத்துக் குறித் தமை யன்றெனக் கூறற்பால தென்க. அல்லாமலும், (அத்-5, சு-5, 7, 8, 9 10, 11, 12, 13) முதலிய பல விடங்களிலும் கரும யோகத்தைச் சாங்கிய ஞான யோகத்தோடு பயனி னென்றுக வைத்துக் கூறியதனேடு அக் கரும யோகியினது ஆத்ம ஞான மகத்துவத்தின் விலாசத்தையே மிகைபடச் சிறப்பித்தலி னுலும், சாங்கிய கரும யோகமான இராஜ யோகத்தையே குறித்தமையாம். இனி ஆத்ம ஞான சகிதமாகக் கரும யோகத் தைக் கூறுமிட மெங்கும் சாங்கிய கரும யோக மென்றுதல் கருமபல சந்நியாச யோக மென்றுதல், இராஜ யோக மென்று தல் மூன்றும் ஒரு பொருளேக்க முடையதாக மயங்காது பொருள் கொள்ளக் கடவ தென்று பெரியார் பணித்துள் ளார்கள்.] 25

"இவ்விதந் தெரியாதவர்களா யிருக்கின்ற வேறு சிலரோ குரு முதலிய பிறரிடத்திற் கேட்டு உபாசிக்கின்றார்கள்; அவர்களுந் கூட குரு உபதேசத்தை எப்பொழுதும் ஆசிரயித்தவர்களாய்ச் சம்சார பந்தத்தைக் கடக்கின்றார்கள்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"ஆத்மாவை மேற் சொல்லிய இவ் வித இலக்கணங்களை யுடையதென அறியாத மற்றுஞ் சிலரோ, ஆத்ம ஞானிக ளல்லாத அந்நியர்களிடம் உபதேசம் பெற்றும் பரமாத்மாவை ஆண்டானகவுந் தன்னை (ஜீவனை) அடிமை யாகவும் துவித பாவத்தினுல் உபாசிக்கின்றார்கள். அப்படிப் பட்டவர்களும் ஆத்மா நாத்ம விசாரணையின்றி பக்தி யனுபவ மின்றிய தமது மதத்தின் சித்தாந்தக் கொள்கையைக் கேட் பதே தமது மதமாக அதை யாசிரயிப்பவர்களாய்ப் பல ஜன்மங் களில் சமுசார பந்தத்தி லிருந்து கரை யேறுவார்கள். மேற் கூறிய சாங்கிய யோகத்தில் அதிகாரம் அற்றவர்கள் தத்தம் மதாசாரக் கிரமத்தை யுபதேசிக்கப்பட்டுக் கரும யோகங்களி னுல் ஈசுவரனை யுபாசித்துச் சித்தசுத்தி யடைந்து, ஜந்மாந்த ரங்களில் அஞ்ஞான சந்தேக விபரீதங்கள் சிறிது சிறிதாக நீங்கப் பெற்றவர்களாய்ப் பிறகு சாங்கிய யோகத்தினுல் பிறவி நீங்கப் பெறுவார்கள்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"மேற் சொன்ன சாங்கிய கரும யோகங்களில் அதிகார மற்ற சிலர் ஞானிகளினு லுபதேசம் பெற்று கரும யோகாதிகளினுல் ஆத்மாவை யுபாசிக்கிறூர்கள். சுருதி முதலியவைகளைக் கேட்டறிந்தும், கரும யோகங்களை யநுஷ்டித்தும், அதனுல் பாபத்தைப் போக்கடித்துக்கொண்டு சாங்கியாதி யோகங்களினுல் மிருத்யுவை அதிக்கிரமிக்கிறூர்கள்."] 26

"ஓ! பரதகுல சிரேஷ்ட! தாவரமோ, ஜங்கமமோ, எந்தப் பிராணியும் க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞர்களின் சேர்க்கையினு லுண்டாகிறதாக அறி சேர்ந்தால் மாத்திரம் உண்டாகுமே யல்லது பிரிந்திருந்தால் உண்டாக மாட்டாதென்று தாத்பரியம்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"ஸம்யோக மென்பது அத்தியாசமென்கிற சம்பந்தம். அதாவது, க்ஷேத்திரத்திநுடைய சுவபாவமான தருமங்களை க்ஷேத்திரஜ்ஞ னிடத்திலும், க்ஷேத்திரஜ்ஞனுடைய சுவபாவமான தருமங்களை க்ஷேத்திரத்தினிடத்திலும் ஆரோபிப்பது. இந்த ஆரோப மென்னும் அத்தியாசம் அவிவேகத்தா லுண்டாயது. எவ்வாறெனின், தேகாதிகளின் காரியங்களான நடத்தல் பார்த்தல் முதலியவற்றை (ஆத்மா) தனது காரியங்களாகத் தன்னிடத்திலும், தேகத்தைப் பார்த்து, நான் அறிகின்றேன், நான் தெரிந்துகொண்டேன் என்று தானே தேகம்போல நினைக்கின்றபடியாலே தனது தருமங்களான ஞான முதலியவற்றைத் தேகத்தினிடத்திலும் ஆரோபிப்பதுதான் அத்தியாசம்; கயிற்றிற் பாம்பும் கிளிஞ்சலில் வெள்ளியும் எவ்வாறு பிரமையா லுண்டாகின்றனவோ அவ்வாறு இதற்கேது அஞ்ஞானமே."] 27

"ஓ! அர்ச்சுனு! சகல பிராணிகளிடத்திலுஞ் சமமாயிருக்கின்ற பரமேசுவரனைப் பூதங்கள் நாசமடைகின்றனவா யிருக்க நாசமடையாதவ னென்று எவன் அறிகின்றூனே அவனறிகின்றூன்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"அவித்தையை நிவர்த்திக்கும் பொருட்டு ஆத்தும சொரூப ஞானம் மேலே கூறப்பட் டிருந்தாலும், வேறு சப்தங்களாலே ஈண்டுக் கூறப்படுகின்றது. தேகேந்திரிய மனோபுத்தி அவ்யக்தம் ஆத்மா ஆகியவற்றைப் பார்க்கிலும் விலக்ஷணமாயும் நியந்தவனுயு மிருத்தலாலே பரமேசுவரனென்று சொல்லப்பட்டான். அந்தப் பரமேசுவரன், பிரமன் முதல் ஸ்தாவரம் வரையிலுள்ள சகல பூதங்களிலுஞ் சமமா யிருக்கின்றவன். காணப்பட்ட சகல வஸ்துக்களும் அந்த வஸ்துக்க ளெல்லாம் எதனுடைய விகாரங்களோ அந்த

மூலமாக நாச மடையப் பட்டவைகளே. அவைகள் நாச மடைந்தபோதினும் பரமேசுவரன், நாச மடைத லில்லை. இதனாலே அந்தக் காணப்பட்ட வஸ்துக்களுக்கும் அவற்றின் மூலத்திற்கும் பரமேசுவரன் விலக்ஷண னென்று கூறியதுபோலாயிற்று. இவ்வாறான பரமேசுவரனும் தானும் ஒன்றே யெனவும், ஆத்மா அநேக மன்றெனவும் ஜீவேசுவரர்களை அபேதமாக எவன் அறிகின்றானோ அவனே விஸ்தாரமா யறிகின்றவன். பேதமாய்ப் பார்க்கின்றவன். பார்க்கின்றவ னல்லனோ எனின், அவனும் பார்க்கின்றவனே; ஆனால், பேத திருஷ்டியாய்ப் பார்க்கின்றவன். ஆனால், பரமேசுவரனைச் சகலத்திலுஞ் சமமாய்ப் பார்க்கின்றவ னல்லன். எங்ஙன மெனின், ஒருவனாகிய சந்திரனை ஒரு சந்திரனாக ஒருவனும், இரண்டு சந்திரர்க ளிருப்பதுபோல ஒருவனும் பார்க்கின்றார்கள், இருவரும் பார்க்கின்றவ ராயினும், ஒருவனாய்ப் பார்க்கின்றவனே உண்மையைச் சரிவரப் பார்க்கின்றவன். மற்றொருவனோ அவனது கண்ணிலுள்ள தோஷத்தாலே ஒருவனையே இருவராகப் பார்க்கின்றவன். அவ்வாறு அவித்தியா சம்பந்தத்தாலே பேத திருஷ்டி யுண்டாய தென்பது தாத்பரியம்.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“இவ்வாறு ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற எல்லாப் பிராணிகளுக்குள் தேவன் முதலிய வித்தியாசமுள்ள ஆகாரத்தை யுடைய வஸ்துவைக் காட்டினும் வேறுபட்டதாயும், அந்தத் தேகங்களில் அந்தத் தேகங்களுக்கும், இந்திரியங்களுக்கும், மனதிற்கும் ஈசுவரனா யிருந்துகொண் டிருப்பவனாயும், அறியுந்தன்மை யுடையவ னாகையினால் சமமான ஆகாரத்தை யுடையவனாயும், அந்தத் தேகம் முதலியவைகள் நாசமடையும்பொழுது நாசத்தை யடையத்தகாத சுவபாவங்களை யுடையவ னாகையினால் நாசமடையாமலிருக்கிற ஆத்மாவை எவன் அறிகின்றானோ அவன் ஆத்மாவை யுள்ளபடியே யறிகின்றான். எவன் தேவன் முதலிய வித்தியாசமுள்ள ஆகாரங்களினால் இதையும் வித்தியாசமான ஆகாரத்தை யுடையதாகவும், உற்பத்தி நாசம் முதலியவைகளை உடையதாகவு மறிகிறானோ அவன் எப்பொழுதும் சம்சாரத்தையே யடைகிறான்.”] 28

“சகல பிராணிகளிடத்திலுஞ் சமமாய், நாசமற்ற சொரூபமாயிருக்கின்ற ஈசுவரனைப் பார்க்கின்றவன் (அறிகின்றவன்) தன்னாலே தன்னைத் துன்பப்படுத்திக் கொள்வதில்லை; தன்னைத்தான் பரமாத்மாவாக அறிவதனால் பிரம்ம நிர்வாணத்தை அடைகின்றான்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"கடத்தில் மண்ணைப் போலவும், படத்தில் நூலைப்போலவும், உபாதானமாகச் சகலத்திலும் சமமாய் அவிநாசியா யிருக்கின்ற ஆத்மாவாகிய தன்னைக் காண்பவன் தன்னாற் றன்னைத் துன்பப்படுத்திக் கொள்ளுவதில்லை. தன்னைத்தான் பரமாத்மாவாக அறிவதனால் பிரம்ம நிர்வாணத்தை யடைகிறான்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"இரக்ஷித்துக் கொள்கின்றானென்றால், பந்தத்தினின்றும் தன்னை நீக்கிக் கொள்கின்றான். தன் சொரூபத்தை இவ்விதமா யறிதலாலே பந்தத்தினின்றும் நீங்கிய தான் அடையத்தகுந்த சொரூபத்தை யடைகின்றான். இவ்வித முணராதவன் தன்னைச் சம்சாரத்தில் அழுத்திக் கொள்ளுகின்றான்."]

29

"பலவித கருமங்கள் (தேகேந்திரியாதி சொரூபமா யிருக்கின்ற) பிரகிருதியாலே செய்யப்படுகின்றன என்றும் அவ்வாறே தன்னைக் (கருமங்களுக்குக்) கருத்தாவல்ல னென்றும் எவன் அறிகின்றானோ, அவன் தனக்குள் அந்தர்க்கதமான க்ஷேத்திரஜ்ஞனை உபாதி ரகிதனாகத் தெரிந்து கொண்டவனாகிறான்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"இருளில் கள்வன்போற் றோன்றிய ஓர் கட்டையை விசாரித்து இது கள்வனல்ல கட்டையே யெனத் தெளிந்தவன் அது தொடங்கி இருட்காலத்தும் அக் கட்டையைக் கட்டையெனக் கூறுவதன்றிக் கள்வனெனக் கூறுவதில்லை. அதுபோல, அறியாமைக் காலத்துக் கர்த்ருத்வ போக்திருத்வாதிகளால் ஜீவன்போற் றோன்றிய தன்னை விசாரித்துப் பிரமமே யெனத் தெளிந்த முக்தன், அது தொடங்கி விவகார காலமாகிய அறியாமைக் காலத்தும் அந்தத் தானுகும் பிரமத்தினிடம் ஆரோபத்திற் கிடந்தராமல் தன்னைக் கர்த்ருத்வ போக்திருத்வங் கட்டி அதீதமான பிரம சொரூபமே எனக் காண்பதன்றி, மறந்தும் வேறொன்றாகக் கண்டு கூறுவதின்றாகலின், விவகார காலத்தும் அவர்க்குச் சமாதியே சித்திக்குமென்ப தறிக."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"எல்லாக் கர்மங்களையும் கார்ய காரண, 'கர்த்ருத்வே துஃ ப்ரக்ருதிச்யதே' என்று முன்பு கூறியிருக்கிறபடியால் பிரகிருதியினாலே செய்யப்படுகின்றனவென்று எவன் பார்க்கின்றானோ, அவ்வாறே ஞான மொன்றனையே சுவபாவமாக வுடைய ஜீவாத்மாவைக் கர்த்தா வல்லாதவனாக எவன் நோக்குகின்றானோ, அத்தகையோனுக்குப்

பிரகிருதியோடு சேர்த்திருப்பதும், அதை அதிஷ்டானஞ் செய்வதும், அதனா லுண்டாகிய சுகதுக்கங்களை யனுபவிப்பதும் கர்மமாகிய அஞ்ஞானத்தினா லுண்டாக்கப் பட்டவைக ளென்றும் எவன் பார்க்கின்றானோ அவன் ஆத்மாவை யுள்ளபடியே பார்க்கின்றான்.”] 30

“பிரபஞ்சத்தின் பேதத்தைப் பிரகிருதியோடு லயித்தொன்றா யிருப்பதாக அந்தப் பிரகிருதியி லிருந்தே அந்தப் பிரபஞ்சத்தின் விஸ்தாரத்தை எப்போது பார்க்கின்றானோ அப்போது பிரமத்தை யடைகின்றான்.”

[உள்ளுரை:—பிரகிருதி என்றும் புருஷ னென்றும் இரண்டு தத்துவங்களாயுள்ள தேவர் முதலான சகல பூதங்களிலும் தேவத் தன்மை, மானிடத்தன்மை, குறுகியிருத்தல், நீண்டிருத்தல் முதலிய வேறுபாடானது புருஷர்களில் பிரகிருதி யென்னும் ஒரு தத்துவத்தில் மாத்திரம் இருக்கிற தென்றும், அப்படியே அந்தப் பிரகிருதியினின்றுமே புத்திரன் பௌத்திரன் முதலிய விஸ்தாரமும் உண்டாகின்ற தென்றும் எப்பொழுது பார்க்கிறானோ அப்பொழுதுதான் அளவற்ற ஞானமே வடிவமான ஆத்மாவை யடைவான்.] 31

“கௌந்தேயா! பரமாத்மா அநாதியாய் நாசரகிதனாய்க் குணரகிதனா யிருத்தலின், அந்தப் பரமாத்மா தேகாந்தர்க்கத னாயினுங் கர்மங்களைச் செய்பவ னல்லன்; கர்ம பலன்களை யனுபவிப்பவனு மல்லன்.” 32

“அர்ச்சுனா! ஆகாசமானது எங்கும் பரந்து எல்லா வஸ்துக்களோடுங் கூடி யிருக்கச் செய்தேயும், சூக்ஷ்மமாகையாலே எந்த வஸ்துவின் சுவபாவத்தோடுஞ் சேராம லிருப்பது போல், ஆத்மாவானது சூக்ஷ்ம மாகையால் தேவர் முதலிய சகல சரீரங்களிலும் இருந்த போதிலும் அவைகளின் சுவபாவத்தோடு ஒட்டமாட்டாது.” 33

“ஒரே சூரியன் தன் காந்தியால் இவ்வுலகங்க ளெல்லாவற்றையும் பிரகாசப் படுத்துவதுபோல் க்ஷேத்திரியான ஜீவனும் க்ஷேத்திரத்தை ‘இது என் க்ஷேத்திரம்’ ‘இது இப்படிப் பட்டது’ என்று உள்ளும் புறம்பும் எங்கும் கால் முதல் தலை வரையில் தன் ஞானத்தாலே பிரகாசிப்பிக்கின்றான். (ஆகையால், பிரகாசிக்கின்ற சகல லோகங்களைக் காட்டினும் பிரகாசிப்பிக்கும் ஆதித்தன் மிகவும் விலக்ஷணனா யிருத்தல்போல, அறியப்படும் க்ஷேத்திரத்தைக் காட்டினும் அறிகின்ற ஆத்மா மிகவும் விலக்ஷண னென்று தாத்பரியம்.”

"அர்ச்சுனா! மேற் கூறியபடி க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞர்களின் பேதத்தையும், க்ஷேத்ரஜ்ஞன் பிரகிருதியினின்றும் விடுபடுகை யையும், விவேக மென்னும் கண்ணினால் எவர்கள் அறிவார்களோ அவர்கள் கட்டினின்றும் விடுபட்டு ஆத்ம சுவரூபத்தை யடைவார் கள்; என்றால், க்ஷேத்ரத்தையும் க்ஷேத்ரஜ்ஞனையும் பகுத்தறியும் ஞானத்தால் அவைகளைப் பகுத்தறிந்து, தேவ மனுஷ்யாதி ரூபமாய் விகாரப்பட்டிருக்கும் பிரகிருதியினின்றும் விடுபடு முபாயமான அமாநித்வாதிகளையும் அறிந்து நடப்பவர்களாய்க், கட்டினின்று விடு பட்டவர்களாய்த் தானான தன்மையிலிருந்து ஞானமே வடிவா யிருக் கும் ஆத்மாவை யடைவார்கள்." 35

பதின்மூன்றாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.



# பதினான்காவது அத்தியாயம்

# குணத்ரய விபாக யோகம்

## அவதாரிகை

[பதின்மூன்றாவது அத்தியாயத்தில் ஒன்றோடொன்று கலந்த பிரகிருதியினுடையவும், புருஷனுடையவும், சுவரூபத்தின் உண்மையை யறிந்து, எம்பெருமானிடத்தில் பக்தியுடன் கூடி அமானித்வாதிகளாலே பந்தத்தினின்று விடுபடுகிறானென்று சொல்லப்பட்டது. அதில், பந்தத்துக்குக் காரணம் பூர்வீகமான சத்துவ முதலிய குண விகாரமான சுக துக்காதிகளாலுண்டான பற்றென்று சொல்லப்பட்டது. இப்பொழுது, குணங்கள் பந்தத்திற்கு உறுப்பாகுந் தன்மையும், அக் குணங்களை நிவர்த்தி பண்ணும் பிரகாரமும் கூறப்படுகின்றன.]

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"எதனை யறிந்ததனால் சகல மகரிஷிகளும் இந்தத் தேக சம்பத்தினா லுண்டாகின்ற அகப்பற்று புறப்பற்றுக்களை விடுத்துச் சர்வோத்தமமாகிய மோக்ஷ சித்தியை யடைந்தார்களோ, அவ்வாறாய அந்தச் சிரேஷ்டமான பலவித ஞானங்களி லுத்தமமான ஞானத்தை மீண்டுஞ் சொல்லுகின்றேன்." 1

## அர்ச்சுனன் வினா

"13-வது அத்தியாயத்தில், பிரகிருதி ஒன்றே யாதலால் ஜன்ம பேதங்கள் ஏன் உண்டாகின்றன வென்று கேட்டேன். அதற்குத் தேவரீர் 'குண பேதங்களால் யோனி பேதங்கள் உண்டாம்' என்று கூறி யிருந்தீர். அந்தக் குணபேதங்கள் எவை? அவற்றின் பெயர் என்ன? அவற்றின் காரியம் எப்படிப்பட்டவை? அவற்றிற்கு அப்பெயர் வருவதற்குக் காரணம் யாது? நன்மை தீமை யென்கிற ஜன்மங்கள் உண்டாதற்குக் காரணமென்ன? இஃதன்றி 27-வது சுலோகத்தில் சராசர பிரபஞ்சத்தி லிருக்கும் பொருள்களனைத்தும் க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ சம்யோகத்தால் உண்டாகு மென்றனை? க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ சம்யோக மென்றால் என்ன? அவற்றின் சேர்க்கை சொந்த மாகவே உண்டாகுமா? அல்லது பகவான் ஏற்படுத்துவானா?

ஸ்ரீ கிருஷ்ண பகவான் விடை

"அர்ச்சுன! நான் இப்பொழுது கூறப்போகும் விஷயம் 13-வது அத்தியாயத்தைப் பார்க்கினும் இன்னும் வேறானது. உணர்ந்துகொள்ள வேண்டியவைகளில் மிகவும் பெரிதானது. அதனை மீண்டும் கூறுகின்றேன். கூறப்படும் விஷயம் இலேசானதென்று மகத்தான ரிஷிகள் அதனை யறிந்து ஞானிகளாகி சம்சாரத்தை விட்டு மோக்ஷத்தை யடைந்திருக்கின்றனர். இப்பொழுது நாம் சொல்லப் போகிற இந்த விஷயமானது மிகவும் மோக்ஷத்திற் கனுகூலமானது. இந்த ஞானத்தை யடைந்து என்னோடு சமமானவர்கள், சிருஷ்டியி லும் சம்ஹாரத்திலும் அகப்பட மாட்டார்கள்." 2

"சகல ஜகத்திற்கும் பிறப்பிடமாய் 'மஹத் பிரம்மம்' என்று சொல்லப்பட்ட எனது பிரகிருதியினிடத்து ஜீவ னென்றும், சேதனத்தொகை யென்றும் கூறப்பட்ட மேலான பிரகிருதியானது சகல பிராணிகளுக்கும விரை முதலா யிருத்தலாலே கர்ப்பத்தைத் தரிக்கி றேன்; (என்றால், போக ஸ்தானமான அசேதனப் பிரகிருதியோடு போக்தாக்களின் தொகையான சேதனப் பிரகிருதியைக் கூட்டுகிறே மென்றபடி) இவ்வாறு என் சங்கல்பத்தால் ஒன்றோ டொன்று சேர்ந்த விரண்டு பிரகிருதிகளினின்றும் பிரமன் முதல் புல்லளவா யுள்ள சகல பூதப் பிரபஞ்சங்களு முண்டாகின்றன."

[கருத்து:—7-வது அத்தியாயத்தில் 4-வது சுலோகத்திற் கூறிய எட்டுவிதப் பிரகிருதி மகதகங் காரங்களுக்குக் காரணமாகலான் மகத் என்றும், இந்தப் பிரகிருதியைச் சுருதியிற் பிரம்மமாகவே கூறி யிருத்தலால் பிரம மென்றும் சொல்லப்படுகின்றது. இவ்வாறுள்ள அசேதனமான பிரகிருதியில் கர்ப்பத்தை வைக் கிறே னென்றால், 7-வது அத்தியாம் 5-வது சுலோகத்தில் கூறியவாறு சேதன சமூகமான (ஜீவக் கூட்டமான) பரப்பிர கிருதி சகல பிராணிகளுக்கும் விதையா யிருத்தலால் இந்தப் பரப்பிரகிருதி என்கிற சேதனனை அபரப்பிரகிருதி என்கிற அசேதனப் பிரகிருதியோடு கூட்டி வைக்கிறே னென்பது கருத் தாகும். என் சங்கற்பத்தா லுண்டான இவ் விருவிதப் பிர கிருதியின் சேர்க்கையால் பிரமன் முதல் கிருமிவரையிலு முள்ள சகல பூதங்களு முண்டாகின்றன.]

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"எனது அதீதமாகிய மாயை சகல பூதங்களுக்குங் காரணம்; அது காரிய ரூபமான பிரபஞ்சத்

தைக் காட்டினும் பெரியதானமையாலும், மகத் என்னும் காரிய விருத்திக் கேது வாதலாற் பிரமம் என்றும் சொல்லப் படுகின்றது. அதிற் சகல பூத சிருஷ்டிக்குங் காரணமான இரணிய கருப்பனது உற்பத்திக்குங் காரணமான விதையைப் போடுகின்றேன். அதுதான் கருப்பத்தை வைக்கிறே னென்பது. க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞர்களாகிய இரண்டு சக்திகளை யுடைய ஈசுவரனாகிய நான், அவித்தை, காமம், கருமம் ஆகியவற்றோடு ஒட்டி யிருக்கின்ற க்ஷேத்திரஜ்ஞனை க்ஷேத்திரத்தோடு சேர்க்கின்றேன். அந்த இரணியகருப்பன் மூலமாகச் சகல பிராணிகளும் உற்பத்தி யாகின்றன." 3

"ஓ! கௌந்தேயா! சகல யோனிகளிலும் எந்த ஸ்தாவரமும் ங்கமுமான வஸ்துக்கள் உற்பத்தி யாகின்றனவோ அவற்றிற்குப் ரகிருதி தாய். நான் விதை போட்ட தந்தை."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"தந்தையினது ரேதஸாகிய சுக்கிலம் பெரும்பான்மை அறிவும், தாயினது சுரோணிதமாகிய உதிரம், பெரும்பான்மை தேகமு மாவதுபோல, ஆன்மாவே தாம் போட்ட விதையாகவும், தேகாதி பிறவனைத்தும் பிரகிருதியினின்று தோன்றியதாகவும், இவ் வுண்மையைத் தந்தை தானென்ற தானே விளக்கிய தறிக. அன்றியும், தாயினது கர்ப்பமானது பீஜத்தை ஆசைப்பட்டு நிற்குந் தருணத்தில் அப் பீஜத்தைக் கருப்பத்திற் கிடமாகி உதவித் தாயினது சுரோணிதமாகிய உடலோடுந் தந்தையினது சுக்கிலமாகிய உயிரைச் சேர்ப்பதுபோல, பரமேசுவரனாகிய நான் அவா ரூபமான பிரகிருதியி லிருக்கும் உடலோடு எனது அம்சமாகிய உயிரைச் கூட்டி வைக்கிறே னென்பதுந் தோன்றுமா றறிக. அல்லாமல், ஆலம் விதை முளைத்தும் தருவானபோது அது ஆல மரமே யாவதுபோல, பரமாத்மாவினது விதை முளைத்துப் பரமாத்மாவே யாகு மென்பதுந் தோன்றுமா றுணர்க."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"தேவர், கந்தருவர், யக்ஷர், இராக்ஷஸர், மனிதர், பசு, மிருகம், பக்ஷி, பாம்பு முதலிய யோனிகளில் உண்டாகின்ற அந்தந்த சரீரங்களுக்கும் பிரமமென்கிற பிரகிருதிதான் காரணம். (என்றால், என்னால் சேர்க்கப்பட்ட சேதன வர்க்கங்களோடுகூடி மகத்து முதல் விசேஷத் தளவான நிலையிலுள்ள பிரகிருதிதான் காரண மென்றபடி.) மேலும், அவைகளுக்கும் விதித்திடும் பிதாவும் நானே. (என்றால், ஆங்காங்கும் அந்தந்தக் கருமத்திற்குத் தக்கபடி சேதன வர்க்கங்களைச் சேர்ப்பவனும் நானே) யென்றபடி.] 3

"ஓ! பெரிதான கைகளை யுடையவனே! பிரகிருதியி லுண்டாகிய சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம் என்கிற குணங்கள் சரீரத்தி லிருக்கிற அழிவில்லாதவனாய் ஜீவாத்மாவைக் கட்டுப் படுத்துகின்றன."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"பிரகிருதியின் ரூபத்தோடு சேர்ந்த சுவபாவ விசேஷங்களாயும் பிரகாச முதலிய காரியங்களைக் கொண்டே நிரூபிக்கக் கூடியவைகளாயும் பிரகிருதியாக விருக்கும் நிலையில் பிரகாச மில்லாமல் அதன் விவகாரங்களாகிய மஹான் முதலிய வஸ்துக்களின் பிரகாசத்தை யடைந்தவைகளாயு மிருக்கிற சத்துவம், ராஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களும், மஹான் முதல் பஞ்ச பூதங்கள் வரையிலு முள்ள வஸ்துக்களா லுண்டாக்கப்பட்ட தேவன், மனுஷ்யன் முதலிய தேகங்களோடு சேர்ந்தவனாயும், சுவபாவத்தில் அந்தக் குணங்களோடு சேர்வதற்குத் தகாதவனாயும், இந்தத் தேகத்தி லிருந்து கொண்டிருக்கிற ஜீவாத்மாவைக் கட்டுப் படுத்துகின்றன; அதாவது, தேகத்தி லிருப்பதாகிய காரணத்தினால் கட்டுப்படுத்துகின்றன."]

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"ஆத்மா ஒன்றிலும் ஒட்டுகிறதில்லை யென்று முன் சொல்லப்பட் டிருக்கிறது. சுக துக்க மோகாதிகளினால் கட்டுப்படுகிறா னென்றதனால், குணங்களிலும் அவைகளின் காரியங்களிலும் ஒட்டுகிறா னென்றாகிறதே யென்றால், ஆத்ம சுவபாவமானது ஒன்றிலும் பற்றுதலை யுடையதே யல்ல; ஆனால், தேகசம்பந்த முண்டான நிமித்தத்தினால் அவன் கட்டுப்படுகிறதுபோல் காணப்படுகிறான்." 5

"அர்ச்சுனா! அந்தச் சத்துவம், ரஜசு; தமசு என்னுங் குணங்களில் சத்துவகுணம் சுவச்சமானது, நிர்மலமாகப் பிரகாசிப்பது; உபத்திரவ ரகிதமானது; அந்தச் சத்துவகுணம் க்ஷேத்திரஜ்ஞனைச் சுகத்தோடும் ஞானத்தோடும் சேர்க்கின்றது." 6

"ஓ! குந்தி புத்திரா! இரஜோ குணத்தை இச்சா சொரூபமானதாயும், கிடையாத வஸ்துவி லாசையும் கிடைத்த வஸ்துவி லபிமானத்தையு முண்டாக்கப் பட்டதாயும் அறி. அந்த ரஜோகுணம் கருமசம்பந்தத்தாலே தேகியைக் கட்டுகின்றது."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"இரஜோ குணமானது இராகத்திற்கும் அதாவது (ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒன்றுக்கொன்று உண்டான ஆசை,) திருஷ்ணைக்கும் அதாவது (சப்தாதி விஷயங்க ளெல்லாவற்றிலு முண்டான ஆசை) சங்கத்

திற்கும் அதாவது (புத்திர மித்திராதிகளைக் கட்டி யணைக்க வேண்டு மென்னு மாசையும்) உற்பத்தி ஸ்தானமா யிருக்கும். அவ்வாறே சரீரத்தை யெடுத்திருக்கும் புருஷனைக் கிரியைகளில் ஆசையை யுண்டு பண்ணுவித்து அவ் வழியே கட்டுப்படுத்தும் (என்றால், ஆசையோடு கூடி எந்தெந்தக் கிரியைகளைச் செய்ய ஆரம்பிக்கின்றானோ அவைகள், புண்ணியம் அல்லது பாபரூபமா யிருக்கு மாகையாலே அவற்றின் பலனை யநுபவிப்பதற் கென்று எற்பட்ட யோனிகளில் பிறப்பதற்குக் காரணமாகின்றன.) ஆகையால், ரஜோகுணமானது கர்மத்தில் பற்றை யுண்டுபண்ணி ஆத்மாவைக் கட்டுப்படுத்து மென்றபடி.”]

[கருத்து:—தலைவி தலைவனுக்குள் பரஸ்பர ஆசை, வஸ்துக்களி லாசை, புத்திர களத்திராதிகளி லாசை, கருமஞ் செய்யவேண்டு மென்கிற ஆசை என்றால், ஆசையினால்தான் (ஆத்மா செய்கிற) புண்ணிய பாப கருமங்கள் அவைகளின் பலன்களை யனுபவிக்க ஜன்மங்களை யுண்டாக்குகின்றன. இந்த இரஜோகுணமானது ராக, த்ருஷ்ணை, கர்ம, ஸங்க ஆகிய இந் நான்கு வித ஆசைகளுக்கும் எதுவான தென்று அறியத்தக்கது. தமோகுணமோ (ஒரு படியாயிருக்கும் வஸ்துவை அதற்கு விரோதமானதா யறிவ தென்கிற) அஞ்ஞானத்தா லுண்டான தாகையால் சகல பிராணிகளுக்கும் வித்தியாசமான ஞானத்தை யுண்டு பண்ணும். இது பிரமாதம், ஆலஸ்யம், நித்திரை இவைகளுக்கும் காரண மாய்க்கொண்டு சரீரமெடுத்த ஜீவனைக் கட்டுப்படுத்துகிறது: அதாவது, ‘பிரமாதம்’ என்பது செய்ய வேண்டியதைத் தவிர மற்றொன்றைச் செய்வது. ‘ஆலஸ்யம்’ என்பது கர்மத்தை ஆரம்பஞ் செய்யாம லிருத்தல். ‘நித்திரை’ என்பது இந்திரியங் களைப் பிரவிர்த்திக்கச் செய்கின்ற புருஷன் அடங்கிப் போவ தனால் சகல இந்திரியங்களும் அடங்கிப் போதல். அதில் புறம்பா யுண்டான இந்திரியங்கள் மாத்திரம் அடங்கினால் அது சுவப்பனம்; மனதும் அடங்கினால் அது சுழுத்தி, அதாவது நல்ல தூக்கம்.] 7

“அர்ச்சுனா! தமோகுணமானது அஞ்ஞானத்தாற் பிறந்தது: அது எல்லாப் பிராணிகளையும் மோஹிக்கச் செய்கின்றது: அந்தக் குணம் தேகியை ஆலசியத்துடனும், நித்திரையுடனும், அஜாக்கிர தையுடனும் பந்தஞ் செய்கின்றது.”

“சத்துவத்திற்குப் பிரதானம் சுகத்தோடு சேர்ப்பிக்கை; இர ஜோகுணத்திற்குப் பிரதானம் தருமத்தோடு சேர்ப்பிக்கை: தமோ

குணத்திற்குப் பிரதானம் வஸ்துவை யுள்ளபடியே யறிய வொட்டாமல் தடுத்து விபரீத ஞானத்தை விளைவித்துச் செய்ய வேண்டியதை விட்டு விபரீதத்தோடு சேர்ப்பிக்கை.''

"ஓ! அர்ச்சுனா! சத்துவ குணமானது இரஜோகுணத்தையும் தமோ குணத்தையும், இரஜோ குணமானது சத்துவ குணத்தையும் தமோ குணத்தையும், அவ்வாறே தமோ குணமானது சத்துவ குணத்தையும் இரஜோ குணத்தையும் நிராகரித்து (அடக்கி) உண்டாகிறது. (தலை யெடுக்கிறது.)''

[உள்ளுரை:—''ஒவ்வொரு பிராணிகளிடத்திலு முள்ள சத்துவ ரஜஸ் தமோ குணங்கள் மூன்றில் எந்தக் குணம் எந்தக் காலத்தில் மேலிடுகின்றதோ அப்பொழுதே அந்தக் குணம் மற்றைய இரண்டு குணங்களையும் அடக்கித் தனது காரியங்களையே அதிகமாகச் செய்விக்கும்; எவ்வாறெனில், சத்துவகுணம் மேலிட்டால் சுகத்தையும் ஞானத்தையு முண்டாக்கும். இரஜோ குணம் மேலிட்டால் கருமத்திலே அதிகப் பிரவிர்த்திமை யுண்டாக்கும். தமோகுணம் மேலிட்டால் அஜாக்கிரதை சோம்பல் நித்திரை ஆகியவற்றை அதிகமா யுண்டாக்கும்.''] 10

"பூர்வ கர்மாநுசாரத்தாலும், ஆகாராதி பேதத்தாலும் இக் குணங்களி லொன்று மேலிடுகின்றது. கண் முதலியன சகலமான ஞான மார்க்கங்களிலும் வஸ்துவை யுள்ளபடியே பிரகாசிப்பித்துக் கொண்டு எப்பொழுது ஞான முண்டாகிறதோ அப்பொழுது சரீரத்தில் சத்துவம் தலையெடுத் திருக்கிறதென்று அறியத்தக்கதாம்.'' 11

"லோப மென்றால், தன் பொருளைக் கொடுப்பதென்றால் கூடாதென்கிற சுவபாவமும், யாதொரு பயனு மில்லாமலே சலிக்கும் சுவபாவமும், பல சாதனங்களான கருமங்களைச் செய்யத் தொடங்குவதும், இந்திரியங்கள் அடங்காமையும், விஷயத்தில் ஆசையும் இவை யாவும் இரஜோகுணந் தலையெடுத்தபோது உண்டாகின்றன. (லோபம் முதலிய சுவபாவங்க ளிருக்கும்பொழுது இரஜோகுணம் விருத்தியா யிருக்கிறதென்று அறியத்தக்கது.)'' 12

"ஞானம் உண்டாகாமையும், பிரவிருத்தி யுண்டாகாமையும், காரிய மில்லாத காரியத்தில் பிரவிருத்திப்ப தென்கிற அனவதானமும், விபரீதக்ஞானமும் இவை யாவும் தமோகுணம் விருத்தியாகும் பொழுது உண்டாகின்றன; இவைகளைக் கொண்டு தமசு விருத்தியாகின்றது.'' 13

"சத்துவகுணம் விருத்தியான காலத்தில் மரண மடைபவன் ஆத்மாவின் உண்மையை யறிந்து அஞ்ஞானங் கழிந்தவர்களின் கூட்டத்திற் போய்ச் சேருகிறான் என்று கூறினால், சத்துவம் தலையெடுத்தபோது இறந்தவன் ஆத்ம ஞானிகளின் குலத்தில் பிறந்து ஆத்மாவின் உண்மையான சுவரூபத்தை யறிய வேண்டும் சாதனங்களான புண்ணிய கருமங்களி லீடுகின்றான்." 14

"இராஜோகுணம் தலையெடுத்தபோது மறித்தவன் பலனைக் குறித்துக் கருமஞ் செய்பு மவர்களின் குலத்தில் பிறக்கிறான் என்றால், பிறந்து சுவர்க்கம் முதலிய பலன்களைச் சாதிக்குங் கருமங்களைச் செய்கிறான். தமோகுணந் தலையெடுத்தபோது இறந்தவன், நாய், பன்றி முதலிய மூட யோனிகளில் பிறக்கிறானென்று கூறினால் ஒரு பயனைக் குறித்தும் ஆரம்பிக்காதபடியாய்ப் பிறக்கிறான்." 15

"இவ்வாறு சத்துவம் விருத்தியா யிருக்கையில் மரணமடைந்து ஆத்ம ஞானிகளின் குலத்திற் பிறந்தவன், பலனில் அபேக்ஷையின்றி நம்முடைய ஆராதன ரூபமாகக் கர்மஞ் செய்துவந்து மறுபடியும் அதைக் காட்டினும் அதிகமான சத்துவத்தா லுண்டானதாய், நிர்மல மானதாய், துக்கலேசமு மற்றதா யிருக்கும் பலனை யடைகிறானென்று சத்துவகுணத்தில் பரிணாமத்தை யறிந்தவர்கள் சொல்லுவார்கள். அந்திம காலத்தில் விருத்தியான இராஜோகுணத்திற்குப் பலன், பல சாதனங்களான கர்மத்தில் பற்றுடையவர்களின் குடியிற் பிறப்பும், பலாபேக்ஷையுடன் கூடிய கர்மத்தைச் செய்கையும், அதன் பலனை யனுபவிப்பதற்காக மறு பிறப்பும், இராஜோகுண விருத்தியும், மீண்டும் பலாபேக்ஷையுடன் கருமத்தில் பிரவிருத்தியும் என்றிவ்வாறு சம்சார துக்க பரம்பரையா யிருக்குமென்று இராஜோ குணத்தின் உண்மை யறிந்தவர் சொல்லுவார்கள். இவ்வாறு அந்திம காலத்தில் விருத்தி யடைந்த தமசிற்குப் பயனும் அதிக அஞ்ஞான பரம்பரையா யிருக்கு மென்பார்கள்." 16-17

"இவ்வாறு பரம்பரையாய் அதிகமா யுண்டான சத்துவ குணத்தால் ஆத்மாவின் உண்மையான சுவரூபம் பிரத்தியக்ஷமாய் விளங்கும். அவ்வா றுண்டாகும் இராஜோ குணத்தால் சுவர்க்காதி பலன்களில் ஆசை உண்டாகும். அவ்வா றுண்டான தமோ குணத்தால் பிரமாதமும், அதற் கடியான அசத் வியாபாரத்தில் பிரவிருத்தியும், அதனால் விபரீத ஞானமும், அதனால் அஞ்ஞானமு முண்டாகும்."

[கருத்து:—“சத்துவ குணத்தை யடைந்திருப்பவர்கள் மேலான லோகத்தை யடைகின்றார்கள். இரஜோ குணமுடையவர்கள் மனுஷ லோகத்தி லிருக்கின்றார்கள். நீச குணத்திற் பிரவிர்த்தி யுடைய தமோகுண முடையவர்கள் கீழ் லோகத்தை அல்லது நரகத்தை யடைகின்றார்கள். மேற் கூறியபடியே சத்துவ குணத்தி லிருப்பவர்கள் வரவர மேலே போகின்றார்கள்; அதாவது, சம்சாரத்தி னின்றும் மோக்ஷத்தை யடைகின்றார்கள்; இரஜோகுணம் சுவர்க்கம் முதலிய பலன்களில் ஆசையை விளைவிக்கு மாகையால், அக்குணத்தி லிருப்பவர்கள் பலத்திற்குச் சாதனமான கர்மத்தை யனுஷ்டித்து அதன் பலனை யனுபவித்து, மறுபடியும் பிறந்து அதே கருமத்தை யனுஷ்டிக்கிறார்கள்; ஆகையால், அவர்கள் மத்தியி லிருக்கிறார்கள். தமோ குணத்தை யுடையவர்களோ மேன் மேலும் இழிவான விருத்தியைச் செய்து வந்து கீழே போகிறார்கள்; அதாவது, சண்டாளனாய்ப் பிறத்தல், அதன்பின் விலங்காய்ப் பிறத்தல், அதன் பிறகு பூச்சி புழுவாய்ப் பிறத்தல், தாவரமா யிருத்தல், அதற்குப் பிறகு கொடியும் புதருமா யிருத்தல், அதற்குபபின் கல், கட்டை, மண்ணாங்கட்டி முதலானவைகளா யிருத்தல் முதலிய அதோகதியை யடைகிறார்கள்.”] 18

“விவேகியானவன் புத்தியாதி ஆகாரங்களாய்ப் பரிணமித்திருக்கின்ற குணங்களை யன்றி, வேறொருவனைக் கருத்தாவாக எப்போது அறிகிற தில்லையோ, ஆத்மாவைக் குணங்களினின்றும் அந்நியனாக அறிகின்றானோ, அந்த விவேகி எனது சொரூபத்தை யடைகிறான்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“குணங்களே சகல கருமங்கட்கும் கர்த்தா. நான் குணாதீதனாகையால் கருமங்களும் கருமப் பயன்களும் என்னை யொட்டுவ தின்றெனத் தெளிந்தவன் பிரம்மமாகின்றான்.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“சாத்வீகமான ஆகாரத்தை சேவிப்பதாலும், பலாபேக்ஷை யற்று எம்பெருமானுடைய ஆராதன ரூபமாகக் கர்மானுஷ்டானம் செய்வதாலும், ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் சுத்தமாய் அடக்கி உத்கிருஷ்டமான சத்துவத்தி லிருந்து ஆத்ம சுவரூபத்தைப் பார்க்கின்ற இவன், குணங்கள்தான் அவற்றிற்கு அனுகுணமான பிரவிர்த்திகளைச் செய்கின்றன என்றும், அவ்வாறே குணங்களுக்குப் பரனான ஆத்மா கர்த்தாவல்ல னென்றும் எப்பொழுது பார்க்கிறானோ

அப்பொழுது அவன் நம்முடைய சுவபாவத்தை யடைவான்
என்று கூறினால், சுவபாவத்தில் பரிசுத்தமான ஆத்மா கர்த்
தாவா யிருப்பதெல்லாம் பூர்வ கர்மமடியாக வரும் குண சங்கத்
தால் வந்தது; ஆத்மாவோ சுவபாவத்தில் கர்த்தாவல்லன்; அள
வற்ற ஞானமே வடிவா யிருப்பவன் என்று எப்பொழுது
அறிகிறானோ அப்பொழுது அவன் நமக்குச் சமமாகிறா னென்ற 19
படியாம்.”]

“சரீர மெடுத்திருக்கும் பொழுதே சரீராகாரமாய் விகாரப்பட்
டிருக்கும் பிரகிருதியினின்று முண்டான இந்தச் சத்துவம் முதலிய
குணங்கள் மூன்றையுங் கடந்து, அவைகளைக் காட்டிலும் வேறாய்
ஞானமே வடிவான ஆத்மாவைக் கண்டவன்: பிறப்பு, இறப்பு, மூப்புக்
களா லுண்டான துயரங்களினின்று விடுபட்டவனாய், பிறகு அமிர்த
மான ஆத்ம சுவரூபத்தை யனுபவிப்பான்.” 20

## அர்ச்சுனன் வாக்கியம்

“கிருஷ்ணா! சத்துவம் முதலிய இக் குணங்களைக் கடந்தவன்
எவ்வித லக்ஷணங்களுடன் கூடி யிருப்பான்? எவ்வித ஆசாரத்தோடு
கூடியவன்? இந்தச் சத்துவம் முதலிய குணங்களை அவன் எவ்வித
உபாயத்தாலே கடக்கின்றான்?” 21

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

“அர்ச்சுனா! ஆத்மாவை யொழிந்த மற்றவைகளுள் அநிஷ்ட
வஸ்துக்களில் பிரவிருத்தி யுண்டானால், இவை பிரகாசம், பிர
விருத்தி, மோஹம் என்கிற சத்துவாதிகுண காரியங்க ளென்று
நினைத்து அவன் அவைகளைப் பகைக்கமாட்டான். அவ்வாறே இஷ்ட
வஸ்துக்களில் நிவிருத்தி யுண்டானால் அவைகளே நிவிருத்தங்களாய்
விட்டன என்று நினைத்தவனாகையாலே அவைகளைக் கோரவு மாட்
டான்.” 22

“குணாதீதமான ஆத்ம வஸ்துவைக் காண்பதனா லுண்டான
திருப்தியால் இதர விஷயங்களில் தட்டாம லிருப்பவனாகையால்,
குணங்களைக் கண்டு விரும்பவாவது, வெறுக்கவாவது மாட்டான்.
குணங்கள், தம் காரியங்களான பிரகாசம் முதலியவைகளைச் செய்
கின்றன வென்று நினைத்தவனாய் எவன் வெறுமனே யிருக்கின்றானோ,
அவன் குணங்களின் காரியத்திற்குத் தக்கபடி அவை யிழுத்த வழி
செல்லவு மாட்டான்.” 23

"மேலும், இன்பத்துன்பங்களில் சமசித்தனுய்த், தன்னுள் தான் இருப்பவனுய், அதாவது ஆத்மாவே பிரியமா யிருக்கையாலே அதை யொழிந்த புத்திராதிகளின் பிறப்பு, இறப்பு முதலிய சுக துக்கங்களில் சம சித்தனுய், ஆனதுபற்றியே மண்ணுங்கட்டி, கல், பொன் ஆகியவற்றைச் சமமாக நினைத்தவனுய், அதே காரணத்தாலே பிரியமும் அப்பிரியமும் துல்லியமா யிருப்பவனுய், பிரகிருதியையும் ஆத்மாவையும் பிரித்தறிவதில் நிபுணனுய், தன்னிடத்தி லுண்டான மானிடத்தன்மை முதலிய அபிமானத்தால் வருங் குணகுணங்களைப் பற்றி நிந்தித்தாலும் துதித்தாலும் தனக்கு அக் குணகுணங்களின் சம்பந்த மில்லை யென்கிற எண்ணத்தால் இரண்டையும் சமமாக நினைப்பவனுய், அந்த ஸ்துதி நிந்தைகளால் வரும் மானுவமானங்களிலும் அவற்ருல் வரும் சத்துரு மித்திர பக்ஷங்களிலும் தனக்குச் சம்பந்தமில்லை யென்கிற அந்த எண்ணத்தைக் கொண்டே அவைகளைச் சமமாய் நினைப்பவனுய், அப்படியே தான் சரீரத்தை யெடுத்திருப்பதால் வரும் எந்த வியாபாரங்களையுஞ் செய்யத் தொடங்காமலிருப்பவனு யிருக்குமவன் யாவன் அவனே குணங்களைக் கடந்தவனுவான்." 24-25

"எவன் என்னையே சலியாம லிருக்கின்ற பக்தி யோகத்தாலே உபாசிக்கின்ருனே அவன் இந்த முக்குணங்களை அதிக்கிரமித்துப் பிரமப்பிரிய னுகிறதற்கு யோக்கிய னுகின்ருன்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"எந்த யதி அல்லது கருமி சகல பூதங்களின் இருதய வாசியான ஈசுவரனும் நாராயணனுமான என்னை ஒரு பொழுதும் வேறு விஷயங்களிற் பிரவிர்த்தியின்றிப் பஜிப்பதாகிய யோகத்தாலே, என்ருல், விவேக விக்ஞான மாகிய யோகத்தாலே (ஐக்கியானு சந்தானத்தாலே) உபாசிக்கின்ருனே அவன் பகவத் அனுக்கிரகத்திற்குப் பாத்திரனுகக் குணங்களை அதிகரித்துப் பிரம பவனமாகிய மோக்ஷத்தை யடைய யோக்கிய னுகின்ருன்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"பிரகிருதியையும் ஆத்மாவையும் பிறித்தறிவதால் மாத்திரம் குணநாசம் பிறக்க மாட்டாது. ஏனென்ருல், அது அநாதிகாலமாய்த் தொடர்ந்த விபரீத வாசனையால் பாதிக்கப்படுமென்ருே? மற்றப்படி சத்திய சங்கற்பனுய் பரம காருணிகனுய், ஆஸ்ரித வாத்சல்லிய சாகரமாயிருக்கும் நம்மை ஏகாந்தமான பக்தி யோகத்தால் எவன் இடை விடாமற் சேவிக்கிருனே அவன் ஒருவராலு மொழிக்கப் போகாத இந்தச் சத்துவாதி குணங்களைக் கடந்த பிரம்ம

பாவத்தை யடையும்படியான நிலைக்கு வருவான். அதாவது, அமிருதமான ஆத்மாவின் உண்மையான சுவரூபத்தை யடைவா னென்றபடி.'']

26

''பரமாத்மாவின் விக்கிரக ரூபமும், சாசுவதமான மோக்ஷத்திற்கு ஆச்சரியமும், நித்தியமான தர்மத்திற்கு மூலஸ்தானமும், மோக்ஷ சுகத்திற்கு ஆச்சிரயமும் நானே யென்று தெரிந்துகொள்வாயாக.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—''பரமேசுவரோபாசனையே பிரமோபாசனை யெனப்படுவதாலும், என்னை யுபாசித்தவர்கள் முக்குணங்களைக் கடந்து பிரஹ்ம மாவார்க ளென்றதாம். சொரூப விசாரமாகிய தத்துவ ஆராய்ச்சியினாற் பிறக்கும் உத்தமமாகிய ஆத்ம ஞானமானது அதிதீவிரதர பக்குவமுடைய அதிகாரிகட்சன்றி ஏனையோர்க்கு அருமைத்தாகலின், சர்வ ஜனோபகாரமாகவும், சர்வமத சம்மதமாகவும், யாவருந் தெரிந்து உய்யு மார்க்கத்தில் இதனைச் சிறப்பாக வைத்து இவ் வத்தியாயத்திற் கூறியதென்க.'']

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—''நம்மை விட்டு நீங்காத பக்தி யோகத்தால் நாம் சேவிக்கப்பட்டால் அமிருதமாய் அவ்யயமாயிருக்கும் ஆத்மசுவரூபத்தை நிலைப்பிக்கின்றேன்; அவ்வாறே அதிசயமான நித்ய ஐசுவரியத்தையும் ஏகாந்த இன்பத்தையும் அளிக்கின்றேன்; அதாவது, குணநாசம் பிறப்பதற்கும் அதன் மூலமாய் அக்ஷரம் ஐசுவரியம் பகவத் பிராப்தி இவைகள் கிடைப்பதற்கும் அவன் திருவடிகளில் செய்யும் பரம பக்தியே உபாயமாகக் கடவதென்று சொல்லுகையாலே, குணநாசமும் அத்துடன் வரும் பகவத்பாவமும் ஏகாந்தமான பகவத் பிரபத்தியா லுண்டாகு மென்றதாயிற்று.'']

27

பதினான்காவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

## பதினைந்தாவது அத்தியாயம்

# புருஷோத்தம ப்ராப்தி யோகம்

---

### அவதாரிகை

[க்ஷேத்திர அத்தியாயத்தில் க்ஷேத்திரமென்றும் க்ஷேத்திரஜ்ஞனென்றுஞ் சொல்லப்பட்ட பிரகிருதி புருஷர்களின் சுவரூபத்தைச் சோதித்து, பரிசுத்தமாய் அளவற்ற ஞானமே வடிவமாயுள்ள ஆத்மாவிற்கு (குண சம்பந்தப் பிரவாஹமடியாய்த் தேவாதிரூபமாய் விகாரப்படுகிற) பிரகிருதி சம்பந்தமானது அநாதியென்று சொல்லப்பட்டது. அதற்கடுத்த அத்தியாயத்தில் புருஷனுக்குக் காரியம் காரணமென்கிற இரண்டு நிலைகளிலும் குண சம்பந்தத்தால் வரும் பிரகிருதி சம்பந்தமானது பகவானாலேயே செய்யப்பட்டதென்று சொல்லி, குணஸங்கத்தின்படியை சவிஸ்தாரமாக உபாசித்து, குணசம்பந்த மற்ற ஆத்மாவின் உண்மையான சுவரூபத்தை யடைவதும் எம்பெருமான் திருவடிகளில் செய்யும் பக்தியால் வரத்தக்கதென்றும் அருளப்பட்டது. இப்பொழுது பஜநீயனாகிய பகவானுடைய 'க்ஷரம், அக்ஷரம்' என்கிற பக்த முக்தராளாகிற ஐசுவரியத்தையும், ஐசுவரிய பூதர்களான அந்த க்ஷரம் அக்ஷரம் என்கிற இருவகைப் புருஷர்களைக் காட்டிலும் சகல ஹேயங்களுக்கும் எதிராய்க், கல்யாணமே சுவரூபமாய், மிகவும் சிறந்ததாய், லோகாதாரமா யிருக்கும் தத்துவந்தான் புருஷோத்தம தத்துவ மென்பதையு மருளிச் செய்யத் தொடங்குகிறார்.]

### ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"மேலான புருஷோத்தமனாகிய நாராயணனை மூலமா யுடையதும், கீழ்ப்பட்ட பிரம்மாதிகளைக் கிளைகளாக வுடையதுமா யிருக்கிற ஸ்திர மில்லாத சமுசாரமாகிய அரசமரத்தை நாசமற்றதாக வேதங்கள் சொல்லுகின்றன. வேதங்கள் எந்தச் சமுசார விருக்ஷத்திற்கு இலைகளோ, அந்த விருக்ஷத்தை எவன் அறிகிறானோ, அவன் வேதாந்தத்தை யறிந்தவன்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"கர்மானுஷ்டான முள்ளவர்கட்கும் ஞானிகட்கும் அவரவர்களது அனுஷ்டானத்தினால் ஏற்படும் பலன் தனது அதீனமாய தென்பதையும், பக்தி யோகத்தால்

தன்னைத் தோத்திரஞ் செய்கிறவன் தனது பிரகாசத்தாலே முறைமுறையே பிரமஞானத்தை யடைந்து குணாதீதனாய் மோக்ஷமடைகிறானென்பதையும் முன்னர்க் கூறிய அத்தியாயத்தில் பகவான் அருளினார். இப்பொழுது அர்ச்சுனன் கேளாதிருக்கவும், தனது உண்மைச் சொரூபத்தைப் பகவான் விருக்ஷ ரூபமாக வர்ணித்துச் சொல்லுகின்றார். எவ்வாறெனின், காலத்தினால் சூக்ஷ்மமாயும், நித்யமாயும், சகலத்திற்குங் காரணமாயும், அவ்யக்தமென்னும் மாயையைச் சக்திபாக வுடையதாயு மிருக்கின்ற பிர்மம்; அவ்வாறான பிரமத்தை மூலமாக வுடைய சம்சார விருக்ஷம்: மகதத்துவம் அகங்கார தத்துவம், பஞ்ச பூதங்கள் சப்தாதி விஷயங்கள் ஆகியவற்றைக் கிளைகளாக வுடையது. இந்தச் சம்சார மாயாசொரூபம் நாசமற்றது. எவ்வாறெனின், மாயை அநாதி யாகையால், அந்த மாயா மயமான சம்சாரமும் ஆதியு மந்தமு மற்ற தொடர்ச்சியை யுடையது. எந்தச் சம்சார விருக்ஷத்திற்கு வேதங்கள் இலைகள் போன் றிருக்கின்றனவோ என்பது எங்ஙனமெனின், மரத்தை இலைகள் எவ்வாறு சூரிய வெப்பத்தி னின்றும் பாதுகாக்கின்றனவோ, அவ்வாறே வேதங்கள் தருமா தருமங்களை வெளிப்படுத்திச் சுகத்தை யடையவும் துக்கத்தை நிவர்த்திக்கவும் வழி காட்டுதலால் இவ்வாறாகச் சொல்லப்பட்டன. இவ்வாறு சமூலமான சம்சார விருக்ஷத்தை எவனறிகின்றானோ அவன் வேதார்த்தத்தைப் பூரணமாகக் கவனித்தவன்; என்றால், பிரமமாகிய பிரபஞ்சத்தையும் அறிந்த சர்வக்ஞனாகின்றான் உலகத்தில் பல விருக்ஷங்களிருக்க, அசுவமரத்தைக் கூறுவது என்னையோ வெனின், அடுத்த நிமிஷத்தி லிருக்கின்றதன் றென்னும் பொருளைப் பயப்பிக்கின்ற படியாலும், சம்சாரமும் அத்தகைய சுவபாவ முடைமையாலும் அசுவத்தமென்று சொல்லப்பட்டது.

இதன் கருத்து நரசிம்ம புராணத்தில் கூறப்பட்டுள்ளது. அதாவது, அவ்யக்தமாகிற வேரிலிருந்து உண்டானதும், அந்த அவ்வியக்தத்தினுடைய ஒத்தாசையினால் ஓங்கி வளர்ந்ததும், புத்திகளாகிற கிளைகள் நிறைந்ததும், இந்திரியங்களில் துவாரங்களாகிற பொந்துகளை யுடையதும், பஞ்ச பூதங்களாகிற பக்கக் கிளைகளை யுடையதும், சப்த முதலிய விஷயங்களினால் இலைகளையும் கிளைகளையு முடையதும், தர்மம் அதர்மங்களாகிற புஷ்பங்களை யுடையதும், சுகம் துக்கம் ஆகிய பழங்கள் உண்டாக்கக் கூடியதும், எல்லாப் பிராணிகளும் அடையக் கூடியது மாகிய அநாதியாகிய பிரம்ம விருக்ஷப் பிரகிருதியாகிய விருக்ஷம் அந்தப் பிரகிருதியாகிய மரத்திற்கு இந்தப் பிரகிருதியே

காடும், அப்படிப்பட்ட இந்த மரத்தை ஞானமாகிற உயர்ந்த கத்தியினால் வெட்டியும், பிளந்தும் அதனாலேயே ஆத்மாவி னிடத்திலாசையை யடைந்து எதிலிருந்து மீண்டும் திரும்புகிற தில்லையோ அப்படிப்பட்ட ஆத்மாவை யடைகிறான்."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞர் களைக் குறித்துச் சொன்ன 13-வது அத்தியாயத்தில் பிரகிருதி புருஷர்களுடைய சுவரூபத்தை விசாரித்து பரிசுத்தனும் பரி பூர்ண ஞானைகாரனுமான ஜீவனுக்குப் பிரகிருதி சம்பந்தமான குணத்திரயங்களையுடைய பரம்பரா சம்பந்தத்தினா லுண்டான தேவ மனுஷ்யாதி சரீர ரூபமாயுள்ள பிரகிருதி சம்பந்தமானது அநாதியென்று சொல்லப்பட்டது. 14-வது அத்தியாயத்தில் அந்த ஜீவனுக்குக் காரிய காரண ரூபமா யுண்டான பிரகிருதி சம்பந்தமானது குணசம்பந்த மூலமாய்ப் பகவானால் செய்யப் பட்ட தென்றும், அந்தக் குணசம்பந்த மிப்படிப்பட்ட தென் பதை விவரித்துச் சொல்லி, அந்தக் குண நிவிருத்தியினால் ஆத்ம நிஜரூபத்தை யடைவதற்கு பகவத் பக்தி முக்கியமான தென்பதும் சொல்லப்பட்டன.

மேலேழு லோகங்களில் சிரேஷ்டமான சத்திய லோகத்தி லிருக் கிற சதுர்முகப் பிரம்மாவினால், இந்தப் பிரபஞ்சம் சிருஷ்டிக்கப் பட்ட படியால் இந்தப் பிரபஞ்சத்திற்குச் சதுர்முகப் பிரம்மா வூர்த்துவம். மேலாக விருக்கிற மூல காரணமா யிருக்கிறார். அந்த எழுலகங்களில் கீழான பூலோகத்தி லிருக்கிற மனிதன், பசு, பக்ஷி, பூச்சி, புழு, ஸ்தாவரம் முதலிய சகலமும் அதஸாகம் கீழே யிருக்கிற கிளைகள், ஞானேதயமாகிற வரையில் சமுசாரம் தொடங்கி யிருப்பதால் பிரவாக ரூபத்தினால் அவ்யயம்—நாச மற்றது. வேதங்கள் எந்த விருக்ஷத்திற்கு இலைகளோ என்றால், இலைகள் விருக்ஷங்களை எப்படி வளரச் செய்கின்றனவோ, அவ்வாறு காமிய கருமங்களைச் சொல்லுகிற வேதங்கள் சமுசாரமாகிய விருக்ஷத்தை வளரச் செய்கின்றன. ஆகை யால், அப்படிப்பட்ட வேதங்கள் இலைகளாக வருணிக்கப் பட்டன. இவ்வாறு விசேஷத்தை யறிந்தவனெவனோ அவன் வேதத்தைத் தெரிந்தவன்; என்றால், இந்த விருக்ஷத்தை முத லில் அறிந்து பிறகு அந்த விருக்ஷத்தை வெட்டத் தகுந்த ஆயுதத்தைத் தேடவேண்டியது. சமுசாரமாகிற விருக்ஷத்தைத் "தெரிந்தால், அதை நிவிர்த்திக்கு மாயுதத்தைச் சொல்வதாகிற வேதத்தை யறிந்தவனாகிறா னென்பது தாத்பரியம்."]

[ஸ்ரீ மாத்துவாசாரியர் அபிப்பிராயம்:—“சம்சார சுவரூபமும் அதை நிவர்த்திக்கிறதற் குள்ள சாதனங்களும், அவற்றின் ஞானமும் இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளன. ஊர்த்வ மூலம் சர்வோத்தமமான விஷ்ணுவை மூலமாக வுடையது. அத ஸாகம் விஷ்ணுவுக்குக் கீழ்ப்பட்ட சகல பிரபஞ்சங்களையும் கிளை களாக வுடையது. அஸ்வத்தம்-ஒரே விதமாய் நாளைக்கிருக்கிற தல்லாதது. அவ்யயம்-பிரவாக ரூபமாய் நாசமில்லாதது; என் றால், முன் பிரம்ம கல்பத்தி லிருந்த பிரபஞ்சமே அடுத்த கல்பத் திலு முண்டாய்க்கொண்டே பிரதி சிருஷ்டியிலு மிருக்கிறபடி யால் நாசமற்றதாகச் சொல்லப்பட்டது. ‘சந்தாம் ஸியஸ்யபர் ணனி’ வேதங்கள் இலைகள் என்றால், இலைகளுண்டான பிறகு தான் காய் முதலிய பலன்களுண்டாகின்றன. அவ்வாறே வேதங் களால் சுகிருத துஷ்கிருத பலன் (புண்ணிய பாப பலன்)கள் உண்டாகின்றன என்று கூறுகிற்பர்.”]

[கருத்து:—“ஊர்த்வம் - உத்தமமானவர்களும் மேலானவர்களு மான விஷ்ணுவையும், சித் அசித் பிரகிருதிகளையும், மூலம் - மூல காரணமாக வுடையது; இவர்களுக்குக் கீழ்ப்பட்ட பஞ்ச மகா பூதங்கள், மகத்துவம், அகங்கார தத்துவம் புத்தி இவைகளையும் இவைகளுக்கு அபிமானி தேவதைகளையும் கிளைகளாக வுடையது; ஒரே ரூபமாயிருக்கிற தன்று; அல்லது சஞ்சலமா யிருக்கிற தாகையால், அஸ்வத்த மென்கிற பெயரை யுடையது. பிரவாக ரூபமாய் நித்திய மாகையாலும், பூர்வ கல் பத்தி லிருந்தபடி இந்தக் கல்பத்திலு மிருக்கிறபடியாலும், அவ் யயம் - நாசமற்றது; அதாவது, வேதங்களையும் வேதாபிமானி தேவதைகளையும் இலைகளாக வுடையது. இப்படிப்பட்ட சம்சார விருக்ஷத்திற்குப் பூமி எவ்வாறு மூலமோ அவ்வாறே ஜகத் விரு க்ஷத்திற்கு விஷ்ணு தனிமையான மூலம், சத்துவாதி முக்குண மான அசித் பிரகிருதி பூமிபோல் பரிணாமமூலம், சித் பிரகிருதி அசித் பிரகிருதிக்கு அதிஷ்டாதா (என்றால், நியாமகத்துவத்தை யுடையது) என்று அறியவேண்டியது.”] 1

“சத்துவாதி முக்குணங்களாலே விருத்தி யடைந்தும், சப்தாதி விஷயங்களைத் தளிர்களாக வுடைத்தாயு மிருக்கின்ற அந்தச் சம்சார விருக்ஷத்தின் கிளைகள் கீழுலகங்களிலும், மேலுலகங்களிலும் பரவி யிருக்கின்றன. மனுஷ லோகத்தில் கரும சம்பந்தத்தை யுண்டு பண்ணிய வேர்கள் கீழ்மே லுலகங்களி லெவ்விடத்திலும் பரவி யிருக்கின்றன.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"ஞான கரும பலன்கள்தான் வியாபித்திருக்கிற கிளைகள். அந்தத் தேகத்தினால் விர்த்தியாகிற விஷயங்கள் தான் தளிர்கள்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"சப்த லோகத்திற்கும் மேலாயிருக்கும் சதுர்முகனை ஆதியா யுடைய தாகையால், இந்த விருக்ஷத்தின் வேர் மேலே யிருக்கிற தென்றும், பூமியில் வசிக்கும் சகலமான மனிதர், பசு, மிருகம், பூச்சி, புழு, பக்ஷி, தாவரம் இவைகளை முடிவா யுடைத்தா யிருக்கையாலே கிளை கீழே யிருக்கிற தென்றும் சொல்லுகிறது. இவ்வாறு, கீழ்ப்புறத்தில் (மனுஷர் முதலானோரைக் கிளைகளாக வுடைய அம் மரத்திற்கு அவரவர் கர்ம மடியாக அநேகம் கீழ்க் கிளைகள் உண்டாய் மீண்டும் மனுஷ்யாதி ரூபமாய்ப் பரவுகின்றன. அப்படியே மேலும் கந்தருவர் யக்ஷர் என்று இப்படி வெகுவாய்ப் பரவுகின்றன. அவைகளோ, சத்துவம் முதலிய குணங்களால் மேன்மேலும் சப்தம் முதலிய விஷயங்களைத் தளிராகக்கொண்டு வளருகின்றன. பிரம லோகத்தில் வேரிட்டு மனிதரை நுனியாக வுடைய இம் மரத்திற்கு இந்த மனுஷ லோகத்திலும் கீழே வேர் ஓடுகின்றன. இவைகளும் கர்ம மடியானவைகள்; (என்றால், மனிதரா யிருக்கும்பொழுது செய்த கர்மங்களால் கீழே மனுஷ்யாதிகளும், மேலே கந்தர்வாதிகளும் உண்டாகிறார்களென்றபடி.) இதில் சுவரூபமும், ஆதியும், அந்தமும், இதன் இருப்பும் இவ் வுலகத்தில் தெரிகிறதில்லை; என்றால், "இந்த விருக்ஷம் நான்முகன் தொடங்கிய தாகையால் இதற்கு வேர் மேலுலகத்தில், அவன் சந்தான பரம்பரையான மனிதரை நுனியாயுடைய தாகையால் இதன் நுனி கீழுலகத்தில் மனிதரா யிருக்கையில் செய்த கர்மங்களையே வேராகக்கொண்டு மறுபடி கீழும்மேலும் கிளைகளால் பரந்திருக்கிறது" என்றிவ்வாறு இவ் வுலகத்திலுள்ள சமுசாரிகள் அறிகிறதில்லை. மற்றப்படி; "நான் மனுஷன்; நான் தேவதத்தனுக்குப் புத்திரன்; யக்ஞதத்தனுக்குப் பிதா; எனக்கேற்ற பாரியை முதலானோரை யுடையவன்" என்று இவ்வளவு மாத்திரம் தெரிந்து கொள்ளுகிறார்கள். இந்த விருக்ஷமானது குணமயமான போகங்களில் பற்றை யொழித்தால் நசித்துப்போமென்றும், குண சம்பந்தந்தான் இதற்கு ஹேது வென்றும் அறிகிறதில்லை. அப்படியே, இது நிலைத்திருப்பதும் (சரீரத்தையே ஆத்மாவாக நினைக்கின்ற) அந்த ஞானத்தால் தானென்றும் அறிவா ரில்லை." 2

"இந்தப் பிரகாரம் நாலு பக்கமும் நன்றாய் வேர் ஊன்றிய இவ்வரச மரத்தை நல்லறிவினுலுண்டான பற்றின்மை யென்னுந் திடமான கத்தியைக்கொண்டு களைந்தெறிந்து, அதனுல் எந்த இடத்திற்குச் சென்றவர்கள் மீண்டுந் திரும்பார்களோ அந்த இடத்தைத் தேடவேண்டும்." 3

"அஞ்ஞானிகள் நிவர்த்திக்க வேண்டுமானுல் அந்த ஆதி புருஷனைச் சரணமடையவேண்டும். ஏனெனில், இந்தக் குணவிகாரமான போகத்தி லுண்டாகும் பிரவிர்த்தியானது சர்வ சிருஷ்டி கர்த்தாவான அவனிடத்தினின்று முண்டானமையால் அவனைக்கொண்டே தான் நிவர்த்தி பண்ணிக்கொள்ள வேண்டும். இவ்வாறு என்னைச் சரணமாக அடைந்து, தேகமே ஆத்மா என்கிற அபிமானத்தையும் குணமயமான போகத்தில் பற்றையு மொழித்து, ஆத்ம ஞானத்தில் ஊன்றியவர்களாய், சமஸ்தாகமங்களையு மொழித்து, இன்பம் துன்பம் என்னு மிரண்டினின்றும் விடுபட்டவர்களாய், அளவற்ற ஞானமே வடிவான ஆத்ம சுவரூபத்தை உள்ளபடியே யடைகின்றார்கள்."

"அந்த ஆத்மாவாகிய ஜோதியைச் சூரியனும் பிரகாசஞ் செய்கிறதில்லை; சந்திரனும் பிரகாசஞ் செய்கிறதில்லை; அக்கினியும் பிரகாசஞ் செய்கிறதில்லை; ஞானமல்லவோ எல்லாவற்றையும் பிரகாசஞ் செய்கின்றது. வெளியேயுள்ள வெளிச்சங்கள் விஷயங்களோடு இந்திரியங்கள் சம்பந்தப்படுவதற்குத் தடையாகிய இருட்டைப் போக்கடித்துக்கொண்டு அதன் வழியாக உபசாரஞ் செய்கின்றன. இந்த ஆத்மாவைப் பிரகாசஞ் செய்யக் கூடியது யோகம்; அதற்குத் தடையானது அநாதியாகிய கர்மம். அதை நிவர்த்தி செய்யக்கூடிய உபாயமும் மேற் கூறப்பட்ட பகவானிடத்தில் சரணுகதியைக் காரணமாக வுடைய ஆசை யில்லாமை முதலியவை எதை யடைந்து மீண்டுந் திரும்புகிற தில்லையோ அவ்வாறான உயர்ந்த ஜோதி என்னுடையது. அதாவது, எனக்கு விபூதியாகிய என்னுடைய அம்சம் சூரியன் முதலியவைகளும் பிரகாசஞ் செய்யக்கூடிய தாகையினுலே அது மேலான தென்பது. சூரியன் முதலிய வெளிச்சங்கள் ஞானமாகிற வெளிச்சத்தைப் பிரகாசஞ் செய்யக்கூடியவைகளல்ல; ஞானமே யல்லவோ எல்லாவற்றையும் பிரகாசஞ் செய்கிறது." 4-6

“எனது அம்சமாகவும் அநாதியாகவு மிருக்கிற ஜீவன் பிரகிருதியாகிய சரீரத்தி லடங்கி யிருக்கின்ற மனத்தை ஆறாவதாக வுடைய இந்திரியங்களைச் சம்சாரத்திலே போகார்த்தமாக இழுக்கின்றான்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“பரமாத்மாவாகிய எனது அம்சமான ஜீவன் எனது ஒரு பாகமாக இருக்கிறான். அவன் என்னினின்றும் அந்நிய னல்லன். ஆயினும், அவன், அவித்தையாகிய உபாதியாலே சம்சாரத்திலே தான் கருத்தாதான், போக்தா அல்லவென்று வெகு காலமாகப் பிரசித்தி யடைந்திருக்கிறான். அந்த ஜீவன் அகண்டாகாரமாயும் ஒரே வஸ்துவாயுமுள்ள எனது அம்சமாகவும் அன்னிய னல்லாமலு மெப்படி யிருக்கக் கூடு மென்றால், ஒருவனாகிய சூரியன், ஜலத்தில் தோன்றுகின்றான். ஜலத்தில் தோன்றுஞ் சூரியன், ஆகாச மார்க்கத்தில் தோன்றுகிற சூரியனது பிரதிபிம்பமே யன்றி வேறல்லன்; ஜலமாகிய உபாதியாலே வேறு போலத் தோன்றினாலும், அந்த உபாதியான ஜல மில்லாவிட்டால் சூரியன் பிரதிபிம்பம் தோற்றாமையாலே, சூரியன் ஒருவனே யன்றி இருவனல்லன். அவ்வாறே ஒரு பாத்திரத்திலுள்ள ஆகாசமும் சர்வ வியாபகமான மகாகாசமும் ஒன்றாயினும் பாத்திரமாகிய உபாதியாலே கடாகாசம் மகாகாசத்தி னின்றும் வேறாகத் தோன்றுகிறது. கட முடைந்தால் மகாகாசத்தி னின்றும் வேறான கடாகாச மென்பதே யில்லை. இவ்வாறு பிரமத்தின் அம்சமானவனும் பிரமத்தினின்றும் வேறல்லாதவனுமாகிய ஜீவன் மாயா காரியமான அவித்தையாகிய உபாதியாலே தேகாதிகளில் வேறாகத் தோற்றிய போதினும் உபாதி நிவிர்த்தியானால் அந்த ஜீவன் எதனுடைய அம்சமோ அந்த அம்சியான பிரமமே; அம்சம் அம்சியை யடைந்தால் திரும்பி வருதலில்லை. ஜீவன், ஈசுவரனினும் வேறானவன்; அவன் கருத்தா போக்தா ஜனன மரண மடைகின்றவன் என்னுந் தோற்றமெல்லாம் அவித்தியா சொரூபமான அஞ்ஞானத்தாலுண்டாயினவே. அவித்தை நீங்கினால் நிலைத்திருப்பது பிரம சொரூப மொன்றே; இரண்டாவ தில்லை.

மேலும், பஞ்சீகிருத பஞ்ச மகா பூதங்களின் விகாரமே இத் தூல தேக மெனவும், தன்னா லறியப்பட்ட இத் தேகம் தன்னை அறியமாட்டா தாகையால் இது ஜட மெனவும், தான் சித்தெனவும், தன்னைச் சச்சிதானந்தமாகக் கண்டு தான் தானாகவே விளங்க அறியாது தேகங்கள் எவ்வெப் பேதங்களாக எங்கெங்கும் பிறக்கிலும், கடகலசாதிகள் உண்டாகுந்தோறும் அவற்றால் ஆகாசம் தான் இருந்தபடி யிருந்தும் கடாகாச

முதலிய பேதமாக விவரிக்கப் படுவதுபோல, ஒரு பரமாத்மாவே தனது பரிபூரணத் தன்மையால் அத் தேகங்களெவற்றினு நிறைந்துள்ள காரணத்தால் ஆகாசாம்சங்களாகிய ஞான முதலிய ஐந்து காரணங்களினாலும் பிரதிபலித்து அறிவு வடிவாகும் சிதாபாச ஜீவரெனப்படுதலான். மற்றெவற்றையு மறிவது போல அவ்வத் தேகத்தையு மறிந்து இது நானெனக் கரும சுவபாவத்தால் அவித்தை வசத்தராகித் தேக வாசனையினால் பிரளய காலத்தில் இவ்வகை ஜீவர்கள் பிரகிருதி சுவபாவமான முக்குணங்களைக் கடந்து குணாதீத பிரம சொரூபத்தை யடையாமல் பூர்வ கர்ம சேஷத்துடன் சகுணப் பிரம்மமாகிய மாயா சகித ஈசுவரனிடத்தில் இலயமடைந்திருந்து, சிருஷ்டி காலத்தில் மீட்டும் சம்சாரத்தில் திரும்புகையால், ஆறிந்திரியங்களையும் வழக்கப்படிக் கிரகித்துக்கொண்டு பிறக்கின்றன என்றதாம்.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“இப்படிப்பட்ட சுவரூபத்தோடு கூடி எந்நாளு முள்ளவனாய், நமது அம்சமாய் விளங்குகிற ஒருவன் அநாதி கர்ம மென்னும் அஞ்ஞானத்தால் மூடப்பட்டவனாய், ஜீவ லோகத்தில் ஜீவனாயிருந்துகொண்டு (தேவர் மனிதர் முதலிய பிரகிருதியில் விகாரமான சரீரங்களிலுள்ள) மனதுடன் சேர்ந்த ஆறு இந்திரியங்களையும் இழுத்துத் திரிகிறான்; என்றால், ஒருவன் முன் சொன்ன கிரமமாய் அவித்தையி னின்று விடுபட்டு சுவ ஸ்வரூப மாத்திரனா யிருக்கிறான். மற்றொருவன் ஜீவனாய்க்கொண்டு ஞானமும் ஐசுவரியமும் மிகவும் குறைந்து, தர்மத்தால் கிடைத்த சரீரத்திலுள்ள மன முதலிய ஆறு இந்திரியங்களுக்கும் ஈசுவரனாய் அவைகளை யங்கு மிங்கு மிழுத்துத் திரிகிறான்.”] 7

“ஜீவன் எந்தச் சரீரத்தை யடைகின்றானோ, எந்தச் சரீரத்தினின்றும் வெளிப்படுகின்றானோ, அந்தச் சரீரத்தினின்றும், வாசனையுடைய புஷ்பத்தினின்று காற்று வாசனையைக் கொண்டுபோதல் போல, இந்திரியங்களையும் அவற்றுடன் கூடிய மனதையும் கிரகித்துக் கொண்டு போகின்றான்.”

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“எந்தச் சரீரத்தை யடைகின்றானோ, எந்தச் சரீரத்திலிருந்து வெளியில் புறப்படுகின்றானோ, அவைகளில் இந்திரியங்களுக்கு எஜமானனாகிய இந்த ஜீவாத்மா, இந்திரியங்களைப் பஞ்ச பூதங்களின் சூக்ஷமமான பாகங்களோடு கூட எடுத்துக்கொண்டு போகிறான். எவ்வாறெனில்: காற்று, புஷ்பம், சந்தனம், கஸ்தூரி முதலிய வாசனைகளின் இருப்பிடங்களி லிருந்து அந்த வஸ்துக்களின் சூக்ஷம

மான பாகங்களோடுகூட வாசனைகளை எடுத்துக்கொண்டு வேறிடத்திற்குப் போகிறதோ அஃதேபோல என்று பொருள் கொள்ளவேண்டும்.''

[ஸ்ரீ மாத்துவாசாரியர் அபிப்பிராயம்:—''ஜீவன் எப்பொழுது ஒரு சரீரத்தை விட்டு வேறொரு சரீரத்தை யடைகின்றானோ, அப்போது ஈசுவரன் அவனுடன் கூடவே இந்திரியங்களை இழுத்துக் கொண்டு போகின்றான். ஏனென்றால், கருமங்களுக்குப் பலன் கொடுப்பவன் ஈசுவரனுகையால் கருமபலனை யனுபவிக்கிறதற்காக அவனை ஜீவனுக்குக் கொடுத்த புதிய தேகத்தின் மூலமாய் அனுபவிக்க வேண்டிய கருமபலனை அனுபவிக்க அனுகூலமாயிருக்கும்படியாய் இந்திரியங்களையும் ஈசுவரன் கிரகித்துக் கொண்டு போகிறான். ஜீவனுக்குக் கிரகித்துக்கொண்டு போகச் சுதந்திரமில்லை; சர்வ சுதந்திரன் ஈசுவரன்.'' 8

''இந்த ஜீவனானவன் காது, கண், துவக்கு, நாக்கு, மூக்கு, மனது இவைகளை ஆசிரயித்து இந்திரிய விஷயங்களை யனுபவிக்கின்றான்; என்றால், இந்திரியங்களை யன்றி விஷயங்களை ஜீவன் அனுபவிக்க ஹேதுவில்லை. கருமாநுகுணமாய் விஷயானுபவத்திற்காகவே தேகம் வந்திருக்கிறது. அந்த விஷய போகார்த்தமாகவே இந்திரியங்களைக் கிரகித்துக்கொண்டு போகிறதாக முன் சொல்லப்பட்டது; தேகத்திலே இருக்கிறவனும், ஒரு தேகத்தை விட்டு மற்றொரு தேகத்தை யடைகின்றவனும், விஷயங்களை யனுபவிக்கின்றவனும்; இந்திரியங்களோடு சேர்ந்திருக்கின்றவனுமான ஜீவனை அஞ்ஞானிகள் பார்ப்பதில்லை; ஞானக்கண்ணுடையோர்கள் பார்க்கின்றார்கள்.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—''சாக்கிராதி மூன்றவஸ்தைகளால் மாறி மாறி வந்துகொண்டிருக்கும் சகல சூக்குும காரண சரீரங்களையே ஆங்காங்கு 'இது நான் இது நான்' எனச் சுட்டிக் கொண்டு விஷயங்களை எனதென அனுபவிக்கும் முக்குண ரூபமான அவித்தியாகத ஜீவர்களை அஞ்ஞானிக ளென்றும், தூல முதலிய மூன்று தேகங்களாலே விசுவன் தைசதனன் பிராஞ்ஞனென வழங்கப்பட்டு நிற்கும் அவசரங்களுடைய ஒரு ஆன்மாவாகிய அறிவே நானென்றும், தூலாதி மூன்று தேகங்களும் என்னு லறியப்படுவதன்றி அவை என்னை அறியாமையினால் நான் சித்தென்றும், தேகங்கள் ஜடமென்றும், 'பிரகிருதி சம்யோகத்தினு லிந்த ஆன்மாவாகிய எனக்குப்

போக்திருத்வ விவகார முண்டாய தென்றும், என் சந்நிதி மாத்திரத்தினுற்றனே பிரகிருதிக்குக் கர்த்ருத்வ முண்டாய தென்றும், இவைபோன்ற ஞானமாகிய கண்ணிணையுடைய குணுதீதமான அறிஞரை ஞானிகளென்றும் இதுவரையில் சொல்லிவந்த அத்தியாயங்களினுலும் சுருதியாகிய சத்சாம்பிரதாயங்களினுலு முணரற்பாலது.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“சத்துவம் முதலிய குணமயமான பிரகிருதியினது விகாரமாய், மனுஷ்யாகாரமா யுள்ள பிண்டத்தோடு கலந்திருக்கின்ற இவ்வாத்மாவானது அதினின்று வெளிப்படும் பொழுதாவது, அப்படிப்பட்ட மற்றொரு பிண்டத்தி லிருக்கும் பொழுதாவது, குணமயமான விஷயங்களைப் புசிக்கும் பொழுதாவது, ஒரு காலத்திலும் இந்த ஜீவாத்மாவை ஒரு சமயத்திலும் பிரகிருதியில் மாறுதலாகிய மனுஷ்யன் முதலிய சரீரங்களைவிட வேறுபட்டவனுகவும், ஞான மொன்றையே சொரூபமாக வுடையவனுகவும் மூடர்கள் பார்க்கிறதில்லை, மூடர்களாவது, மனிதன் முதலிய சரீரத்தையே ஆத்மாவென்று நினைத்துக்கொண் டிருப்பவர்கள். சரீரம், ஆத்மா இவைகளின் வித்தியாசங்களைப் பற்றிய ஞான முடையவர்கள் எல்லா அவஸ்தைகளு முடைய இந்த ஜீவாத்மாவை சரீரத்தைவிட வேறுபட்ட ஆகாரத்தை யுடையவனுகவே பார்க்கிறார்கள்.” 9-10

“(தியானுதிகளால்) முயலுகின்ற ஞானிகள் தேகத்தி லிருக்கின்ற ஜீவாத்மாவைப் பார்க்கின்றார்கள். முயலினும் சித்தசுத்தியில்லாத அற்ப ஞானிகள் ஜீவாத்மாவைப் பார்க்கிறதில்லை.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“தேகங்களோடா யிருந்தும், அத்தேகத்திற்கு வேறாகவும், விலக்ஷணனுகவும், சச்சிதானந்த சொரூபனுகவு முள்ள ஆன்மாவை யோகிகள் தானென அறிந்து, பிரகிருதி சுவபாவமான முக்குணங்கட் கதீதமாய்ப் பிறவி தீர்வாரென்றும், தேகமே தானென்கிற சுவபாவ முடைய அற்ப ஞானிகள் சாஸ்திரங்களில் எத்தனை கால முயன்றாலும் தவசு, தானமுதலியவற்றை அளவின்றிச் செய்தாலும் முக்குண கருமங்கட் குட்பட்டவர்களாக ஆத்மாவை அறியும் ஞானமின்றிப் பிறவி வழித்தால ரென்று முணர்த்தியதாம்.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“நம்மிடத்தில் சரணுகதியை முன்னிட்டுக்கொண்டு கர்ம யோகம் முதலானவைகளில் முயற்சிசெய்யு மவர்கள் அவைகளால் உள்ளத்தின் மாசை யறுத்து யோக மென்னுங் கண்ணினுல், ஆத்மா சரீரத்தி

விருக்கும்பொழுதே அதைச் சரீரத்தைக் காட்டிலும் வேறு யிருப்பதாகப் பிரித்துப் பார்ப்பார்கள். அப்படி கர்ம யோகாதி களில் யத்தனஞ் செய்யு மவர்களே நம்மிடத்தில் பிரபத்தி செய்யாத பக்ஷத்தில் மனந் தெளியாமல் ஆத்மாவைக் காணும் படியான ஞான மில்லாதவர்களாய் அதைக் காணமாட்டாமற் போகின்றார்கள்.”] 11

“சூரியனிடத்தி லிருக்கின்ற எந்தப் பிரகாசமானது சகலமான ஜகத்தை விளக்குகின்றதோ, சந்திரனிடத்தில் எவ் விளக்கமானது உண்டோ, அக்கினியி னிடத்தில் எவ்வொளி விளங்குகின்றதோ, அந்தத் தேஜசானது என்னுடைய தென்றறி.”

[சூரியன், சந்திரன், அக்கினி என்பவைகள் இயற்கையாய் ஒவ்வொன்றுந் தத்தமக்கே ஒளி யின்றியதா மெனவும், ஆத்ம தேஜ ஸானது சத்தா சாமானியமாக வுயிர் முதலனைத்தும் நீக்கமறப் பூரண மாய் வியாபித்திருத்தலின், அது சூரிய பிம்பத்தில் நிறைந்து நீல வண்ணப் பேரொளியாயும், சந்திர பிம்பத்தில் நிறைந்து வெள்வண் ணப் பேரொளியாயும், அக்கினியில் நிறைவுற்றுச் செவ்வண்ணப் பேரொளியாயும் நின்று அனைத்துலகையும் விளக்குமெனவும் உணர்த் தியதாம். அற்றேல், பூரண வியாபகத்தை யுடைய இப் பரமாத்மா சைதன்னிய உல்லாசமான தேஜஸானது சூரிய சந்திரர்களில் நிறைந்து அவற்றைப் பிரகாசஞ் செய்வதுபோல, மற்றுஞ் சகல வஸ் துக்களிடமும் நிறைவுற்றிருக்கும். அவற்றை அங்ஙனம் ஒளி செய் விக்க வின்றே யெனின், அக்கினியானது சில வஸ்துக்களில் வியா பித்து உஷ்ணத் தன்மையை மட்டிலும்; சிலவற்றில் உஷ்ணம், செம்மைநிறம், இருட்டினிடமாகிய வஸ்துக்களை விளக்கும்படியான மிகுந்த பிரகாசத்தன்மையையு முண்டாக்குவதுபோலச் சூரிய சந்திர அக்கினிகளில் சத்துவாம்ச மேலிட்டிருப்பதினால் அவை ஆத்ம தேஜஸை மிகப் பெறற்குரியதாகி அங்ஙனம் தேஜோமயமாக விளக்க முறும். மற்றவை யங்ஙன மாகாவென்க. சூரியனையும், பூரணச் சந்திர னையும், உத்தம அக்கினியையும் தம்மிடத்து ஆத்மப் பிரகாச நிறை வதிகத்தைக் கருதியே யன்றோ யாவரு முபாசித்த லென்க.] 12

“நான் பூமியிலே ஆவேசித்துச் சகல பிராணிகளையும் தடை யற்ற என் சாமர்த்தியத்தாலே தரிக்கிறேன். அவ்வாறே அமிருத ரஸ மயனான சந்திரனைக்கொண்டு சகலமான பயிர்களைப் போஷித் துக்கொண்டிருக்கிறேன்.” 13

"நான் ஜாடராக்கினியாக வயிற்றுக்குள் ளிருக்கும் நெருப்பாக ஆகி பிராணிகளினுடைய சரீரத்தை ஆசிரயித்தவனும், பிராண வாயு அபான வாயு இவைகளோடு கூடினவனும் நான்கு விதமான அன்னத்தை ஜீரணம் பக்குவஞ் செய்கிறேன்." 14

"நான் எல்லாப் பிராணிகளினுடைய இருதயத்தில் அந்தரியாமியாக இருக்கிறேன். என்னாலே நினைவும், அறிவும், மறதியு முண்டாகின்றன. சகலமான வேதங்களினாலும் அறியத் தக்கவனான வேதார்த்தங்களைச் செவ்வனே அறிபவனும் வேதாந்த சம்பிரதாயத்தை ஸ்தாபித்த குருவும் யானே."

[கடவு ளென்கிற பதத்துக்கு ஆத்மாவே இலக்கியப் பொருளென்றும், ஆன்மா வென்பது யாதோ அதுவே கடவு ளெனப்படுமென்றும், நினைவு, மறதி, அறிவு முதலிய இவை சமுத்திர மென்கிற பதத்திற்கு ஜலமே யிலக்கியப் பொருளாக நின்று அலை முதலிய அனைத்தையு முண்டாக்குவது போல, இவ் வான்மாவினது புடை பெயர்ச்சியேயா மெனவும், வேதங்களினா லறியத் தகுந்த இவ் வான்மாவே யெனவும், அவ் வேதார்த்தங்களை யறிந்தது மிவ் வான்மாவே யெனவும், அவ் வேதாந்த சம்பிரதாயங்களைச் செய்ததும் இவ் வான்மாவே யெனவு முணர்த்திய தென்க. இதனாலே, சகல கருமங்கட்கும் பிரகிருதியே கர்த்தா வென்றும், ஆன்மாவாகிய தான் அசங்கனாகலின் தன்னைக் கருமங்கள் தொடர்ந்து ஒட்டுவதின்றென்றும், அறிந்து சட்டற்றுச் சும்மா இருப்பவனே ஜீவன் முக்தனென பரமாத்மாவென முற் கூறிய உபதேசங்களை வற்புறுத்தியதாமென்க.

"அர்ச்சுனா! அந்தச் சந்திராக்கினிகளுக்கும் மற்றப் பிராணிகள் யாவர்க்கும் இருதய கமலத்தில் அதாவது, சகலமான பிரவிருத்தி நிவிருத்திகளுக்குங் காரணமான ஞான முண்டாவதற் கிடமான இருதயத்தில் எல்லாவற்றையும் நம் சங்கற்பத்தாலே நியமித்துக் கொண்டு, நாம் ஆத்மாவா யிருக்கின்றோம் இவ்வாறே சுருதிகளும் ஸ்மிருதிகளும் சொல்லுகின்றன. ஆகையால், யாவர்க்கும் நம்மிடத்திலிருந்துதான் ஸ்மிருதியும், ஞானமும், அபோஹனமு முண்டாகின்றன. ஆக இப்படி அக்கினி, சூரியன், வாயு, சந்திரன், இந்திரன், முதலானோருக்கும் நாம் அந்தரியாமியா யிருப்பது மன்றி அவர்கள் நம் சுவரூப மாகையால், அவர்கள் விஷயமாய்ச் சொல்லும் வேதங்களுக்கும் நாமே விஷயம்; (என்றால், தேவன், மனிதன் என்னுஞ்

சொற்கள் அந்தத் தேவாதி சரீரங்களிலுள்ள ஜீவாத்மாவைச் சொல்வதுபோல இதர தேவதா விஷயமான வேதங்களும் நம்மையே சொல்லுகின்றன என்றபடி.) மேலும், வேதத்தில் சொல்லும் பலன்களைக் கொடுப்பவனும் நாமே; அப்படியே நம்மைச் சொல்லும் வேதத்தையும் நாமே அறிவோம். இவ்விதமாக வேதம் என்னைச் சொல்லுகிறதென்று தெரிந்துகொண்டவன் நானே. இதற்கு வேறாக எவன் வேதத்திற்குப் பொருள் விவகரிக்கிறானோ, அவன் எவ்வாற்றாலும் வேதத்தை நன்றாயுணர்ந்தவ னல்லனென்பது நன்குவிளங்கும்.]

ஸ்மிருதியாவது:—முன் அனுபவித்த வஸ்து விஷயமாய் அனுபவ ஜந்யமான ஸம்ஸ்காரத்தினால் மாத்திரம் பிறப்ப தொன்று.

ஞானமாவது:—இந்திரியம், இலிங்கம், ஆகமம், யோகம் இவைகளா லுண்டாகும் வஸ்து நிச்சயம்.

அபோஹனமாவது:—ஞான நிவிருத்தி, அல்லது ஊஹம்; ஊஹமாவது இந்தப் பிரமாணம். இவ்வாறு பிரவிர்த்திக்கத் தக்கதென்று பிரமாணப் பிரவிர்த்தி யோக்கியதையின் விஷயமாய் ஸாமக்கிரீ முதலானவைகளை நிரூபிப்பதினா லுண்டான பிரமாண ஸஹகாரிக் ஞானம். 15

"உலகத்தில் க்ஷர னென்றும், அக்ஷர னென்றும் இருவகைப் புருஷர்க ளுண்டு. பிரம்மாதி தேகம் முதலா யுள்ள சகல அசேதனங்களும் க்ஷர மென்று சொல்லப்படுகின்றன. சேதனன் அக்ஷர னென்று சொல்லப்படுகிறான்."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"க்ஷரனென்றும், அக்ஷர னென்றும் சொல்லப்படும் இவ்விரண்டு புருஷர்களும் உலகத்தில் பிரசித்தமானவர்கள். அதில் க்ஷர சப்தத்தால் சொல்லப்பட்ட புருஷன் யாரெனில்,ஜீவசப்தத்தாலே சொல்லப்படுபவைகளாய்ப் பிரமன் முதல் புல்லளவாய் விகாரப்படுவதே சுவபாவமாயுள்ள அசித்தோடு கலந்திருக்கின்ற பிராணி சமுதாயம். அக்ஷர சப்தத்தால் சொல்லப்பட்ட புருஷர் யாரெனில், அசித்தின் சம்பந்தத்தை விட்டு நீங்கித் தானான தன்மையாயிருக்கும் முக்த ஸ்வரூபன்."]

[கருத்து:—"யதாதித்ய கதம்தேஜஃ இதில் 12-வது சுலோகம் முதல் உபாதியினா லுண்டான ஈசுவரனாகிய நாராயணனுடைய மகிமையின் சுருக்கம் சொல்லப்பட்டது. இப்போது க்ஷராக்ஷர உபாதியி லிருந்து பிரித்து, நிருபாதிகராகவும் கேவலராகவுமிருக்கிற அவருடைய தத்துவ நிச்சயத்தின் பொருட்டு ஆரம்

பிக்கப்படுகிறது. இதன் முன்னும் பின்னு முள்ள அத்தியாயங்களின் சமுதாயார்த்தத்தை மூன்று வகுப்புகளாகப் பிரித்து அவைகளில் இரண்டு வகுப்புகள் இவ்விடத்தில் சொல்லப்படுகின்றன. சம்சாரத்தில் நாசமடையத் தகுந்த வகுப்பென்றும், பகவன் மாயா சக்தியான நாசமடையாத வகுப்பென்று மிரண்டு விதம். அந்தப் பகவன் மாயா சக்தி எப்படிப்பட்டதென்றால், க்ஷர புருஷனுடைய உற்பத்திக்கு விதையாயும், அநேக சம்சாரிகளான பிராணிகளுடைய காம கருமங்கள் முதலியவைகளின் வாசனை கரும விசேஷங்களுக்கு ஆசிரயமாய மிருக்கிறதுதான்.”]

கூடஸ்தன்:—கூட - கற்களாகிய இராசியைப் போல, ஸ்த:- இருப்பவன்; என்றதனால், விரல், கை, கால், தலை, கண், மூக்கு முதலிய வகுப்புகளில் சமுதாயமாகிய சரீரத்தை இராசியில் நானெனக் கண்டிருப்பவ னென்பதாம்.

அன்றியும், கூட—மாயை, அதில் ஸ்த -இருப்பவன்; ஞானமின்றி ஸம்ஸார பீஜம் நசிக்கப்பட்டதாகையால் அக்ஷரமென்று சொல்லப்பட்டது. 16

“நாசமற்ற ஈசுவரனாகிய எந்த ஆத்மாவானவன் திரிலோகங்களிலும் பிரவேசித்து இரக்ஷிக்கின்றானோ, அந்தப் புருஷனாகிய நான் க்ஷரா க்ஷரங்களைப் பார்க்கிலும் அன்னியனாயும், பரமாத்மாவாயும் வேதங்களில் பிரசித்தி பெற்றிருக்கிறேன்.”

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“உத்தம புருஷனோ முன்னர்க் கூறிய பக்தர் முக்தர் என்கிற க்ஷர அக்ஷர புருஷர்களைக் காட்டினும் வேறுபட்டவன். சுருதிகளில் அவன் பரமாத்மா வென்று சொல்லப்படுகின்றான். இவ்வாறு, பரமாத்மா வென்று சொல்லப்படுதலினால் உத்தம புருஷன் பக்த முக்த புருஷர்களைக் காட்டினும் வேறுபட்டவ னென்று அறியப்படுகிறது; எவ்வாறெனில், அசேதனம், அதனோடு கலந்த ஜீவன், அதினின்று விடுபட்ட முக்தனென்று பிரமாணங்களா லறியப்படும் மூன்று லோகத்தையும் ஆத்மாவாய்ப் பிரவேசித்துத் தரிக்கிறான் எவன், அவன் தரிக்கப்படு மவைகளைக் காட்டினும் வேறுபட்டவன். (இதுதான் பரமாத்மா வென்பதற்குப் பொருள்.) அதுவுமன்றி, அவன் வேறென்பதற்கு இதுவுமொரு காரணம். எது? அவன் அவ்யயனாய் ஈசுவரனா யிருத்தல். அவ்யயனா யிருத்தலாவது, அழிவதே சுவபாவமான அசேதனமென்ன, அதன் சம்பந்தத்

தாலே அதைப் பின் தொடருகின்ற சேதன மென்ன, அவ்வாறே, முன்பு அதன் சம்பந்தத்திற்கு யோக்கியமா யிருந்த முக்த ஸ்வரூபமென்ன, இம் மூன்றைக் காட்டினும் வேறுபட்டிருத்தல். ஈசுவரனு யிருத்தலாவது, தன்னு லாளப்படு மவைகளைக் காட்டி னும் தான் வேறுபட் டிருத்தலாம். மேற்கூறிய சுவபாவங்க ளாலே க்ஷரமென்னும் ஜீவனைக் கடந்திருக்கும் நான் மேற் கூறிய ஹேதுக்களாலே முக்த புருஷனைப் பார்க்கிலும் மிகவும் சிறந்திருக்கிறபடியால் லோகத்திலும் வேதத்திலும் நான் புரு ஷோத்தம னென்று பிரசித்தனு யிருக்கிறேன்.”] 17-18

“ஓ! பாரத வம்சத்தி லுதித்தவனே! எவன் உண்மையான ஞானத்தோடு கூடியவனுய் முன்னர்க் கூறியபடி என்னைப் புரு ஷோத்தமனுக அறிகின்றுனே, அவன் சர்வக்ஞனுய் என்னைச் சகல விதத்திலுலேயு மடைகிறுன்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“எவன் உபாதி மூடத்தி னீங்கி ஐக்கிய நிச்சய ஞானத்தோடு கூடியவனுக மேற்கூறியபடி என்னை ஐக்கியத்திற் குரிய புருஷோத்தமனுக அறிகின்றுனே அவன் சகலத்தையு மறிந்தவன். என்னைச் சகலத்திற்கும் ஆத்மாவாகக் கண்டு எல்லாவிதத்திலுந் தானுக ஆராதிக்கிறு னென்பதாம்.

கடாகாய மடாகாய முதலிய ஆகாயங்கள் அகண்டாகாரமாகிய நிருபதாதிக ஏகாகாயத்தில் உபாதியை முன்னிட்டு அங்ஙனம் கற்பிக்கப்பட்டனவெனக் கண்டு, அந்த ஏகாகாயத்தைத் தியா னிப்பவனது தியானு நுதியில், மற்றைய ஆகாயங்களின் தன்மை காலத்திரயத்தினு மின்றிக் கேவலம் அத்துவிதமாக விளங்குதல் போன்று, ஜீவேசுர சைதன்னியங்களான அக்ஷர புருஷர்களின் தன்மை நிருபாதிகப் பிரமமான புருடோத்தமத் தியானத்தில், காலத்திரயத்தினு மின்றியதால், உபாதி பேதங் களால் வரும் மூடத்துவம் நீங்கியவன், பிரமமே தானென் றறிந்த நிச்சய ஞானத்தோடு கூடியவனுதலின் முழுதும் ஆனவ னெனச் சிறப்பிக்கப்பட்டன வென்க.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“ஓ! பாரத! யாவனெருவன் மேற்கூறியவாறு, புருஷோத்தமனுன என்னை க்ஷர அக்ஷர புரு ஷர்களைக் காட்டினும் வேறுபட்டவனென்று அறிகிறுனே, அவன் நம்மை யடைவதற்காக அறியவேண்டு மெல்லாவற் றையு மறிந்தவன். நம்மை யடைவதற்கு உபாயமாய் நம்மை சேவிக்கவேண்டும் பிரகாரங்க ளெல்லாவற்றுலும் நம்மை சேவித்தவ னுகிறுன்; என்றுல், நம் விஷயத்தை முற்றும் அறி

வதாலும், நம்மை எல்லாவிதத்தாலும் சேவிப்பதாலும் நமக்கு எவ்விதப் பிரீதியுண்டாகுமோ அவ்விதப் பிரீதியானது நம்மை இப்படி யறியு மவன் விஷயத்தில் நமக்குண்டாகுமென்று திருவுள்ளம்.”]

[ஸ்ரீ மாத்துவாசாரியர் அபிப்பிராயம்:—“இருவர் புருஷர்களுண்டு. ஒருவன் க்ஷரம் (எனின், பிரம்மாதி பிபீலிகாந்தம் வரையி லிருக்கும் ஆத்மா.) மற்றொருவன் அக்ஷரம்-ஆகாசம் போல் எல்லாவற்றிலு மிருக்கும் லக்ஷ்மி இந்த இருவருக்கும் பரமானவன் பரமாத்மா; மூன்றுலகத்திலு மிருந்து தாங்குகிறவன். பிரமன். லக்ஷ்மி முதலியவர்களுக்கு மேலிருப்பவ னாதலால், புராணங்களில் புருஷோத்தமனென்று கூறப்படுவன். என்னை அவ்வாறு அறிபவன் உத்தமன். சர்வ வேதங்களில் கூறப்பட்ட விதிகளின்படி என்னைப் பூஜித்தவனாவான்.”] 19

“ஓ! பாரதா! இவ்விதம் அதிக ரகசியமான இத்தகைய கீதா சாஸ்திரம் என்னாலே உனக்கு விவரித்துச் சொல்லப்பட்டது. ஓ! விசன யற்றவனே! இந்த சாஸ்திரத்தை யுணர்ந்துகொண்ட விவேகிகள் ஞான மார்க்கத்தை யுடையவர்களாக, மோக்ஷத்திற்குச் செய்துகொள்ள வேண்டிய சகலத்தையுஞ் செய்வார்கள்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“எவன் மேற்கூறிய விதமாக என்னைப் புருஷோத்தம னென்று மோகத்தை விட்டவனாய் என்னையே தானெனன் றறிகின்றானோ அவன் சர்வக்ஞன். அவன் என்னைச் சகலத்திற்கும் ஆத்மாவாகத் தியானிக்கின்றான்.”]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—“இவ்விதமாக நான் (கிருஷ்ண பகவான்) புருஷோத்தமனென்று கூறுவதும், இரகசியங்களிலெல்லாம் அதி ரகசியமானதுமாகிய இந்த சாஸ்திரமானது நீ பாபமற்ற யோக்கியனென்று செவ்வனே நன்காராய்ந்து என்னா லுனக்கு உபதேசிக்கப்பட்டது இவற்றை உணர்ந்தவன் ஞானியாவான்; என்றால் என்னை யடையவேண்டுமென்கிற அவாவுற்றவன் அவ்வா றடைவதற்கு வேண்டிய சகல சாஸ்திரங்களினா லுண்டான ஞானத்தை யடைந்தவ னாகிறான். மேலும், தான் செய்து முடிக்க வேண்டிய சகலத்தையும் செய்து கொண்டவனாகவு மாகிறான்”] 20

பதின்மூன்றாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

## பதினாறுவது அத்தியாயம்

# தைவாஸுர ஸம்பத் விபாக யோகம்

---

### அவதாரிகை

[மேற்கூறிய மூன்றத்தியாயங்களினால் சேர்ந்தும் பிரிந்து மிருக்கிற பிரகிருதி ஜீவாத்மா இவைகளின் உண்மையும், அவைகள் சேருவதற்கும் பிரிவதற்கும் ஸத்வம் முதலிய குணங்களி லாசையும், அறிவில்லாமையும் காரண மென்பதும், எல்லா விதமாகவும் இருந்து கொண்டிருக்கிற பிரகிருதி, ஜீவாத்மா இவைகள் பகவானுக்கு விபூதிகள் என்பதும், இவைகளை விபூதியாகவுடைய பகவான் விபூதிகளாகிய அசேதன வஸ்துக்களைப் பார்க்கிலும் பக்தன் என்கிற இரண்டு நிலைகளை யுடைய சேதன வஸ்துக்களைப் பார்க்கிலும், மாறுதல்களை யடையாத சுவபாவத்தை யுடையவனாகையினாலும், இவைகளை வியாபித்திருப்பதினாலும், இவைகளை விட வேறு வஸ்து ஆகையினால் புருடோத்தமனென்று அவனுடைய உண்மையான சுவபாவஞ் சொல்லப்பட்டது பிறகு, மேற்கூறிய எல்லா அர்த்தங்களையுமுறுதிப் படுத்துவதற்காக சாஸ்திரங்களுக்குக் கீழ்ப்படிந்திருக்க வேண்டு மென்று சொல்வதற்காகச் சாஸ்திரத்திற்கு வசப்பட்டும் வசப்படாமலு மிருக்கும் தேவாசுரர்களின் சிருஷ்டியின் பிரிவைப் பகவான் சொல்லுகிறார்.]

"இஷ்டந் தவிர்ந்து அநிஷ்டம் கைப்படுமெதென்கிற துக்கத்திற்கு ஏதுவான பயங் கொள்ளாம லிருத்தல், அந்தக்கரணம் ரஜஸ் தமஸுக்களோடு கலவாம லிருத்தல், பிரகிருதிக்குப் புறம்பான ஆத்ம வஸ்துவைப் பகுத்தறிவதில் நிஷ்டை, நியாயமாய்ச் சம்பாதித்த தனத்தை யோக்கியர்களுக் களித்தல், மனதை விஷயங்களி னின்றுந் திரும்பும்படி பழகுதல், பலாபேக்ஷையின்றி பகவதாராதன ரூபமாக மஹா யக்ஞாதிகளை யனுஷ்டித்தல், வேத மெல்லாம் ஈசுவரனையும், அவன் ஐசுவரியத்தையும், அவன் ஆராதனத்தையும் சொல்லுகிற தென்று நினைத்து வேதாப்பியாசத்தில் நிஷ்டை, எம்பெருமானுக்குப் பிரீதிகரமான கரும யோக்கியதையை யுண்டு பண்ணும் கிருச்சிரம் சாந்திராயணம் துவாதசி உபவாஸ முதலியவைகளை யனுஷ்டித்தல், மனம், வாக்கு, காயம் இவற்றின் வியாபாரங்கள் ஒரே ரீதியா யிருத்தல்." 1

“பிறருக்குப் பீடை செய்யாமை, தான் கண்டது கண்டபடியே பூதங்களுக்கு இதமாகப் பேசுதல், பிறருக்குப் பீடை செய்யவேண்டு மென்கிற மனோவிகார மற்றிருத்தல், ஆத்மாவுக்கு இதமல்லாதவைகளைக் கை விடுதல், இந்திரியங்களை விஷயங்களில் நெருங்க வொட்டாமல் தடை செய்வதில் முயலுதல், பிறருக்கு அநர்த்தத்தைத் தரும் வார்த்தையைச் சொல்லாமை, ஒரு பூதமும் துக்கப்படச் சகியாமை, விஷயங்களில் ஆசை யற்றிருத்தல், சாது ஜனங்கள் கூடும்படி மிருதுவா யிருத்தல், செய்யாததைச் செய்தால் வெட்கம், ஆசைப்படும்படியான வஸ்து நெருங்கி யிருக்குமானால், அதில் மனஞ் சலியாமை.” 2

“துன்மார்க்கங்களினால் திரஸ்கரிக்கப்படாமை, பிறரால் தான் பீடை யனுபவித்தாலும் அதனால் அவர்களிடத்தில் மனங் கன்றாமை, மஹத்தான ஆபத்திலும் செய்ய வேண்டியதைச் செய்தே தீர வேண்டு மென்கிற உறுதி, அந்தக்கரண பஹிர்கரணங்களுக்கு சாஸ்திரத்தில் கூறியபடி செய்யவேண்டியதைச் செய்யத்தக்க யோக்கியதை, பிறரை யபேக்ஷிதமா யிருக்க வொட்டாமல் தடை செய்கிற குணமற் றிருக்கை, இடமில்லாத விடத்தில் கர்வப்படாமை ஆகிய இக் குணங்க ளெல்லாம் (எம்பெருமானுடைய ஆக்ஞையைப் பின் பற்றிச் செல்லும் சுவபாவங்களான) பெரியோர்களின் செல்வம்; இவை பகவத் ஆக்ஞையைச் செய்யத் தோன்றிய புருஷனுக்கு உண்டாகின்றன.”

அர்ச்சுனா! தேவ ஸ்வபாவர் பக்த கோடிகளில் சேர்வர். அசுர ஸ்வபாவர் எது செய்யினும் நிஷ்பலமே யாகும். கர்ம ஞானங்கள் செய்யினும் பிரயோஜன மில்லையென்று 9-வது அத்தியாயம் 12-வது சுலோகத்தில் கூறப்பட்டது. 9-வது அத்தியாயம் 13-வது சுலோகத்தில் தேவ சுவபாவம் கூறப்பட்டது. இந்த இரண்டையும் உணர்ந்து அசுர சுவபாவத்தை விலக்கி தேவ சுவபாவத்தை அநுஷ்டிக்க வேண்டும். 3

“அர்ச்சுனா! தார்மீகனென்று தன்னைச் சொல்லவேண்டுமென்று அதற்காகத் தருமத்தை யனுஷ்டிப்பது, விஷயங்களை யனுபவிப்பதால் கிருத்தியா கிருத்தியங்களில் அவிவேகத்தை யுண்டாக்கும் சந்தோஷம், தன்னுடைய வித்தை, நற்குடிப் பிறவி இவைகளுக்குத் தகாத அபிமானம், பிறருக்குப் பீடை செய்யும்படியான மனோ விகாரம், சாதுக்களுக்கு மன வருத்த முண்டாக்குந் தன்மை, பர்பா

தத்துவங்கள் கிருத்தியா கிருத்தியங்கள் இவற்றில் அவிவேகம், ஆகிய இந்த ஸ்வபாவங்க ளெல்லாம் அசுரச் செல்வத்தை யனுபவிக்கத் தோன்றியவர்களுக்கு உண்டாகின்றன." 4

"அசுரர் என்றால், பகவான் ஆக்ஞையைக் கடப்பவர்கள். என் ஆக்ஞையைப் பின்செல்வ தென்கிற தெய்வச் செல்வம் மோக்ஷத்தைத் தரும்; ஏனெனில், அது கிரமமாய் என்னை யடைவிக்கு மென்று தாத்பரியம். என் ஆக்ஞையைக் கடப்ப தென்கிற அசுரச் செல்வமோ அதோ கதியை யுண்டாக்கும். தைவ சம்பத்தானது பந்த நிவர்த்திக்கும், அசுர சம்பத்தானது பந்த முண்டாதற்குங் காரணமென்று நிச்சயிக்கப்பட் டிருக்கின்றது. ஓ! பாண்டுபுத்ர! நீ தைவ சம்பத்தை யடையப் பிறந்தனையாக விருக்கின்றாய். விசனப் படாதே! பாண்டுவிற்குப் புதல்வனன்றோ நீ?" 5

"இந்த லோகத்தில் தைவமென்றும் ஆசுரமென்றும் பூதங்களின் சிருஷ்டிகள் இரண்டு விதமா யுள்ளன. தைவசிருஷ்டி விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. ஓ! பார்த்தா! ஆசுராமிசப் பிராணியின் குணங்களை இனி விஸ்தாரமாகச் சொல்லுகிறேன் கேள்."

[சிருஷ்டிக்கப்பட்ட பூதங்களில் அசுர ஸ்வபாவ முடையவும், தைவ ஸ்வபாவ முடையவுமான இருவகைப் பூதங்கள். என்றால் தைவ சம்பத்தை யடையத் தகுந்தவர்களாய்ச் சிலரும், அசுர சம்பத்தை யடையத் தகுந்தவர்களாய்ச் சிலரும், சிருஷ்டிக்கப்படுகி றார்க ளென்பது தாத்பரியம். இவ்வுலகத்தி லென்றால், சம்சாரத்தி லென்று தாத்பரியம். இந்த அத்தியாயத்தில் முதற் சுலோக முதல் இதுவரையில் தைவ சம்பத்துக் கூறப்பட்டது. இனி, இந்த அத்தியாய முடிவு வரையில் அசுர சம்பத்து விஸ்தாரமாய்ச் சொல்லப் படுகிறது. ஏன் அவ்வாறு விஸ்தாரமாய் அசுர சம்பத்தைச் சொல்லவேண்டு மென்றால், அதைத் தெரிந்து நிவர்த்திக்கும் பொருட்டே யாம்.]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"இந்தக் கர்ம யோகத்தில் கர்மஞ் செய்யும் பிராணிகளின் சிருஷ்டியானது, தெய்வ சிருஷ்டி என்றும், அசுர சிருஷ்டி யென்றும் இரண்டு விதம்; என்றால், பழைய புண்ணிய பாவங்க ளென்னும் கர்ம வசத்தால் பிராணிகள் பகவானுடைய ஆக்ஞையைச் செய்யவும், கடக்கவுமாகப் பிறக்கும்பொழுதே இரண்டு விதமாய்ப் பிரிந்துண்டாகின்றன என்றபடி. அதில், தெய்வ சிருஷ்டியானது விஸ்தாரமாகச்

சொல்லப்பட்டது. என்றால், நமது ஆக்ஞையைப் பின் செல்லாத ஸ்வபாவமானவர்களின் உற்பத்தியானது எவ்வித ஆசாரத்தை யனுஷ்டிப்பதற்காகவோ அவ்வித ஆசாரமானது கர்ம யோக மென்றும், ஞான யோக மென்றும், பக்தி யோக மென்றும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட தென்றபடி.”] 6

“அஸுரர்களின் உற்பத்தி எந்த ஆசாரத்தை யனுஷ்டிப்பதற்காகவோ அவ்வித ஆசாரத்தைச் சொல்லுகிறேன். அஸுரப் பிறவியாய்ப் பிறந்தவர்களுக்குப் பிரவிருத்தி இதுவென்றும், நிவிருத்தி இதுவென்றும் தெரியமாட்டா. சாஸ்திரத்திற் கூறிய வைதிக தருமானுஷ்டானத்திற்கு வேண்டும் யோக்கியதை அவர்களிடத்தில் உள்ளுங் கிடையாது, புறம்புங் கிடையாது. அந்த யோக்கியதை யுண்டாவதற்குக் காரணமான சந்தியாவந்தன முதலிய ஆசாரமுங் கிடையாது. தாமறிந்தபடியே பூதங்களுக் கிதமாகப் பேசுவதென்கிற சத்தியமுங் கிடையாது.”

[பிரவிருத்தியாவது:—சுவர்க்கம் புத்திரன் பசு முதலிய அப்யுதயத்திற்குச் சாதனமான வைதிக தருமம். நிவிருத்தியாவது:—மோக்ஷ சாதனமான வைதிக தருமம்.] 7

“அர்ச்சுனா! அஸுர சுவபாவமுடைய ஜனங்கள் ஜகத்தானது வேதாதிப் பிரமாணங்களை யுடைய வியவஸ்தையை யுடையதல்ல வென்றும், ஈசுவரனை யுடையதல்ல (இதற்கு ஒரு கர்த்தா இல்லை) என்றும், ஸ்திரீ புருஷ சம்பந்தத்தினால் உண்டான தென்றும், ஸ்திரீ புருஷர்களுடைய காமத்தையே காரணமாக வுடைய தென்றும், வேறென்ன காரண மிருக்கிற தென்றும் சொல்லுகிறார்கள்.”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—அசுர சுவபாவமுடையவர்கள், ஜகத்தானது (ஜீவர்களது புண்ணிய பாவ கருமங்கட்குத் தக்கவாறு தநு கரண புவன போகங்களாக ஈசுவரனால் உபகரிக்கப் படுகின்றன வென்பது முதலாக ஈசுவர ஜகத்தைப்பற்றிக் கூறும் வேத முதலிய) சுருதிப் பிரமாணங்களைச் சத்தியமாக வுடையதல்ல வென்றும்; புண்ணிய பாவங்கட்குப் பயனின்மையால் தருமா தருமங்க ளென்கிற வியவஸ்தையை யுடையதன் றென்றும்; சிருஷ்டியாதி யைந்தொழிலுக்கும் ஈசுவரனைக் கர்த்தாவாக உடையதன் றென்றும், ஆண் பெண் சேர்க்கையினால் ஜீவர்களும் பூத சுவபாவமாக ஜகத்தும் இயற்கையி லுண்டா மென்றும்; ஆண் பெண்களுடைய காமத்தையே காரணமாக வுடையதன்றி, வேறே யாது காரண முண்டென்றுங் கூறுவார்கள்.

இவ்வாறு கூறுபவர்கள் நிரீசுவர வாதிகளான சாருவாக மனஸ்தராம். அற்றேல், "ஜகத்து அசத்தியம், அப்பிரதிஷ்டம், அபரஸ்பர சம்பூதம்" என்றதற்கு, 'ஜகத்து கிளிஞ்சலில் வெள்ளி போல' அசத்திய மென்றும், ஞானத்தினால் பொய்யாகிறபடியால் அப்பிரதிஷ்ட மென்றும், அவித்தியா பரிணாம மானதால் பரஸ்பர சம்பூதமல்ல வென்றும், அநிர்வசநீய மாகலான் சத்துமல்ல அசத்துமல்ல வென்றும், அசுர சுவபாவமுள்ள வேதாந்திகள் கூறுவார்களென உரைசெய்தாரு முளராதலின், வேதாந்தத்திற்கும், சாருவாகனுக்கும் பேதமென்ன எனின், ஜீவேசுவர ஜகத்துக்கள் சத்தியம்போல் காணப்படினும் அவித்தியா பரிணாமனும், சேதன விவர்த்தமுமாகலின் மண்ணிற் கடம்போல பிரமத்திலுலகு உண்மையன்றாவதனால், அவை பொய்யு மாகாமல் மெய்யு மாகாமல் சதசத் விலக்ஷண அநிர்வசநீய மென்பது அவ்வேதாந்தத்தின் துணிபேயாம். இனி, வேத பாஹியர்களான சாருவாகனாதிய நிரீசுவர மதத்தர், தங்கள் அசுர சுவபாவத்தினால் தேகத்துக்கு வேறாக ஆத்மா என்பதொரு பொருளில்லை யென்றும், தேகத்தின் தர்மமே சைதன்னியமென அங்ஙன மொரு அறிவு காணப்படு மெனவும், அவ்வறிவாகிய ஜீவன் தேகத்தோடு தோன்றி, அத் தேகத்துடன் நசிப்பதன்றிப் புண்ணிய பாப கருமங்களை யனுசரித்துத் தேகத்தை விட்டு மற்றொரு தேகத்தை யடைவதும், முன்னிருந்த தேகத்தை விட்டு கர்மானுசாரமாக இத் தேகத்தை யடைந்த தென்பதும், பொய்யே யென்றும், தேகமே ஆத்மா, போகமே முக்தி, பாபமேது? புண்ணியமேது? ஈசனேது? செத்தவன் பிறத்தலேது? நரகமேது? சொர்க்கமேது? பந்தமேது? மோக்ஷமேது? என்கிற சாருவாகனோடு ஜீவேசுவர ஜகத்துக்கள் பிரம சொரூபமானது, பிரமத்துக்கு வெதிரிக்தமான தொன்று மின்றென்றும் சித்தாந்தமாகிய வேதாந்த மதத்தை யதனோடு ஒன்றுபோற் பொருத்திச் சாமானியர்கள் பிரமிக்கும்படியாக அங்ஙனந் தப்புரை கண்டது அவ்வுரை காரனுக்குத் தனது மனத்திலுள்ள அபிமான வெறியும், வேதாந்திக ளிடத்துள்ள அசூயையுமே காரணமன்றி வேறன்றென வுணர்க."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"சத்தியமானம் பிரஹ்மத்தினின்று முண்டாய், பிரம்ம சுவரூபமா யிருக்கிற இப்பிரபஞ்சத்தை அசத்திய மென்பார்கள். பிரஹ்ம மென்கிற ஆதிசேஷனிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிற இச் சகத்தை அப்படிப் பட்டதல்ல வென்பார்கள். சத்திய சங்கல்பனாய்ச் சர்வேசுவரனா யிருக்கிற பரப்பிரஹ்மமான நம்மா லாளப்படுகின்ற

இதற்கு ஈசுவரனே யில்லை யென்பார்கள். மனிதன், பசு, பக்ஷி முதலிய வெல்லாம் ஸ்திரீ புருஷர்கள் ஒருவரோ டொருவர் சம்பந்தப்படுவதால் உண்டாவதாய்க் காணப்படுகிறதே யல்லது மற்றப்படி ஒன்றுங் காணுமையாலே எல்லாம் காமத்தா லுண்டாகிற தென்பார்கள்.''']

"இந்த எண்ணத்தைப் பற்றிக்கொண்டு, இவர்கள் தேகத்தைக் காட்டிலும் வேறு யிருக்கிற ஆத்மாவைக் காணப்படாத அற்ப புத்திகளாய், அதாவது, குடம் முதலியவைகளைப் போல் புறப்படு கின்ற சரீரத்தில் தேகத்தைக் காட்டிலும் வேறாய் ஆத்மா இருக்கிற தென்று பகுத்தறியத்தக்க சக்தி யற்றவர்களாய்ச் சகல பிராணிக ளுக்கும் இம்சையைச் செய்துகொண்டு வுலகத்தை யழிக்கப் புகு கிறார்கள்." 9

"எட்டாத விஷயங்களிலும் ஆசை கொண்டு அவைகளைச் சம்பா திக்க வேண்டி அவிவேகத்தால் அந்நிதி யார்ஜிதமான பொருளைக் கொண்டு சாஸ்திரத்தில் சொல்லாத விரதங்களை யெல்லா மேலிட்டுக் கொண்டவர்களாய் டம்பம், மானம், மதம் இவைகளுடன் கூடி அவை களைச் சாதிக்க யத்தனஞ் செய்கிறார்கள்." 10

"இன்றைக்கோ நாளைக்கோ இறக்கப் போகிற இவர்கள் பிரா கிருதப் பிரளயம் வரையில் சாதித்தாலும் சாதிக்க முடியாத விஷயத் தில் அளவற்ற ஆசை கொண்டு, காம போகமே பெரும் பயன் என்று நினைத்தவர்களாய், 'இதற்கு மேலும் ஒரு புருஷார்த்த முண்டோ?' என்று நிச்சயித்து விடுகின்றார்கள்." 11

"அன்றி ஆசை யென்னும் அநேக பாசங்களால் கட்டுண்ட இவர்கள் காமக் குரோதங்களுக் கிருப்பிடமாய்க்கொண்டு காம போகத்திற்காக அக்கிரம வழியில் பொருள் தேட முயல்கின்றார்கள்."

"மேலும், 'பெண்டு பிள்ளை முதலிய எல்லாம் என் திறமையால் சம்பாதிக்கப்பட்டதே யல்லது அது விஷயத்தில் அதிருஷ்டம் முத லிய யாதொரு காரணமுங் கிடையாது; இப்படியேதான் இன்னும் கோரி யிருக்கிற விஷயத்தையும் நானே சம்பாதிக்கப் போகிறேனே யல்லது மற்றப்படி அதிருஷ்டாதிகளுடன் கூடி அடையப் போகிறே னென்ப தில்லை' என்று நினைத்து விடுகிறார்கள். என் கஷ்டத்தினுல் சம்பாதித்த திரவியம் இதோ விருக்கின்றது; இன்னு மிப்படியே என் சாமர்த்தியத்தால் இதைச் சம்பாதிக்கப் போகிறேன்." 13

"இந்தச் சத்துருவை மஹா பலசாலியான நான் கொன்றேன்; இன்னு மிப்படி வெகு பேரை நானே கொல்லப் போகிறேன்; அதுவே யல்லது அதிருஷ்ட மென்றும், அதென்றும், இதென்றும், சொல்லுவ தெல்லாம் அசட்டுத்தனம் என்கிறார்கள். அதுவுமன்றி, நான் ஈசுவரன், அதாவது ஒருவனுக்கு ஆட்பட்டவ னல்லன்; பின்னும் யான் பல பெயர்களை யாளுபவன்; போகங்களும் அப்படியே என்னால் மாத்திர மடையப் படுகின்றனவே யல்லது மற்றப்படி அதிருஷ்டம் முதலியவைகளா லுண்டாகின்றன வென்பதில்லை; யான் ஸ்வதஸ் ஸித்தமா யிருப்பவன்; அவ்வாறே ஸ்வயம் பலவானாயும் சுகியாயு மிருப்பவ னென்கின்றார்கள்." 14

"நான் ஸ்வயம்; பரிபூர்ணன்; உத்தமமான வம்சத்தில் பிறந்தவன்; இவ் வுலகத்தில் எனக்குச் சமமாய்த் தன் சாமர்த்தியத்தால் எல்லாப் பெருமைகளையும் படைத்தவன் வேறொருவனு மில்லை யென்கிறார்கள். நான் தானாகவே யாகஞ் செய்ய வல்லவன்; தானமு மளிப்பேன்; அதனால் சந்தோஷிப்பே னென்று அஞ்ஞானத்தால் இவ்வாறு மதிமயங்கி ஈசுவரானுக்கிரக மின்றி எல்லாம் தங்களாலேயே ஆய்விடுவதாக நினைக்கின்றார்கள்." 15

"அதிருஷ்டம் ஈசுவரன் முதலிய சகாய மில்லாமல் தம்மாலேயே எல்லாஞ் செய்யக்கூடு மென்று நினைத்து, 'இப்படிச் செய்வேன், இதையுஞ் செய்வேன், அதையுஞ் செய்வேன்' என்று அநேக விதமாய் மனக்கவலை கொண்டவர்களாய் இந்தப் போக மென்னும் வலையிலகப்பட்டுக் காம போகத்தில் மிகவும் பற்றுடையவரா யிருந்து இடையில் மறித்து, அசுத்தமான நரகத்தில் விழுகின்றார்கள்." 16

"இஃதன்றி, தங்களைத் தாங்களே புகழ்ந்துகொண்டு செல்வம், கல்வி, குடிப்பிறப்பு இவைகளால் தம்மைக் குறைவற்றவராக நினைத்து யாதொரு வியாபாரஞ் செய்யாம லிருந்து விடுகிறார்கள். மேலும், 'யக்ஞம் செய்தோ மென்கிற பெயர் வரவேண்டும்' என்று நினைத்து டம்பத்திற் காசைப்பட்டு, சாஸ்திரத்தில் கூறிய தொன்றும் தாம் செய்வ தொன்றுமாக யக்ஞம் செய்கிறார்கள்." 17

"ஒருவருடைய அபேக்ஷை யில்லாமல் நானே சர்வமும் செய்கிறே னென்று இவ்வாறு அகங்காரப் பட்டுக்கொண்டும், 'எதையும் செய்ய வல்லேன்' என்று தன் பலத்தைத் தானே புகழ்ந்து கொண்டும், 'இவ்வாறு எல்லா மிருக்கிற எனக்குச் சமமா யொருவரு மில்லை'

என்று அகங்கார மடைந்தும், 'எனக்கெல்லாம் நினைத்த மாத்திரத்தில் கிடைக்கும்' என்று மகிழ்ந்தும், 'எனக்கு யாராகிலும் தீங்கு நினைப்பார்களாகில் அவர்களை அதஞ் செய்வேன்' என்று கோபித்தும், இவ்வாறு தம் தேகத்திலும் பிறருடைய தேகத்திலு மிருந்து கொண்டு சகலமுஞ் செய்விக்கின்ற ஈசனாகிய நம்மைப் பகைத்தும், குயுக்திகளைக் கொண்டு நாமிருக்கிறோ மென்கிற விஷயத்தில் தோஷத்தை யேறிட்டும் இப்படிக்கெல்லாம் அகங்கரித்துக்கொண்டு யாகஞ் செய்கிறார்கள். இவ்வாறு நம்மைப் பகைப்பவர்களாய்க், குரூரர்களாய், அசுபர்களான அந்த நராதமர்களை நாம் பிறப்பு, இறப்பு, மூப்பு என்று புரண்டுகொண்டே யிருக்கிற சம்சாரத்தில், நம்மை விரோதிக்கின்ற அசுர யோனிகளில்தானே எப்பொழுதும் பிறக்கும்படி தள்ளிவிடுகிறேன் என்றால், அந்தந்தப் பிறப்பு கிடைக்கும்படியான காரியத்தைச் செய்யும்படி அவர்களுக்கு நாமே புத்தியைத் தருகிறோம். நமக்கு அனுகூல மல்லாத பிறவியில் தோன்றிய அசுரப் பிரகிருதிகள் ஜன்மந்தோறும் மென்மேலும் அஞ்ஞான விருத்தியடைந்து விபரீதமாய் வாசுதேவ னென்கிற பகவானொருவனிருக்கிறா னென்கிற நினைவே யில்லாமல் அதோகதியாய்ப் போவார்கள்." 18-20

"ஓ! அர்ச்சுனா! காமம், குரோதம், லோப மென்னும் மூன்று விதமான இவைகள் நரகத்திற்கு வாசலாயும், தனக்கு நரகத்தைக் கொடுக்க ஏதுவாயு மிருக்கின்றன வாதலால் இந்த மூன்றையும் நிவிர்த்திக்கவேண்டும்."

[மேலும், அசுர சுவபாவத்துக்குள்ளே அநேக தோஷங்களில் முக்கியமான மூன்று தோஷங்கள் ஆத்ம நாசத்திற்குக் காரணமாகை யால் அவைகளை அவசியம் நீக்கவேண்டு மென்பது இதனால் வெளி யிடப்பட்டது.]

[கருத்து:—காமமாவது:—"புத்திர மித்திர களத்திர கிரகக் கிராம க்ஷேத்திர தன தான்யாதிகள் மேன்மேலுஞ் சம்பாதிக்க வேண்டும்" என்று விகற்பித்து வருகிற சித்த விருத்தியாகும். இதை முமுக்ஷுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமற் சர்வாத்மனா விட்டுவிட வேண்டியது. "ஏன் அவ்வாறு விட வேண்டியது?" என்றால், பூர்வத்தில் நரகாசுரன் இலக்ஷம் பெண்களைக் கலியாணஞ் செய்வதற்காக விரும்பித் தேவப் பெண்கள் பதினாயிரம் பேர்களைச் சிறை பிடித்து வந்ததைக் கேட்ட ஸ்ரீ கிருஷ்ண சுவாமியால் அவன் பிராணஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி

இவை முதலான துக்கங்கள் அனுபவித்ததும், இன்னும் அநேகர் துக்கங்க ளனுபவித்ததுஞ் சாஸ்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும், இந்தக் காமத்தினால் துக்கங்க ளனுபவிப்பதை நாம் பிரத்தியக்ஷமாகக் காண்பதினாலும் இனிப் பிறக்கப் போகிறவர்க ளிடத்திலும், இந்தக் காமமிருந்தால் துக்கமே யனுபவிப்பார்க ளென்று தோற்றுகிறபடியினாலும் இந்தக் காமத்தை முமூக்ஷுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிட வேண்டியது.

குரோதமாவது:—தனக்கு வேண்டிய காரியங்களை யொருவன் விக்கினஞ் செய்தால் அவனிடத்தில் ஆக்கிரமாக விகற்பித்து வருகிற சித்த விருத்தியாகும். இதை முமூக்ஷுவானவர்கள் காலத்திரயத்திலு மில்லாமல் சர்வாத்மனா விட்டுவிட வேண்டியது. "ஏன் விடவேண்டியது?" என்றால், பூர்வகாலத்தில் பகாசுரன் தனது புசிப்பிற்கு இடையூறு விளைவித்த பீமசேனன்மீது குரோதம் வைத்து, அதனால் அவன்: பிராணஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி இவை முதலான அநேக துன்பங்கள் அனுபவித்ததும், இன்னும் அநேகர் துன்பங்க ளனுபவித்ததும் சாஸ்திரங்களிற் கண்டிருக்கிறோ மானபடியினாலும், இப்போதிருக்கிற பேர்களும் இந்தக் குரோதத்தினால் துக்கங்கள் அனுபவிப்பதைப் பிரத்தியக்ஷமாக நாம் கண்டிருக்கிறபடியினாலும், இனிப் பிறக்கப் போகிறவர்க ளிடத்திலும் இந்தக் குரோதம் இருந்தால் துக்கமே யனுபவிப்பார்க ளென்று தோன்றுகிறபடியினாலும், இந்தக் குரோதத்தை முமூக்ஷுவானவர்கள் சர்வாத்மனா விட்டுவிட வேண்டிய தென்பது நிச்சயம்.

உலோபமாவது:—தான் சம்பாதித்த பதார்த்தங்களில் ஒருவருக்கும் ஒரு காசளவுஞ் செலவு செய்யலாகா தென்று விகற்பித்து வருகிற சித்த விருத்திக்கு உலோபமென்று பெயர். இதை முமூக்ஷுவானவர்கள் காலத்திரயத்திலும் இல்லாமற் சர்வாத்மனா விட்டுவிடவேண்டியது. 'ஏன் விடவேண்டியது?' என்றால், பூர்வத்தில் துரியோதனனானவன் சூதாடிக் கெலித்த பாண்டவர்களுடைய இராச்சியத்தில். 'அவர்கள் வசிக்கக்கூட இடங் கொடுக்க மாட்டேன்' என்ற உலோபத்தினால் அவன்: பிராணஹானி, பந்துநாசம், இராச்சியஹானி, இகபரங்களில் அபகீர்த்தி இவை முதலான அநேக துன்பங்கள் அனுபவித்ததும், இன்னும் அநேகம் பெயர் துன்பங்கள் அனுபவித்ததுஞ் சாஸ்திரங்களால் உணர்ந்தோமாகையினாலும். இதுபோல் இப்போதிருக்கிறவர்களும் இந்த

உலோபத்தினுல் அநேக துன்பங்கள் அனுபவிப்பதைப் பிரத்தியக்ஷமாகக் கண்டிருக்கிறபடியினுலும், இனிப் பிறவி எடுப்பவர்க ளிடத்திலும் இந்த உலோப மிருந்தால் பெருந் துன்பம் விளைவிக்கு மாகையாலும், இந்த உலோபத்தை முமுக்ஷுவானவர்கள் சர்வாத்மனு விட்டுவிட வேண்டியது உண்மையேயாம்.] 21

"ஆகையால், அர்ச்சுன! நரகத்திற்குக் காரணமான மேற் கூறிய மூன்றுலும், விடுபட்டவனுகிய புருடன் தனக்கு நன்மையைச் செய்து கொள்வான்; அதனுல் அவன் மோக்ஷத்தை யடைவான்." 22

"யாவன் சாஸ்திரோக்தமான விதிநிஷேதங்களை விட்டுத் தனது ஆசை வழி விட்டவாறு பிரவிர்த்திக்கின்றுனே, அவன் தத்துவ ஞானத்தை அடைவதில்லை; இகலோகப் பயனையு மடையான்; உத்தமமான மோக்ஷ மார்க்கத்தையு மடைவதில்லை." 23

"அவரவர்க ளபிமானித்திருக்கும் மதங்கட்குத் தக்கபடி அவரவரையும் அறம் பொருள் இன்பம் வீடு என்கிற நான்குவித புருடார்த்தங்களிலும் வழி காட்டி நடத்துவிப்பது நூல்களே யாயினும் அந் நூல்களின் பிரபல துர்ப்பலங்களைத் தெரிந்து அனுஷ்டிக்காவிடத்தும் பயனின்றென உணர்த்தியதாம். என்னை? ஆரிய ஜனங்கட்குரிய வித்தைகள்: வேதமொரு நான்கும், ஆறங்கமும், தருக்க சாஸ்திரமும், மீமாஞ்சையும், ஸ்மிருதிகளும், புராணங்களுமாகிய இப் பதினன்காம்; இவையே பதினன்கு வித்தைக ளெனப்படும். மதஸ்தர் தங்கள் மதப் பெரியோர்கள் நூல் வழி நடக்கு மிடத்தும் மேற் கூறிய பொது வித்தைகள் பதினன்கிற்கும் தஞ்சிறப்பு நூல்கள் விலகா வழி ஆராய்ந் தொழுகா விடத்தும் புருடார்த்தங்கட் கிழுக்காமென்ற றுணர்க.

ஆகலின், உனக்குச் செய்யத் தகுந்தது இவைகளின் ஏற்பாட்டில் சாஸ்திரமே பிரமாணம். சாஸ்திராதிகளில் சொல்லப்பட்ட கர்மங்களைத் தெரிந்துகொண்டு இந்த லோகத்தில் அவற்றைச் செய்வதற்கு நீ தகுந்தவனுகிருய். ஆகையால், இவை செய்யத்தகும், இவை செய்யத் தகா என்று அறியும் விஷயத்தில் உனக்கு வேதந்தான் பிரமாணம். தர்ம சாஸ்திரம், இதிகாசம், புராணம் முதலியவைகளால் விவரிக்கப்படுகின்ற அவ் வேதமானது எந்தப் புருஷோத்தம தத்துவத்தைப் பரமென்று சொல்லுகிறதோ, அந்தத் தத்துவத்தையே சிறிதும் உயர்வு தாழ்வு இன்றி அறிந்து, அவனுக்குப் பிரீதிகரமாயும் அவனை யடையவேண்டு முபாயமாயும் எந்தக் கர்மத்தை விதிக்கின்றதோ அக் கருமத்தையே குறைவறச் செய்யக் கடவாய்." 24

பதினுருவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

## பதினேழாவது அத்தியாயம்

# சிரத்தாத்ரய விபாக யோகம்

### அவதாரிகை

[தேவதைகள் அசுரர்கள் இவர்களின் பிரிவைச் சொல்லிக் கொண்டு அதன் வழியாய் அடையவேண்டியதாகிய தத்துவத்தைப் பற்றிய ஞானமும் வேத மொன்றையே காரணமாக வுடையதென்று சொல்லப்பட்டது. இப்போது சாஸ்திரத்தில் விதிக்கப்படாத கர்மம் அசுரர்களின் சுவபாவத்தைச் சேர்ந்ததாகையினுல், பிரயோஜனமற்றதென்றும், சாஸ்திரங்களினுல் விதிக்கப்படாத கர்மமும் சத்துவம் முதலிய குணங்களினுல் மூன்றுவித மென்பதும், சாஸ்திரங்களிற் கூறிய கர்மங்களுக்கு லக்ஷணமும் சொல்லப்படுகிறது. அதில் சாஸ்திரங்களில் விதிக்கப்படாத கர்மம் பிரயோஜனமற்றதென்பதைத் தெரிந்து கொள்ளாதவனுகிய அர்ச்சுனன், சாஸ்திரத்தில் விதிக்கப்படாததாயும், சிரத்தையுடன் செய்யப்பட்டதாயு மிருக்கிற யாகம் முதலியவற்றில் சத்துவகுணம் முதலிய காரணங்களினுண்டாகிய பலன்களின் வித்தியாசத்தை யறியவேண்டுமென்கிற ஆசையினுல் கேட்கிறுன்.]

### அர்ச்சுனன் வாக்கியம்

"கிருஷ்ணு! யாவர் சாஸ்திர விதியைக் கைவிட்டுச் சிரத்தையுடையவர்களாய்த் தெய்வ வழிபாடு செய்கின்றுர்களோ, அவர்களது சற்பிரவிருத்தியானது சாத்துவீகமா? இராசதமா? அன்றி, தாமதமா? எத்தகையது?"

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"தேவ அசுர சுவபாவங்களைப்பற்றி விவரித்ததனுல், மனுஷன் அடையவேண்டிய தத்துவ ஞானமும், அதற்கு வேண்டிய உபாயமும் சாஸ்திரத்தினுலேயே அறியவேண்டியதென்பது முந்திய அத்தியாயத்தில் சொல்லப்பட்டது. இந்த அத்தியாயத்தில் சாஸ்திர விதியை விட்டுச் செய்யும் யக்ஞாதி ஆராதனையுங்கூடக் குணங்களினுல் மூன்றுவிதமான தென்பதும், சாஸ்திர விதியின் லக்ஷணமுஞ் சொல்லப்படுகின்றன. சாஸ்திர விதியை விட்டுச்

செய்கிற பூஜை நிஷ்பலமென்பதைத் தெரியாத அர்ச்சுனன் சாஸ்திரோக்த மல்லாதனவும், சிரத்தையோடு செய்யப்படுவனவுமாகிய யாகாதி ஆராதனைகளா லுண்டாகிற பலன் சாத்துவிகமா? அல்லது தாமஸமா? என்று வினவியதாம்.'']   1

ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

''அர்ச்சுனா! புருஷர்களுக் கெல்லாம் சிரத்தையாவது சுவபாவத்தால் உண்டானது. அது சாத்வீக மென்றும், இராஜஸ மென்றும், தாமஸ மென்றும் மூன்று வகைப்படும்; அவற்றின் சுவபாவத்தைச் சொல்லுகிறேன் கேள்.''

[ஸ்ரீ இராமாநுஜா அபிப்பிராயம்:—''சாஸ்திர விரோதமான யாகாதி விஷயமான சிரத்தைக்கும் அந்தச் சிரத்தையோடு செய்கிற யாகாதிகளுக்கும் பலனில்லை யென்பதை மனதில் வைத்துக்கொண்டு சாஸ்திரோக்தமானதும், சிரத்தையோடு செய்யப்படுவதுமாகிய யாகாதி கருமமே குணங்களினாலே மூன்று வித மென்பதைத் தெரிவிக்கும் பொருட்டு பகவான் சொல்லுகிறார் சிரத்தை யென்பது விசுவாசத்துடன் கூடிய பிரவிருத்தி, ஜன்மாந்தர ஸம்ஸ்காரத்தினால் அந்தச் சிரத்தையானது தேகேந்திரியங்கள், அந்தக்கரண விஷயங்கள் இவைகளினா லுண்டாக்கப்படுகிறது.'']

[சுவபாவமாவது:—தனக்கே அசாதாரணமான தன்மை; அதாவது, பழைய வாசனையின்படி அந்தந்த வஸ்துக்களி லுண்டான ருசி. எதில் ருசியோ அதில் சிரத்தை யுண்டாகின்றது. சிரத்தையாவது:—இது என் இஷ்டத்தைப் படுத்து மென்கிற விசுவாசத்துடன் கூடி சாதனத்தா லுண்டாகும் தோரை. வாசனை, ருசி, சிரத்தை இம்மூன்றும் குணங்களின் சம்பந்தத்தா லுண்டாகும் ஆத்ம தருமங்கள். அவற்றை யுண்டாக்கு மவைகளோ தேகம், இந்திரியம், மனம், பிராணன் முதலியவைகளின் தருமங்களான குணங்கள். அவைகளால் இந்தச் சாத்விக முதலிய சிரத்தை யுண்டாகும்.]   2

''ஓ! அர்ச்சுனா! சகல பிராணிகளுக்கும் அவரவர் காண சுவபாவத்தை யனுசரித்துள்ள சிரத்தையானது உண்டாகின்றது. இந்தப் புருஷனானவன் சிரத்தையோடு கூடினவனைத் தனக்கு எந்தக் குணம் பிடிபடுகின்றதோ அந்தக் குணத்தை யநுசரித்து அவன் அந்தச் சிரத்தையினையே யுடையோனவன்.''

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"சத்துவமாவது - எல்லாப் புருஷர்களுக்கும் தங்கள் மனங்களுக்குத் தக்கபடி சிரத்தையுண்டாகிறது. அதாவது, மனது எவ்வகைப்பட்ட குணத்தை யுடையதோ, அப்படிப்பட்ட விஷயத்தைப் பற்றிய சிரத்தையே யுண்டாகிறது. 'ஸத்வ' என்னும் பதம் முன்பு சொல்லப்பட்ட தேகம் இந்திரியம் முதலியவைகளையும் குறிப்பதற்காக இந்தப் புருஷன் சிரத்தையின் மாறுதலாக இருக்கிறான். எந்தப் புருஷன் எவ்வகைப்பட்ட சிரத்தையோடு கூடினவனோ அதற்குத் தகுந்தவாறு அவன் புண்ணிய கர்மங்களின் பலன்களோடு கூடினவனாகின்றான். ஆகையினால், பலத்தை யடைவது சிரத்தையே பிரதான காரணமாக வுடையதென்று சொல்லப் பட்டது."] 3

"அர்ச்சுனா! சத்துவகுண முடையவர்கள் தேவதைகளைப் பூஜிக்கின்றார்கள்; இரஜோகுண முடையவர்கள் யக்ஷ ராக்ஷஸர்களையும், தமோகுண முடையவர்கள் பிரேதங்களையும் பூதகணங்களையும் பூஜிக்கின்றார்கள்."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"சத்துவகுணம் நிறைந்தவர்கள் சத்துவகுணம் மேலிட்ட சிரத்தையோடு கூடினவர்களாய்த் தேவதைகளை ஆராதனஞ் செய்கின்றார்கள். துக்கத்தோடு சம்பந்தப்படாத உயர்ந்த சுகத்திற்குக் காரணமாகிய தேவதைகளைக் குறித்து, ஆராதனையைப் பற்றிய சிரத்தையானது சாத்துவிகமென்று சொல்லப்பட்டதாகிறது. இரஜோகுண மேலிட்டவர்கள் யக்ஷ ராக்ஷஸர்களை ஆராதனஞ் செய்கின்றார்கள். மற்றவர்களாகிய தமோகுணம் மேலிட்ட ஜனங்கள் பிரேதங்களையும் பூதகணங்களையும் ஆராதனை செய்கின்றார்கள். அந்த ஆராதனமானது, துக்கத்தோடு கலந்த அற்ப சுகத்தை விளைவிக்கும் ஆற்றலுடையது. இராஜோகுணம் மேலிட்ட சிந்தை துக்கம் நிறைந்த மிகவும் அற்ப சுகத்தை விளைவிக்கிறதென்றால், தமோகுணம் மேலிட்ட சிரத்தை யென்பது தாத்பரியம்."]

[தேவர்களைப் பூஜித்த லென்றது: பிரம, விஷ்ணு, உருத்திராதியர்களைச் சிலை, பொன், வெள்ளி முதலிய விக்கிரக வடிவிற் பூஜித்தலும் தியானித்தலுமாம். இஃது அம்மூர்த்திகளில் அந்தர்யாமியாக இருக்கும் பிரம சொரூபத்தை வேதாந்த சாஸ்திரங்களா லறிந்து குணாதீதமடையு முண்மையான நெறியன் றாகலின், இதனை அசாஸ்திர மார்க்கத்தில் சத்துவகுண சிரத்தையோடு செய்யும் பூஜனை

யென்றதாம் அசாஸ்திர மாயினும் இது சாஸ்திர மார்க்கத்திற்கு இழுத்துச் செல்லு மாகையால் சத்துவ சுவபாவமென வகுத்தமை காண்க.] 4

"சாஸ்திரத்தில் சொல்லப்படாத தவம், யாகம் முதலியவைகள் மிகவும் கோரமாயும் அதிக வருத்தத்தாலே சாதிக்க வேண்டியவைகளாயும் இருந்தபோதிலும், அவற்றை டம்பம், அகங்காரம், காமம், ராகம், பலம் இவை முதலியவற்றோடு கூடிச் சரீரத்திலுள்ள பிருதிவி முதலிய பூத சமூகத்தையும், எனது அம்சமான ஜீவனையும், வருத்திக்கொண்டு செய்கின்றவர்கள் அசுர நிச்சய முள்ளவர்களென் றறியக் கடவாய். எனது ஆக்ஞையை மீறி நடக்கும் அசுரத்தன்மை பொருந்திய அவர்களுக்குச் சிறிது இன்பமுங் கிடையாது; மற்றெவ் வித மென்றால், அனர்த்தமான நரகமே உண்டாகு மென்று முன்னரே சொல்லப்பட்டது." 5-6

"சகலருக்கும் பிரியமான ஆகாரம் மூன்று விதமாக இருக்கின்றது. யக்ஞமும், தவசும்' தானமும் அவ்வாறே மூவிதமாக இருக்கின்றன; அவற்றின் பேதங்களைக் கூறுகிறேன் கேட்பாயாக!"

["அந்நமயம் ஹிஸோம்யந என்ற சாந்தோக்கிய உபநிஷத் வாக்கியப்படி தாமுண்கிற உணவின் குணம் சத்வ, ரஜஸ், தமஸ் என்பவற்றில் எத்தன்மையதோ அத்தன்மையதே யவரவர் சித்த சுவபாவமும். இந்த சுவபாவப்படியே உணவும் இங்ஙனம் ஒன்றையொன்று சம்பந்தித்துக்கொண்டே நிற்பதனால், அவரவர் பிரவிருத்தியும் அவரவர் சுவபாவப்படியே மூவகைப்படு மென்றதாம். இதனால் சாஸ்திரோக்தமான தெய்வ வழிபாடு குணத்தினால் மூவகைப் படாமல் சுத்த சத்துவமே யாமென முன்னர்க் கூறினர். ஈண்டுச் சாஸ்திரோக்தமாக அறிந்து செய்யும் யக்ஞ, தான, தவசாதிகள் ஆகாரத்தை யனுசரித்துக் குணத்தினால் மூவகைப்படு மென்றதுங் காண்க.] 7

"அர்ச்சுனா! தீர்க்காயுள், சாந்தம், இடம், திருப்தி, வியாதியின்மை, பிரியம் ஆகிய இவற்றை விருத்தி செய்பனவைகளாகவும், மாதுரிய மானவைகளாகவும், நெய் பால் இவற்றின் பசுமை யுள்ளனவாகவும், தேகத்தில் வெகு காலத்திற்குத் திடத்தை யுண்டாக்கிக் கொண் டிருப்பனவாகவும், நினைப்பதற்கே வெகு மனோகரமானவைகளாகவு முள்ள உணவுகள் சாத்துவிகர்களுக்குப் பிரியமானவைகளாம்." 8

"அர்ச்சுன! காரமாயும், புளிப்பாயும், உப்பு அதிகமாயும், அதிக உஷ்ணமாயும், அதிக தீக்ஷண்யமாயும், உபயோகிக்கக் கூடாத சைத்தியாதிகளுடன் கூடியதாயும், சோஷிபிக்கிறதாயும், தாபத்தை யுண்டு பண்ணுவதாயு மிருக்கும் ஆகாரம் இராக்ஷஸனுக்கு இஷ்டம். இவ்வித ஆகாரங்கள்: தூக்கம், சோபம், வியாதி இவற்றை விருத்தி பண்ணும்." 9

அஃதன்றி, நாள் பட்டதாயும், அதனால் தன் சுவபாவமான ரஸத்தை யிழந்து கெட்ட நாற்ற முடையதாயும், பழகிப்போனதாயும், பெரியோர்களைத் தவிர மற்றைபோர்களால் புசித்து எஞ்சி நின்றதாயும், யாகத்தில் சேஷப்படாததாயு மிருக்கும் போஜனமானது தாமஸர்களுக்குப் பிரியமா யிருக்கும். இதுவோ தமோ குணத்தை மேன்மேலும் விருத்தி செய்யும். ஆகையால், இதத்தைக் கோரியவர்கள் சாத்விகமான ஆகாரத்தைத்தான் புசிக்கவேண்டும்."

தாமஸ சுவபாவ முடையோர்க்கு அவ் வகை ஆகாரம் பிரியமானவையாயினும், ஒருவ ருண்டு சேஷமானதும் அசுத்தமானதும் யாதுபற்றிப் பிரியமாயின வெனின், தாமஸர் அவற்றை வெறுக்காது உண்ணுதல்பற்றிப் பிரியமானவையென் றருளினன் என்க. 10

"சாஸ்திர விதிப்படி நியமிதமான யாகங்களைப் பலனை விரும்பாது செய்தல் உசிதமென்று மனதில் நிச்சயித்து எவ் யாகங்கள் செய்யப்படுகின்றனவோ அவை சத்துவகுணப் பிரதான மானவை யென்று தெரிந்து கொள்வாயாக." 11

"பரத வம்சத்திற் சிறந்தவனாகிய அர்ச்சுன! பலனை அபேக்ஷித்தாவது டம்பத்திற்காகவாவது, எந்த யக்ஞம் அனுஷ்டிக்கப்படுகிறதோ அந்த யக்ஞத்தை இராஜஸ மென்றறி."

[ஆகையினால், இந்த லோகத்தி லுண்டானதும், பரலோகத்தி லுண்டாவதுமாகிய பலன்களைச் சேர்த்து ஆசைப்படுவதுதான் இவ்விடத்தில் இராஜஸ மென்று சொல்லப்படுகிற தென்கிற அபிப்பிராயத்தினால் சொல்லப்பட்டது.] 12

"விதிக்கு விலக்காகவும், அன்னதானஞ் செய்யாமலும், மந்திரம் ஓதாமலும், தக்ஷிணை கொடாமலும், சிரத்தை யில்லாமலும் செய்யப்படுகின்ற யக்ஞம் தாமஸ மென்று சொல்லப்படும்."

[பிறகு, தமசு சமத்துவம் முதலிய குணங்களினால் மூன்றுவித மென்பதைச் சொல்வதற்காக, அது சரீரம், வாக்கு, மனது இவைக

ளால் செய்யப்படக் கூடியதென்று அதன் சொரூபத்தின் பேதத்தைத் தெரிவித்தலாம்.] 13

"தேவர்கள், பிராமணர்கள், குருக்கள் இவர்களைப் பூஜித்தல், தீர்த்த ஸ்நானம் செய்தல், உள்ளத்தி லுள்ளபடி நடத்தல், ஸ்திரீகளைப் பார்க்கும்பொழுது இவர்கள் அநுபவத்திற்கேற்றவர்களென்கிற எண்ணத்தோடு பாராமை, பிராணிகளுக்குப் பீடை செய்யாமை ஆகிய இவை சரீரத்தினால் செய்யத் தகுந்த தவமென்று சொல்லப்படும்."

[கருத்து:—பிரமசரிய மென்பது ஸ்திரீயை நினைத்தலும், ஸ்திரீயின் பெயரை யுச்சரித்தலும், போகத்திற் கனுகூலமான விதமாய்ப் பெண்களோடு விளையாடுதலும், போகங் கருதி மகளிரைப் பார்த்தலும், அக் கருத்துக்கொண்டு வனிதையரோடு இரகசியமாகப் பேசுதலும், போக விஷயமாய் இவ்விதஞ் செய்ய வேண்டுமென் றுத்தேசித்தலும், அதுவிஷயமா யொரு வித நிச்சயங் கொள்ளாமலும், நிச்சயித்தபடி நிறைவேற்றுதலும் ஆகிற இவற்றைச் செய்யாமையேயாம். இவற்றில் யாதேனு மொன்றைச் செய்யினும் பிரமசரிய விரதத்திற்குப் பங்கம் நேர்ந்து ஸ்திரீ சம்போகஞ் செய்ததாகவே முடியும்."] 14

"அர்ச்சுன! அயலாருக்கு மனவருத்த முண்டாக்காமலும், உண்மையானதும் - இனிமையானதும் - பிரயோஜன முள்ளதுமான வார்த்தையும், வேத சாஸ்திராப்பியாசமும் யாவையோ அவை வாக்காற் செய்யத்தகுந்த தவமென்று சொல்லப்படும்."

[அதாவது, 'அயலாருக்கு மனவருத்தம்' என்பது முதலியவைகளுக்குக் குரூரமான வார்த்தை, மர்மங்களை யெடுத்து வெளிப்படுத்தல், தூஷித்தல் முதலியவைக ளில்லாமையினால் பயம் முதலியவைகளுக்குக் காரணமாகாதது என்றர்த்தம். 'உண்மை' ஆவது - தான் பார்த்ததுபோலச் சொல்லுகிற நன்மையான வார்த்தை. பிரியமாக இருத்தலாவது-க்ஷேமத்தை விசாரிப்பது, தர்மங்களை அனுமோதனஞ் செய்வது முதலியவைகளினால், தனக்குத் தகாத சப்தம் முதலிய விஷயங்களைத் தோத்திரஞ் செய்வது முதலிய பிரியமான வார்த்தை. சாஸ்திரங்களில் மறுக்கப்பட்டிருப்பதனால் அதைப் பரிஹரிப்பதற்காக 'ஹிதமாயும்' என்று சொல்லி யிருக்கிறது.] 15

"மனதில் சினம் முதலியவை யற்றிருத்தல், பிறருக்கு க்ஷேமமுண்டாக்குவதில் ஆசைகொண்டிருத்தல், வாக்கைப் பேசவொட்டாமல் அடக்குதல் (அதாவது பகவத் தியானஞ் செய்துகொண்டிருத்

தல்), மனோ வியாபாரத்தைத் தியானிக்கும் விஷயத்தில் தானே நிறுத்துதல், ஆத்மாவை யொழிந்த மற்றவைகளில் சிந்தையற்றிருத்தல் ஆகிய இவை மனத்தவமென் றறியக்கடவாய்.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"மௌனம் என்பதற்கு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் கருத்தாவது:—பேசாம லிருப்பது வாக்கின் செய்கையாகையால் மனத்தின் செய்கையாக எவ்வாறு சொல்லலாம்?'' என்றால், மனதின் ஏவலால்தான் வாக்குப் பேசுகிறது; மனது வாக்கை ஏவாமல் தான் அடங்கி நின்றால், வாக்கு நின்றுவிடு மாகையால், வாக்கை நிறுத்துவதாகிய மௌனமானது மனிதன் செய்கையாகச் சொல்லப்பட் டிருக்கிறது."] 16

"பலாபேக்ஷை யற்று இது பகவானுக்கு ஆராதன மென்கிற சிந்தையோடு கூடியிருப்பவர்களாலே மிகவும் சிரத்தையுடன் எந்தத் தவமானால் செய்யப்படுமோ (முற்கூறியபடி மூன்று விதமா யிருக்கிற) அத்தவமானது சாத்துவிகமென்று சொல்லப்படும்.'' 17

"பலத்தில் அபேக்ஷையுடன் கூடித், தன்னைக் கண்டு பிறர் சந்தோஷித்துக் கொண்டாடி நமஸ்காராதிகள் செய்யவேண்டு மென்று டம்பத்தைக் கோரியவர்களால் எந்தத் தவம் செய்யப்படுமோ அது இராஜஸ தவம்.''

[மேலும், அது அசாசுவதமான சுவர்க்காதிகளைப் பயனாய்க் கொண்டதாகையால் சாசுவத மல்லாமல் சலிப்புற்று அழிந்து போகும்.] 18

"அவிவேகத்தினா லுண்டாகும் துராக்கிரகத்தினாலாவது, தன் தேகத்தைப் பலவிதமாக வருத்திக்கொள்வதினாலாவது, அன்னியனுடைய நாசத்தின் பொருட்டாவது எந்தத் தவமானது செய்யப்படுகிறதோ, அந்தத் தவமானது தாமஸமென்று சொல்லப்பட்டிருக்கிறது.''

[மூடர்களாவார் விவேக மில்லாதவர்கள். மூடர்களினா லுண்டாக்கப்பட்ட பிடிவாதத்தினால் தன்னுடைய சக்தி முதலியவைகளை நிரூபிக்காமல் தன்னைப் பிடித்துக்கொள்வதினால் எந்தத் தபசு செய்யப்படுகிறதோ அது தாமஸ மென்று சொல்லப்பட்டது.] 19

"அர்ச்சுனா! ஈசுவரார்ப்பணமாகக் கொடுக்கவேண்டு மென்னும் நிச்சயத்தோடு எந்தத் தானமானது புண்ணிய தேசத்திலும், புண்ணிய காலத்திலும், பிரதி யுபகாரஞ் செய்யமாட்டாத வேத சாஸ்

திர சம்பன்னர்களாகிய பிரமஞானிகள் முதலிய தக்கோருக்குக் கொடுக்கப்படுகின்றதோ அந்தத் தானமானது சாத்துவிகமாகச் சொல்லப்பட் டிருக்கிறது."

[தானம் கொடுத்தல் கர்த்தவ்ய மென்றெண்ணி, உபகாரத்தைக் கோராமல், பிரசஸ்தமான தேசம், காலம், பாத்ரம் தடஸ்தமான போது கொடுத்த தானம் சாத்துவிக தான மெனப்படும். தவத்தைப் பரிக்கிரகிப்பவன் தன்னையும், எதிரியையும் காப்பவனாக இருக்கவேண்டும். அப்படிப்பட்ட பாத்ரன் எவ்விடத்தில் கோருகிறானோ அவ்விடத்தில் தானம் கொடுக்கவேண்டும்.] 20

"பிரதி யுபகாரத்தை யுத்தேசித்தாவது, பலனை யுத்தேசித்தாவது மன வருத்தத்தோடு எந்தத் தானம் கொடுக்கப்படுகின்றதோ அது ராஜஸமென்று சொல்லப்படுகிறது"

["பிரதி யுபகாரத்தை யுத்தேசித்து" என்பதற்குப் "பிரதி யுபகாரம் செய்வதில் அபிப்பிராயத்தை முன்னிட்டு" என்றர்த்தம். இதனால் முன்பு அவனால் செய்யப்பட்டதற்குப் பிரதி யுபகாரமாக இருக்கிற தென்பதும், வரப்போகிற அவனால் செய்யப்படுகிற பிரதியுபகாரத்திற்குக் காரணமாக இருக்கிற தென்பதும் சுருக்கிச் சொல்லப்பட்டது. திரவியத்தின் ஆசையினால் கஷ்டப்பட்டுக் கொடுக்கிற புருஷன் நல்ல பாகத்தைத் தனக்காக நிறுத்திக்கொண்டு மற்றைய பாகத்தை அயலாருக்குக் கொடுக்கிறானென்கிற அபிப்பிராயத்தினால், அஸ்ரத்தையினாலே கொடுக்கப்பட் டிருப்பதனால், வஸ்து உயர்ந்ததல்ல வென்பது நிரூபிக்கப்பட்டது.] 21

"சுத்தமான தேசத்திலுங் காலத்திலும், அயோக்கியர்களின் பொருட்டுப் பூஜை முதலியவை செய்யாமல் அவமரியாதையோடு எந்தத் தானம் கொடுக்கப்படுகின்றதோ, அது தாமஸ மென்று சொல்லப்பட் டிருக்கின்றது. அதாவது, இடமில்லாத இடத்திலும், காலமில்லாத காலத்திலும் அபாத்திரங்களுக்கு எந்தத் தானம் கொடுக்கப்படுகிறதோ அதுவும், காலலம்புதல் முதலிய கௌரவங்களில்லாமலும், அவமதிப்புடனும், அதாவது உபசார வார்த்தை முதலியன இல்லாமலும் எது கொடுக்கப்படுகிறதோ அது தாமஸமென்று சொல்லப்பட்டது." 22

"பிரமத்திற்கு ஓம் தத் ஸத் என மூன்றுவித பெயர்கள் சொல்லப்பட் டிருக்கின்றன. அவ்விதப் பெயர்களால் பிராமணர்களும், வேதங்களும், யக்ஞங்களும் ஆதி காலத்தில் சிருஷ்டிக்கப்பட்டன."

["ஓம் என்பது பிரமத்தினுடைய நாம மென்று உபநிஷத்தில் பலவிடங்களில் சொல்லப்பட் டிருக்கிறது. ஜகத்திற்குக் காரண மாயும், ஞானிகளினாலே பார்க்கப்பட்டதாயு மிருக்கிறதினால், பரப் பிரமம் தத் என்று சொல்லப்படுகிறது. அழிவற்றதும், உண்மை யானதும், உத்தமமானதுமாகிய வஸ்து எதுவோ அது (பிரம்மம்) ஸத் என்று சொல்லப்படுகின்றது. இந்தப் பெயர்களைக் கொண்டு பிரம்மாவினால் பிராமணோத்தமர், வேதம், யக்ஞம் இவைகள் சிருஷ் டிக்கப்பட்டன."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"ஓம் தத் ஸத் என்கிற மூன்று விதமான சப்தமும் பிரமத்தோடு சேர்ந்ததாக இருக்கிறது. பிரம்மமாவது வேதம். வேத மென்னும் பதத்தினால் வேதங் களிற் சொல்லப்பட்ட கர்மங்கள் சொல்லப்படுகின்றன. அதா வது, வேதங்களிற் சொல்லப்பட்ட யக்ஞம் முதலிய கர்மங்கள் இந்த மூன்றுவித சப்தங்களோடு சேர்ந்தவைகளா யிருக்கின் றன. அதில், 'ஓம்' என்னும் பதத்தோடு சேர்ந்திருப்பது வேதத்தில் சொல்லப்படுகிற கர்மங்களுக்கு அங்கமாக அவை களைச் செய்ய ஆரம்பிக்கும்பொழுது சொல்லப்படுகிறபடி யினால், 'தத் ஸத்' என்னும் பதங்களோடு சேர்ந்திருப்பதும்: அவைகள் பூஜ்யங்களென்று தெரிவிப்பதற்காக அவைகளை இந்தப் பதங்கள் சொல்லுகிறபடியினால், இப்படிப்பட்ட மூன்று விதமான பதங்களோடு சேர்ந்தவைகளாகவே வேதத் தில் சம்பந்தத்தையுடைய மூன்று வருணத்தார்களும், வேதங்க ளும், யக்ஞங்களும் செய்யப்பட்டன என்றறிய வேண்டும்."]

[ஸ்ரீ நிகமாந்த மகாதேசிகன் அபிப்பிராயம்:—"ஓம் தத் ஸத் என்று வேதத்தில் சொல்லப்பட்ட யக்ஞம் முதலியவைகளுக்கு லக்ஷணம் சொல்லப்படுகிற தென்று சொல்வில் உசிதமல்ல. 'பிரமம்' என்னும் பதம் அந்த யக்ஞ முதலியவைகளைச் சொல்லா தாகையினாலும், முக்கியமான பொருளுக்கு ஒருவித விரோதமில்லை யாகையினாலும் இந்த மூன்று பதங்களும் நேரில் பரமாத்மாவிற்குப் பேரென்பதும், அதை யடைய வேண்டிய வஸ்துவை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். அதாவது, "எவனொருவன், 'தத்' என்கிற பெயரை அறி கிறானோ அவன் பிரம்ம மாகின்றான். ஓ சௌமியனே! இந்தப் பிராணிக ளெல்லாம் ஸத்தையே காரணமாக வுடையது, ஸத்தையே ஆகாரமாக வுடையது, ஸத்தையே லயஸ்தானமாக வுடையது" என்று அர்த்தமுள்ள சுருதி வாக்கியங்களிற் சொல்லப்பட்ட தாகையினால் இந்தச் சாஸ்திரத்தில் முக்கிய

மாக நிருபிக்கப்படுகிற பரமாத்மாவைச் சொல்லும் விதம் உபாசனம் செய்கிறவர்களுக்குத் தெரியப்படுத்துவதற்காக உபதேசிக்கப்படுகிறதென்பது யுக்தம்."]

[ஸ்ரீ இராகவேந்திரர் அபிப்பிராயம்:—"ஓம் தத் ஸத் என்கிற மூன்றும் பிரமத்தினுடைய பெயர்கள். அவ்விதப் பெயர்களை என் பிரம்மத்திற்குச் சொல்லவேண்டுமென்றால், சகல ஜகத்தையும் தரிக்கிறபடியினாலே ஓம் என்றும்; குணங்களால் வியாபித்திருக்கிறபடியினாலே அல்லது ஞானிகளால் பார்க்கப் படுகிறபடியினாலே தத் என்றும்; நிர்த்தோஷமாயும், சுபகுண பூர்ணமாயுமிருக்கிறபடியினாலே ஸத் என்றும் சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்தப் பிரமத்தினாலே பிராஹ்மணர், வேதங்கள், யக்ஞங்கள் இவை ஏற்படுத்தப்பட்டன."] 23

"வேத வாதிகளான மூன்று வருணத்தார்களினுடைய யக்ஞம், தானம், தனம் இவைகளை வேதத்தில் சொன்னபடி செய்யும் பொழுது ஆதியில் ஓம் என்று சொல்லி ஆரம்பிக்கப் படுகின்றன."

[இவ்வாறு வேதங்களுக்கும் வைதிகங்களான யக்ஞாதிகளுக்கும் ஓம் என்னும் சப்தத்தோடு அந்வயம் சொல்லப்பட்டது. இதனால், ஓம் என்கிற சொல்லோடு கூடிய வேதத்தைத் தரிப்பதானாலும், அப்படிப்பட்ட யக்ஞாதி கர்மங்களைச் செய்கையாலும் பிராமண சப்தத்தாலே குறிக்கப்பட்ட திரைவர்ணிகருக்கும் ஓம் என்னுஞ் சொல்லோடு அந்வயம் வருணிக்கப்பட்டதாகிறது.]

[ஸ்ரீ நிசமாந்த மகாதேசிகன் அபிப்பிராயம்:—"யக்ஞம், தானம் முதலியவைகள் பிரணவத்தை முன்னிட்டுக்கொண்டிருக்கின்றன என்பது அவைகளை விதிக்கிற சாஸ்திரங்களினாலே ஏற்பட்டதென்கிற அபிப்பிராயத்தினால் 'ஓம்' என்று சொல்வதும், இவ்விடத்தில் வேதாந்த சாஸ்திரத்தைச் செவ்வனேயுணர்ந்தவர்கள் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாகிய பரமாத்மாவை அனுசந்தானஞ் செய்துகொண்டு அதனால் இந்தக் கர்மம் அவனுக்கு ஆராதனமென்று எண்ணிக் கொள்வதற்காக அவ்வாறே மகானுகிய சௌனகர் எப்பொழுதும் கர்மங்களின் முன்னும் பின்னும் பகவானையே நினைக்கவேண்டுமென்று சொல்லி யிருக்கிறார். வேதாந்த சாஸ்திரம் தெரியாதவர்களுக்கும் பரமாத்மாவைச் சொல்லுகிற பதத்தைக் கூறுவதனால் மங்களம் முதலியவைகள் கிடைக்கிறதென்பது தானகவே ஏற்பட்டது. ஆகலின், பிரணவத்திற்கு வைதிகங்களான எல்லா வஸ்துக்களுடனும் சம்பந்தமேற்பட்டது."] 24

"மோக்ஷ அபேக்ஷ யுள்ளவர்களால் தத் உச்சரிக்கப்பட்டுப் பலாபேக்ஷ யின்றி, அநேகவித யக்ஞ தவங்களாகிய கிரியைகளும் தானக் கிரியைகளுஞ் செய்யப்படுகின்றன." 25

"ஏ! பார்த்த! உண்டென்னும் பொருளிலும், யோக்கியமென்னும் பொருளிலும் ஸத் என்னும் பதம் உபயோகிக்கப் படுகின்றது. அவ்வாறே மங்களகரமான விவாக காரியங்களிலும் ஸத் என்னும் சப்தம் பிரயோகிக்கப் படுகின்றது." 26

"யாகத்திலும், தபசிலும், தானத்திலும் நிஷ்டையானது ஸத் என்பதாகச் சொல்லப்படுகிறது. அந்த மூன்று வருணத்தார்களுக்கும் பிரயோஜனத்தைக்கொடுக்கக்கூடிய கர்மமும் ஸத் என்பதாகவே சொல்லப்படுகிறது."

[ஆகையினால், வைதிகர்களாகிய மூன்று வருணத்தார்களினுடைய யக்ஞத்திலும், தபசிலும், தானத்திலும் நிஷ்டை மங்களகர மாகையால் 'ஸத்' என்று சொல்லப்படுகிறது. அந்த மூன்று வருணத்தார்களுக்கும் பிரயோஜனத்தைக் கொடுக்கக் கூடியதாகிய யக்ஞம், தானம் முதலிய கருமங்களும் ஸத் என்றே சொல்லப்படுகின்றன. ஆகையினால், வேதங்களும், வேதத்தில் சொல்லப்படுகிறவர்களும், பிராமணர்களென்று சொல்லப்படுகிற மூன்று வருணத்தார்களும், 'ஓம், தத், ஸத்' என்கிற மூன்று பதங்களோடு சேர்ந்திருப்பதாகிய லக்ஷணத்தினால் வேதங்க ளல்லாதவைகளைக் காட்டினும், வைதிகங்க ளாகாத கர்மங்களைக் காட்டினும், வேறுபட்டவைகளாகத் தெரிந்துகொள்ளத் தக்கவைகள்.] 27

"மேற் கூறப்பட்ட ஓம், தத, ஸத் என்கிற பிரம மந்திரத்தை அஸ்ரத்தையினால் உச்சரியாமல் விட்டியற்றும் ஹோமமாவது, தானமாவது, செய்யப்பட்ட தவமாவது, மற்றக் கருமமாவது யாதோ அஃது ஓ! பார்த்தா! அஸத்தெனச் சொல்லப்படுகிறது. பரத்திலும் அவற்றிற்குப் பயன் இன்று, இகத்திலும் பயனின்று." 28

பதினேழாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

# பதினெட்டாவது அத்தியாயம்

# மோக்ஷ ஸந்யாஸ யோகம்

## அர்ச்சுனன் வாக்கியம்

"இந்திரியங்களுக்கு நியாமகனும் கேசி என்னும் இராக்ஷசனைக் கொன்றவனுமான, ஓ! மஹாபாஹோ! சந்நியாசத்தினதுந் தியாகத்தினதும் உண்மையைத் தனியே அறிய ஆசைப்படுகிறேன்."

[என்றால், சந்நியாசம், தியாகம் என்கிற இரண்டு சொற்களுக்கும் பொருள் தனித்தனி யுண்டா? ஒரே பொருளா? தனித்தனிப் பொருளுண்டானால் அப்பொழுது அவைகளின் சுவரூபத்தைத் தனித்தனியே யறிய விரும்புகிறேன்; இரண்டும் ஒன்றாயிருந்தாலும் அப்படியே யருளிச் செய்ய வேண்டும்] 1

## ஸ்ரீ கிருஷ்ண பகவான் வாக்கியம்

"சில வித்துவான்கள், காமிய கருமத்தைச் சுத்தமாய் விட்டுவிடுவதுதான் சந்நியாச மென்பார்கள். சில சமர்த்தர்கள், நித்தியம், நைமித்திகம் காமியம் என்கிற எல்லாக் கருமங்களிலும் பலத்தை யபேக்ஷிக்காம லிருத்தலேதான் மோக்ஷ சாஸ்திரங்களில் சொல்லுகிற தியாக சப்தத்திற்குப் பொருளென்று விளம்புவார்கள்."

[இங்கே சாஸ்திரோக்தமான தியாகம், காமிய கருமங்களைச் சுத்தமாய் விடுதலென்றும், சர்வ கருமங்களிலும் பலாபேக்ஷை யற்றிருத்த லென்றும் விவாதத்தைக் காட்டத் தொடங்கினவர் ஓரிடத்தில் சந்நியாச சப்தத்தையும், மற்றோரிடத்தில் தியாக சப்தத்தையும் பிரயோகித்தார். இதனால், தியாக சந்நியாச சப்தங்களுக்குப் பொருளொன்றே யென்று அங்கீகரிக்கப் பட்டதாகத் தெரிகிறது. ஒரு சொல்லைப் பதிலாகச் சொல்லுதல் வழக்கமாகவின் அவ்விரண்டிற்கும் பொருள் ஒன்றெனத் தோற்றுகிற தென்று நிச்சயப்படுகிறது.] 2

"விவேகிகளான சிலர்: கருமம் தோஷத்தை யுண்டாக்குவ தாதலால், விடத்தகுந்த தென்றும், வேறு சிலர்: யக்ஞ, தான, தவங்களாகிய கருமம் விடத்தகுந்த தென்றுஞ் சொல்லுகின்றார்கள்."

[சில சாங்கியர்களும் அவர்கள் மதத்தை அனுசரித்த வைதிகர்களும் ராகம் முதலிய தோஷங்களைப் போலவே சம்சார பந்தத்திற்குக் காரணங்களாகையினால், அல்லது ராகம் முதலிய தோஷங்களையுடையதாகையினால் யக்ஞம் முதலிய எல்லாக்கருமங்களும் மோக்ஷத்தில் ஆசை யுடையவனால் விடத்தக்க தென்று சொல்லுகிறார்கள். மற்றுஞ் சில பண்டிதர்கள் யக்ஞம் முதலிய கருமங்கள் விடத்தக்க தல்லவென்று சொல்லுகிறார்கள்.]

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"பரமார்த்த சந்நியாசிகளாகிய பிரம்ம ஞானிகள் விஷயமாய் இந்தச் சுலோகம் பிரவிருத்தித்த தல்ல. கருமயோகிகள், கருமத்தை விட்டுவிட வேண்டிய தென்று சிலரும், விடக்கூடாதென்று சிலரும் சொல்லுகிறார்கள்."] 3

"ஓ! பரதகுல சிரேஷ்டா! மேற்சொன்ன திபாக விஷயத்தில் எனது நிச்சயத்தைக் கேள். ஓ! புருஷ சிரேஷ்டா! திபாகம் மூன்று விதமாகச் சொல்லப்பட் டிருக்கிறது."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"(தியாகம் சந்நியாசம்) இந்த விஷயத்தில் தியாக சந்நியாச சம்பந்தங்களுடைய பொருளானது ஒன்றே. கருமாதிகாரிகளுக்குச் சத்வாதி குண பேதத்தால் மூன்று விதமாய்ச் சொல்லப்பட் டிருக்கிறதே யன்றி, பிரம்ம ஞானி விஷயமாய்ச் சொன்னதல்ல. இந்த அர்த்தமானது சாதாரணமாய்த் தெரிந்து கொள்ளக் கூடாததால், அது விஷயமான என்னுடைய நிச்சயத்தைக் கேளென்று தாத்பரியம்."] 4

"யக்ஞ தான தவங்களாகிய கருமங்கள் விடத்தக்கன வல்ல; அவை செய்யப்பட வேண்டியனவே; யக்ஞமுந் தானமுந் தவமுமே விவேகிகளுக்குச் சித்த சுத்தியை யுண்டாக்கத் தக்கவை."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"யக்ஞ தான தபசு முதலிய வேதங்களில் சொல்லப்பட்ட கருமங்கள் மோக்ஷத்தி லாசையுடையவனால் ஒருபொழுதும் விடத்தக்க தல்ல. பின் எவ்வாறெனின், மரணமடைகிற வரையில் அவை தினந்தோறும் அனுஷ்டிக்கத் தக்கனவே. ஏனென்றால், அந்தக் கருமங்கள் மனனசீலர் (ஆராய்ந்தறிகிறவர்)களுக்குப் பரிசுத்தத்தை யுண்டாக்குகின்றன. என்றால், அவை பிரம்மோபாசனை செய்கிற முமுக்ஷுக்களுடைய உபாசனைக்கு விரோதியான பிராசீன கருமங்களைப் போக்கடிக்கின்றன."] 5

"அர்ச்சுனு! இந்த யக்ஞ தான தவங்களாகிய கருமங்கள் செய்யப்பட வேண்டியவைகளே. ஆனால், அபிமானத்தையும் பலன்களையும் விட்டுச் செய்யவேண்டுமென்பதே எனது சிரேஷ்டமான அபிப்பிராயம்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"சங்கத்தையும் பலனையும் அபேக்ஷித்துச் செய்கிற யக்ஞ தான தபசுகளாகிய கருமங்கள் பதத்தைக் கொடுக்கப்பட்டவை யானாலும், சங்கத்தையும், பலனையும் அபேக்ஷிக்காமல் முமுக்ஷுவும் அக் கருமங்களைச் செய்ய வேண்டுமென்பதற்காக 'அபி' சப்தம் சுலோகத்தில் சேர்க்கப் பட்டதே யன்றி, அன்னியமான கருமங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்பதற் கல்ல. சிலர் நித்திய கருமங்களுக்குப் பலனில்லை யென்றும், பலனில்லாத நித்திய கருமங்களாகிய பலனையும் சங்கத்தையும் விட்டுச் செய்வ தென்பது அசம்பாவித மென்றும், ஆகையால், அபி சப்தத்தினால் யக்ஞ, தான தபசுகளாகிய கருமங்களுக்குக் காமிய கருமங்களுங்கூடச் சங்கத்தையும் பலனையும் விட்டுச் செய்யவேண்டியவை யென்றும் அர்த்தஞ் செய்கிறார்கள்; அது சரியல்ல. யக்ஞ தான தபசுகளாகிய கருமங்கள் மனிதர்களைப் பரிசுத்தி செய்கின்றன வென்கிற இந்த வசனத்தினாலே நித்திய கருமங்களுக்குப் பலனுண்டென்று முன்னமே சொல்லப் பட் டிருக்கிறது. மேலும், நித்திய கருமங்கள் பந்த ஹேது வானவை; ஆகையால், நித்திய கருமங்களையே விட்டுவிட இச்சிக்கிற முமுக்ஷு காமிய கருமத்தை இச்சிப்பா னென்பது சரியானதல்ல. ஆனால், தான் செய்த புண்ணியம் க்ஷீணமாய் விட்டால் அவன் மீண்டும் மனித லோகத்தை யடைகிறன். காமியபர்த வதுவென்று சொல்லப்பட் டிருக்கிறதனாலும், அபிசப்தத்தினால் காமிய கருமமும் சேர்க்கப்பட்ட தாகாது."] 6

"அவசியஞ் செய்ய வேண்டியதாக விதிக்கப்பட் டிருக்கின்ற கருமத்தின் பரித்தியாகங் கூடாது. அவிவேகத்தாலே அதன் (கருமத்தின்) பரித்தியாகம் தாமத மென்று சொல்லப்பட் டிருக்கின்றது."

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—'விடத்தகாததாகிய நித்தியங்களும் நைமித்தியங்களுமாகிய பஞ்ச மகாயக்ஞம் முதலிய கருமங்களை விட்டுவிடுவதும் சம்பவிக்காது. தேக யாத்திரையே நடக்காதாகையினால், தேக யாத்திரை யக்ஞங்களில் மிகுதியான ஆகாரங்களைக் கொண்டு செய்யப்படுகிறதே யானால், நல்ல ஞானமுண்டாவதற்குக் காரணமாகிறது. அப்படிக் கில்லாவிடின், யக்ஞத்

தில் விதிக்கப்படாத தாகையினால், பாபங்களாகிய ஆகாரத்தினால், மனதை விருத்தி செய்வது விபரீதமான ஞானத்திற்குக் காரணமாகிறது. "ஓ சுமுகனே! மனது அன்னமய மல்லவோ" என்றர்த்தமுள்ள சுருதி வாக்கியத்தின்படி ஆகாரத்தினா லல்லவோ மனது விருத்தியை செய்யப்படுகிறது. ஆகாரம் சுத்தமாயிருந்தால் மனது சுத்தமா யிருக்கிறது; மனது சுத்தமாயிருந்தால் இடைவிடாத தியான முண்டாகிறது; அவ்வாறு தியான முண்டானால் சம்சார பந்தங்க ளெல்லாம் விட்டுவிடுகிறதென் றர்த்தமுள்ள சுருதிவாக்கியத்தில் பரமாத்மாவை சாக்ஷாத்கரிப்பதாகிய ஞானம் ஆகாரத்தின் சுத்தியைப் பொறுத்ததென்று சொல்லப்படுகிறது. ஆகையினால், மகா யக்ஞங்கள் முதலிய நித்திய நைமித்திக கருமங்கள் பிரயாணம் புறப்படுகிற வரையில் பிரமஞானத்திற்காகவே அங்கீகரிக்கத் தக்கது. ஆகையினால், அதை விட்டுவிடுவது பொருந்தாது. இவ்வாறு, ஞானத்தை யுண்டாக்குகிற கருமத்தை இது சம்சார பந்தத்திற்குக் காரண மென்கிற அஞ்ஞானத்தினால் விட்டுவிடுவது தாமஸமென்று சொல்லப்பட்டது. தமோகுணத்தினா லுண்டான தியாகம் தாமஸம்; அதாவது, தமோகுணத்தினா லுண்டாகிற அஞ்ஞானத்தைக் காரணமாக வுடைய தியாகம் தமோகுணத்தி லுண்டானது. தமோகுண மல்லவோ அஞ்ஞானத்திற்குங் காரணமென்று "தமோகுணத்தினின்று அஜாக்கிரதையும், விபரீத ஞானமு முண்டாகின்றன; அதாவது, அஞ்ஞான முண்டாகின்றது. அஞ்ஞானமானது ஞானத்திற்கு விரோதமாகிய விபரீத ஞானம். அவ்வாறே எந்தப் புத்தி அஞ்ஞானத்தாலே மூடப்பட்டு அதருமத்தைத் தருமமென்றும், சகல வஸ்துக்களையும் விபரீதங்களாகவும் நினைக்கின்றதோ அந்தப் புத்தி தாமஸமான தென்று மேலே சொல்லப்படுகிறது. ஆகையினால், நித்தியம், நைமித்திகம் முதலிய கருமங்களை விடுவது விபரீத ஞானத்தைக் காரணமாக வுடையதென்று பொருள் விளங்கும்."] 7

"எவன் துக்கம் உண்டாகு மென்று சரீரப் பிரயாசத்திற் கஞ்சி எந்தக் கருமத்தை விடுகின்றானோ, அவன் இராஜஸ தியாகத்தைச் செய்து தியாக பலத்தை யடைகிறதே யில்லை.'

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"சகல கருமங்களையும் ஞான பூர்வமாய் விடுகிற ஞானியைப்போல், துக்காதிகளினால் நித்திய நைமித்திக கருமங்களை விடுகிறவன் மோக்ஷ மடையமாட்டான்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"கருமமானது பரம்பரையாக மோக்ஷத்தைச் சாதிக்குமே யானாலும், துக்க ரூபமான திரவிய சம்பந்தத்தாலே சாதிக்க வேண்டிய தாகையாலும், மிகவும் ஆயாஸ ரூபமான காயக்கிலேசத்தை யுண்டுபண்ணுகையாலும், மனதிற்கு வருத்தத்தை யுண்டாக்கும் என்று பயந்தவனாய், 'யோகஸித்திக்காக ஞானாப்பியாசந்தான் செய்பத்தக்கது' என்று யாவனொருவன் மஹாயக்ஞம் தொடக்கமான ஆச்சிரம கருமத்தை விட்டு விடுகிறானோ அவன் இராஜோகுணத்தால் அந்தத் தியாகத்தைச் செய்தவனாகிறான். அந்தத் தியாகம் உண்மையான சாஸ்திரார்த்த மல்லாமையால் அவன் தியாகத்துக்குப் பயனான ஞானோற்பத்தியை யடையமாட்டான். கருமமானது திருஷ்டத்துவாரமாய் மனதிற்குத் தெளிவை யுண்டாக்குவ தன்று; மற்றப்படி எம்பெருமானுடைய முகோல்லாஸத்தைப் பிறப்பித்து அவ்வழியாலே என்றறிவது."] 8

"அர்ச்சுனா! நித்தியஞ் செய்ய வேண்டிய தென்று விதிக்கப்பட்ட எந்தக் கருமமுஞ் செய்யப்பட வேண்டியதே யென்றறிந்து அபிமானத்தையும் பலனையும் விட்டுச் செய்யப்படுகின்ற தியாகம் சாத்துவிகமானதென்று நிச்சயிக்கப்பட் டிருக்கின்றது."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"பகவத் வாக்கியத்தினாலேயே நித்திய கருமத்திற்குப் பலனுண்டென்று ஏற்பட்டிருக்கிறது. அவ்வாறு பலனில்லாம லிருந்தால், பலனைத் தியாகஞ் செய்ய வேண்டு மென்பது எவ்வாறு பொருந்தும்? அஞ்ஞானிகள் 'நித்திய கருமத்திற்குப் பலன் சித்த சுத்தி அல்லது தோஷ நிவர்த்தி' என்று கற்பிக்கிறார்கள். அவ்வாறு கற்பிக்க அவசியமில்லை யென்பதை இதனால் பகவான் வெளிப்படுத்துகிறார். மேலே சுலோகம் 4-ல் கருமத் தியாகம் மூன்று விதமெனக் கூறி, சுலோகம் 7-ல் தாமசத் தியாகத்தையும், சுலோகம் 8-ல் இராஜஸ தியாகத்தையுங் கூறியதற் கிணங்கக் கரும சொரூபத் தியாகத்தையே இவ்விடத்தில் கூறாது பலத் தியாகத்தைக் கூறுதல், கருமத் தியாகம் மூன்றுவித மென்றதற்குப் பொருந்துமோ வெனின், கருமத்தைச் செய்யாது விடுதலும், கருமத்தைச் செய்து பலனை விடுதலுமாகிய இரண்டும், தியாக மென்னுஞ் சப்தார்த்த மாகலாற் பொருந்து மென்க. சாத்துவிகத் தியாகம் கரும சொரூபத் தியாகமன்று; கரும பலத் தியாகமே."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"நித்திய நைமித்திகமான மஹாயக்ஞம் முதலிய வருணாச்சிரம கருமம் எம்பெருமானுடைய

ஆராதன ரூபமாகையாலே அதைச் செய்வதே பயனென்று மதித்து கருமத்தில் எனதென்கிற எண்ணத்தையும் கருமப் பயனையுங் கைவிட்டுக், கருமத்தைச் செய்வது ஸாத்துவிகத் தியாகமெனப்படும். அதாவது: சத்துவந்தான் உண்மையான சாஸ்திரார்த்த ஞானத்தைப் பிறப்பிக்குமென்பதாம்.”] 9

“சத்துவகுணப் பிரதான முடையவனும், நிலைத்த புத்தியுள்ளவனும், சந்தோஷம் அற்றவனுமான தியாகியானவன் துக்ககரமான கருமத்தைத் தூஷித்தலுமில்லை; சுககரமான கருமத்தை இச்சித்தலு மில்லை”

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—“ஆத்மானாத்ம விவேக ஞானத்திற்குக் காரணமான சத்துவ குணத்தினால் கவரப்பட்டவனும், ஆத்மஞான முடையவனும், ஆத்ம ஞானமே மோக்ஷ காரணமாமென்கிற சந்தேகத்தைப் போக்கடித்துக் கொண்டவனுமிருந்து கொண்டு, சங்கத்தையும் பலனையும் விட்டு நித்திய கருமத்தைச் செய்கிறவன், சமுசார பந்த ஏதுவான காமிய கருமத்தைத் துவேஷிக்கிற தில்லை. இந்த நித்திய கருமமானது சித்த சுத்தி மூலமாய் மோக்ஷ ஏதுவானதென்று அதில் விருப்பம் வைக்கிறதில்லை. இதன் அபிப்பிராயம் யாதெனில், நிஷ்காமமாய்க் கருமஞ் செய்கிறவன் சித்தசுத்தியையும், சித்த சுத்தியினால் ஞானத்தையும், ஞானத்தினால் மோக்ஷத்தையு மடைகிறானென்பதே.”]

[ஸ்ரீ இராமானுஜர் அபிப்பிராயம்:—“இவ்வாறு சத்துவத்தையடைந்து, வஸ்துவை உள்ளபடியே யறிந்து, அதனால் சகல சம்சயங்களு மற்று, கருமத்தில் பற்றையும், கரும பலத்தையும், தான் கர்த்தாவென்கிற எண்ணத்தையும விட்டவன் தீய கருமத்தை வெறுக்கவும் நல்ல கருமத்தில் பொருந்தவு மாட்டான். தீய கர்மமானது-அநிஷ்ட பலன்களைத் தரும் கருமங்களாம். நல்ல கருமமாவது - இஷ்டமாகிற சுவர்க்கம் புத்திரன் பசு அன்னம் முதலிய பலன்களைத் தரும் கருமங்களாம். எந்தக் கருமத்திலும் எனதென்கிற அபிமான மில்லாமையாலும், பிரமத்தையொழிந்த மற்றப் பலன்களைக் கைவிடாமையாலும், நான் செய்தேனென்கிற கர்த்திருத்வத்தை விட்டமையாலும், அவைகளைச் செய்யுமிடத்தில் பிரீதி துவேஷம் ஆகியவற்றைச் செய்யமாட்டான்; இங்கே அநிஷ்ட பலனைத் தரும் கருமமாவது. தன்னாலும் அறியாமல் செய்யப்பட்ட பாப கருமம். அஃதொழியாத போது ஞானோற்பத்திக்கு விரோத முண்டாம்.

ஆகையால், கருமத்தில் கர்த்திருத்வாதி தியாகம் சாஸ்திரீயத் தியாகமே யல்லது சுவரூபத்தியாக மல்லவாம்.''] 10

"கருமங்களை முழுமையும் விடுவதற்குத் தேகாபிமானத்தை யுடைய ஜீவனால் (அஞ்ஞானிக்கு) அசாத்தியமானவை. எவன் கரும பலனை விட்டவனோ அவன் தியாகி என்பதாகச் சொல்லப்படுகின்றான்."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"எக்கருமஞ் செய்யா தொழிபினு மொழிவ ரென்றதற்கு நடத்தல், கிடத்தல். அருந்தல் முதலியவை யொழிந்த ஏனைய நித்திய நைமித்திக கன்மங்களை யொருங்கே விட்டவர்க ளென்பாரு முளர். ஆத்ம ஞானிகளாகிய பரமார்த்த சந்யாசிகள் முற்றுந் தேகோக பாவனை இறந்தோராகலின் கருமங்களைச் செய்யாமலே யொழிபினும் அஃது அவர்கட் குரித் தாமென்பது கொண்டென்க.

சரீரத்தைத் தரித்திருக்கிறவரையில் கருமங்களை முற்றும் விடுவதென்றால், அது சாத்தியமான விஷயமன்று. ஏன்? தேகத்தைத் தரிப்பதற்காகப் புசித்தல் பானஞ் செய்தல் முதலிய கருமங்களும், மற்றும் அதைச் சேர்ந்த கருமங்களும் ஒழிக்கப் போகாமையாலே அதற்காக மஹா யக்ஞம் முதலிய அனுஷ்டானங்களும் ஒழிக்கப்போகாது. ஆகையால், எவன் அந்த மஹா யக்ஞம் முதலியவற்றில் பலனைக் கைவிடுகின்றானோ அவனே சாஸ்திரங்களில் கூறப்பட்ட தியாகி எனப்படுவான்."] 11

"துக்ககரமானது (நரகம்), சுககரமானது (சுவர்க்கம்), மிசிகரமானது (மனுஷ ஜன்மம்) என மூன்றுவிதயான கரும பலன்கள்: பலாபேக்ஷையோடு கருமஞ் செய்பவர்களுக்கு மரணத்திற்குப் பின் உண்டாகின்றன. பலாபேக்ஷையின்றிக் கருமஞ் செய்பவர்களுக்குப் பலன் ஒருபொழுது முண்டாத தில்லை."

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—"அநிஷ்டமாயது, இஷ்டமாயது, இஷ்டாநிஷ்ட மிசிரமாயது என மூவிதமாகிய கருமப் பயனானது இச்சையோடு கருமங்களியற்றி யுள்ளவர்கட்குத் தாம் இறந்த பின்னர் எய்த வருகின்றதாம். பரமார்த்த சந்நியாசிகளாகிய ஆச்ம ஞானிகளுக்கு ஒருபோதும் எய்த வருவதன்று என்பதாம்.

பலாபேக்ஷையோடு கருமஞ் செய்துள்ள அத்தியாகிகட்குக் கருமப் பயன் இறந்த பின்னர் உண்டாகு மென்றும் கூறியதால், பலத் தியாகிகளுக்குத் தாங்கள் ஈசுவரார்ப்பணமாகச் செய்யும் அக்

காலத்திற்றானே சித்த சுத்தியைப் பயனாகத் தருவ தன்றியும், அவர்கள் மோக்ஷ மடையுமட்டும், ஜன்மங்கள்தோறுந் தொடர்ந்து பரிபாகப் படுத்து மென்பதுவும் பெறப்படுவ தறிக.'']

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—''நரகாதி பலன், சுவர்க்காதி பலன், அரிஷ்டத்தோடு சேர்ந்த பிள்ளை, பசு, அன்னம் முதலிய மூன்று விதமாகிய கருமத்தினுடைய பலன்கள் கர்த்திருத்வத்தையும், எனதென்கிற எண்ணத்தையும், பலனையும் விடாதவர்களுக்குக் கருமங்களை அநுஷ்டித்த பிறகு உண்டாகின்றன. கர்த்திருத்வ முதலியவைகளை விட்டவர்களுக்கோ வெனில், ஒரு சமயத்திலும் மோக்ஷத்திற்கு விரோதமாகிய பலன் உண்டாகிறதில்லை. இதனால் சொல்லப்பட்டதாவது, அக்கினி ஹோத்ரம், மஹா யக்ஞம் முதலியவைகள் நித்திய கருமங்கள்தான். அவ்வாறிருந்தபோதிலும், உயிரோ டிருப்பதாகிய அதிகாரத்திலும் உபயோகப்படுத்தப் படுகிறபடியினால் எவ்வாறு விரோத மில்லையோ அவ்வாறே மோக்ஷத்தி லாசை யுடைய தென்கிற அதிகாரத்திலும் உபயோகப் படுத்துகிற படியினால் பரிஹரிக்கப்படுகிறது. மோக்ஷத்தி லுபயோகமும், அப்படிப்பட்ட இந்தப் பரமாத்மாவைப் பிராமணர்கள்: வேதங்களைப் பிரவசனஞ் செய்வதனாலும், தானத்தினாலும், தவத்தினாலும், உபவாசம் முதலியவைகளினாலும் அறியவேண்டு மென்று விரும்புகிறார்கள் என் றர்த்தமுள்ள சுருதி வாக்கியத்தி லறிக.''] 12

''ஓ! பெரிதான கைகளை யுடையவனே! ஆத்ம ஞானத்தைச் சொல்லுகிற நிச்சயத்தில் எல்லாக் கருமங்களின் சித்திக்காகச் சொல்லப்பட்ட காரணங்களா யிருக்கிற ஐந்து விதமாகிய இவைகளை என்னுடைய வார்த்தையினால் தெரிந்துகொள்.''

[அதாவது, உள்ளபடியே யிருக்கிற தத்துவங்களைப் பற்றியதாகிய வேதத்தி லேற்பட்ட புத்தியினால் விசாரிக்கப்பட்ட நிச்சயத்தில் எல்லாக் கருமங்களின் உற்பத்திக்காகச் சொல்லப்பட்டவைகளாகிய ஐந்து விதங்களாகிய காரணங்களை என்னிடத்திலிருந்து தெரிந்துகொள். வேதத்தி லேற்பட்ட, புத்தி, சரீரம், இந்திரியங்கள், பிராணவாயு, ஜீவாத்மா இவைகளை ஒத்தாசைக் கருவிகளாகவுடைய பரமாத்மாவையே கர்த்தாவாக பிரஹதாரண்யகம் என்னும் சுருதியில் கூறியபடி, ''எவன் ஆத்மாவி லிருந்துகொண்டு ஆத்மாவிற்குள்ளே யிருக்கிறானோ, எவனை இந்த ஆத்மா தெரிந்துகொள்ளவில்லையோ, எவனுக்கு ஜீவாத்மா சரீரமோ, எவன் ஆத்மாவை

உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறனே, அழிவில்லாத அவன் உனக்கு அந்தர்யாமியாகிய ஆத்மா'' என்றும், "தைத்ரீயம், நாராயணம்'' எல்லா ஜனங்களுக்கும் உள்ளே நுழைந்துகொண்டு நியமிக்கிறவன் எல்லாவற்றிற்கும் ஆத்மாவென் றர்த்தமுள்ள சுருதி வாக்கியம் முதலியவைகளில் தெரிவிக்கிற தல்லவா.] 13

"மனிதன் சாஸ்திரங்களை அனுசரித்தாவது சாஸ்திரங்களுக்கு விருத்தமாயிருக்கிற எந்தக் கருமத்தைச் சரீரம் வாக்கு மனம் இவைகளினுல் ஆரம்பிக்கிறனே அந்தக் கருமத்திற்குச் சரீரம், ஜீவாத்மா, வெவ்வேறாக இருக்கிற இந்திரியங்கள், அநேகவிதமா யிருக்கிற வேறான வியாபாரத்தையுடைய பிராணவாயு, இந்த விஷயத்தில் ஐந்தாவதாகிய பரமாத்மா ஆகிய இவ்வைந்தும் காரணங்களா யிருக்கின்றன.'' 14

"சரீரம் வாக்கு மனது இம்மூன்று கரணங்கள் மட்டும் எடுத்துச் சொல்லப்பட்டன மற்ற கண் காது முதலியவை சொல்லப்படவில்லை. பார்ப்பது கேட்பது முதலிய கருமங்கள்: கண் காது முதலியவைக ளுடையனவா யிருக்க, அவைகளைச் சொல்லாமைக்குக் காரண மென்னவென்றல், கண் முதலியவைகள் சரீரம் வாக்கு மனம் இவைகளுக்குத் துணைக் கருவிகள் எவ்வாறெனில், ரூப, ரஸ, கந்தாதிகள் கண் முதலியவைகளுக்கு விஷயமானுலும், அவைகளைக் கிரகித்து அனுபவிக்க வேண்டியது. மனமானது கண், காது இவற்றுடன் பிரவிருத்தித்தா லன்றிக் கண், காது முதலியன ஒன்றைக் கிரகிக்க மாட்டா. ஆகையால், முக்கியமான மனம் வாக்குக் காயங்கள் இவ்விடத்தில் சொல்லப்பட் டிருக்கின்றன. மற்றவை இந்த மூன்றுக்குள் அடங்கியவை யாகையால், அவைகள் சொல்லப்பட வில்லை.''

[சாஸ்திரங்களில் ஏற்பட்டதாயும், அவற்றல் தடுக்கப்பட்டதாயு மிருக்கிற சரீரத்தினுல் செய்யப்படுகிறதும், வாக்கினுல் செய்யப்படுகிறதும், மனதினுல் செய்யப்படுகிறதுமான எல்லாக் கருமங்களிலும் இவ்வைந்தும் காரணங்கள். அவையாவன: சரீரம் ஜீவாத்மாவினுல் அதிஷ்டானஞ் செய்யப்படுகிறது; ஆகையினுல், பஞ்ச பூதங்களில் சேர்க்கையாகிற சரீரம் அதிஷ்டான மென்னப்படுகிறது. அவ்வாறே ஜீவாத்மா; இந்த ஜீவாத்மாவிற்கு ஞ்ஞாதிருத்துவம், கர்த்திருத்துவ முண்டென்று சாரீரக சூத்திரங்களில் நிரூபிக்கப்பட்டது. வாக்கு, கை, கால் முதலிய மனதுடன் கூடிய ஐந்துவிதமான கரு

மேந்திரியம், கருமங்களைச் செய்வதில் வெவ்வேறு விதமான வியாபாரத்தை யுடையதென்பது பொருள். இவ்விடத்தில் பிராணவாயுவின் வியாபாரத்தைச் சொல்லுகிற 'சேஷ்டா' என்னும் பதத்தினால் ஐந்துவிதமாகிய வாயு சொல்லப்படுகிறது. அதாவது, சரீரம், இந்திரியம் இவைகளைத் தரித்திருக்கிற பிராணன், அபானன் முதலிய பிரிவுகளையுடைய ஐந்து விதமான வாயுவின் வெவ்வேறு விதமான விருத்திகளும், 'தைவம் சைவாத்ர பஞ்சமம்' இந்தக் கருமங்களின் காரணங்களினுடைய கும்பலில் தைவம் ஐந்தாவது; அதாவது, அந்தர்யாமியாகிய பரமாத்மா கருமங்களை யுண்டு பண்ணுவதில் முக்கியமான காரணமென் றர்த்தம். இதுவும், மேலே "சகல பிராணிகளின் இருதயத்தில் நான் அந்தர்யாமியா யிருக்கிறேன்" என்றும், "என்னாலே நினைவும் அறிவும் மறதியு முண்டாகின்றன" என்றும் சொல்லப்பட்ட தல்லவா? யந்திரத்தி லேறிய வஸ்துபோலச் சகல பிராணிகளையுந் தனது சக்தியாலே கருமங்களிற் பிரவிர்த்திக்கும்படி செய்துகொண்டு ஈசுவரனானவர் சகல பிராணிகளின் இருதயத்தி லிருக்கிறா ரென்பது யாவரும் நன்கறிந்த விஷயம். ஜீவாத்மாவினுடைய கர்த்திருத்துவம் பரமாத்மாவிற்கு வசப்பட்டதா யிருந்தால் ஜீவாத்மா கருமங்களில் ஏவத் தகாதவனாகிறான். ஆகையினால், 'இதைச் செய்யாதே' என்று சொல்லுகிற சாஸ்திரங்கள் வியர்த்தங்களாய் விடுமே என்கிற இந்த ஆக்ஷேபமும் சூத்திரகாரராலேயே பரிஹரிக்கப்பட்டது. இதனால் சொல்லப்பட்டதாவது பரமாத்மாவினால் கொடுக்கப்பட்டதும், அதனையே ஆதாரமாக வுடையதும், அவனால் தரப்பட்டனவாகிய சக்தியை வுடையதுமா யிருக்கிற சரீரம், இந்திரிய மிவைகளைக்கொண்டு கருமங்க ளுண்டாவதற்காகத் தன்னுடைய இஷ்டத்தினால் இந்திரியம் முதலியவைகளை அதிஷ்டானஞ் செய்வதாகிய பிரயத்தனத்தைச் செய்ய ஆரம்பிக்கிறான். அவனுக்குள்ளே யிருக்கிற பரமாத்மா தான் அனுமதி கொடுப்பதனால் அவனைப் பிரவிர்த்திப்பிக்கிறான். ஜீவாத்மாவிற்கும் தன்னுடைய விவேகத்தினாலேயே பிரவிர்த்தி செய்யக் காரணமாகுந் தன்மை யுடையது. எவ்வாறெனில், பகவானா லளிக்கப்பட்டு அவனை ஆதாரமாகக் கொண்டு அவனா லளிக்கப்பட்ட சக்தியுடன் கூடிய கரண களேபராதிகளைக்கொண்டு அவனை ஆதாரமாகக்கொண்ட ஜீவாத்மாவானவன், அவனா லளிக்கப்பட்ட சக்தியுடன் கூடிய தன் இச்சையினால் கரணாதிகளையும் அதிஷ்டித்துப் பிரயத்தனத்தையும் செய்கிறான்; அவனுக்குள் ளிருக்கின்ற பரமாத்மாவோ கேவலம் அநுமதி மாத்திரஞ்

கொடுத்துக்கொண்டு பிரவிர்த்திப்பிக்கிறான். ஆகையால், பெரிய ஒரு கற்பாறை மரம் முதலியவைகளைப் பத்துப் பெயர்கள் சேர்ந்து புரட்டினால் அதில் ஒவ்வொருவரும் ஹேதுவாய்க்கொண்டு விதியையும் விலக்கையும் அடைவதுபோல், ஜீவாத்மாவும் தன் புத்தியைக் கொண்டு பிரவிருத்திக்கு ஏதுவாகின்றமையால் அவன் விஷயத்தில் சாஸ்திரம் பயன்படுமென்பதாம்.] 15

“இவ்வாறு ஜீவாத்மாவிற்குக் கர்த்திருத்துவமானது, உண்மையில் பரமாத்மாவின் அநுமதியை முன்னிட்டிருக்கிறதென்று ஏற்பட்ட பின்பு, அந்தந்தக் கருமங்களுக்கும் கேவலம் ஜீவாத்மாவே கர்த்தாவாகிறானென்று எவன் நினைக்கிறானோ அவன் துர்ப்புத்தியுடையவன்! ஆனதினால் அவன் வஸ்துவை உள்ளபடி யறிந்தவனல்லன்.”

“பரம புருஷன் கர்த்தாவென்கிற நினைவினால் யாவனொருவன் ‘நான் செய்கிறேன்’ என்று தன்னைக் கர்த்தாவாக நினைக்கமாட்டானோ, எவனுக்கானால் ‘இந்தக் கருமமும் இதன் பயனும் என்னைச் சேர்ந்தவையல்ல’ என்று கருமத்திலும் அதன் பலனிலும் பற்றிருக்க மாட்டாவோ, அவன் போர்க்களத்தில் இந்த பீஷ்மாதியர்களைப் போல வரும் சகலமான பெயர்களையுங் கொன்றாலும் அவன் கொல்பவனுமல்லன்; அந்தக் கருமத்தால் அவன் கட்டுப்படவு மாட்டான்.”

“கர்மோபதேசம் மூன்றுருவங்களை யடைந்துள்ளது. அவை எவை யென்றால்: ஞானம், ஞானத்தா லறியத்தக்க விஷயம், ஞானமுடையவன். கருமமும் மூன்றுருவங்களை யுடையதே. அவை எவையென்றால்: கருமத்திற்கு ஆகவேண்டிய பதார்த்தங்களைச் சம்பாதிப்பது காரணமென்றும், செய்வது காரணமென்றும், செய்பவன் கர்த்தாவென்றும் மூவுருவங்களா யிருக்கிறது.” 18

“நம்மால் செய்யப்படுகிற கருமங்களைப் பற்றிய ஞானமும், அநுஷ்டிக்கப்படுகிற கருமமும், அதை அநுஷ்டிக்கிறவனும் சத்வம் முதலிய குணங்களின் வித்தியாசத்தினால் மூன்றுவிதமாகக் குணங்களின் காரியங்களை யென்னும்பொழுது சொல்லப்படுகிறது. அந்தக் குணங்களினால் வெவ்வேறான ஞான முதலியவைகளை உள்ளபடியே கேள்.” 19

“பிராம்மணனென்றும், க்ஷத்திரியனென்றும், பிரம்மசாரியென்றும், கிருஹஸ்தனென்றும் இவ்வாறு நாலுவிதமாய்ப் பிரிக்கப்பட்டுக் கருமாதிகாரிகளா யிருக்கிற சகல பூதங்களிலும் ஆத்மாவென்

னும் பாவ பதார்த்தம், பிராம்மணாதி பேதங்களுக்குத் தக்கபடி பிரிக்கப்படாமல் ஞானமே வடிவாயும், அறிவற்றதாயும், பலனைப் பெறுவதற்குத் தகாததாயும் இருக்கிறதென்று எந்த ஞானமானால் கருமஞ் செய்யும்பொழுதே யறியுமோ அது சாத்துவிக ஞான மெனப்படும்.''

''பிராமணன் முதலான சகல பூதங்களும் பிரஹ்மணாதி பேதங்களாலே பிரிக்கப்பட்டிருப்பதுபோல அவற்றிலுள்ள ஆத்மாக்களும் வெவ்வேறாகப் பிரிக்கப்பட்டுப் பலனை யனுபவிப்பதற்கு யோக்கியங்களாக இருப்பனவாக எந்த ஞானம் கருமானுஷ்ட வேலையில் அறியுமோ அந்த ஞானம் இராஜஸ ஞான மெனப்படும்.'' 21

''எந்த ஞானம் மிகவும் அற்ப பலன்களைத் தரவல்ல பிரேதம், பூதம் முதலியவைகளை யாராதிப்பதற்காகச் செய்யுங் கருமத்தை நம்பிக்கொண்டு 'இதுவே சகல பலன்களையுங் கொடுக்கும்' என்று பற்றிக்கிடக்குமோ, அந்தப் பொய்யறிவைத் தாமஸஞான மென்பர் பெரியோர்.'' 22

''அர்ச்சுனா! தன் வருணாச்சிரமங்களுக்குத் தக்கபடி நான் செய்தே னென்கிற அபிமான மில்லாமலும், (தனக்குக் கீர்த்தி யுண்டாகவேண்டு மென்கிற) ஆசையாலாவது (பிறருக் குண்டான கீர்த்தியில்) துவேஷத்தாலாவது செய்யப்படாமலும், இது பலாபேக்ஷையின்றிச் செய்யவேண்டுவ தென்றே செய்யப்படுங் கருமம் சாத்துவிக மெனப்படும்.'' 23

''எந்தக் கருமமானால் பலத்தை யடையவேண்டு மென்று அகங்காரத்தோடு கூடி நான் செய்கிறே னென்கிற அபிமானத்தோடு மிகவும் சிரமப்பட்டுச் செய்யப்படுமோ அது இராஜஸம்; என்றால், 'வெகு கஷ்டமா யிருக்கிற இந்த வேலை யென்னால் செய்யப்படுகிறது' என்கிற அபிமானத்தோடு செய்யப்படுங் கருமம் இராஜஸ மெனப்படும்.'' 24

''கருமஞ் செய்யும்பொழுது உண்டாகும் துயரத்தையும், பணச் செலவையும், பிராணி ஹிம்ஸையையும், கருமத்தை முடிக்கும்படியான சாமர்த்தியத்தையும் பாராமல், பரம புருஷன் செய்கிறா னென்கிற ஞானமு மில்லாமல் எந்தக் கருமம் ஆரம்பிக்கப்படுமோ அது தாமஸ மெனப்படும்.'' 25

"பலனில் பற்றற்று, செய்கிறேனென்கிற அபிமானமில்லாமல், தைரியத்தோடும் உத்ஸாகத்தோடும் கூடியவனாய், உயுத்த முதலிய கருமத்திலும் அதற்காகச் செய்யும் பொருள் தேடல் முதலிய கருமங்களிலும், சித்தி யுண்டானாலும், உண்டாகாவிட்டாலும், சித்த விகார மடையாம லிருப்பவன் சாத்துவிக கர்த்தா எனப்படுவன்."

"அர்ச்சுனா! கீர்த்தி பெறவேண்டு மென்றும், கருமப் பலனை யடையவேண்டுமென்றும் கோரியவனாய், அக் கருமத்திற்குச் செலவு பண்ண வேண்டிய பொருளைச் செலவிடும்படியான சுவபாவமில்லாத லோபியாய், பிறரை வருத்தி வேலையை முடிக்குமவனாய், செய்ய வேண்டுங் கருமத்திற் கேற்க ஆசார மில்லாதவனாய், யுத்த முதலிய கருமங்களா லுண்டாகும் சித்தியிலும் அசித்தியிலும் சந்தோஷமும் துக்கமும் கொண்டாடுகின்றவனாய்க் கருமஞ் செய்பவன் இராஜஸ கர்த்தா எனப்படுவான்." 27

"சாஸ்திரோக்தமான கருமத்தைச் செய்யத் தகுந்த யோக்கியதை யற்றவனாய், வித்தை யென்பதே அறியாதவனாய், வேலைசெய்ய மாட்டாத சோம்பலுள்ளவனாய், சூனியம் முதலிய வேலை செய்வதில் ருசியுள்ளவனாய், வஞ்சனைக்காரனாய், கருமஞ் செய்யத் தொடங்கினாலும் மெதுவாய்ச் செய்பவனாய், வருத்தஞ் சிறிதானாலும் அதை எப்போதும் அதிகமாய்ப் பாராட்டுபவனாய், பிறருக்கு நெடுநாளாய் அநர்த்தம் தேடுபவனாய்க் கருமஞ் செய்பவன் தாமஸ கர்த்தா என்னப்படுவான்." 28

"அதாவது (பகுத்தறிவோடு கூடிய நிச்சய ஞானமான) புத்திக்கும், (ஆரம்பித்த வேலையை விக்கினம் நேரிட்டாலும் கைவிடாம லிருப்ப தென்கிற) தைரியத்திற்கும் (சத்துவம் முதலிய குணங்களுக்குந் தக்கபடி) உண்டான மூன்று பேதங்களையும் தனித்தனியே உள்ளபடியே சொல்லுகிறேன் கேட்பாயாக." 29

"(க்ஷேமத்திற்குச் சாதனமான) பிரவிருத்தியையும், (மோக்ஷத்திற்குச் சாதனமான) நிவிருத்தியையும் எந்த புத்தி அறியுமோ; (பிரவிருத்தி தர்மமோ, நிவிருத்தி தர்மமோ இவ்விரண்டி லொன்றைக் கைப்பற்றி யனுஷ்டிப்பவர்களான) சர்வ வருணத்தாரும் கால தேச வர்த்தமானங்களுக்குத் தக்கபடி இது செய்யத் தகும், இது செய்யத் தகாதென்று எந்தப் புத்தி அறியுமோ; (சாஸ்திரத்தைக் கடந்தால்) பயமென்பதையும், (சாஸ்திரத்தைப் பின் பற்றினால்) அபய மென்பதையும், ஸம்சாரத்தின் உண்மையையும், அவற்றை

ஒழிப்பதான மோக்ஷத்தின் உண்மையையும் எந்தப் புத்தி அறியுமோ அது சாத்துவிக புத்தி யெனப்படும்.'' 30

''முற்கூறிய இருவகைத் தருமங்களையும், அவற்றின் விபரீதங்களையும், அதில் நிஷ்டை யுடையவர்கள் தேச காலங்களுக்குத் தக்கபடி செய்யவேண்டுங் காரியங்களையும் ஒழிக்கவேண்டுங் காரியங்களையும் உள்ளபடியே யறிய மாட்டாத புத்தி இராஜஸ புத்தி யெனப்படும்.'' 31

''தாமஸ புத்தியோ தமோகுணத்தால் சூழப்பட்டதாய், எல்லாப் பொருள்களையும் விபரீதமாய்க் காண்பதாம்; (என்றால், தருமத்தை அதருமமாயும், அதருமத்தைத் தருமமாயும்; ஸத்தை அஸத்தாயும், அஸத்தைச் சத்தாயும்; பரமான தத்துவத்தை அபரமாயும், அபரமான தத்துவத்தைப் பரமாயும் இப்படி எல்லாவற்றையும் வித்தியாசமாகவே பார்க்கு மென்றபடி.)'' 32

''மோக்ஷோபாயமாக எம்பெருமானை உபாசிப்ப தென்கிற மோக்ஷத்தை உத்தேசித்துப் பிரவிர்த்தித்த மனம், பிராணன், இந்திரியம் முதலியவைகளின் வியாபாரங்களை யெல்லாம் எந்தத் தைரியமானது சலிக்காமல் நிலைப்பிக்குமோ அது சாத்துவிக தைரிய மெனப்படும்.'' 33

''தருமம், காமம், அர்த்தம் இவைகளை யபேக்ஷித்துச் செய்யும் மனம் முதலியவைகளின் செயல்களை எந்தத் தைரியமானது தரிக்குமோ அது இராஜஸ தைரிய மெனப்படும்.'' 34

''நித்திரையையும் விஷயங்களை யனுபவிப்பதா லுண்டாகும் மதத்தையும் உத்தேசித்து வரும் பயம், சோகம், துக்கம் இவைகளைத் தரும்படியான மன முதலியவைகளின் செயல்களைக் கெடுமதியானவன் எந்தத் தைரியத்தைக்கொண்டு தரிக்கிறானோ அது தாமஸ தைரிய மெனப்படும்.'' 35

''முன்னர்க் கூறிய ஞானம், கர்த்தா முதலிய வெல்லாம் எந்தச் சுகத்திற்குச் சேஷப்பட்டிருக்குமோ அந்தச் சுகமும் குணத்திற்குத் தக்கபடி மூன்றுவித மென்கிற விஷயத்தை இப்பொழுது சொல்லுகிறேன் கேட்பாயாக. அதாவது, எந்தச் சுகத்தையானால் வெகு காலம் அப்பியஸித்து வந்து மெள்ள மெள்ள ஈடில்லாத சுகத்தை யனுபவித்துச் சம்சாரத்தால் வருந் துயரங்க ளெல்லாம் மனமு மில்லாம் லொழிக்கிறானோ, எந்தச் சுகமானது (யோகஞ் செய்யத் தொடங்

கும்பொழுது மிகவும் வருத்தப்பட்டுச் சாதிக்க வேண்டு மாகையா லும், தனியான ஆத்ம சொரூபம் முன்னே பழகாமையாலும்) முத லில் துக்கம்போல விருந்து, பிறகு (அப்பியாசத்தின் வலிமையாலே ஏகாந்தமான சொரூபத்தை யடைவதால்) அமிர்தத்திற்குச் சமமா யிருக்குமோ, (இதர விஷயங்களை யொழித்து ஏகாந்தமான ஆத் மாவை மாத்திரம் அனுபவிப்பதா லுண்டாகின்ற) அந்தச் சுகமானது ஸாத்விக சுக மெனப்படும்." 36-37

"எந்தச் சுகமானது அனுபவிக்கும்பொழுது இந்திரியத்திற்கும் விஷயத்திற்கு முண்டான சேர்க்கையினால் அமிர்தம்போல விருந்து, அதற்கு ஏதுவான பசி முதலியவை தணிந்த பிறகு (அது நரகத்திற் குக் காரணமாகின்றமை கொண்டு) விஷபானஞ் செய்தாற்போ லிருக் குமோ அந்தச் சுகம் இராஜஸ மெனப்படும்." 38

"எந்தச் சுகமானால் (நித்திரை ஆலஸ்யம்; பிரமாதம் இவைகளா லுண்டாய்) அனுபவிக்கும் பொழுதும், பக்குவமாகும் பொழுதும் ஆத்ம சுவரூபத்தை யறியவொட்டாமல் மோஹத்தை விளைவிக்குமோ அந்தச் சுகம் தாமஸ மெனப்படும்."

[குறிப்பு:—நித்திரையாவது - அனுபவிக்கிற காலத்தில் கூட விஷ யத்தைத் தெளிவாய் அறியவொட்டாமல் செய்கிற தென்கிற அதன் மோகன சாமர்த்தியம் யாவராலும் கண்டு அறியப்படும்.

ஆலஸ்யமாவது-இந்திரியங்கள் செயல் தீர்ந்திருத்தல்; இந்திரியங் கள் செயல் தீர்ந்தால் ஞானம் மந்தப்படவே படும்.

பிரமாதமாவது செய்யவேண்டியதில் கவன மில்லாமை; இதற்கும் அவ்வாறே அஞ்ஞானத்தை யுண்டாக்கும்படியான சுவபாவ முண்டு.] 39

"பூமியில் மனிதர்களிலாவது, ஆகாயத்தில் தேவர்களிலாவது (பிரகிருதியுடன் கலந்து பிரமன் முதல் தாவர மீறாயுள்ள) சகல பிராணிகளிலும் இந்தப் பிரகிருதியினது முக்குணங்களையுங் கடந்த பிராணி ஒன்றாகிலுங் கிடையாது." 40

"பரந்தப! பிராம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் நால்வருக் கும் தங்கள் தங்கள் பழைய வினையின்படி சுவபாவமா யுண்டான சத்துவம் முதலிய குணங்களுக்குத் தக்கபடி செய்ய வேண்டுங் கரு மங்களும் விருத்திகளும் இவை யென்று சாஸ்திரங்கள் பிரித்தோது கின்றன."

[இதில், 'சுவபாவம்' என்றது; பிராமணனுக்குச் சுவபாவத்தினு லுண்டானது, ரஜஸ்ஸையும் தமஸ்ஸையும் அடக்கித் தலையெடுத் திருக்கும் சத்துவகுணம். க்ஷத்திரியனுக்குச் சுவபாவத்தா லுண்டா னது, தமஸ்ஸையும் ஸத்துவத்தையு மடக்கித் தலையெடுத்திருக்கும் இரஜோகுணம். வைசியனுக்குச் சுவபாவத்தா லுண்டானது, சத்து வத்தையும் இரஜஸ்ஸையும் அடக்கிக் கொஞ்சந் தலையெடுத்திருக் கும் தமோகுணம். சூத்திரனுக்குச் சுவபாவத்தா லுண்டானது, இரஜஸ்ஸையும் ஸத்துவத்தையும் அடக்கி மிகவும் தலையெடுத்திருக் கும் தமோகுணம்.] 41

"அர்ச்சுன! (புறக் கரணங்களை யடக்குவ தென்கிற) சமம், (அந்தக்கரணங்களை யடக்குவ தென்கிற) தமம், (போகத்தை யடக் கும்படி சாஸ்திரத்தி லேற்பட்ட காயக்கிலேச மென்னும்) தவம், (சாஸ்திரோக்தமான கருமத்தைச் செய்யும்படியான யோக்கியதை யென்கிற) சௌசம், (பிறரால் தான் பீடிக்கப்பட்டாலும் சித்தவிகார மடையாம லிருத்த லென்கிற) க்ஷாந்தி, (பிறர் விஷயத்தில் மனதில் நினைத்தபடியே வெளியிலும் நடக்கை யென்கிற) ஆர்ஜவம், (பர தத்துவத்தையும், அபர தத்துவத்தையும் பகுத்தறிவு மறிவான) ஞானம், (பர தத்துவத்திற்கே உரியவைகளான விஷயங்களை யறிவ தென்கிற) விக்ஞானம், (வேதத்தில் கூறிய அர்த்தமெல்லாம் சத்திய மென்கிற உத்தம நிச்சயமான) ஆஸ்திக்கியம் ஆகிய இவை யாவும் பிராமணனுக்குச் சுவபாவமா யுண்டான கருமங்களா யிருக்கின்றன."

[ஆஸ்திக்யமாவது புருஷோத்தமனா யிருக்கிற பகவானான வாசு தேவனே பரப்பிரம்ம மென்னுஞ் சொல்லுக்குப் பொருளாய், சகல தோஷங்களு மற்று, சுவபாவ சித்தங்களாய் அளவில்லாத அதிசயம் பொருந்தியவைகளா யுள்ள ஞானம் சக்தி முதலிய எண்ணிறந்த கல் யாணத் தொகை யுடையனாய், சகல வேதாந்தங்களாலு மறியப்படுப வனா யெழுந்தருளி யிருக்கிறான்; அவனே சகல ஜகத்திற்கும் முக் கிய காரணம்; சகல ஜகத்திற்கு மாதாரம்; சகலத்தையும் அவனே ஏவுகிறான்; வைதிகமான சகல கருமமும் அவனுடைய ஆராதனம்; அவனே அந்தக் கருமங்களால் ஆராதிக்கப்பட்டவனாய்க் கொண்டு தருமம், அர்த்தம், காமம், மோக்ஷமென்கிற பலன்களை யளிக்கிறான் என்கிற இவ் விஷயம் சத்தியம் என்கிற நிச்சயந்தான்.]

"அர்ச்சுன! இன்னுஞ் சொல்வேன் கேட்பாயாக! அதாவது, யுத்தத்தில் நிர்ப்பயமாய்ப் பிரவேசிக்கும்படியான சாமர்த்தியம்,

சத்துருக்களால் வெல்லப்போகாமை, எடுத்த காரியத்தைத் தடை நேரிட்ட போதிலுந் தலைக் கட்டுவிக்கும் திறமை, எந்த வேலையானு லும் செய்யும்படியான சாமர்த்தியம், யுத்தத்தில் தனக்கு மரணம் நேரிடு மென்கிற நிச்சய முண்டானாலுந் திரும்பாமை, தன் சொத் தைப் பிறர் சொத்தாகும்படி கொடுப்பது, தன்னை யொழிந்த மற்ற ஜனங்களை யெல்லாம் ஆளும்படியான சாமர்த்தியம் ஆகிய இவை யாவும் க்ஷத்திரியனுக்குச் சுவபாவத்தா லுண்டான கருமம்.'' 43

"இன்னும், பயிர்த்தொழில், பசுக்களைக் காத்தல், பொருள் சேர்ப்பதற்குக் காரணமான விற்பனை வகையறுத் தொழில் ஆகிய இவை வைசியனுக்குச் சுவபாவத்தா லுண்டான கருமமாம். முற் கூறிய மூன்று வருணத்தார்களுக்கும் ஊழியஞ் செய்வது சூத்திர னுக்குச் சுவபாவமா யுண்டான கருமம்.''

[இவ்வாறு கூறியதனால், நான்கு வருணத்தார்களுக்கும் ஜீவனத் தொழிலும் செய்யவேண்டுங் கருமங்களும் சொல்லப்பட்டன வென் றறியவும். இதில் முதல் மூன்று வருணத்தார்களுக்கும் யக்ஞம் முத லிய கருமங்கள் பொதுவானவை. சமம் முதலிய குணங்களை மோக்ஷார்த்திகளான மூன்று வருணத்தார்களுக்கும் சாதாரணம். பிரா மணனுக்குச் சத்துவம் விஞ்சியிருக்கை சுவபாவ மாகையாலே சம தமாதி குணங்கள் வருத்தமின்றி வரக்கூடு மென்று அவைகளை பிரா மணனுக்குச் சுவபாவத்தினு லுண்டான கருமங்க ளென்றது. க்ஷத்திரிய னுக்கும், வைசியனுக்கும் ரஜஸ்ஸும், தமஸ்ஸும் பிரதான மாகை யாலே சமதமாதிகள் உண்டாவது வருத்தமென்று அவைகளை அவர் களுக்குக் கருமமாகச் சொல்லவில்லை. பிராமணனுக்கு யாகஞ் செய் வித்தல், ஓதுவித்தல், தானம் வாங்கல் ஜீவனத்தொழில். க்ஷத்திரி யர்களுக்கோ ஜனங்களைக் காப்பது. வைசியனுக்கோ முன் சொன்ன படி பயிர் செய்வது. சூத்திரனுக்கோ செய்யவேண்டுங் கருமமும் ஜீவனத் தொழிலும் ஆகிய இரண்டும் ஊழியஞ் செய்வதுதான்.] 44

"மானுடர்கள் தத்தம் ஜாதி தர்மங்களான கருமங்களில் விருப் புடையவர்களாய் எந்தப் பிரகாரம் சித்தியை யடைவார்களோ அந் தக் கிரமத்தைத் தெரியச் சொல்லுகிறேன் கேட்பாயாக.'' 45

"பிராணிகளின் உற்பத்தி முதலிய பிரவிருத்திகள் யாரிடத்தி னின்று முண்டாகின்றனவோ, இவை யாவும் எவனால் வியாபிக்கப் பட்டுள்ளனவோ, இந்திராதி தேவதைகளுக்கு அந்தராத்மாவாயப்

பரம புருஷனை யிருக்குமந்த என்னை யாராதித்து, மனிதன் எனது அனுக்கிரகத்தால் என்னை யடைவதென்கிற சித்தியைப் பெறுவான்.''

''பிரகிருதியோடு கலந்த புருஷனுக்கு இந்திரிய வியாபார ரூபமான கருமயோக மென்னுங் கருமத்தைச் செய்வது சுலபம்; ஆகையால், தன் தருமமான கருமயோகம் குணமற்றதே யானாலும், இந்திரிய ஜயம் பண்ணவல்ல புருஷனுடைய தருமமான ஞான யோகத்தைத் தானேற்றிட்டுக்கொண்டு அதை நன்கு அனுஷ்டிப்பதைக் காட்டிலும் இது சிறந்தது. (ஏனெனில், ஞானயோகத்தை ஒருக்கால் குறைவற அனுஷ்டித்தாலும் சகலமான இந்திரியங்களையும் அடக்க வேண்டு மாகையாலே ஒருகால மில்லாவிடில் ஒரு காலத்தில் அது இவனுக்குப் பிரமாதத்தை விளைவிக்கு மென்று திருவுள்ளம்) பிரகிருதியைச் சேர்ந்த புருஷனுக்குக் கருமயோகம் இந்திரிய வியாபார ரூபமா யிருக்கையாலே சுவபாவமா யிருக்கிறது. ஆகையால், அதைச் செய்வதா லிவனுக்கு யாதொரு கெடுதியும் நேரிட மாட்டாது. ஞான யோகமே இந்திரியங்களை யடக்கிச் சாதிக்கவேண்டு மாகையாலே அந்த நிஷ்டை யுள்ளவர்களுக்குப் பிரமாதமாய் பாவம் நேரிடவே நேரிடும்.'' 47

''அர்ச்சுன! சகஜமாய் வருத்தமின்றிச் செய்யக்கூடிய கருமம் துக்கத்தோடு கூடியிருந்ததேனும் அதைக் கைவிட லாகாது; (என்றால், ஞானயோகத்துக்குத் தக்கவனாயினும் கரும யோகத்தையே செய் யென்றபடி.) ஏனெனில், கரும யோகமோ ஞான யோகமோ எதைச் செய்யத் தொடங்கினாலும் எல்லாம் புகையால் சூழப்பட்ட நெருப்புப்போல, துக்கத்தோடு கூடியே யிருக்கின்றன.''

[ஆனால், அவ்விரண்டிற்கும் இதுதான் விசேஷம். எது? கரும யோகம் சுலபமாய்ச் செய்யக் கூடியதாயும், பிரமாதத்தை யுண்டுபண்ணாததாயு மிருக்கு மென்பதும், ஞானயோகம் அதற்கெதிரா யிருக்கு மென்பதுமாம்.] 48

''அர்ச்சுன! பலன் முதலியவைகளில் ஆசை வைக்காமல், மனதை ஜயித்து, பரம புருஷனே கர்த்தா வென்பதைச் சிந்திப்பதால், தான் கர்த்தாவென்கிற நினைவை மாற்றி இப்படிப்பட்ட சந்நியாசத்தோடு கூடியிருப்பவன், கருமத்தை யனுஷ்டித்துவந்தே ஞான யோகத்தின் பயனான தியான நிஷ்டையை யடைவான்; (என்றால் சகல இந்திரியங்களும் சாந்தமாய்ச் செய்யவேண்டியதான தியான யோகத்தை யடைவா னென்றபடி.)'' 49

“மேலும், பிரயாணமாமளவும் நாடோறும் அநுஷ்டிக்கப்படுங் கரும யோகத்தால் ஒத்தாசை செய்யப்பட்ட ஞானயோகம் சித்திக்கப் பெற்றவன், எந்தப் பிரகாரமிருந்து (தியான யோகத்திற்குப் பயனான) பிரமத்தை யடைகிறானோ அதைச் சுருக்கமாய்ச் சொல்லுகிறேன் கேட்பாயாக.” 50

“ஆத்மாவை யுள்ளபடியே யறிகின்ற புத்தியுடன் கூடி யிருந்து விஷயங்களினின்று மனதைத் திருப்பி யோகத்திற்கு யோக்கியமாம்படிச் செய்து, சப்தாதி விஷயங்களைக் கிட்டவொட்டாமல் துறந்து, அவற்றிற்குக் காரணமான இராகத்தையும் துவேஷத்தையும் போக்கடிக்க வேண்டும்.” 51

“தியானத்திற்கு விரோதமானவைக ளொன்றுமில்லாத இடத்திலிருந்து அதிகமாய்ப் புசியாமல், புசியாமலு மிராமல், தியானத்திற்கு வழிபடும்படி மனோவாக்குக் காயங்களின் செயலைத் திருத்திக்கொண்டு, இவ்வாறிருந்து தினந்தோறும் தியானயோகத்தி லின்றவன், தான் தியானம் பண்ணுகிற தத்துவத்தைத் தவிர மற்றவைகளில் தோஷத்தை நிரூபித்து அவைகளில் வைராக்கியத்தை வளர்த்துக்கொண்டு; தேகமே ஆத்மா என்கிற அபிமானத்தையும், அது வளருவதற்குக் காரணமான வாசனையின் பலத்தையும், அதற்கு நிமித்தமான கொழுப்பையும், காமத்தையும், கோபத்தையும், பிடிப்பையும் விட்டு; தனதல்லாத எல்லாவற்றிலும் தனதென்கிற எண்ணத்தை மாற்றி; ஆத்மானுபவமே சுகமென் றிருந்தவனாய்ச் சகல பந்தங்களினின்றும் விடுபட்டு ஆத்மாவை யுள்ளபடியே அநுபவிப்பான்.” 52-53

“அர்ச்சுனா! அளவற்ற ஞானமே வடிவாய், நமக்கு ஆட்பட்டிருப்பதே சுவபாவமாயிருக்கிற ஆத்மாவின் உண்மையான சுவரூபம் பிரகாசிக்கப்பெற்றவன், கிலேசமான கருமாதிகளால் சலங்கவாவது, நம்மை யொழிந்த மற்றொன்றை நினைத்துச் சோகப்படவாவது, அது தனக்கு வேண்டுமென்று கோரவாவது மாட்டான்; மற்றப்படி நம்மைத் தவிர மற்றெல்லாப் பிராணிகளையும் ஒரே மாதிரியாய்த் திருமணம்போ லெண்ணி; சர்வேசுவரனையும், சகல ஜகத்திற்கும் உற்பத்தி ஸ்திதி லயங்களை லீலையாய்ச் செய்பவனையும், யாதொரு தோஷமும் மணமாத்திரமு மில்லாம லிருப்பவனையும், எல்லையில்லா அதிசயம் பொருந்தி அளவில்லாத கல்யாணகுணங்களுக்கு முக்கிய இருப்பிடமாயும், லாவண்ணிய மென்னும் அமிர்தத்திற்குக் கடலாயும்,

ஸ்ரீமானையும், புண்டரீகாக்ஷனையும், தனக்கு நாதனையு மிருக்கிற நம்மிடத்தில்தானே மிகுந்த பக்தி யுண்டாகப் பெறுவான்.'' 54

''சர்வ வியாபியாகவும், சச்சிதானந்த விக்கிரகனாகவு மிருக்கும் என்னைப் பரம பக்தியால் உணர்ந்துகொண்டவன் அந்த ஞான பரிசமாப்த காலத்தில் என்னையே யடைவான்.''

[ஸ்ரீ சங்கரர் அபிப்பிராயம்:—''மாயை முதலிய எத்தெந்த உபாதிகளோடு கூடி யிருக்கின்றானோ, உபாதி யற்றதாகவும் அகண்டமாகவும் ஞான சொரூபமாகவுஞ் சர்வ வியாபியாகவு மிருக்கின்ற எவ்வித சொரூப முடையவனா யிருக்கின்றானோ அவ்விதமாகத் தெரிகின்றான். (55-வது சுலோகத்திலுள்ள சில பதங்களால்) ஞான மடைந்து அதற்குப் பின்பு பிரமத்திற் பிரவேசிக்கின்றா னென்று அர்த்தமாகின்றது போலத் தோற்றும். ஞானத்திற்குப் பலன் அவித்தை நிவர்த்தியே; அதற்குப் பின்பு அடையவேண்டியதா யொன்று மில்லை. 13-ஆம் அத்தியாயம் 3-வது சுலோகத்தில், க்ஷேத்திரஜ்ஞன் அகண்ட பிரம்மமாகச் சொல்லப்பட் டிருக்கின்றான். ஜீவனென்னும் பெயரையுடைய தானே அந்த அகண்ட பிரம்ம மாகலால் அவனடையவேண்டுவ தொன்று மில்லை. வேறொன் றிருந்தாலன்றோ அதை அடைகின்றா னென்று சொல்லக்கூடும். அடைகிற தென்றால், அவித்தியா நிவிர்த்தியை யடைவதுதான். அதுதான் பிரமத்தை யடைகிற தென்று சொல்லப்படுகின்றது. சுண்ணாம்பின் சொரூபத்தால் சுத்த ஜலம் சுண்ணாம்பு நிறமாகக் காணப்பட்டபோது சுண்ணாம்பு ஜலமென்று விவரிக்கப் பட்டது. பிரிக்கின்ற சாதனத்தாற் சுண்ணாம்பு நீக்கப்பட்ட போது ஜலம் சுத்தத்தை யடைந்ததென்று விவரிக்கப்படுகின்றது. சுண்ணாம்பு நீங்கிய பின்பு அப்புனல் எதைப்போ யடைந்தது? சுண்ணாம்பு ஜலமென்னும் விவகாரம் நீங்கிய தென்பதே, ஜலம் சுத்தத்தை யடைந்த தென்றமையாற் சொல்லப்படுகின்றது. அவ்வாறு, அவித்தையாவஸ்தையி லிருந்த பிரமம் ஜீவனென்று விவரிக்கப்பட்டது. அவித்தை நிவிர்த்தியானாற் பிரகாசமான ஜீவ சொரூபம் சுவப்பிரகாசமாகவே யிருக்கின்றது. இந்த அத்தியாயம் 60-வது சுலோகத்தில், ஞான நிஷ்டையாற் பிரமத்தை யடைகிறா னென்று சொல்லப்பட்டிருக்கிறதே யென்றால், அவ்விடத்திலு மிந்த அர்த்தந்தான் கிரகிக்கத் தக்கது. நிஷ்டை யின்னதெனத் தெரிந்து கொள்ளுதலால் அஞ்ஞான நிவிர்த்திக்குச் சாதக முண்டு. குரு உபதேசித்த சாஸ்திர ஞானத்தா லுண்டானதும், அமானித்துவம்

முதலிய குணங்களோடு கூடியதும், ஆத்மாவைத் தவிர யாதொரு வஸ்துக்களுந் தோன்றாமல் தானே பிரமமென்னு நிச்சயத்தோ டிருக்கின்றதுமான திடமாகிய அகண்டத் தியானம் யாதோ அதுதான் ஞான நிஷ்டை யென்று சொல்லப்படுகின்றது. 7-வது அத்தியாயம் 16-வது சுலோகத்தில் கூறிய நான்குவித பக்திகளில் நான்காவதான ஞானபக்தியே சிரேஷ்டமாயது. இதுதான் ஞானநிஷ்டை. இதுதான் ஜீவேசுவர பேதத்தை நிவிர்த்திக்கத் தகுந்தது. இதுதான் முடிவான பிரம ஞானம். இப்படிப்பட்ட ஞானிக்கே சர்வ கர்ம சந்நியாசஞ் சொல்லப்பட் டிருக்கின்றது. அதற்கு இதைவிட வேறு மார்க்க மில்லை. வேறு மார்க்க முள்ளதாக நினைத்தால் மேலைக் கடலை யடைய விரும்பிக் கிழக்கே போவதுபோலப் பிரயோஜனப்படாது. இவ்விடத்தில் கூறிய ஞான நிஷ்டா மார்க்கம் ஒரு மலைபோ லிருக்கின்றது. மற்றைய மார்க்கங்கள் கடுகு போல அற்பமாகும். ஆதலால், பிரமத்திற் பிரவேசித்த லென்னும் பதங்களுக்கு அகண்டாகார சொரூபமாய் விளங்குவது என்பதுதான் தாத்பரியம்."]

[ஸ்ரீ இராமாநுஜர் அபிப்பிராயம்:—"சுய ரூபத்தாலும், சுவபாவத்தாலும் நம்மை இன்னானென்றும், குணத்தாலும் விபூதியாலும் நாம் இவ்வளவென்றும் மேற்கூறிய பக்தியைக் கொண்டுதான் என்னை உள்ளபடியே அறியவேண்டும். அவ்வா றறிந்தால் பின்பு பக்தி விருத்தி யடைந்து அதனால் நம்மை யறியக்கூடும். மேற் கூறியபடி எம்பெருமானை யுள்ளபடியே அறிவதற்குப் பக்திதான் காரணம்."] 55

"அர்ச்சுன! நித்திய நைமித்திக கருமங்களை மாத்திரமல்ல, காமியங்களான மற்றக் கருமங்களையும் நமது ஆராதன ரூபமாகச் செய்து வருவானாகில் நமது அநுக்கிரகத்தாலே சாசுவதமான பதத்தைச் சிறிதுங் குறைவின்றி யடைவான்." 56

"ஆகையால், அர்ச்சுன! உன்னை நம்முடையவ னென்றும், நம்மால் ஆளப்படுபவ னென்றும் அறிகின்ற மனதைக்கொண்டு சகல கருமங்களையும் (அந்தந்தக் கருமத்தா லாராதிக்கப்படுந் தேவதைகளோடு சேர்த்து) நம்மிடத்தில் சமர்ப்பித்து, நம்மையே பேறாக அநுஸந்தித்துக் கருமங்களைச் செய்துகொண்டு இவ்வித புத்தியோடு கூடி எப்பொழுதும் நம்மையே சிந்தித்திரு." 57

"இவ்வாறு நம்மைச் சிந்தித்தபடியே சகல கருமங்களையுஞ் செய்வாயானால் சம்சாரத்தால் வரும் சகல பாபங்களையும் நம்முடைய

அனுக்கிரகத்தாலே தாண்டி விடுவாய். அவ்வாறின்றி நீ அகங்காரத்தினால் நானே கிருத்தியா கிருத்தியங்க ளெல்லாவற்றையும் அறியவல்லேன் என்கிற எண்ணத்தால் நான் சொன்னதைக் கேளாமற் போவாயாகில் நீ அழிந்து போவாய். ஏனெனில், நம்மைத் தவிர எவனும் பிராணிகளின் கிருத்தியா கிருத்தியங்களை அறிபவனாவது அவைகளை ஆள்பவனாவது கிடையாதென்று திருவுள்ளம்." 58

"அர்ச்சுனா! உன்னுடைய நன்மை தீமைகளைப்பற்றி உனக்கே அறிந்துகொள்ளும்படியான சாமர்த்திய மிருப்பதாக அகங்கரித்துக் கொண்டு இதுவரையில் நான் சொன்ன விஷயங்களைக் கை நெகிழ விட்டு, 'யுத்தஞ் செய்யாம லிருப்போம்' என்றிருந்தாயாகில் அப்பொழுது நீ கொண்டிருக்கிற அந்தச் சுதந்தர நிச்சயம் பொய்யாக முடியும். ஏன்? நமது சுதந்திரத்தைப் பொறுக்க மாட்டாது அஞ்ஞானியான உன்னைப் பிரகிருதியானது யுத்தஞ் செய்யும்படி ஏவப் போகிறது." 59

"மேலும், இப்பொழுது அஞ்ஞானத்தால், நீ செய்ய மாட்டேனென்கிற இந்த யுத்தத்தையே, உனது க்ஷத்திரிய ஜாதிக் கேற்ற சௌரியத்தால் கட்டுப்பட்டவனாய்க் கொண்டு பிறர் செய்யும் உபத்திரவத்துக்கு ஆற்றாதவனாய், நீயே உன்னையு மறியாமல் செய்யப் போகிறாய்." 60

"ஏனெனில், சகல பிராணி சமூகமும் சர்வேசுவரனான நம்மால் பூர்வ கர்மத்திற்குத் தக்கபடி பிரகிருதியைப் பின் செல்லும்படி நியமிக்கப்பட் டிருக்கிறது. அவற்றைச் சொல்லுகிறேன் கேள். அதாவது, சகல பிராணிகளையும் ஆள்வதே சுவபாவமான வாசுதேவன், (பிரவிருத்தி நிவிருத்திக ளெல்லாவற்றிற்கும் காரண ஞான முண்டாவதற் கிடமான) ஹிருதயப் பிரதேசத்தி லிருக்கிறான். எப்படி? என்ன செய்துகொண் டிருக்கின்றான்? தன்னால் நியமிக்கப்பட்டு (தேகமாயும் இந்திரியமாயும் விகாரப்பட்டிருக்கின்ற)ப் பிரகிருதியென்னும் யந்திரத்தி லேறி யிருக்கின்ற சகல பூதங்களையும் குணமயமான தன் மாயையைக் கொண்டு அந்தந்தக் குணத்திற்குத் தக்கபடி பிரவிருத்திப்பித்துக் கொண்டிருக்கின்றான்." 61

"ஆகையால், பாரதா! சகல பிராணிகளையும் ஆள்பவனாய் ஆஸ்திகர்களிடத்தி லுண்டான அன்பினால் உன்னுடைய தேர்த்தட்டில் சாரத்தியம் பண்ணுவானா யிருந்து இப்படிச் செய்யென்று நியமிக்கின்றான் யாவன். அவனையே சர்வ விதத்தாலும் சரணமாகப்பற்று:

(என்றால், அவன் நியமனத்தை நீ மேற்கொள்ளாமற் போனாலும், அவனுடைய மாயையாலே வசப்பட்டவனாகக்கொண்டு நீ யுத்தஞ் செய்யவே போகிறாய், ஆகையால், அவன் சொன்னபடியே யுத்தம் முதலியவைகளைச் செய் யென்றபடி.) அவ்வாறு செய்தாயானால் அவனுடைய அனுக்கிரகத்தால் சர்வ கர்மங்களு மற்று உத்தம ஸ்தானமான பரமபதத்தை யடைவாய்." 62

"இந்தப் பிரகாரம் மோக்ஷார்த்திகளுக்கு வேண்டுவதாய், கர்மயோக விஷயமாயும், ஞானயோக விஷயமாயும், பக்தியோக விஷயமாயும் அறியவேண்டியதாய் ரஹஸ்யார்த்தங்க ளெல்லாவற்றிற்கும் மேலாயிருக்கின்ற எல்லா ஞானங்களையும் உனக்கு உபதேசித்தேன். இவை யெல்லாவற்றையும் ஆலோசித்து என் அதிகாரத்திற்குத் தக்கபடி இவற்றுள் எதை விரும்புகிறாயோ அதைச் செய்." 63

"இந்த இரகஸ்யார்த்தங்க ளெல்லாவற்றிற்கும் பக்தியோகம் அத்தியந்தம் சிரேஷ்டமென்று முன்பே சொல்லப்பட்டது. மறுபடியும் அவ் விஷயமாகவே சிறந்ததொரு வார்த்தை சொல்லுகிறேன்."

நீ எனக்கு மிகவும் இஷ்டனாகையாலே உன் க்ஷேமத்தைக் குறித்து வேறொரு பரம ரகசியமான உத்கிருஷ்ட வாக்கியத்தை உனக்குச் சொல்லுகிறேன்; கேட்பாயாக. 64

"என்னிடத்தில் மிகவும் பிரீதிமானாய்க்கொண்டு, மிகவும் பிரீதிரூபமாயிருக்கிற ஸ்மிருதி பரம்பரையைச் செய்: அப்படியே மிகவும் பிரியமான நம் ஆராதனமே பொழுதுபோக்காயிரு: என்னை மிகவும் பிரீதியோடு வணங்கு; அப்படிச் செய்வாயாகில் நீ மோக்ஷத்தை யடையமாட்டுவாய். நீ எனக்குப் பிரியமானவன். இவை எல்லா விஷயத்திலும் நான் உனக்குப் பிரதிக்ஞை செய்து கொடுக்கிறேன்."

[சாதாரணமாய் ஏதோ உனக்கு இஷ்டமாயிருக்கும்படிச் சிலவற்றைச் சொல்வதாக நினையாதே. ஏனெனில், நீ நமக்குப் பிரியனன்றோ? எவனுக்கு நம்மிடத்தில் மிகுந்த பிரீதி யிருக்குமோ நமக்கும் அவனிடத்தில் மிகுந்த பிரீதி யுண்டாகுமாகையால் நாம் அவனைப் பிரியமாட்டாமல் அவனை நம்மோடு சேர்த்துக் கொள்ளுகின்றோம் ஆகையால், என்னையே யடைவா யென்கிற பிரதிக்ஞை சத்தியம்.] 65

"கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்கிற மோக்ஷ சாதனங்களான எல்லாத் தருமங்களையும் என்னுடைய ஆராதன ரூப

மாக மிகுந்த பிரீதியோடு உன் அதிகாரத்திற்குத் தக்கவாறு செய்து கொண்டே, மேற் கூறியபடி பலனையும் கர்மத்தையும் கர்த்திருத்து வத்தையும் விட்டு ஆராத்திய சுவரூபனான என்னையே பலனாகவும், உபாயமாகவும் நினைக்கக்கடவாய். இவ்வா றிருக்கின்ற உன்னை நம்மை யடைதற்கு விரோதிகளாய் அநாதிகாலமாய் சம்பாதிக்கப் பட்டவைக ளாய் (செய்யத் தகாததைச் செய்தலும் செய்யத் தக்கதைச் செய்யா மையுமான) சகல பாபங்களினின்றும் விடுவிக்கிறோம்.''

[பக்தியோகத்தை ஆரம்பிக்கவொட்டாமல் விரோதிப்பவை களாய், அநாதிகாலமாய் சம்பாதிக்கப்பட்டவைகளாய், நானாவிதங் களாய், அனந்தங்களாயுள்ள பாபங்களுக்குத் தக்க பிராயச்சித்த ரூபங்களாயும்; கிருச்சிரம், சாந்திராயணம், கூச்மாண்டம், வைச்சு வாநரம், வ்ராதபவித்திரேஷ்டி, த்ரிவிருதக்நிஷ்டோமம் தொடங்கி நானாவிதங்களாயும், அநந்தங்களாயும் எவ்வளவுகாலம் ஜீவித்திருந்து அனுஷ்டித்தாலும் அனுஷ்டிக்க அரியவைகளாயு மிருக்கின்ற சுவ தருமங்களையும் விட்டு, பக்தியோகாரம்பம் சித்திப்பதற்காகப், பரம காருணிகனாய்ப், பிராணிகளிடத்தில் ஒரு விசேஷத்தையும் ஆலோசி யாமல் அவைகளுக்கெல்லாம் சரணியனாய் ஆஸ்ரிதாளிடத்தி லுண் டான வாத்ஸல்யத்திற்குக் கடலாயிருக்கின்ற என்னையே ஞானமாகப் பற்று. நான் உன்னை மேற்கூறிய பக்தி யோகாரம்பத்திற்கு விரோதி களான பாபங்களினின்றும் விடுவிக்கிறேன். நீ அதற்காக வியசனப் பட வேண்டாம்.] 66

''இப்பொழுது உனக்கு நான் சொன்ன பரம ரகசியமான இவ் விஷயத்தைத் தவம் புரியாதவனுக்காவது, தவம் புரிந்தாலும் பக்தி இல்லாதவனுக்காவது, பக்தி யுண்டானாலும் சிஸ்ருஷை செய்யாதவ னுக்காவது நீ சொல்லக்கூடாது; அதிலும், என் சுவரூபத்தையும் என் ஐசுவரியத்தையும், என் குணங்களையும் சொல்லக் கேட்டு யாவ னொருவன் என்னை உதாசினஞ் செய்வானோ அவனுக்கும் சொல்லத் தக்கதன்று.'' 67

''யாவனொருவன் பரமோத்கிருஷ்டமும் பரம ரகசியமுமாகிய இந்தக் கீதா சாஸ்திரத்தை எனது பக்தர்கட்குச் சொல்லுவானோ அவன் என்னிடத்துச் சிறந்த பக்தியைச் செய்து சகல சந்தேக விப ரீதங்களற்றவனாய் என்னையே ஐக்கியமாக அடைகிறான்.'' 68

"மேலும், மனிதர்களில் தக்கோர் பொருட்டுக் கீதாவுபதேசஞ் செய்பவனைப் பார்க்கிலும், எனக்கு மிகவும் இனிமை செய்பவ னொருவனுமில்லை; எனக்கு அவனிலும் வேறெப்படிப்பட்டவனும் மிக்க இனிமையானவன் பூமியில் இருப்பதில்லை." 69

"தரும நெறியினின்று வழுவாததாகிய நம்மிருவரது இந்தச் சம்வாதத்தை யாவன் குருமுகமாகக் கேட்டு உணர்ந்து கொள் வானோ, அவனால் ஞானயக்ஞத்தினால் அனுபவ ஞானத்தினால் யான் ஆராதிக்கப்பட்டவ னாவேனென்பது எனது நிச்சயமாம்." 70

"எந்த மனிதன் ஆஸ்திக புத்தி யுடையவனும், அசூசை யற்ற வனுமாய் (ஆத்ம ஐக்கியத்தை யுபதேசிக்குஞ் சாஸ்திர மென்கிற ஆசையோடு பொருளறியாமற் செவிகளாற் சப்தமட்டாகவாயினும்) கேட்பானோ அவனும் சகல சம்சார பந்தத்தினின்று விடுபட்டவனாய் அக்கினிஹோத்திர முதலிய புண்ணிய கருமங்களை இயற்றினோர்க்கு உண்டாகும் புண்ணியலோகப் பிராப்தியை அடைவான்." 71

"ஓ! அர்ச்சுனா! இப்பொருளானது உன்னால் நிச்சலமான மன துடன் சிரவணஞ் செய்யப்பட்ட தல்லவா? ஓ! அர்ச்சுனா! உனது பேத ஞானத்தா லுண்டாகிய மயக்கமானது தீர்ந்து தெளிவுற்றனை யல்லவா?" 72

அர்ச்சுனன் வாக்கியம்

"சுவாமி! தேவரீருடைய கிருபையால் விபரீத ஞானம் ஒழியப் பெற்றேன். யதார்த்தமான ஞானமும் பிறந்தது. தேகாதிகளை ஆத்மாவென்கிற துரபிமானமும், சேதனாசேதன ரூபமான சகல பிரபஞ்சமும் பரம புருஷனுக்குச் சமீப மென்கிற விஷயந் தெரியா மல் மாறாக நினைத்திருந்த துரபிமானமும், நித்திய நைமித்திகமான கர்மம் பரம புருஷனுடைய ஆராதன ரூபமாக அனுஷ்டிக்கப்படு மாகில், அவனை படைவதற்கு உபாயமாகு மென்கிற விஷயம் தெரியா மல் அதைக் கட்டுக்குடலாக நினைத்திருந்த அஞ்ஞானமும் தொலைந் தது. ஆத்மா பிரகிருதிக்கு அருகாய், பிரகிருதியின் சுவபாவமின்றி அறிவதே சுவபாவமாய்ப் பரம புருஷனுக்குச் சேஷப்பட்டு அவனா லாளப்படுவதே சொரூபமா யிருக்கிற தென்கிற ஞானமும், சகல ஜகத்திற்கும் உற்பத்தி ஸ்திதி லயங்களை லீலையாய்ச் செய்பவனாய், சகல தோஷங்களுக்கும் எதிரான கல்யாணமே ஸ்வரூபனாய், சுவபாவ சித்தங்களும் அளவற்ற அதிசயம் பொருந்தியவைகளுமான ஞானம்.

பலம்-ஐசுவரியம்-வீரியம்-சக்தி-தேஜஸ் முதலிய சமஸ்த கல்யாண குணங்களுக்கும் பெருங் கடலாய், பரப்பிரம்ம மென்னுஞ் சொல்லுக்குப் பொருளா யிருக்கிற பரம புருஷனுடைய உண்மையை அறியும் படியான ஞானமும், இப்படிப் பராபர தத்துவங்களை யுள்ளபடியே யறிந்து, பிறகு அதை அப்பியஸித்து வந்து, பரம புருஷனுக்கு நாளுக்குநாள் பிரீதியை வளர்ப்பதே பயனாக நித்திய நைமித்திக கருமங்களை யனுஷ்டிப்பதாலும், நிஷித்தங்களை யொழிப்பதாலும், சமம் தமம் முதலிய ஆத்ம குணங்களாலும், பக்திரூபமாய்ப் பரிணமித்திருக்கிற பரம புருஷ உபாஸனத்தால் மாத்திரம் அடையப் படும் பொருளும், வேதாந்த விழுப்பொருளும், பரம புருஷனுமான வாசுதேவன் தேவரீரே யென்கிற ஞானமும் அடியேனுக்கு உண்டாயின. அதன் பின்னர், பந்துக்களிடத்தில் சிநேகத்தாலும் கருணையாலும், மேன்மேலும் விருத்தி யடைந்த விபரீத ஞான மடியாக வரும் சகல துக்கங்களினின்றும் விடுபட்டவனாய்ச் சந்தேகம் அற்றுச் சுவஸ்தனா யிருக்கிறேன். இனி, யுத்தஞ் செய்யும்படியாகத் தேவரீர் அருளிச் செய்த திவ்ய ஸூக்தியின்படியே செய்கிறேன்.''

## சஞ்சயன் வாக்கியம்

''ஓ! திருதராட்டிர மஹாராஜனே! இந்தப் பிரகாரம் வசுதேவன் மைந்தனான கண்ணனுக்கும், அவர் அத்தை மகனாய் மகா புத்திசாலியாய் அவர் திருவடிகளை யாஸ்ரயித்த அர்ச்சுனனுக்கும் நடந்த அற்புதமான சம்வாதத்தை மயிர்க்கூச்செழும்படியாக மேற்கூறியவண்ணமாகக் கேட்டேன்.'' 74

''வியாச மகரிஷியின் அநுக்கிரகத்தால் திவ்யமான கண்ணும் காதும் பெற்றவனாகையாலே இந்த யோகமென்னும் மேலான இரகசியத்தையும், ஞானபலாதிகளுக் கெல்லாம் நிதியான ஸ்ரீ கிருஷ்ண பகவான் தாமே யருளிச் செய்யக் கேட்டேன்.'' 75

''கேசவனுக்கும் அர்ச்சுனனுக்கும் நடந்த புண்ணியமான இவ்வற்புத சம்வாதத்தை நான் நேரே கேட்கவே, அது முதற் கொண்டு எனக்கு நினைக்க நினைக்கச் சந்தோஷம் உள்ளடங்காமல் வருகிறது.''

''அதுவுமன்றி, அர்ச்சுனனுக்குப் பிரகாசிப்பித் தருளிய ஸ்ரீமந் நாராயணனுடைய அற்புதமான ரூபத்தையும், பிரத்தியக்ஷமாய்க் கண்டனுபவித்தேன். அதை அப்படியே நினைத்து நினைத்துச் சந்தோஷிக்கின்ற எனக்கு மிகவும் ஆச்சரிய முண்டாகின்றது.'' 77

"உயர்வும் தாழ்வுமா யிருக்கிற சேதனு சேதனங்க ளெல்லாவற்றிற்கும் எந்தெந்தச் சுவபாவங்க ளுண்டோ அவைகளுக் கெல்லாம் நியாமகனுய்த், தம்மை யொழிந்த எல்லா வஸ்துக்களுக்கும் சொருபம் ஸ்திதி பிரவிருத்தி முதலிய எல்லாம் தமது சங்கற்பாதீனமா யிருக்கும்படி விளங்குகின்ற ஸ்ரீ கிருஷ்ண பகவான் எழுந்தருளி யிருக்கிற விடத்திலும், அவன் திருவடிகளையே நம்பி யிருக்கின்றகையும் வில்லுமான அர்ச்சுனன் எங்கே விளங்குகிறனே அவ்விடத்திலும் ராஜ்ஜிய லக்ஷ்மியும், ஜயமும், நியாயமும், அபிவிருத்தியும், செல்வமும் சாசுவதமா யிருக்கு மென்பது என்னுடைய சித்தாந்தம்." 78

பதினெட்டாவது அத்தியாயம்

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ பகவத் கீதை வசனம் சம்பூர்ணம்

ஸ்ரீ கிருஷ்ணர்ப்பணமஸ்து.



ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ பகவத் கீதா மான்மிய சங்கிரகம்

---

வராக புராணத்தில் 90-சுலோகங்களினால் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிற ஸ்ரீ கீதா மான்மியத்தைச் சுருக்கிச் சொல்லுமாறு சௌனகர் என்னு முனிவர் சூத மகாரிஷியைப் பார்த்து, "சுவாமின்! தேவரீர் வியாச பகவானாற் கேட்டிருக்கிற ஸ்ரீ பகவத் கீதா மான்மியத்தை அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டும்" என்று வினவ, சூத முனிவர் சொல்லலுற்றார்.

"வாரீர் ரிஷியே! நீர் வினவிய கீதா மான்மியமானது பெருமையிற் சிறந்ததும், இரகசியமானதும், உத்தமமானதுமா யுள்ளது. அதன் பெருமை யொருவராலு முரைக்கற் கரியதாயினும் நான் கேட்ட பிரகாரஞ் சிறிது கூறுகிறேன்; கேட்பீராக:—

ஸ்ரீ பகவானால் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கப்பட்ட கீதையானது அமிர்தத்திற்கு ஒப்பானதாயும், சம்சார சமுத்திரத்தைக் கடப்பதற்கு ஒரு தெப்பமாயு மிருக்கிறது. இக் கீதையைச் சிரத்தையுடன் கேளாதவன் ஊர்ப் பன்றிக்குச் சமானம். கீதையில் பாதி படித்தாற் கோதான பலனும், மூன்றி லொருபங்கு படித்தாற் சோமயாக பலனும், ஆறி லொருபங்கு படித்தால் கங்கா ஸ்நான பலனும், தினம் இரண் டத்தியாயங்களைப் படித்தால் இந்திர லோகத்தில் கற்பகால வாசமும், ஓரத்தியாயம் வாசிப்பவனுக்குச் சிவகணமாகிய உருத்திர லோகத்தில் நெடுநாள் வாசமும், ஓரத்தியாயத்திற் பாதி யல்லது காலி லொரு பாகம் படித்தால் நீண்ட நாள் சூரிய லோக வாசமும், பத்து அல்லது ஏழு, ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒன்று அரை சுலோகங்களையாவது வாசிப்பவனுக்குப் பத்துக் கோடி வருஷஞ் சந்திர லோக வாசமும் அவர்க்குச் சித்திக்கும்

மரண சமயத்திற் கீதா அர்த்தத்தைச் சிந்திப்பவர்களும், பாராயண சப்தத்தைக் கேட்பவர்களும் மோக்ஷமே யடைவார்கள்; கிரியைகள் நடக்கும்போது பாராயணஞ் செய்தால் சகல குற்றங்களும் நீங்கும்; சிராத்த காலத்திற் பிதுர்க்களை யுத்தேசித்து இதனைப் படித்தால் அந்தப் பிதுர்க்களுக்கு நரக விமோசனமாம்; கீதா புத்தகங் களை யன்புடன் பிறருக்குத் தானஞ் செய்தால் பலன் அளவிடக்

தக் கீதையின் நான்கா மத்தியாயத்தை உபதேசித்து அநுக்கிரகம் பண்ணி நாங்கள் விஷ்ணுபதத்தை யடையுமாறு செய்யவேண்டும்" என்று கூறினார்கள். அவ்வாறே அவன் அவர்களுக்குக் கீதையின் நான்கா மத்தியாயத்தை உபதேசித்தான்; அதனை அவர்கள் பாராயணஞ் செய்து உடனே விஷ்ணு கணங்கள் விமானங் கொண்டுவர அதிலேறிச் சென்று விஷ்ணுபத மடைந்தார்கள்.

## 5-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

முன்பொரு காலத்தில் மத்ராவ தேசத்திற் பிறந்த பிராமணனொருவன் நித்திய கர்மாநுஷ்டானங்களை விட்டுச் சங்கீத சாஸ்திரம் பயின்று, நிர்த்தனம் வாத்தியம் முதலியவைகளில் மிகத் தேர்ச்சி யடைந்திருந்தான். அவனுடைய சங்கீதத் தேர்ச்சியை யறிந்த அத் தேசத்தரசன், அவனுக்குச் சம்பளங் கொடுத்து அவனைத் தன்னுடைய சமஸ்தானத்தில் வைத்துக்கொண்டான். அவன் தாசி நேசனாகித் திரிந்தான். அவ்வா றிருக்கும்போது, அவனுடைய மனைவி அரசன்மேல் மோகங்கொண்டு அப் பிராமணனைக் கொன்றுவிட்டு அரசனோடு சேர்ந்து முடிவில் கிரந்தி ரோகத்தால் வருந்தி யிறந்தாள். பிறகு அந்தப் பிராமணனும் அப் பிராமண ஸ்திரீயும் அநேக நரகங்களை யநுபவித்து அவருள் பிராமணன் பருந்தாகவும், பிராமண ஸ்திரீ கிளியாகவும் பிறந்தார்கள். அவ்விதம் பிறந்த அப் பருந்தும் கிளியும் இவ் வுலகத்திற் சஞ்சரிக்குநாளில் ஒரு நாள் இரண்டும் சந்தித்தன. அப்போது, பருந்தானது முன் ஜன்மத்தில் ஏற்பட்ட பகையினால் அக் கிளியை அடித்துக் கீழே வீழ்த்தியது; அதனால் அக் கிளியானது முன்னே கீதையின் ஐந்தா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணி மோக்ஷமடைந்த ஒரு வேதியனுடைய தலையோடு ஜலம் நிறைந்ததாய் அங்குக் கிடக்க அதில் வீழ்ந் திறந்தது; அப்போது ஒரு கிராதகன் அவ்விடம் வந்து அப் பருந்தைக் கொல்ல அதுவும் அத் தலையோட்டிலேயே வீழ்ந்திறந்தது. பிறகு அவ் விரண்டும் யமலோகஞ் செல்ல, யமன் அவைகளை நோக்கி, "உங்களுக்கு எந்தப் புண்ணிய லோகஞ் செல்ல இஷ்டமோ அங்குச் செல்லக் கடவீர்!" என்று கூறினன். அப்போது அவ் விரண்டும் யமனிடத்தில், "நாங்களோ மிகவும் பாவிகளா யிருக்கின்றோம். அவ்வா றிருந்தும் எங்களுக்கு எந்தப் புண்ணிய வசத்தினால் நற்கதி உண்டாயிற்று?" என்று வினவினன். அப்போது காலன், "முன்னே சாஸ்திரவிதிப்படி நற்கருமங்களைச் செய்து கீதையின்

கொண்ட அவ் வெருது தன் தேகத்தை விட்டு யமனுலகம் சேர்ந்தது. அவ்வா றடைந்தவுடன் காலன் அவ்வெருதை நோக்கி, "தாசி கொடுத்த புண்ணிய விசேஷத்தினாலே நீ புண்ணியாத்மா வாயினை; ஆதலால், உனக்கு இவ்விடத்தில் நரகவேதனை சிறிதுங் கிடையாது" என்று கூறி, நரகவேதனை யடையுதினின்றும் அதனை நீக்கினன். பின்பு அவ் வெருதானது பூவுலகத்தில் பிராமண குலத்தில் பூர்வ ஞானத்துடன் பிராமணனாகப் பிறந்தது. அவ்விதம் பிறந்த அப் பிராமணன் நிஷ்டையோடு கூடியிருந்து முன்னே தனக்கு மிகுந்த புண்ணியத்தைக் கொடுத்த தாசியினிடஞ் சென்று, 'நங்கையே! நீ எனக்குத் தந்தருளிய புண்ணிய விசேஷத்தினால் எருதாயிருந்த நான் வேதியனாகப் பிறந்தேன்; ஆதலால், அஃது என்னவிதமான புண்ணிய மென்பதை நான் தெரிந்துகொள்ள விரும்புகின்றேன்; அப் புண்ணியத்தின் விதத்தைச் சிறிது விளக்கமாகக் கூறவேண்டும்" என்று வினவினன். அப்போது அப் பொதுமகள் தன்னிடமிருந்த கிளியைச் சுட்டிக் காட்டி அவ் வேதியனை நோக்கி, "அந்தணரே! அப் புண்ணியத்தின் விவரம் இங்குள்ள இக் கிளிக்குத் தெரியும்; ஆதலால், இதன் வாக்கினால் அதனைத் தெரிந்துகொள்ளக் கடவீர்," என்று கூறி அப் புண்ணிய விசேஷத்தைத் தெரிவிக்கும்படி அக் கிளிக்குக் கட்டளை யிட்டாள்; அதன்மேல் அக் கிளியானது அவளை நோக்கி, 'பெண்மணியே! நான் முன் ஜென்மத்தில் மனிதனா யிருந்து புராணம் படித்த வித்தியா கர்வத்தினாலே பெரியோர்களை மதியாமல் நிந்தித்த அத் தோஷத்தால் இப்போது கிளியாகப் பிறந்து ஒரு வேதியன் வீட்டில் வளர்ந்தேன்; அக் காலத்தில் அங்குள்ளவர்கள் கீதையின் முதலத்தியாயத்தைப் பாராயணஞ்செய்து வந்தார்கள். அதை நான் கேட்டு வந்ததால் அஃது எனக்குப் பாடமாய்விட்டது; அதனை நான் தியானஞ் செய்ததுமன்றி, பாடஞ் செய்துகொண் டிருக்கும்பொழுது ஒரு வேடன் என்னைக் களவாடி வந்து உன்னிடம் விற்றான்; நான் அவ்வாறு உன்னிடம் விலையான பிறகு எனக்குப் பாடமாயிருந்த கீதையின் முதலத்தியாயத்தை இங்கே அப்பியாசம் செய்தேன்; அதனால் உனக்கு மிகுந்த புண்ணியம் சேர்ந்தது; அப் புண்ணியத்தின் பாகத்தைத் தான் நீ இவ் வேதியர்க்குக் கொடுத்தனை; நான் இப்பொழுதும் அதனைக் கூறுகின்றேன்; நீயும் இந்த வேதியரும் கேட்பீராக!" என்று மேற்கூறிய கீதையின் முதலத்தியாயத்தைப் பாராயணஞ் செய்தது. அவ்வாறு செய்யவே அதைக் கேட்டுக்கொண் டிருந்த அந்த வேதியனும் தாசியும், மோக்ஷத்தை யடைந்தார்கள்; கிளியும் முக்தி யடைந்தது.

## 2-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

கோதாவரி தீரத்திலே தேவசன்மா என்னும் பெயரோடுங் கூடிய ஒரு பிராமணன் இருந்தான். அவன் நிஷ்டை யுடையவனும், நற்கருமங்களைச் செய்பவனுமா யிருந்தான்; அவன் ஒரு தினத்தில் ஞான சன்னியாசி யொருவர்க்கு உணவளித்து, அவரிடம் "எனக்கு ஞானோபதேசஞ் செய்யவேண்டும்" என்று கேட்டனன். அதற்கவர், "தென்றிசையில் நதிப் பாறையிலே மித்திரவந்தன் என்னும் ஓரிடைய னிருக்கிறான்; அவனிடம் செல்வாயானால் உனதெண்ணம் நிறைவேறும்" என்று கூற, அவ் வேதியன் இடையனிடஞ் சென்று தன்னுடைய எண்ணத்தைத் தெரிவித்தான். இடையன் அந்தணனை நோக்கி "பிராமண சிரேஷ்டரே! முன்னே நிஷ்டனாயிருந்த ஒரு பிராமணனுடைய மனைவி ஒரு சண்டாளனைச் சேர்ந்து அதனால் பிணி யுடையவளாகித் தன் தேகத்தை விட்டு நீங்கி அப் பாவத்தினால் அநேக நரகங்களை யனுபவித்துப், பிறகு பைசாசமாக ஜனித்துத், தனக்குண்டான பசி வேதனையினாலே மிகவும் நோயுடையவனாய்க் கிடந்த ஒரு கிராதனுடைய தேகத்தைப் பிடுங்கித் தின்ன, அவ் வேதனையால் அவன் இறந்தனன்." பின்னர்ப் பைசாசமாயிருந்த அம்மாது ஆடாகப்பிறந்து என்னிடம் சேர்ந்தனள். நான் அந்த ஆட்டை மேய்த்து வந்தேன்; அங்ஙன மிருக்கும்போது முன்னே அம்மாதால் இறந்த வேடன் புலியாகப் பிறந்தான்; அப் புலியானது ஒரு தினம் வந்து என்னிட மிருந்த ஆட்டைப் பழைய விரோதத்தினால் கொல்லத் துணிந்தது. ஆடு அதனிடஞ் சிக்காமல் மிகுந்த வேகத்துடன் ஓடிற்று; அவ்வாறு இரண்டும் ஓடும்போது யானும் அவற்றைத் தொடர்ந்து சென்றேன்; அதன் பிறகு அந்த ஆடானது ஓரிடத்தில் போய் நின்று, புலியைப் பார்த்து அச்சமின்றி, "நீ என்னை உண்பாயாக!" என்று சொல்லப், புலிக்கு முன்பிருந்த பகையில்லாமற் போனமையால், அது, "உன்னைக் கொல்லுதற்கு என் மனம் இப்போது இசைய வில்லை" என்று கூறிற்று. பிறகு அவ் விரண்டும் அவ்விடத்திற் சென்றவுடன் தங்கள் பகை நீங்கியதைப்பற்றி ஆச்சரிய முற்று, என்னை நோக்கி, "நாங்கள் இங்கு வந்தவுடன் எங்கள் பகை நீங்கியதற்குக் காரணம் யாது?" என்று வினவின. அப்போது எனக்கு ஏதும் தோற்றாமையால் நான் சந்தேகங் கொண்டிருந்தேன். பிறகு அங்கு ஒரு குரங்கு தோன்றியது; அதனிடம் அவ் விசேடத்தைப்பற்றி நான் கூறும்போது அது அங்குள்ள சிவலிங்கத்தையும் கற்பாறையையும் சுட்டிக்

காட்டி "இது பிரமப் பிரதிஷ்டை லிங்கம்; முற்காலத்தில் ஒரு பிராமணன் இதற்குப் பூஜை செய்து கொண்டு வந்தான்; அப்போது அவன் வீட்டிற்கு அதிதியாக ஒரு பிராமணன் வந்தான்; மேற்கூறிய பூஜகன், 'எனக்கு மோக்ஷங் கிடைக்கும்படியான மார்க்கத்தை உபதேசித்தருள வேண்டும்' என்று கேட்டுக் கொண்டான் அவன், 'இந்தக் கற்பாறையில் கீதையின் இரண்டா மத்தியாயத்தை எழுதி இதனைத் தினந்தோறும் பாராயணஞ் செய்து வந்தால் உனக்கு மோக்ஷ முண்டாகும்' என்று கூறிச் சென்றான்; அவ்வாறே அவன் திட மனதுடன் பாராயணஞ் செய்து மோக்ஷத்தை யடைந்தனன்' இது அவன் சஞ்சாரஞ் செய்த இடமாதலால் அவனுடைய புண்ணிய விசேஷத்தால் இவைகளுக்கு முன்னர் ஏற்பட்டிருந்த பகை யில்லாமற் போயிற்று" என்று கூறிற்று. அவன் பிறகு நானும் அந்தக் கற்பாறையில் வரைந்துள்ள இரண்டா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்து பிரமஞான முடையவனானேன். ஆதலால், நீயும் அங்குச் சென்று அதனைப் பாராயணஞ் செய்தால் உனதெண்ணம் கைகூடும்." என்று கூறி, அக் கற்பாறை யிருக்கும் இடத்தையுங் காட்டினான்; அதன்மேல் அத் தேவசன்மா வென்னும் வேதியன் அங்குச் சென்று கீதையின் இரண்டா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்து மோக்ஷமடைந்தான்.

## 3-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

சனஸ்தானத்திலே கௌசிக குலத்திற் பிறந்த சேட்டன் என்னும் பிராமணன் நற்கருமங்களை விட்டு வியாபாரஞ் செய்து வேசிகளிடத்தில் மிகுந்த பிரிய முடையவனாய்ச் சூது, கள்ளுண்டல், மிருக வேட்டை முதலியவற்றை யனுசரித்து, அதனால் வறுமையை யடைந்து, பின்னர் சோமயாஜி யாகஞ் செய்யும் பொருட்டு வைத்திருந்த திரவியத்தைக் கவர்ந்து பருவத ராச்சியஞ் சென்று கஸ்தூரி சவரி முதலியவற்றை வியாபாரஞ் செய்து வந்தனன்; அவ்விதம் வியாபாரஞ் செய்து வரும்போது ஓர் நாள் ஓரிடத்திற்குப் பிரயாணமாய்ச் சென்று சூரியன் மேற்குக் கடலில் அஸ்தமித்தபடியால் வழி நடுவி லிருந்த ஒரு நாட்டின் குளக் கரையில் ஒரு மரத்தடியிற் படுத்து நித்திரை செய்தான். நடுராத்திரியில் ஒரு வேடன் வந்து அவனை வெட்டிக் கொன்று விட்டு, அவனிட மிருந்த திரவியங்களை அபகரித்துக் கொண்டு சென்றான். அதன்மேல் வெட்டுப்பட் டிறந்த அப் பிராமணன் பைசாசமாகி அம்மரத்தி னடியிலேயே தங்கித்

துன்புற்றுக் கொண்டிருந்தனன். அங்ஙன மிருக்கும்போது அவனுடைய புத்திரன் அவனைத் தேடி வர, நடுவழியில் சில மனிதர் அவனிறந்த சேதியை அப் புத்திரனுக்குக் கூறினார்கள். தந்தை இறந்ததைக் கேள்வியுற்ற அப் பிராமணச் சிறுவன் மிகவும் துக்கித்து, தன் அருமைத் தந்தைக்கு நற்கதியை யுண்டாக்க வேண்டுமென்று எண்ணினவனாய்க் காசி யாத்திரையாகப் புறப்பட்டுச் சென்றான்; அவ்வாறு செல்லும்போது அவனுடைய தந்தை யிறந்த இடமாகிய அக் குளத்தை யடைந்து, அதில் சந்தியாவந்தனஞ் செய்து, தன் தந்தை பைசாசமாய்த் தங்கி யிருக்கும் அம் மரத்தின் கீழிருந்து கீதையின் மூன்றா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்தான். அவ்வாறு செய்யவே அதன் மகிமையால் பைசாசமாக விருந்த அவனுடைய பிதாவுக்கு அப் பைசாசத் தன்மை உடனே நீங்கித் திவ்விய தேக முண்டாயிற்று; உடனே அவனைப் புண்ணிய லோகத்திற் சேர்ப்பதி னிமித்தம் தேவலோகத்தி லிருந்து தேவ விமானம் வந்தது. அவன் அதில் ஏறிக்கொண்டு புண்ணிய லோகஞ் சென்றான். அவ்வாறு அவன் விமானத்தி லெழுந்தருளப் போகும்போது தன் புத்திரனை நோக்கி, "புதல்வ! நீ பாராயணஞ் செய்த கீதையின் மகிமையால் நான் நன்மை யடைந்தேன்; என்னைப் போன்ற பாவிகளா யுள்ள நம் குலத்தார் பலர் நரகத்திற் கிடந்து வருந்துகின்றார்கள்; ஆதலின், அவர்கள் நற்கதி யடையும் பொருட்டாக இன்னும் இதனை நீ வழக்கப்படி பாராயணஞ் செய்து ஈசுவரார்ப்பணஞ் செய்து அவர்களை நற்கதி யடையச் செய்வாய்!" என்று கூறிச் சென்றனன்; அதன்பிறகு அவ் வந்தணச் சிறுவன் தன் தந்தை கூறியவாறே விஷ்ணுவாலயத்திற் சென்றிருந்து இக் கீதையின் மூன்றா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்து அதன் பலனை ஈசுவரார்ப்பணம் பண்ணினான். அவ்வாறு செய்யவே, நரகத்திற் கிடந்த அவன் குலத்தவர்கள் அதனின்றும் நீங்கிச் சுவர்க்க லோகம் போய்ச் சேர்ந்தார்கள். யமன் வந்து அந்த விஷ்ணுவாலயத்திற்கு வந்து அங்குள்ள விஷ்ணுவைத் தரிசித்துச் சென்றான்.

## 4-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

கங்கா தீரத்திலுள்ள காசி விசுவேசர் சந்நிதியில் கீதையின் நான்கா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணிக்கொண்டிருந்த வரதன் என்னும் பிராமண னொருவன் ஒரு தினம் சமீபத்தி லிருக்கும் ஒரு முக்கிய தலத்தைத் தரிசிக்குமாறு சென்று வெயிலால் தகிக்கப்

பட்டுச் சரீரங் கருகி யிளைத்து நடுவழியில் நின்ற இரண்டு இலந்தை மரங்களின் நடுவில் ஒரு மரத்தில் தலையை வைத்துக்கொண்டும், மற்றொரு மரத்தில் காலா லுதைத்துக்கொண்டும் படுத்து அப் படுக்கையிற் கிடந்தபடியே தனக்குப் பாடமா யிருந்த கீதையின் நான்காவது அத்தியாயத்தைப் பாராயணஞ் செய்துகொண்டே இளைப்பாறிப் பின்னர் அவ் விடத்தை விட்டுப் போயினன். அவன் அவ்வாறு சென்ற பிறகு ஐந்தாறு தினங்களுக்கு அப்பால் அம் மரங்க ளிரண்டும் பட்டு இரண்டு பிராமண ஸ்திரீகளாய்ப் பிறந்தன. அவ்வாறு பிறந்த அப் பெண்மணிகள் தாமாகவே வளர்ந்து அங்கோரிடத்திற் றங்கி யிருந்தார்கள். அவ்வாறு அவர்கள் தங்கி யிருந்தபோது அவர்களுக்கு ஏழாண்டு நடக்கும் காலத்தில், முன்னே அவர்கள் மரமா யிருந்தபோது கீதையின் நான்கா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணிச் சென்ற வேதியன் அவர்களிடம் வந்தான். உடனே அப் பெண்களிருவரும் அவனுக்கு உணவளித்து, அவனை நோக்கி, "சுவாமி! இலந்தை மரங்களாக விருந்த நாங்கள் உம்மாலே இவ்வாறு பெண்களாயினோம்" என்று கூறினார்கள். அவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டவுடனே அப் பிராமணன் அவர்களை நோக்கி, "பெண்களே! நீங்கள் அவ்வாறானதற்குக் காரணம் யாது?" என்று வினவ, தங்களுடைய பூர்வ விருத்தாந்தந் தெரிந்த அவர்கள், அவ் வேதியனை நோக்கி, "சுவாமி! நாங்கள் முன்னே தேவ ஸ்திரீகளா யிருந்தோம். ஒரு காலத்தில் கோதாவரி தீரத்தில் ஓரந்தணன் வெயில், மழை, பனி, காற்று முதலியவைகளை யெல்லாம் சகித்துக்கொண்டு கடினமான தவத்தைச் செய்து ஆத்ம ஞான பரனுகி ஞான விசாரணை செய்துகொண் டிருந்தான்; அவ்வா றிருக்கும்போது இந்திரன் அவனுடைய தவத்தைக் கெடுக்க முயலும்போது அவன் எங்களுடைய எண்ணத்தைத் தெரிந்து கோபங்கொண்டு, "நீங்கள் இலந்தை மரங்களாகப் போவீராக!" என்று எங்களைச் சபித்தனன்; அங்ஙனம் அவன் சபிக்கவே, நாங்கள் பயந்து அவனைத் துதித்து, "எங்கட்கு விமோசன காலம் எப்போ துண்டாகும்?" என்று கேட்க, அவன், "உங்கள் மத்தியிலே ஒரு பிராமணன் வந்து படுத்துக்கொண்டு கீதையின் நான்கா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்வான்; அதைக் கேட்டு நீங்கள் பிராமண ஸ்திரீகளாகப் பிறந்து ஞானம் பெற்று விஷ்ணுபத மடைவீர்கள்" என்று கூறினன். அவ்வாறே நீர் வந்து கீதையின் நான்கா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்தீர்; அதன் மகிமையாலே நாங்கள் இங்ஙனம் ஸ்திரீகளாயினோம்; ஆதலால், நீர் எங்களுக்கிப்போது அந்

தக் கீதையின் நான்கா மத்தியாயத்தை உபதேசித்து அனுக்கிரகம் பண்ணி நாங்கள் விஷ்ணுபதத்தை யடையுமாறு செய்யவேண்டும்" என்று கூறினார்கள். அவ்வாறே அவன் அவர்களுக்குக் கீதையின் நான்கா மத்தியாயத்தை உபதேசித்தான்; அதனை அவர்கள் பாராயணஞ் செய்து உடனே விஷ்ணு கணங்கள் விமானங் கொண்டுவர அதிலேறிச் சென்று விஷ்ணுபத மடைந்தார்கள்.

## 5-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

முன்னொரு காலத்தில் மத்திர தேசத்திற் பிறந்த பிராமணனொருவன் நித்திய கர்மாநுஷ்டானங்களை விட்டுச் சங்கீத சாஸ்திரம் பயின்று, நிர்த்தனம் வாத்தியம் முதலியவைகளில் மிகத் தேர்ச்சியடைந்திருந்தான். அவனுடைய சங்கீதத் தேர்ச்சியை யறிந்த அத்தேசத்தரசன், அவனுக்குச் சம்பளங் கொடுத்து அவனைத் தன்னுடைய சமஸ்தானத்தில் வைத்துக்கொண்டான். அவன் தாசிநேசனாகித் திரிந்தான். அவ்வா றிருக்கும்போது, அவனுடைய மனைவி அரசன்மேல் மோகங்கொண்டு அப் பிராமணனைக் கொன்றுவிட்டு அரசனோடு சேர்ந்து முடிவில் கிரந்தி ரோகத்தால் வருந்தி பிறந்தாள். பிறகு அந்தப் பிராமணனும் அப் பிராமண ஸ்திரீயும் அநேக நரகங்களை யனுபவித்து அவருள் பிராமணன் பருந்தாகவும், பிராமண ஸ்திரீ கிளியாகவும் பிறந்தார்கள். அவ்விதம் பிறந்த அப் பருந்தும் கிளியும் இவ்வுலகத்திற் சஞ்சரிக்கு நாளில் ஒரு நாள் இரண்டும் சந்தித்தன. அப்போது, பருந்தானது முன் ஜன்மத்தில் ஏற்பட்ட பகையினால் அக் கிளியை அடித்துக் கீழே வீழ்த்தியது; அதனால் அக் கிளியானது முன்னே கீதையின் ஐந்தா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணி மோக்ஷமடைந்த ஒரு வேதியனுடைய தலையோடு ஜலம் நிறைந்ததாய் அங்குக் கிடக்க அதில் வீழ்ந் திறந்தது; அப்போது ஒரு கிராதகன் அவ்விடம் வந்து அப் பருந்தைக் கொல்ல அதுவும் அத் தலையோட்டிலேயே வீழ்ந்திறந்தது. பிறகு அவ் விரண்டும் யமலோகம் செல்ல, யமன் அவைகளை நோக்கி, "உங்களுக்கு எந்தப் புண்ணிய லோகஞ் செல்ல இஷ்டமோ அங்குச் செல்லக் கடவீர்!" என்று கூறினான். அப்போது அவ் விரண்டும் யமனிடத்தில், "நாங்களோ மிகவும் பாவிகளா யிருக்கின்றோம். அவ்வா றிருந்தும் எங்களுக்கு எந்தப் புண்ணிய வசத்தினால் நற்கதி உண்டாயிற்று?" என்று வினவினன். அப்போது காலன், "முன்னே சாஸ்திரவிதிப்படி நற்கருமங்களைச் செய்து கீதையின்

ஐந்தா மத்தியாயத்தைப் பாராயணம்பண்ணி மோக்ஷமடைந்த ஒரு பிராமணனுடைய தலைமேயோட்டில் நீங்கள் வீழ்ந் திறந்தீர்கள். அதில் உங்கள் சரீரம் பட்ட விசேஷத்தினால் இப்போது உங்களுக்கு நற்பதவி உண்டாயிற்று'' என்று கூறினன். அத் தருணத்தில் பிரமலோகம், விஷ்ணுலோகம், சிவலோகம் ஆகிய மூன்றிடங்களிலுமிருந்து விமானங்கள் வந்தன; உடனே அவைகள் அவ் விமானங்களிலேறிச் சென்று கிரமமாக அவ் வுலகங்களை யடைந்து முடிவில் முக்தி பெற்றன.

## 6-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

கோதாவரி தீரத்திலுள்ள அப்பியிஷ்டிணி புரத்திலே சானசாரதி யென்னு மரசன் அநேகம் யாகங்கள் முதலிய நற்கருமங்களைச் செய்து புண்ணிய புருஷனாய் அரசு புரிந்து வந்தான்; அப்போது தேவர்கள் அவனுக்கு நற்கதியை உண்டாக்க வேண்டுமென்னுங் கருத்துடையவர்களாய்ப் பல அன்னங்களாக வடிவெடுத்து, அவ் வரசன் மேலுப்பரிகையில் நிலவின் பிரகாசத்தி லிருக்கும்போது அவனுக்கு நேரே ஆகாய மார்க்கத்திற் சென்றார்கள்; அவ்வாறு செல்லும்போது அவ் வன்னங்களில் பின் சென்ற அன்னமானது முன் சென்ற அன்னத்தை நோக்கி அரசனுக்குக் கேட்கும்படி, "இவ் வரசனுக்கு முன்னே செல்ல வேண்டாம்; அங்ஙனம் மரியாதை யின்றி நாம் இவருடைய பிரகாசத்தில் செல்வது தகாது'' என்று கூற, உடனே முன் சென்ற அன்னமானது "நாம் அவ்வாறு மரியாதை செய்வதற்கு இவ் வரசன் ரைக்கியனோ?'' என்று சொல்லி, ரைக்கிய னென்னும் மகானுடைய பெருமையை விளக்கிக் காட்டிச் சென்றது; அதன் வார்த்தையைக் கேட்டதும் அரசன், "அந்த ரைக்கியர் எவ்விதப் பெருமையுடையவரோ? அவரை நாம் அடையவேண்டும்'' என்று சிந்தித்து, உடனே தன் மந்திரியை அழைத்து அன்னங் கூறிய வார்த்தைகளைச் சொல்லி அவரை எவ்விதமேனுந் தேடி யழைத்து வருமாறு கட்டளையிட, அவ்வாறே மந்திரி புறப்பட்டு அநேக விடங்களிற் றேடி முடிவாக அவர், காஸ்மீர தேசத்தி லிருப்பதாகக் கேள்வியுற்று அவ்விடம் சென்று, அவர், மணிபுர மென்னும் பட்டணத்தில் மாணிக்க வீசுரர் சமீபத்தில் ஒரு சகடையின் நிழலிலே தங்கித் தமக்குள்ள குட்டரோகத்தின் நமைச்சலால் தேகத்தை அச் சகடத்திற் றேய்த்துக் கொண் டிருக்கக் கண்டு அவர் தன்னோடு வரத்தகாதவ ரென்றறிந்து, அவருக்கு நமஸ்காரஞ் செய்து அவரை நோக்கி, "சுவாமி! தங்

களுக்கு வேண்டியது யாது?'' என்று கேட்டான். அதற்கவர், "நித்தியானந்த அனுபவியா யிருக்கும் எனக்கு நீ என்ன கொடுக்கப் போகிறாய்? எனக்கெதுவும் 'வேண்டிய தின்று" என்றுரைக்க, மீண்டும் நமஸ்கரித்து அவரை நோக்கி, "சுவாமி! அடியேனால் ஏதாவது ஓருபகாரத்தைப் பெற்றுக்கொள்ளக் கோருகிறேன்" என்று மீண்டும் வேண்டினான். அதன்மேல் அவர், "அப்படியானால் என்னுடைய நமைச்சல் தீரும்படி என் தேகத்தைச் சொறிந்துகொண்டிருந்தற்கு ஓராளனுப்புவாயாக," என்று கூறலும், அவ்வார்த்தையை மந்திரி கேட்டுக்கொண்டு உடனே புறப்பட்டு அரசனிடம் வந்து, "அந்த ரைக்கியர் இங்கே வரமாட்டார்; அவர் தேகத்தைச் சொறிந்துகொண்டிருக்க ஓராளனுப்பும்படி தெரிவித்தார்; ஆதலால், நீர்தாம் அங்குச் சென்று அவர்க்குத் தொண்டுசெய்து அவருடைய கிருபையைப் பெற்றுக்கொள்ள வேண்டும்" என்று தெரிவித்தான். அதன் பிறகு அவ்வரசன் உடனே அந்த ரைக்கியரிடம் சென்று ஆடையாபரண முதலிய பொருள்களை அவர்க்கு முன்னே காணிக்கையாக வைத்து நமஸ்காரஞ் செய்து நின்றான். அப்போது அந்த ரைக்கியர் அரசனை நோக்கி, "மன்னா! இப்பொருள்கள் எனக்கு எதற்காக? நீ அரசனாயிருந்தும் பெரியோர்களுடைய எண்ணத்தைத் தெரிந்துகொண்டாயில்லையே; சீ! சீ! இவற்றை எடுத்துக்கொண்டு செல்வாயாக" என்று சினந்து கூறினார். அவ்வாறு கூறின, அரசன் பயந்து நடுங்கி மீண்டும் அவர்க்கு நமஸ்காரஞ்செய்து அவர் தேகத்தைச் சொறிந்துகொண்டிருந்து, "சுவாமி! எனக்கு நல்ல வழி காட்டி என்னை இரட்சிக்க வேண்டும்" என்று வேண்ட, அதன்மேல் அவர் மனமிரங்கி, அவனை நோக்கி, "அரசனே! நான் கீதையின் ஆறாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்த மகத்துவத்தினாலே நித்தியானந்த அனுபவியா யிருக்கிறேன்; ஆதலால், அதனை உனக்கும் இப்போது உபதேசிக்கின்றேன்; அதன் மூலம் நீ நற்பதவி யடைவாயாக!" என்று கூறி அதனை உபதேசித்தனர்; பிறகு அவ்வரசன், அதனைப் பாராயணஞ் செய்து அதன் மகிமையாலே மோக்ஷத்தை யடைந்தான்.

## 7-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

முன்னொரு காலத்தில் பாடலபுரமென்ற பட்டணத்திற் பிறந்த சங்குகர்ணன் என்னும் பிராமணன் பல வியாபாரங்கள் செய்து, அளவற்ற பொருள்களைச் சம்பாதித்து தன்னுடைய பிள்ளைகளுக்குத் தெரியாமல் அவற்றை ஓரிடத்திற் புதைத்து வைத்திருந்தான்;

அவ்வா றிருக்கும்போது அவன், ஒரு சமயம் நான்காம் விவாகஞ் செய்துகொள்ள உத்தேசங்கொண்டு தன் பந்துக்களோடு ஊருக்குப் பிரயாணமாகிச் சென்று, வழியில் சூரியன் மறைவு பட்டவுடன், ஒரு மரத்தின் கீழ்த்தங்கி உறங்கினான். அவ்வாறு உறங்கும்போது ஒரு பாம்பு அவனைக் கடிக்க அதன் விஷம் தலைக்கேறி அவன் உயிர் துறந்தான். அதன் பிறகு அவனோடு பின்தொடர்ந்த உறவினர் வேப்பிலைகளைப் போட்டு அவன் சரீரத்தை மூடி அவ்விடத்திலேயே கிடத்தி விட்டுச் சென்றார்கள். பின்னர் அப் பிராமணன் பாம்பாகப் பிறந்து, தன் திரவியங்களைப் புதைத்துவைத்த இடத்தில் காவல் புரிந்துகொண் டிருந்தான். அவ்வா றிருக்கும்போது ஓர் நாள் பாம்பாகிய அப்பிராமணன் தன்னுடைய நற்புத்திரன் கனவில்தோன்றி, "புத்திரா! நான் இன்ன விடத்தில் அளவற்ற திரவியங்களைப் புதைத்துவைத்து, இப்போது பாம்பாகப் பிறந்து அவற்றைக் காத்திருக்கிறேன்; திதி தினத்தன்று கீதையின் ஏழா மத்தியாயத்தைப் பாராயணஞ் செய்த பிராமணனுக்கு நீயும், உன்னைச் சார்ந்தவர்களும் அன்னங் கொடுப்பீர்களானால் அத்தகைய விசேஷத்தால் நான் இந்த ஜன்மம் நிவிர்த்தியாகப் பெற்று மோக்ஷ மடைவேன்; நீங்கள் அந்தத் திரவியங்களை எடுத்து அவற்றின் மூலமாக நல்ல தருமங்களைச் செய்து சுகம் பெறுவீர்களாக" என்று கூறித் திரவியங்களைப் புதைத்துவைத் திருந்த இடத்தையும் காட்டிச் சென்றான். அதன் பிறகு, அப் பிராமணனுடைய நற்புதல்வன் விழித்துத் தான் கண்ட கனவைத் தன் பந்துக்களிடம் சொல்லித் தன்னுடைய தந்தை கூறியபடியே கீதையின் ஏழா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணிய பிராமணனுக்கு அன்னம் கொடுக்க, பாம்பா யிருந்த அப் பிதா முத்தி யடைந்தனன். பிறகு அப் பிராமண புத்திரனும், அவனுடைய பந்துக்களும், புதைக்கப்பட் டிருந்த திரவியங்களை யெடுத்து மிக்க தான தர்மங்களைச் செய்து சுகத்தை யடைந்தார்கள்.

## 8-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

பூர்வ காலத்தில் தக்ஷிண திக்கிலிருந்த அமர்த்தன பட்டினத்தில் பிறந்த பாவசன்மன் என்னும் பிராமணன் தாசி நேசனாய் மாமிச பக்ஷணம், மதுபானம், வேட்டை முதலிய தீய செய்கைகளைச் செய்து கொண்டிருந்த பாவ முடையவனாக விருந்து முடிவாக ஒரு நாள், பானங்களை அதிகமாகப் பானம் செய்து அஜீரண முண்டாக அதனால் அவன் மரண மடைந்து யமலோகஞ் சென்றான். அங்கே

அவன் பல நரகங்களை யநுபவித்துப் பிறகு பனை மரமாகப் பிறந்து ஓரிடத்தில் நின்றான். அக் காலத்தில் கிருமிவலன் என்ற ஓர் வேதியன் குமதி யென்னும் தன் மனைவியோடு கூடி வேதமோதிச் சாஸ்திரங்களை யுணர்ந்து, நித்திய கர்மானுஷ்டானங்களில் தவறாமல் ஒரு சமயத்தில் கெட்ட தானத்தைப் பெற்றுக் கொண்டதனால் பிரம ராக்ஷஸனாய்ப் பிறந்து, அவன் மனைவியும் இராக்ஷஸியாக அவனுடன் மேற்கூறிய பனை மரத்தின் நிழலில் வீற்றிருந்தான். அவ்விதம் அந் நிழலில் பல தினங்கள் தங்கியிருக்குங் காலையில் ஒரு நாள் அவனுடைய மனைவி அவனை நோக்கி, "நாதா! நாம் ஏற்றுக்கொள்ளக் கூடாத தானத்தை ஏற்றுக்கொண்ட பாவத்தினாலன்றோ இவ்வாறு இராக்ஷஸ ஜன்மத்தை யடைந்து துக்க மநுபவிக்கின்றோம்; நமக்கு நேர்ந்திருக்கும் இந்த இடையூறு எச்சமயத்தில் எவ்வாறு நீங்கும்?" என்று வினவினாள். அதற்கவன், "பெண்மணி! நமக்கு ஆத்ம ஞான முண்டாகி அஞ்ஞானம் நிவர்த்தி யாகும்போது இத் துன்பங்கள் தானே நீங்கும்" என்று கூறினான். "ஆத்ம ஞானமாவது யாது? அஞ்ஞான நிவர்த்தியாவது யாது?" என்று கேட்டாள். இந்த வசனங்கள் கீதையின் எட்டா மத்தியாயம் முதற் சுலோகத்தின் கருத்தா யிருந்தமையால் அதன் மகிமையினால், அவள் மேற்கூறியபடி இவ் வசனங்களைக் கேட்டவுடன் அங்குப் பனைமரமாக நின்ற பிராமணன் தன்னுடைய யதார்த்த சொரூபத்தை யடையப் பெற்றான். இராக்ஷஸனா யிருந்த பிராமணனும் தன்னுடைய பிராமண சொரூபத்தைப் பெற்றான். அந்த ஸ்திரீயும் பிராமணப் பெண்ணானாள். உடனே அவர்களுக்காக வைகுண்டத்தினின்று விமானம் வந்தது. அப்போது இராக்ஷஸனா யிருந்த பிராமணனும், அவன் மனைவியும் அதிலேறிக்கொண்டு வைகுண்டத்தை யடைந்தார்கள். பனைமரமா யிருந்த பாவசன்மன் பிறகு காசிக்குச் சென்று விந்துமாதவரைப் பூசித்து, மேற்கூறிய கீதையின் எட்டா மத்தியாய சுலோகத்தைக் கூறி மஹா விஷ்ணுவினிடத்து விடாத தியான முடையவனாய்த் தபஞ் செய்துகொண்டிருந்தான். அவன் அவ்வா றிருக்கும்போது பாற்கடலில் ஞான நித்திரை செய்துகொண்டிருந்த ஸ்ரீமந் நாராயணன் விரைவில் அவனிடம் சென்று அவனுக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டு மென்கிற எண்ணத்தைக்கொண்டு நித்திரை கொள்ளா திருக்க, ஸ்ரீ லக்ஷ்மி தேவியானவள் அவரை நோக்கி, "ஸ்வாமி! நீர் ஏன் ஞான நித்திரை கொள்ளவில்லை?" என்று வினவினாள். அப்போது விஷ்ணுவானவர், பாவசன்மாவின் பக்தி விசேஷத்தையும் அவன் பொருட்டாகத் தாம் கொண்ட எண்

ணத்தையும் கூறி உடனே அந்த இலக்குமி தேவியாருடன் புறப்பட்டு வந்து பாவசன்மாவுக்குத் தரிசனந் தந்து மோக்ஷத்தைக் கொடுத்தருளினார்.

## 9-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

நர்மதா தீரத்திலிருந்த மாயிஷமந்திபுர மென்னும் நகரத்தில் மாதவன் என்னும் பெயரோடுங் கூடிய ஒரு பிராமணன் வேதோத்தமனையும், சகல சாஸ்திர சம்பன்னனையும், நல்ல நிஷ்டனையு மிருந்தான். அவ்வாறிருந்த அவன், அளவற்ற திரவியங்களைச் சம்பாதித்து, யாகஞ் செய்யுமாறு உத்தேசங்கொண்டு, அதற்கு வேண்டிய பொருள்கள் யாவும் சேகரித்து ஆட்டுக்கடா வொன்று வாங்கி, யாகசாலை தயார்செய்து செய்யத்தக்க காரியங்களை யெல்லாம் செய்து முடிவில் அவ் வாட்டுக்கடாவினை வெட்டப் போனான். அப்போது அவ் வாட்டுக்கடாவானது அந்தப் பிராமணனைப் பார்த்து, "அந்தண சிரேஷ்ட! நீ அற்பமான சுவர்க்க பலனை யடைய ஆசைவைத்து என்னைக் கொல்லுமாறு துணிந்தாய்; இச் செய்கையா லுனக்குப் பிறவித் துன்பம் நீங்கிவிடாது; மானிட ஜன்ம மடைந்தோர் ஜனன மரணமற்ற மோக்ஷத்தை யடைவதற் குரித்தாய நற்காரியங்களையே நடத்தல் வேண்டும்" என்று கூறிற்று. இந்த வார்த்தைகளைக் கேட்டதும் அப் பிராமணன் பயந்து நடுங்கி, அவ் வாட்டுக்கடாவை வெட்டாமல், அதற்குத் தண்டன் சமர்ப்பித்து, அதை நோக்கி, "மேடமே! உன் விருத்தாந்தம் யாது? உனக்கு இந்த ஞானம் எவ்வாறு உண்டாயிற்று?" என்று கேட்டான். அதற்கு அந்த ஆட்டுக் கடாவானது அவனைப் பார்த்து, "பிராமண சிரேஷ்டா! முந்திய ஜென்மத்தில் நான் பிராமணனாய்ப் பிறந்து வேத சாஸ்திரங்களில் மிகுந்த பயிற்சி யுள்ளவனாய்ச் சகல நற் கருமங்களையும் அநுசரித்துக் கொண்டிருந்தேன்; அவ்வா றிருக்கும்போது எனக்கொரு குழந்தை பிறந்தது. அதற்கு வியாதி யுண்டானமையால் என்னுடைய மனைவி, 'என் குழந்தைக்கு வியாதி நீங்கினால் உனக்கு ஆடு வெட்டிப் பலியிடுகிறேன்." என்று பத்திரகாளியிடம் பிரார்த்தனை செய்துகொண்டாள்; பிறகு அப் பிணி நீங்கிற்று; குழந்தைக்குச் சௌளக்கிய முண்டாயிற்று; என் மனைவி, 'நான் முன்னர்த் தெரிவித்தபடியே பத்திரகாளிக்கு ஆடு வெட்டிப் பலியிட வேண்டும்' என்று என்னிடம் கூறினாள். நான் அவள் வார்த்தைக் கிணங்கி ஒரு ஆட்டுக்குட்டியை வாங்கிப் பத்திரகாளி முன்பு வெட்டி அவளுக்குப் பலி

கொடுத்தேன். அப்போது அவ் வாட்டுக் குட்டியின் தாயானது மிக வும் வருந்தி, என்னைப் பார்த்து, 'வேதியனே! உன் பிள்ளையின் வியாதி நீங்கும் பொருட்டு நான் அருமையாய்ப் பெற்றுவளர்த்த என் குட்டியைக் கொலை புரிந்தனை. ஐயோ என் வயிறு எரிகின்றதே; இவ் விதம் எனக்கு வயிற்றெரிச்சலை யுண்டாக்கினமையால் நீ ஆடாகப் பிறக்கக் கடவாய்!' என்று சபித்தது. அவ்விதம் அதன் சாபத்தி னால் நான் ஆடாகப் பிறந்தேன்; ஆயினும் முந்தின ஜன்மத்தில் பிராமணனாய் நற் கருமங்கள் செய்துவந்த விசேஷத்தினால் இப்போது பூர்வ ஜன்மத்தின் ஞானத்தோ டிருக்கிறேன்; இதற்கு முன் குரங் காகவும், நாயாகவும், குதிரையாகவும் பல ஜன்மங்க ளெடுத்திருந் தேன்'' என்று கூறிற்று. இவ்விதம் கூறிய அதன் வார்த்தையைக் கேட்டவுடன் மாதவன், அவ் வாட்டுக்கடாவை நோக்கி, ''இவ்வித விசேஷ குணங்கள் பொருந்திய நீ ஜன்ம நீங்கத்தக்க உபாயத்தையு மறிந்திருப்பா யன்றோ? ஆகலின், அதனை எனக்குக் கூறுவாயாக!'' என்றுரைத்தனன். அப்போது ஆட்டுக் கடாவானது வேதியனை நோக்கி, ''அந்தண சிரேஷ்ட! உன் இஷ்டப்படியே இதனை ஒரு சரித் திர மூலமாக அந்த உபாயத்தை உனக்குக் கூறுகின்றேன் கேட்பீ ராக!:—

சூரிய சந்திரவர்ணன் என்கிற ராஜன் குரு க்ஷேத்திரத்திலே சூரிய கிரகண காலத்தில் கால புருஷத் தானஞ்செய்ய உத்தேசித்துப் புரோகிதன் சொற்படி அதற்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் சேகரஞ் செய்து, கால புருஷனையும் புதிதாகச் செய்துகொண்டு, தான மேற்றுக் கொள்வதற்கு மிகுந்த பொருள்களைக் கொடுத்து போக்கியனான ஒரு பிராமணனையும் அழைத்து அங்கே வைத்துவிட் டுத் தான் ஸ்நானத்திற்குச் சென்றான்; அப்போது அங்கிருந்த புரோகிதனும் அவனோடு கூடவே சென்றான். அவ்விதம் இருவருஞ் சென்றதும் தானம் வாங்க வந்த பிராமணன் தனித்திருக்கும் சமயத் தில் அங்கிருந்த கால புருஷன் அவனைப் பார்த்து, 'ஏ! பிராமணா! சிறந்த க்ஷேத்திரத்தில் நல்ல புண்ணிய காலத்தில் வாங்கத்தகாத தானத்தை வாங்க வந்திருக்கின்றாயே; இந்தத் தானத்தை வாங்கினால் நீ பிழைப்பாயா?'' என்று கேட்க, அவன் அக் கால புருஷனைப் பார்த்து, என்னுடைய வல்லமையை நீ அறிய மாட்டாய்; உன் னுடைய வார்த்தைக்கு யான் பயப்படுகிறவ னல்லன்; நான் என் னுடைய விருப்பத்தின்படியே இத்தானத்தைப் பெற்றுக்கொள்ளாம

விப்பேன்; நீ இக் காரியத்தில் பிரவேசிக்க வேண்டாம்' என்று கூறி அக் கால புருஷனுடைய வார்த்தையை மறுத்து விட்டான். அதன் மேல் ஸ்நானத்திற்குச் சென்ற அரசனும் புரோகிதனும் வந்து சேர்ந்தார்கள். அப்படி வந்தவுடன் மேற் கூறியபடி அரசன் தானத்தைக் கொடுக்க அந்தப் பிராமணன் வாங்கினான். அப்படி வாங்கின மாத்திரத்தில், கால புருஷனுடைய வயிற்றிலிருந்து கரத்திற் சக்தியுடையவனாகிய ஒரு நீச புருஷனும், நீச ஸ்திரீயும் வெளிப்பட்டுக் கோர ரூபமாய்த் தானம் வாங்கின பிராமணனைக் கொல்ல வந்தார்கள். அவர்கள் அவ்விதம் வருவதைக் கண்டவுடனே அந்தப் பிராமணன் ஒரே மனதுடன் கீதையின் ஒன்பதாம் அத்தியாயத்தைப் பாராயணம் பண்ணினான். அவ்வாறு பண்ணவே, கால புருஷனிடத்திலிருந்து தோன்றிவந்த அந் நீச புருஷனும் நீசப் பெண்ணும் கீதையின் மகிமைக்குப் பயந்து கண்ணுக்குத் தெரியாமலோடிப் போனார்கள். இவ் விசேஷத்தைக் கண்டவுடன் அரசன் பிராமணனைப் பார்த்து, 'அந்தண சிரேஷ்டரே! இப்போ திங்கே வந்தவர்யாவர்? இவர்கள் உடனே ஓடி விட்டதற்குக் காரணம் என்ன? என்று' கேட்கப் பிராமணன் அரசனை நோக்கி, 'இறைவ! இங்கே வந்த நீச ஸ்திரீ, நீச புருஷன் ஆகிய இருவருள் நீச புருஷன், நான் கால புருஷ தானம் வாங்கியதனாலேற் பட்ட பாவம்; நீச ஸ்திரீ, நான் முந்திய ஜன்மத்தில் வித்தையின் கர்வத்தாலே பெரியவர்களை நிந்தை செய்ததாலேற்பட்ட பாவம்; இவ் விரண்டு பாவங்களும் என்னைக் கொலை புரியும் பொருட்டு நீசன் வடிவமாகவும், நீச ஸ்திரீ வடிவமாகவும் வந்தன; ஆயினும், அப் பாவ ரூபமான அவ் விருவரும் கீதையின் ஒன்பதா மத்தியாயத்தை நான் பாராயணஞ் செய்த மகத்துவ விசேஷத்தினாலே அவர்கள் என்னெதிரில் நில்லாமற் பயந்தோடிப் போனார்கள்' என்று கூற, அவ் வரசன் 'அவ்வாறு மகிமை யுடையதா யிருக்கும் அதனை எனக்கும் உபதேசம் செய்தருளுவீராக!' என்றனன். அவ்வாறே பிராமணன் அவ் வரசனுக்கு கீதையின் ஒன்பதா மத்தியாயத்தை உபதேசித்தனன்; அதனைப் பாராயணம் பண்ணி அரசன் மோக்ஷ மடைந்தான். ஆதலால், நீயும் அதனைப் பாராயணம் செய்வாயானால் மோக்ஷ மடைவது திண்ண மென்று கூறிற்று. அவ்வாறே அந்த மாதவனென்னும் பிராமணன் கீதையின் ஒன்பதா மத்தியாயத்தைப் பாராயணஞ்செய்து மோக்ஷ மடைந்தனன்; அந்த ஆட்டுக்கடாவும் அதனைப் பாராயணஞ் செய்து மோக்ஷத்தை அடைந்தது.

## 10-வது அத்தியாயத்தில் மஹாத்மிய கதை.

இறந்தவர்கள் முக்தி யடைவதற் குரிய காசியம் பதியிலே முன்னொரு காலத்தில், பிராமண குலத்திற் பிறந்த தீரதி என்பவன், வேத சாஸ்திரங்களில் மிகவும் தேர்ச்சி யுடையவனும், தருமகுண முடையவனும், ஆத்மஞான முள்ளவனும், ஆத்ம பாவனையினாலே உள் நோக்குடையவனும், வெளி நோக்கங்களினின்று நீங்கிச் சீவன் முக்தி தசையை யடைந்திருந்தான். அவ்வாறிருந்த அவனுக்குக் காசியிலுள்ள விசுவேசர் எப்போதும் கைலாகு கொடுத்து உபகாரஞ் செய்து கொண்டிருந்தார். அங்ஙன மிருக்கும்போது ஒரு நாள் அவ்வேதியன் விசுவலிங்கத்தின்மேற் காலை நீட்டி, வாயிற்படியிற் றலையை வைத்துக் கொண்டு படுத்திருந்தான். அவ்வாறு அவன் படுத்திருப்பதைப் பிருங்கி மகாரிஷி பார்த்து, பரமேசுவரனை நோக்கி, "நீர் இவனுக்குச் சிஸ்ருஷை செய்வதற்குக் காரணம் யாது?" என்று கேட்டார். பரமேசுவரன் அவரை நோக்கி, "ரிஷியே! யான் இவனுக்குச் சிஸ்ருஷை செய்வதற் கேற்பட்ட காரணத்தைக் கூறுகிறேன், கேட்பீராக: இவன் முன்னே பிராமண குலத்தில் சுதவன் என்னும் பெயருடன் பிறந்து பிரமசரிய விரதத்தை அனுஷ்டித்திருந்தான்; அப்படி யிருக்கும்போது இவனுடைய குரு ஒருநாள் வாயிலிலே படுத்திருந்தது தெரியாமல் இவன் இருட்டில் நடக்க, இவனுடைய காலானது அக் குருவின்மேற் பட்டது; அதனால் அவர் கோபித்து, 'நீ என்னை மிதித்தபடியினாலே அன்னமாகப் போகக் கடவாய்!' என்று இவனைச் சபித்தார்; பிறகு இவன் அச் சாபத்தின்படியே அன்ன ஜன்மத்தை யடையுங் காலத்தில் முன்னே பிரமசரிய விரதந் தப்பாமல் நடந்த விசேஷத்தினாலே பிரம லோகத்தில் மானச சரசிலேயுள்ள அம்சங்களுக்குத் தலைமை அன்னமாய்ப் பிறந்தான். அவ்வாறு பிறந்த அன்னமானது ஓர் நாள் நம்முடைய கைலாயத் தாழ்வரையிலுள்ள சிங்காரமாகிய புன்னாக வனத்தில் நான் வேடிக்கை பார்த்திருக்குஞ் சமயத்தில் கரிய நிறத்தோடு வந்து என்னை ஸ்தோத்திரம் பண்ணிற்று; அப்போது அதைப் பார்த்து, 'நீர் யார்? உன்னுடைய சரீரம் கறுத்திருத்தற்குக் காரணம் யாது?' என்று கேட்டேன்; அதற்கு அந்த அன்னமானது, 'நான் முன் பிராமணனாயிருந்து குரு சாபத்தால் அன்னமாகப் பிறந்து பிரம லோகத்திலுள்ள மானச சரசில் அன்னங்களுக்குத் தலைமையா யிருக்கின்றேன்; இன்று நான் அத் தடாகத்திலுள்ள தாமரைக் கிழங்கைப்

புசித்து, ஆகாய மார்க்கமாகப் பறந்து காசியிலுள்ள ஒரு சரசுக்கு நேராக வரும்போது பறக்கும் சக்தியற்றுக் கீழே விழுந்தேன்; அங்ஙனம் விழவே, என் சரீரமும் கறுத்துப் போயிற்று. அவ்வாறான வுடனே நான் ஆச்சரிய மடைந்து, 'யாது காரணத்தால் நமக்கு இவ்விதம் நேர்ந்தது?' என்று சிந்தித்தேன்; அவ்விதம் யோசிக்கும் போது, 'உனக்கு இக்கதி நேர்ந்ததற்குக் காரணத்தை நான் கூறுகிறேன்' என்று ஒரு சப்த முண்டாயிற்று; அதைக் கேட்டவுடனே நான், 'இவ்விதம் கூறினவர் யாவர்?' என்று பக்கங்களிற் பார்வையிட்டேன்; அப்போது அங்குள்ள தடாகத்தில் துருவாசர் சாபத்தால் ஐந்து தாமரைப் புஷ்பங்களாயிருந்த பத்மினி யென்னும் பெண்ணைப் பார்த்தேன்; பிறகு ஆகாயத்தைப் பார்த்தேன்; அப்போது அங்கே விஷ்ணுபத மடைந்த அறுபதினாயிரம் பேர் என் கண்களுக்குத் தோற்றினார்கள். அவர்களைப் பார்த்ததும், நான், 'இவர்கள் யாராயிருக்கக் கூடும்' என்று ஆலோசித்துக் கொண்டிருந்தேன்; அதன் பிறகு, மேற்கூறிய தாமரைப் புஷ்பங்களின் வடிவமாகத் தோன்றிய பத்மினியிட மிருந்தே நாம் கேட்ட வார்த்தை யுண்டாகி யிருத்தல் வேண்டும்; ஆதலால், இவளிடம் மேற்கூறிய அதிசயங்களை வினவித் தெரிந்து கொள்ள வேண்டும்' என்று நினைத்து, அந்தப் பத்மினியை வணங்கி, அவளிடத்தில, "நான் இங்குச் சேர்ந்தவுடனே எனக்கு இவ்விதமான கதி நேர்ந்ததற்குக் காரணம் யாதோ? ஆகாயத்தில் தோன்றுகின்ற இந்த அறுபதினாயிரம் பேரும் யாவர்?' என்று வினவினேன். அங்ஙனம் கேட்கவே, அந்தப் பத்மினியானவள், 'மேலே தோன்றின அறுபதினாயிரம் பேர்களும் ஏழு ஜன்மங்களுக்கு முன்னே ஒரு ரிஷி புத்திரரா யிருந்தவர்கள்; இவர்கள் அக்காலத்தில் நித்திய கர்மாநுஷ்டானங்களுடனே தவம் செய்து கொண்டிருந்தார்கள். அவ்விதம் இவர்கள் தவம் செய்து கொண்டிருந்த இடத்தில் அங்கே ஒரு பெண் வந்தாள். அவளைக் கண்டதும் இவர்களுள் ஒவ்வொருவரும் அப் பெண்ணை மணம் புரிந்து கொள்ளுமாறு இச்சை கொண்டு, அதனால் சண்டையிட்டுக்கொண்டு, முடிவில் யாவரு மிறந்தார்கள்; அதன் பிறகு இவர்கள் பல ஜன்மங்க ளெடுத்து அந்தத்தில் செந்நாய்களாகப் பிறந்து இங்கே வந்து தாமரைப் புஷ்பங்களாயிருக்கும் என்னுடைய வாசனையைக் கிரகித்தபடியால், இப்போது அச்சன்மம் நீங்கி விஷ்ணுபத மடைந்தார்கள்; நீ என்னை வணங்காமற் போனபடியினாலே உனக்குப் பறக்கும் சக்தி நீங்கிச் சரீரம் கறுத்து விட்டது; இனி என்னை இன்

னவ ளென்றறிய விரும்புவா யாதலின், என்னுடைய விருத்தாந்தத்தையும் கூறுகிறேன் கேட்பாயாக! நான் இதற்கு மூன்றாம் ஜன்மத்தில் கமலமுகி என்னும் பிராமண ஸ்திரீயாய்ப் பிறந்து மகா பதிவிரதையா யிருந்தேன்; அப்போது நான் ஒரு நாகணவாய்ப்புள்ளை வளர்த்தேன்; அவ்வாறு வளர்த்தலைக் கண்ட என்னுடைய நாயகன் என்னை நோக்கி, 'நீ நாகணவாய்ப்புள்ளைக் கூண்டிலடைத்து வளர்க்கின்றபடியால் நாகணவாய்ப்புள்ளாகவே பிறப்பாயாக!'' என்று சபித்தனர். அவ்வாறே நான் நாகணவாய்ப்புள்ளாகவே பிறக்க ஒரு முனி குமாரத்தி என்னை வளர்த்தாள்; அவ்விதம் என்னை வளர்த்த அவ்விடத்தி லுள்ளவர்கள் கீதையின் பத்தாவது அத்தியாயத்தைப் பாராயணம் செய்து வந்தார்கள். அப்போது நான் அதைக் கேட்டுக்கொண் டிருந்தேன். அவ்விதம் அதைக் கேட்ட மகத்துவத்தினாலே நான் அந்த ஜன்மத்தை விட்டு மறு ஜன்மத்தில் தேவலோகத்திலே பாமாவதி என்னும் தேவமாதாகத் தோன்றி, இலக்குமிக்குத் தோழியாகி, விமானத்திலேறி இஷ்டமான இடங்களிலெல்லாம் சஞ்சரித்துக் கொண்டு திரிந்தேன். அவ்வாறு சஞ்சரிக்கும்போது ஒருநாள் பூலோகத்திற்கு வந்து தடாகத்தில் வஸ்திரமில்லாமல் ஜலக்கிரீடை செய்துகொண் டிருக்கும் போது அத் தருணத்தில் துருவாசரிஷி வந்தார். அவரைக் கண்டவுடனே நான் பயந்து தலை, கைகள், கால்கள் ஆகிய ஐந்து அவயவங்களையும் இந்த ஐந்து தாமரைப் புட்பங்களாகச் செய்துகொண்டு இவற்றின் ரூபமாக விளங்கினேன். நான் அவ்வாறு செய்த செய்கையைத் துருவாச முனிவர் பார்த்து உடனே என்மீது கோபங்கொண்டு, 'நீ இந்தப் புட்பங்களின் வடிவமாகவே நூறு வருடங்கள் வரை இருப்பாயாக!' என்று சாபமிட்டார். அதுமுதல் நான் இம் மலர்களின் வடிவமாகவே யிருக்கின்றேன். அப்படி யிருந்தும் முன்னே நாகணவாய்ப்புள்ளா யிருக்கும்போது கீதையின் பத்தா மத்தியாயத்தைக் கேட்டுக்கொண்டிருந்த மகிமையினாலே பூர்வ ஞானத்தோடு பேசும் சக்தியைப் பெற்றிருக்கின்றேன்; எனக்கிப்போது சாபவிமோசன காலம் நெருங்கியது. ஆகையால் கீதையின் பத்தாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்து நான் நற்கதிக்குச் செல்கின்றேன். நீ அதனைக் கேட்டு இந்த ஐந்து மலர்களையும் பரித்துக் கொண்டுபோய் பரமேஸ்வரனுக்குச் சூட்டுவாயானால் உனக்கும் சாப விமோசன முண்டாகும்'' என்று சொல்லிக் கீதையின் பத்தாமத்தியாயத்தைப் பாராயணஞ் செய்தாள். உடனே அவளுக்குச் சாப நிவர்த்தியாயிற்று. அதன்மேல் நான் உமக்

குச் சூட்டும்பொருட்டு அந்தப் புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு இங்கு வந்தேன். இவற்றை நீர் ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று சொல்லி, அம் மலர்களை எனக்குச் சூட்டிற்று. அவ்வாறு சூட்டவே கீதையின் பத்தாவது அத்தியாயத்தைக் கேட்ட மகத்துவததினாலே அந்த அன்னத்திற்குக் கறுப்பு நிறம் நீங்கியதோடு அந்த ஜன்மமும் நாசமாக, அது இக் காசியில் இந்தப் பிராமணனாக ஜனித்தது. அவ்வாறு ஜனித்த இந்தத் தீரதி என்னும் பிராமணன் குழந்தைப் பருவத்திலேயே கீதையின் பத்தா மத்தியாயம் படித்து அர்த்த விசாரம் பண்ணிப், பின் விஷ்ணுவின் சகுண பாவனையைச் செய்து, அப் பாவனையும் போய்ச் சர்வான்ம பாவனையை யடைந்து, வெளி நோக்கங்களை நீக்கி ஜீவன் முக்தித்தசையை யடைந்தனன். இவனிடத்தில் இத்தகைய மகிமை பொருந்தி யிருப்பதனாலேயே நான் இவ்வாறு இவனுக்குச் சிஸ்ருஷை பண்ணி வருகிறேன்" என்று கூறினார். அதன்மேல் அந்தத் தீரதி யென்னும் வேதியன் முக்தியை யடைந்தான்.

## 11-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

பிரணிதா மென்கிற நதி தீரத்தில், மேகலாதீர மென்னும் தீரத்தை யுடையதும், நரசிம்மன் என்னும் விஷ்ணு எழுந்தருளப் பெற்ற ஆலயத்தை யுடையதுமாகி விளங்கிய மேதிங்கிரம் என்னும் அழகிய பட்டினத்திலே பூர்வத்தில் சுனந்தன் என்னும் பெயரினை யுடைய ஒரு பிராமணன் சகல சாஸ்திர சம்பன்னனாயும், நிஷ்டை யுடையவனாயும், கீதையில் பதினோரா மத்தியாயத்தைப் பாராயணம் செய்து நிஷ்காம முடையவனாய் அதனாலே ஆத்ம ஞானம் உதிக்கப் பெற்றவனாயு மிருந்தான். அவ்வாறிருக்குங் காலத்தில் கோதாவரிக்குப் புறப்பட்டுப் போய் முதல் நாளில் கோதாவரியி னுற்பத்தி ஸ்தான மாகிய திரியம்பக ஸ்தலத்தில் தங்கி ஸ்நானம் பண்ணித் தர்ப்பணம், சிரார்த்த முதலியவைகளைச் செய்து, அந்தத் தீர்த்த தீரத்திலேயுள்ள சிவஸ்தலம் விஷ்ணுஸ்தலம் ஆகியவைகளைத் தரிசித்து, ஆங்காங்கே பூஜை ஸ்தோத்திரம் முதலியவைகளைக் கிரமமாகச் செய்துகொண்டு இயன்றவளவு தானங்களும் வழங்கிப் பிறகு விவாக மணம்புரி யென்னும் பட்டின மார்க்கமாகச் சென்றான். அவ்விதம் அவன் அந்த நகரத்தை யடைந்ததும் சூரியன் அஸ்தமிக்க இரவு வந்தது; அப்போது அவ் வேதியன் அந் நகரத்தில் தங்குமாறு கருதி அங்குள்ளவர்களிடத்தில் சயனிக்க இடங் கேட்க, ஒருவரு மிடம் கொடாமையால் பற்பல இடங்களிற் சென்றலைந்து, முடிவாக ஒரு தலையாரியிடம் போய்

இடங் கேட்டான். அத் தலையாரி அவனைக் கூட்டிக்கொண்டு சென்று ஓரிடத்தைச் சுட்டி, 'இங்கே படுத்துக் கொள்ளும்!' என்று கூறிச் சென்றான். அவ்வாறே வேதியன் அங்குப் படுத்திருந்து விடிந்தபின் சௌக்கியமாக எழுந்து வெளியிற் புறப்பட்டான். அவ்வாறு புறப்பட்டு வரும்போது தலையாரி அவனைக் கண்டு வணங்கி, "சுவாமி! இவ்விடத்திற் படுப்போர் எவரும் பிழைப்பதில்லை. அவ்வாறிருந்தும் நீர் பிழைத்தபடியால் உம்மிடத்தில் ஏதோ மகத்துவ மிருப்பதாகத் தெரிய வருகிறது; ஆகையால், நீர் என் வீட்டிலேயே சில தினங்கள் தங்கி யிருந்து செல்லவேண்டும்' என்று வேண்டிக் கொண்டான். வேதியன் அவ்வாறே தலையாரி வார்த்தைக் கிணங்கி அங்குத் தங்கி யிருந்தான். தலையாரியும் அப் பிராமணனுக்குச் சகல உபசாரங்களையும் செய்துகொண் டிருந்தான். அவ்வா றிருக்கும்போது ஏழு தினங்கள் சென்ற பிறகு எட்டாம்நாள் காலையில் தலையாரி அந்தப் பிராமணனிடம் வந்து, "சுவாமி! இராத்திரி என் புத்திரனை இராக்ஷஸன் தின்றுவிட்டான்" என்று சொல்லி யழுதான். அப்போது வேதியன், "அந்த இராக்ஷஸன் யார்? அவன் உன் மகனை எதன் பொருட்டுத் தின்றான்?" என்று வினவ, அதற்குத் தலையாரி, "சுவாமி! அந்த இராக்ஷஸன் இங்கே யுள்ளவன்; அவன் முன்னர் இவ்வூரிலுள்ள மனிதர்களைத் தினந்தோறும் கணக்கில்லாமல் வதைத்துக் கொன்று தின்று வந்தான். அக்காலத்தில் இவ் வூராரும் யானும் சேர்ந்து அவ் விராக்ஷஸனிடம், 'நீ இவ்வாறு இங்குள்ள மனிதர்களைக் கொல்லவேண்டாம். இங்கு வரும் வழிப்போக்கர்களை உனக்குத் தினந்தோறும் இரையாக்குகிறோம். நீ அவர்களைத் தின்றுகொண்டு சுகமாக வாழ்ந்திருப்பாய்!' என்று கூறினோம். அவன் அவ்விதமே எங்களுடைய வார்த்தைக் கிணங்கினான்; அதன்மேல் நாங்கள் இருவரும் இங்கு வரும் வழிப்போக்கர்களைத் தந்திரமாக அன்று நீர் படுத்திருந்த விடத்திற் படுக்கும்படிச் செய்து, அவனுக் கிரையாக்கிக்கொண்டு வந்தோம்; அவன் அங்குப் படுப்பவர்களைத் தினந்தோறும் இரவில் கொன்று தின்று வந்தான். அந்த வழக்கப்படிதான் அன்று உம்மையும் அவ்விடத்தில் நான் படுக்கச் செய்தேன். ஆனால், உம்முடைய மகிமையினால் அவன் உம்மைக் கொல்லவில்லை. அவ் விசேஷத்தை யறிந்துதான் நான் உம்மை இங்கே யிருக்குமாறு வேண்டினேன். இது நிற்க, நேற்றிரவு இங்கே சில வழிப்போக்கர்கள் வந்தார்கள். எங்கள் வழக்கப்படியே அவர்களை அவ்விடத்திற்கு அழைத்துப்போய் படுக்கச் செய்து வரும்படி என் புத்திரனுக்குக்

கட்டளை யிட்டேன்; அவன் அவ்வாறே அவர்களை அழைத்துக் கொண்டு அங்குப் படுக்கச் செய்ததோடு இந்த இரகசியத்தைத் தான் அறியாதவனானபடியால் அவனும் அவர்களுடன் படுத்துக்கொண் டான். அப்போது இராக்ஷஸன் வந்து வழிப்போக்கர்களைத் தின்ற துடன் என் மகனையும் சேர்த்துத் தின்று விட்டான். விடிந்தவுடன் இச் செய்தியை யறிந்த நான் இராக்ஷஸனிடம் சென்று, ‘என் புத்திர னையும் ஏன் தின்றாய்?’ என்று கேட்டேன். அதற்கவன், ‘உன் புத் திரன் அங்குப் படுத்திருந்த விவரம் எனக்குத் தெரியாது; அவனை யும் வழிப்போக்கனென்றே கருதித் தின்றுவிட்டேன்’ என்று கூறி னன். அதன்மேல் நான், ‘நீ என் புத்திரனைமட்டும் உயிரோடு வரும் படி செய்து என்னிடம் கொடுத்துவிடு!’ என்றுரைக்க, அவன், ‘நீ புத் திரனைப் பெறவா விரும்புகின்றனை? அவனோடு கூட உண்ட மற்றவர்க ளும் வந்தால்தான் அவனும் வருவான். அவ்விதம் வரும்படி செய்வ தற்கு ஒரு உபாய மிருக்கின்றது. அதன்படி செய்வாயானல் உன் புத்திரன் பிழைத்து வருவான்; அதனைக் கூறுகின்றேன் கேட்பா யாக!’:—

“ஒரு காலத்தில் பருந்தொன்று, கீதையின் 11-வது அத்தியா யத்தைப் பாராயணஞ் செய்த ஒருவனுடைய ஒரெலும்பைத் தூக்கிக் கொண்டு ஆகாய மார்க்கமாகப் பறந்து போகும்போது அவ்வெலும்பா னது தவறி ஒரு எருக்குட்டையில் விழுந்தது; இங்ஙனம் விழுந்தபின் ஒரு ஞானவானாகிய பிராமணன் வந்து அக்குட்டையில் ஸ்நானம், தில தர்ப்பணம், பிண்டக்கிரியை முதலியவைகளை விதிப்படி செய்தான்; அவன் அவ்வாறு செய்வதை அங்குள்ளார் பார்த்து அப் பிராமணன் மீது அருவருப்புக்கொண்டு, ‘இது தீர்த்தமன்று; இதில் ஸ்நானம் முத லியன செய்தல் தகாது’ என்று கூறினர்கள்; அப்போது அவ் வேதி யன் அவர்களை நோக்கி, ‘கீதையின் 11-ம் அத்தியாயம் படித்தவ னுடைய எலும்பு இதில் விழுந்திருக்கின்றது; ஆதலால், இது மிகவும் புண்ணிய தீர்த்தமாம்’ என்றுகூற, எல்லோரும் அதில் மூழ்கி மோக்ஷ மடைந்தார்கள்; அதனல் நான் கீதையின் மகிமையைத் தெரிந்து கொண் டிருக்கின்றேன்; ஆதலால், கீதையின் பதினோரா மத்தியாயம் படித்த ஒருவரை அழைத்துவந்து எனக்கு முன்னே அதனைப் பாரா யணம் பண்ணுவித்து, அவர் கையால் என்மேல் ஜலத்தைத் தெளிக் கும்படி செய்வாய்! அவ்விதஞ் செய்தால் நான் இராக்ஷஸனா யிருப்ப தற்குக் காரணமான என்னுடைய சாபம் நிவிர்த்தியாவதோடு மேற்

கூறியபடி என்னால் உண்ணப்பட்டவர்களும் உன் மகனும் வருவார்கள்; நான் சொல்லியபடி செய்வதற்கு உன் வீட்டில் தங்கி யிருக்கும் வேதியரே தகுந்தவர். அவர், கீதையின் பதினோரா மத்தியாயம் படித்திருக்கின்றார்; அதனிமித்தமே அன்று அவரைக் கொல்லாமல் விட்டேன்: நீ அவரை யழைத்துவா!'' என்று கூறினான்; ''அதன்மேல் உம்மிடம் வந்திருக்கின்றேன்; நீர் தயவுசெய்து அங்கு வரவேண்டும்'' என்று கூறினான். அவ் வேதியர் அத் தலையாரியை நோக்கி, ''அவனுக்கு என்ன சாபத்தால் இராக்ஷஸ ஜன்ம முண்டாயிற்று?'' என்று வினவ, அத் தலையாரி பின் வருமாறு கூறுவானாயினான்:—

''சுவாமி! இராக்ஷஸனா யிருக்கு மிவன் பூர்வத்தில் இவ்வூரில் பயிரிடும் பிராமணனா யிருந்தான்; அவ்வா றிருக்கும்போது இவன் ஒரு தினம் பயிர்காக்கு நிமித்தம் வயலுக்குச் சென்றான்; அத் தருணத்தில் வழியிலே நடக்கும் பலமில்லாமல் கிடந்த ஒரு பிராமணனை ஒரு கழுகு தன் கூர்மையாகிய வாயினாற் பிடுங்கித் தின்றது; அவ்வாறு கழுகு அப் பிராமணனுக்கு உபத்திரவஞ் செய்வதை இவன் பார்த்து அதனை விலக்குவதற்குத் தன்னிடம் வலிமை யிருந்தும் அதைப்பற்றி யாதொரு பிரயத்தனமுஞ் செய்யாமற் போனான். இவன் அவ்வாறு சிறிதும் இரக்கமின்றிச் செல்வதை அவ் வழியிற் சென்றுகொண்டிருந்த ஒரு ரிஷி, அப் பிராமணன் கழுகாற் படுந் துன்பத்தைப் பார்த்து, மனமிரங்கி, இவனை யழைத்து, 'அடா! அந்தக் கழுகைத் துரத்து! துரத்து!!' என்று சொல்ல, இவன் அவருடைய வார்த்தைகளைக் கவனியாமல்; 'பயிரைக் காக்கவேண்டும்' என்னும் விருப்பத்தால் விரைந்து சென்றான். அச் சமயத்தில் அக் கழுகு அப் பிராமணனைக் கொன்றுவிட்டது; அச் செய்கையைக் கண்ட அம் முனிவர் வயிறெரிந்து இவனைப் பார்த்து, 'அடா பாவி! நீ இவ்வாறு பிராமணவதையைப் பார்த்துக்கொண்டு சென்றபடியினாலே இராக்ஷஸனாகக் கடவாய்!' என்று சபித்தார். அப்போது அவன் பயந்து, அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, 'சுவாமி! அடியேன் அறியாமையால் இக் குற்றத்தைச் செய்துவிட்டேன்; ஆகையால், மன்னித்தருள வேண்டும்! எனக்கு இச் சாப விமோசனம் எப்போது துண்டாகும்? அதன் விவரத்தையும் எனக்குத் தெரிவித்தருள வேண்டும்' என்றிரங்கினான். அச் சமயத்தில் அவர் இவனை நோக்கி, 'கீதையின் பதினோரா மத்தியாயம் படித்தவன் என்றைக்கு வந்து உன் முன்னர் அதனைப் பாராயணஞ்செய்து உன்மீது ஜலத்தைப் புரோக்ஷிப்பானோ

அன்றைக்கு உன் சாபம் விமோசனமாகும்' என்று கூறிச் சென்றார். அதன் பின்னர் தான் இவன் இவ்வாறு இராக்ஷஸனாகித் திரியத் தலைப்பட்டான் இன்று உம்மால் இவனுக்குச் சாப விமோசன மாகும் காலம் சமீபித்து விட்டது" என்று கூறினன்.

தலையாரி இவ்வாறு கூறவே மேற் கூறிய சுனந்தனென்னும் வேதியன் உடனே சென்று அந்த இராக்ஷஸனுக்கு முன்னிருந்து கீதையின் பதினோரா மத்தியாயத்தை அவன் கேட்குமாறு பாராயணம் பண்ணி அவன் முகத்திலே ஜலத்தைத் தெளித்தான். அவ்வாறு தெளித்தவுடனே அவ் விராக்ஷஸன் சாப விமோசனமாய்ப் புண்ணிய தேகத்தோடு விளங்கினன். அவனால் தினந்தோறும் உண்ணப் பட்டவர்களும் அங்கு புண்ணிய தேகத்தோடு விளங்கினார்கள். தலையாரி மகனும் அவர்களோடு சேர்ந்து புண்ணிய தேகத்துடன் விளங்கினன். அப்போது தலையாரி இராக்ஷஸனா யிருந்தவனிடம், "என் மகன் எங்கே யுளன்? அவனைக் காட்டு!" என்றுரைக்க, உடனே அவன், தலையாரி மகனை அத் தலையாரிக்குச் சுட்டிக்காட்டி. 'இவன்தான்' என்று கூறினன். அப்போது தலையாரி தன் மகனை நோக்கி, "வீட்டுக்கு வரக்கடவாய்!" என்றழைத்தான். உடனே அவன் தலையாரியை நோக்கி, "உன்னைப்போல எனக்கு எத்தனையோ தகப்பன்மார் ஏற்பட்டிருக்கின்றார்கள், நம்முடைய பந்துத்துவ மெல்லாம் மானிட தேக முள்ளவரையில்தான்; பிறகு நாம் ஒருவர்க்கொருவர் சுற்ற மாகமாட்டோம். ஆதலால், உனக்கும் எனக்கும் எவ்வித சம்பந்தமு மில்லை. நீ இப் பாசபந்தத்தை விட்டு ஒரே மனதுடன் பகவானை நாடி மோக்ஷத்தை யடைதற்குரிய வழியைத்தேடு!" என்று கூறி ஞானோபதேசஞ் செய்தான். அதன்மேல் இராக்ஷஸனா யிருந்த வேதியன் விஷ்ணுபத மடைந்தான். அவனால் உண்ணப்பட் டிருந்தவர்களும், தலையாரியின் மகனும் தங்களுக்கு விமானங்கள் வர அவற்றிலேறிச் சென்று விஷ்ணு சாரூபமானார்கள். தலையாரியும் தன் மகன் செய்த ஞானோப தேசத்தினால் மோக்ஷ மடைந்தான். பிறகு சுநந்தனும் நித்தியாநந்த பதவியை யடைந்தான்.

## 12-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

முற் காலத்தில் தக்ஷண தேசத்திலே மிக்க அழகோடுங் கூடிய கோவலபுரி யென்னும் ஒரு பட்டின மிருந்தது. அதில் மிகவும் பிரசித்தமுள்ள இலக்குமி யாலயமொன் றிருந்தது. அக்கோயிலில் ஒரு தினம் முப்பத்திரண்டு இலக்ஷணங்களும் பொருந்திய ஓர் இராஜகுமா

ரன் வந்து அங்கெழுந்தருளி யிருந்த இலக்குமி தேவியைப் பலவித மாகத் துதி பண்ணினன். அப்போது இலக்குமி பிரசன்னமாகி, அவனை நோக்கி, "உனக்கு என்ன லாகவேண்டிய தென்ன? என்று கேட்க, அவன் கைகூப்பிக்கொண்டு இலக்குமியை நோக்கி, "தாயே! என்னுடைய தந்தை அசுவமேத யாகம் பண்ணப் பிரயத்தனஞ் செய்து அது நிறைவேறு முன்பே இறந்து போய்விட்டார். பிறகு யான் அவருடைய தேகத்தைக் கெடாதபடி எண்ணெயிலே பக்குவப் படுத்தி வைத்துக்கொண்டு பூர்த்தியாகாம லிருந்த அந்த அசுவமேத யாகத்தை முடிக்கத் துணிந்து அதற்கு வேண்டிய காரியங்களையெல் லாம் செய்து குதிரையையும் கொண்டுவந்து யாக சாலையிலே யூகஸ் தம்பத்தில் கட்டி வைத்திருந்தேன்; அக் குதிரையை எவர்களோ திருடிக்கொண்டு போய்விட்டார்கள். ஆகையால், நீ அக் குதிரையை வரவழைத்து எனக்குக் கொடுத்தருள வேண்டும்," என்று கூறினன். அதற்கு இலக்குமி, "இக்கோவில் வாயிலிலே சித்த சமாதி என்னும் பெயரினையுடைய ஒரு பிராமண னிருக்கின்றான். நீ அவனிடத்திற் சென்று நான் குதிரையை அழைப்பித்துக் கொடுக்கும்படி கூறிய தாகச் சொல்! அவன் அவ்வாறே அதனை யழைப்பித்துக் கொடுப் பான்" என்று கூறினள். உடனே அரசகுமாரன் இலக்குமி தேவியி னிடத்தில் விடை பெற்றுக்கொண்டு அப் பிராமணனிடம் சென்றான். அப்போது அந்தப் பிராமணன் இராஜகுமாரன் சமாசாரத்தைத் தெரி விக்கு முன்பாகவே அவனுடைய விஷயத்தைத் தெரிந்துகொண்டு, அவனை நோக்கி, நீ இலக்குமி தேவி யனுப்ப வந்தாயோ? நீ என் னிடம் தெரிவிக்க வந்த விஷயம் எனக்குத் தெரியும். உன்விருப்பப் படியே குதிரையை வரவழைத்துத் தருகிறேன்" என்று சொல்லிக் குதிரை யிருக்கு மிடத்தை ஆராய்ந்து பார்த்து, அது தேவேந்திர னால் கொண்டுபோகப் பட்டதாகத் தெரிந்து, உடனே இந்திரன் முதலிய தேவர்கள் தன்னெதிரே வரும்படி சிந்தனை செய்தான். அங் ஙனம் நினைத்த மாத்திரத்தில் அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர் களை நோக்கி அந்தப் பிராமணன், "உங்களிடமிருக்கும் இந்த இராஜ குமாரனுடைய குதிரையை இப்பொழுதே இங்குக் கொண்டுவந்து கட்டிச் செல்லுங்கள்!" என்றுரைத்தான். அவர்கள் அவ்வாறே செய்து அவனிடம் விடைபெற்றுச் சென்றார்கள். அதன் பிறகு இராஜகுமாரன் அவ் வேதியனை நோக்கி, "சுவாமி! இனி என்னுடைய தந்தை உயிர்பெற் றெழும்படிச் செய்யவேண்டும்" என்று கூறினன். வேதியர் அவ்வாறே செய்வதாகச் சொல்லி அவ் விராஜகுமாரனை

யழைத்துக்கொண்டு யாகசாலைக்குச் சென்று, எண்ணெயிற் பக்குவப்படுத்தி வைக்கப்பட்டிருந்த அரசனுடைய தேகத்துக் கெதிரில் உட்கார்ந்து, ஜலத்தில் கீதையின் பன்னிரண்டா மத்தியாயத்தைப் பாராயணம் பண்ணி, அந்த ஜலத்தை அப் பிரேதத்தின் முகத்தில் தெளித்தான். உடனே அரசன் உயிர் பெற் றெழுந்து, தன் புத்திரனை நோக்கி, "நீ யார்?" என்று கேட்டான். அப்போது இராஜகுமாரன், தான் அவனுடைய புத்திர னென்பதையும், நடந்த விசேஷங்களையும், அந்தப் பிராமணனுடைய மகிமையையும் தெரிவிக்க, அவ்வரசன் அதிசயித்து, அப் பிராமண னுக்கு நமஸ்காரஞ் செய்து, அவரை நோக்கி, "சுவாமி! மனிதராற் செய்தற் கியலாத இக் காரியங்கள் உம்மால் எவ்விதம் நிறைவேறின?" என்று கேட்டான். "அதற்கவ் வேதியன், "இவைகள் கீதையின் பன்னிரண்டா மத்தியாயத்தை நான் பாராயணஞ் செய்த மகிமையால் உண்டாயின" என்றுரைத்தான். அவ்வரசன், "அப்படியானால் அதனை எனக்கும் உபதேசித் தருள வேண்டுகிறேன்" என்று கூறினான். அவ்வாறே அவ்வேதியன் அவ்வரசனுக்கு அதனை உபதேசம் செய்தான் பிறகு எல்லோரும் சேர்ந்து அசுவமேத யாகத்தை நிறை வேற்றினார்கள். யாகம் முடிந்தவுடனே அங்கு விமானம் வர, அங்குள்ள அரசன் முதலிய எல்லோரும் அதிலேறிச் சென்று விஷ்ணு சாரூபம் பெற்று மோக்ஷத்தை யடைந்தார்கள்.

## 13-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை

தக்ஷிண தேசத்தில் சிவன், விஷ்ணு, காளி முதலியவர்கள் மிக்க வரத்தைக் கொடுக்கத் தக்கவர்களாக எழுந்தருளி யிருக்கப்பட்ட அரியாண் பட்டினத்திலே வேத சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்றவனும், யாக முதலியவைகளைச் செய்கிறவனுமாகிய அரிதீக்ஷிதன் என்னும் பெயரினை யுடைய பிராமண னிருந்தான். அவனுடைய மனைவியோ துராசாரி யென்னும் பெயரோடுங் கூடியவள். அவள் தன் புருஷனுக்கு அடங்காமல், அந்நிய புருடர் நேசம், மதுபானம், மாமிச பக்ஷணம் ஆகிய பாவச் செய்கையை யுடையவளா யிருந்தாள். அவ்வாறிருக்கும்போது அவளுக்கு விடபுருடருடன் கூடி விளை யாடத்தக்க இடம் ஊரிலில்லாமையால் அவள் ஒரு வனத்தில் ஓர் இடத்தைக் குறிப்பிட்டுத் தினந்தோறும் அவ் விடத்திற்கு வரும்படி வாலிபர்க்குச் சொல்லி விட்டு, அவள் அங்கே சென்று நெடுநேரம் வரை காத்திருந்தும் அவர்கள் வராமையினாலே அவ்விரவெல்லாம்

அவ்வாலிபரைப் பற்பல விடங்களில் தேடி மிகவும் மனத்தளர்ச்சி யடைந்து, முடிவில் புலி கிடந்த ஒரு புதரினருகே சென்றாள். அப்போது அந்தப் புலி சீறிக்கொண்டு அவளுக்கு முன்னே வர, அவள் அதை நோக்கி, "நீ யார்?" என்று கேட்டனள். அதற்கு அந்தப் புலி, "தென்றிசையி லிருக்கின்ற மாலகன்ன தீரத்திலே யுள்ள பஞ்ச லிங்க க்ஷேத்திரமாகிய முனிபதா வென்னும் பட்டினத்தில் முன்னே நானொரு பிராமணனுக்குப் பிள்ளையாகப் பிறந்து, பல சாஸ்திர விற்பத்தி யுடையவனாய்த் துர்த்தானங்கள் வாங்கியும், வேதங்களை விற்பனை செய்து மிக்க திரவியத்தைச் சம்பாதித்து அதில் சிறிதும் எவருக்குங் கொடாமல் முடிவில் அத்திரவிய மூழுவதையும் வைத்து விட்டு ஒரு நாயினாற் கடிக்கப்பட் டிறந்தேன். பிறகு நான் யமலோகம் சேரவே, யமன் என்னை நோக்கி, 'நீ மகா பாவியானதால் புலியாய்ப் பிறக்கக் கடவாய்!' என்று சொன்னான். அதனால் நான் இப்போது புலியாகப் பிறந்திருக்கின்றேன். ஆயினும், முன்னே நான் சாஸ்திரங்கள் படித்திருந்த விசேஷத்தினாலே எனக்குப் பூர்வ ஞான மிருக்கிறது. அதனால் நான் புண்ணியாத்மாக்களைக் கொல்லு கிறதில்லை; பாவிகளையே யடித்துக் கொல்லுகின்றேன். நீ மகா பாவி யாகையால் உன்னையும் இப்போது கொன்று தின்கிறேன் பார்!" என்று சொல்லி உடனே அவளை அடித்துக் கொன்று தின்று விட்டது அதன் பின் அந்தப் பிராமண ஸ்திரீ யமலோகஞ் சென்று கொடிய நரகத்தை யனுபவித்து, மீண்டும் நீச ஸ்திரீயாகப் பிறந்து, அப்போதும் முன் வழக்கப்படி வியபிசாரம் செய்து கொண்டு திரிந்தாள். அவ்வாறு திரியும்போது ஒரு பத்திரகாளி கோவிலில் பூஜை செய்பவனும், கீதையின் பதின்மூன்று மத்தியாயம் படித்தவனுமாகிய வாசுதேவன் என்னும் ஒரு பிராமணன் அதனை ஒரு தினம் பாராயணம் செய்து கொண்டிருக்கும்போது அவள் அங்கே வந்தாள். அவ்வாறு வரவே ஷெ கீதையின் பதின்மூன்று மத்தியாயத்தில் சில சொற்கள் அவளுடைய செவியிற் பட்டன. உடனே அவளுக்கு நீச தேகம் நீங்கித் திவ்ய தேக முண்டாயிற்று. அதன் பிறகு அங்கு விமானம் வந்தது. அவள் அதிலேறிச் சென்று மோக்ஷ மடைந்தாள்.

## 14-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

முற்காலத்தில் காஸ்மீர தேசத்திலுள்ள குங்கும உற்பத்தி ஸ்தானமாகிய சரஸ்வதியாலய மென்னுந் தலத்தில் சவுரியவர்மன்

என்பவன் அரசனா யிருந்தான். அவன் சிங்கள தீபத்தை யாளும் விக்கிரமவேதனன் என்னும் அரசனோடு சிநேகங் கொண்டு, அச் சிநேகத்தை விருத்தி செய்து கொள்ளும் பொருட்டு அவனுக்கு இரண்டு வேட்டை நாய்களை யனுப்பினான். அவன் அந்த நாய்களைப் பெற்றுக்கொண்டு சவுரியவர்மனுக்குத் தன்னிடத்தி லிருந்த அரிய வஸ்துக்களை யானையின்மே லேற்றி யனுப்பினான். இவன் அவற்றைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சி யடைந்திருந்தான். அதன் பிறகு விக்கிரமவேதன் அரசன் சவுரியவர்மனால் தனக் கனுப்பப்பட்ட இரண்டு நாய்களுக்கும் தங்கச் சங்கிலிகளிட்டு அவற்றைப் பிரியமாக வளர்த்து வந்தான். அவற்றோடு காட்டிற்குச் சென்று முயல் வேட்டையில் தன் சிநேகரோடு பந்தயம் பேசி முயற் கூட்டங்களை யெழுப்பி அவற்றைப் பிடிக்கும்படி தன் நாய்களை யேவினான். அவற்றுள் ஆண் நாயானது ஒரு முயலைத் தூக்கிக் கொண்டு ஒரு திக்கில் சென்றது. பெட்டை நாயானது மிகவும் கோபத்தோடு ஒரு முயலைத் தூக்கிக் கொண்டுசென்றது. அந்தப் பெட்டைநாயின் வேகம் பார்க்கத்தக்கதா யிருந்தபடியால் விக்கிரமவேதனன் முதலிய எல்லோரும் அதற்குப் பின்னே சென்றார்கள். அப்போது அந்தப் பெட்டை நாயானது அம் முயலைத் தூக்கிக்கொண்டு நெடுந்தூரஞ் சென்று வச்சரிஷியின் ஆச்சிரமத்தைச் சேர, அப்போது அங்கே ஒரு பள்ளத்திலுள்ள ஜலத்தில் கால் கழுவிக்கொண்டு நின்ற வச்சரிஷி சிஷ்யராகிய சுந்தரர் என்பவர் அந்த நாயையும் முயலையும் பார்த்து, "உங்களுக்கு இன்னுமா விரோத மிருக்கின்றது?" என்று சொல்லி நகைத்தார். அப்போது அவ் விரண்டிற்கும் ஏற்பட்டிருந்த விரோதம் நீங்க, அந்த முயல் அப்பள்ளத்தாக்கில் விழுந்திறந்து திவ்யதேகம் பெற்றது. அம் முயல் விழுந்த அதிர்ச்சியால் தெறித்த சேறானது அந் நாயின்மேற் பட, அதுவும் அந் நாய்ச் சன்மம் நீங்கித் திவ்ய தேகம் பெற்றது. உடனே அங்கு விமானம் வந்தது. அவ்விரண்டும் அதிலேறிச் சென்று மோக்ஷ மடைந்தன. பிறகு அங்குச் சென்ற விக்கிரமவேத அரசன், அவ்விடத்தில் நடந்த விசேஷங்களைப் பார்த்து அதிசயித்துச் சுந்தரரை வணங்கி, அவரை நோக்கி, "சுவாமி! அந்த நாயும் முயலும் இங்கே வந்தவுடன் நீர், 'உங்களுக்கு இன்னுமா விரோதமிருக்கிறது?' என்று கூறியதற்குக் காரணம் யாது? இங்கே விமானம் எதன் பொருட்டு வந்தது? இங்கே நாயும் முயலும் தங்கள் பழைய ஜன்ம நீங்கியதற்குக் காரணம் யாது?" என்று வினவினான். சுந்தரர் அரசனை நோக்கிக் கூறியதாவது:—

"மன்ன! முன்னே மகாராஷ்டிர தேசத்திலுள்ள பிரஸ்தாத்ர மென்கிற பட்டினத்தில் கேசவன் என்னும் ஒரு பிராமணன் சூது விளையாடுவதில் மிகவும் சமர்த்தனா யிருந்தான். விலேபனி என்னும் பெயர் வாய்ந்த அவன் மனைவி மிக்க வியபிசாரியா யிருந்தாள். அவளுடைய துர் நடத்தையை யறிந்த கேசவன் அவளை வெட்டிக் கொன்றுவிட்டுத் தன்னுடைய பாவத்தினாலே இந்த முயலாகப் பிறந்தான். விலேபனி தன்னுடைய பாவத்தினாலே இந்தப் பெட்டை நாயாகப் பிறந்தாள். அந்தப் பழைய பகைமையைக் கொண்டுதான் இப்போது இந்த நாய் இம் முயலைத் துரத்தி வந்தது. இவர்களின் பூர்வ விருத்தாந்தம் எனக்குத் தெரியும். அதனாற்றான் நான் 'இவர்கள் வேறு ஜன்மம் அடையப் பெற்றும் இன்னும் பழைய பகை போகவில்லையே' என்று நினைத்து, 'இன்னுமா உங்களுக்கு வைர மிருக்கின்றது?' என்று சொல்லிச் சிரித்தேன். இது நிற்க, இவ்விடம் என்னுடைய குருவாகிய வச்சிரிஷியின் ஆச்சிரமம். இங்கு நான் அவரிடத்தில் கீதையின் பதினான்கா மத்தியாயம் உபதேசம் பெற்று அதனைப் பாராயணம் பண்ணி வருகின்றேன். இத்தகைய நான் கால் கழுவின இந்தப் பள்ளத்தில் முயல் வீழ்ந் திறந்தபடியாலும், இதிலுள்ள சேறு நாயின்மேற் பட்டபடியாலும் இவ் விரண்டும் திவ்ய தேகம்பெற்று மோக்ஷ மடைந்தன. இவற்றைக் கொண்டு செல்வதற்காகவே விமானம் வந்தது. இவை மோக்ஷ மடைவதற்குக் காரணம் என்னாற் பாராயணம் செய்யப்பெற்ற கீதையின் பதினான்கா மத்தியாயத்தின் மகிமையேயாம்." என்று கூறினார். அதன் பிறகு அவ் வரசன் அவரை நோக்கி, "சுவாமி! அக் கீதையின் பதினான்கா மத்தியாயத்தை எனக்கு உபதேசஞ் செய்தருள வேண்டும்" என்று இரங்கிக் கேட்க, அவர் கிருபை கூர்ந்து அவ்வாறே அவனுக்கு உபதேசஞ் செய்தனர். பின்னர் அவ் வரசனும் அதனைப் பாராயணஞ் செய்து மோக்ஷத்தை யடைந்தான்.

## 15-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

பூர்வ காலத்தில் கௌட தேசத்திலே க்ருபாலஸாரமன் என்னும் ஓரரச னிருந்தான். அவன் தனக்குண்டா யிருந்த பலத்தினால் அதிக கர்வங்கொண்டு வஞ்சனையும் பாவ கிருத்தியங்களு முடையவனாய் அநேகம் மனிதர்களைக் கொன்று அனுபவ காரணமாக மிகுந்த பாவத்தைத் தேடிக்கொண்டான். அதனால் அவன் பலவிதமான துன்பங்களை யடைந்து அவற்றால் வாதனைப்பட் டிறந்தான். பிறகு அவன்

சிந்து தேசத்தில் குதிரையாகப் பிறந்தான். அதன் மேல் அந்தக் குதிரையை ஒரு கோமுட்டி கிரயத்திற்கு வாங்கி, அதைச் சாபேருண்டன் என்கிற அரசனிடம் விற்பனை செய்தான். அவன் அதனை வாங்கிப் பிரியமாக வளர்த்து வரும்போது ஒரு தினம் அதன்மேலேறிக் கொண்டு வேட்டைக்குச் சென்று நடுக் காட்டிற் சேனைகளை விட்டுப் பிரிந்து தனியனாகி மிக்க வெப்பத்தினால் தாகங் கொண்டு அத் தாகத்தை நிவர்த்திக்குமாறு குதிரையை ஓரிடத்திற் கட்டிவிட்டு நீரிருக்கு மிடந்தேடி ஒரு மலைமீதேறினன். அவ்விதம் அவன் செல லும்போது அவனுடைய தலையின்மீது ஓர் இலை விழுந்தது. அவன் அதை எடுத்துப் பார்த்தான். அதில், கீதையின் பதினைந்தா மத்தியாயத்தின் ஒரு சுலோகத்தில் பாதி எழுதப்பட் டிருந்தது. அதை அவன் உரத்த சப்தத்துடன் படித்தான்: அவ்விதம் படிக்கவே அக் கீதையின் வசனமானது அங்கே கட்டப்பட்டிருந்த குதிரையின் செவியிற் புகுந்தது; அவ்வாறு புகுந்த மாத்திரத்தில் அக் குதிரையானது அச் சுலோகத்தின் மகிமையால் கீழேவிழுந் திறந்து திவ்ய தேகம் பெற்றது; உடனே விமானம் வர அதிலேறிச் சென்று மோக்ஷமடைந்தது. அதன்மேல் அவ் வரசன் அங்கு நடந்த விசேஷத்தைப் பற்றி அதிசயங் கொண்டு குதிரை போய்விட்டதனால் லேற்பட்ட விசனத் தோடு அம் மலைமேல் பின்னும் சிறிது தூரம் மேலே போய், அங்கே ஒரு வனத்திலிருந்த ஒரு முனிவரைத் தரிசித்தான். அவ்வாறு தரிசித்தவுடனே அவன் அவருக்கு நமஸ்காரம் பண்ணி அவரிடத்தில் தான் அங்கு வருவதற்கு நேர்ந்த காரணத்தையும், குதிரை சம்பந்தமாக நடந்த விசேஷத்தையுங் கூறி, "குதிரைக்கு இவ்வாறு நேர்ந்ததற்குக் காரணம் யாது?" என்று வினவினன். அப்போது அம் முனிவர் அவ் வரசனுக்கு ஜல முதவி இளைப்பாற்றிப், பிறகு அக் குதிரையின் பூர்வ விருத்தாந்தங்களைக் கூறினர். மீண்டும் அவனை நோக்கி, "அரசனே! நீ வரும்போது உன் தலையில் விழுந்த இலையில் எழுதப் பட்டிருந்தது கீதையின் பதினைந்தா மத்தியாயத்தின் அரைச் சுலோகம். அதனை நீ படிக்கக் கேட்டதனாலேயே குதிரை மோக்ஷ மடைந்தது" என்று உரைத்தார். அதன் பிறகு அவ் வரசன் தன் நகர்க்குச் சென்று தன்னுடைய புத்திரனுக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகம் செய்து விட்டுத் தான் ஏகாந்தமானவிடத்தி லிருந்து மேற் கூறிய கீதையின் பதினைந்தா மத்தியாயத்தின் அரைச் சுலோகத்தைப் பாராயணம்பண்ணி மோக்ஷ மடைந்தான்.

## 16-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

பூர்வ காலத்தில் உச்சரி தேசத்திலே கஷ்கபாதன் என்னும் ஓரரசன் மிக்க கீர்த்திமானாயும், வீரனாயு மிருந்தான் அவ்வா றிருக்கும் போது ஓர் நாள் அரிமர்த்தனம் என்கிற அவனுடைய பட்டத்து யானை மிகவும் மதங்கொண்டு ஒருவரையுந் தன்னருகில் கிட்ட வொட்டாமல் திரிந்துகொண் டிருந்தது அச் சமயத்தில் ஒரு பிராமணன், அந்த யானை மதங்கொண்டிருப்பதை அறியாமல் அதன் சமீபத்தில் சென்றான். அவ்வாறு சென்றும் அஃது அவனுக்கு யாதொரு தீங்கும் புரியவில்லை. அவ் விசேஷத்தை அரசன் பார்த்து அதிசயித்து, "இவனிடத்தில் ஏதேனும் மகிமை யிருத்தல்வேண்டும்; அதனாலேயே இந்த யானை இவனைக் கொல்லாமல் விட்டுவிட்டது; இவனிடம் என்ன மகிமை யிருக்கிறதென்பதை விசாரித்தறிவோம்," என்று கருதி, உடனே அப் பிராமணனை யழைத்து அவனிடம் "வேதியரே! நீர் இப்போது மதங்கொண்ட யானையின் சமீபத்திற் சென்றும் அஃது உம்மைக் கொல்லாமல் விட்டு விட்டதற்குக் காரணம் யாது? இதனால் உம்மிடத்தில் ஏதோ மகிமை யிருத்தல் கூடுமென்று கருதுகின்றேன். உம்மிடத்தில் யாது மகிமை யிருக்கிறது? அதனை எனக்குக் கூறும்" என்று கேட்டான். அதற்கு அப் பிராமணன், "கீதையின் பதினாறா மத்தியாயத்தில் சிறிது சுலோகம் எனக்குத் தெரியும். இது தவிர என்னிடத்தில் வேறொரு விசேஷமு மில்லை" என்றுரைத்தான். உடனே அரசன், "கீதையின் மகிமை இப்பேர்ப்பட்டதா!" என் றதிசயித்துப் பிறகு அப் பிராமணனை நோக்கி, "வேதியரே! எனக்கு அந்தச் சுலோகத்தை உபதேசம் செய்தருளவேண்டும்," என்று வேண்டிக்கொண்டான். அவ்வாறே அதனைப் பிராமணன் அரசனுக்கு உபதேசித்தான். அதன் பிறகு அவ்வரசன் தன் குமாரன் சுஸியானனுக்கு இராஜ்ஜிய பட்டாபிஷேகஞ் செய்து வைத்து மேலும் கீதையின் மகிமையை ஐயமறத் தெரிந்துகொள்ளுமாறு தானும் அந்த மதயானைக்குச் சமீபத்திற் சென்றான். அப்போது யானை அவனுக்கு யாதொரு தீங்குஞ் செய்யவில்லை. பிறகு அம் மன்னன் அந்தச் சுலோகத்தை மிகவுஞ் சிரேஷ்ட முடையதாகக் கருதி அதனை இடைவிடாது பாராயணஞ் செய்து மோக்ஷத்தை யடைந்தான்.

## 17-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

மேற் கூறியபடி கட்கபாகன் மோக்ஷ மடைந்த பிறகு அவனுடைய புத்திரன் சலாசியானன் ஒரு தினம் தன்னுடைய சேபர்களான இராஜ குமாரர்களுடனே சபதஞ்செய்துகொண்டு மதம் பிடித்திருந்த அந்த யானைக்குச் சமீபத்திற் செல்ல, அந்த யானை அவனைக் கொன்றுவிட்டது. அதன்மேல் அவ் வரச குமாரன் மான தேசத்திலே யானையாகப் பிறந்திருந்தான். அப்படி யிருக்குங் காலத்தில் அந்த யானை விருத்தாப்பிய தசையை யடைந்து நோய்கொண்டு மரணமாகுந் தருணத்தி லிருந்தது. அப்போது அத் தேசத் தரசன் வந்து அதனைப் பார்த்து அதற்கு வைத்தியம் செய்யும்பொருட்டு வைத்தியர்களை வரவழைக்க முயன்றான்; அப்போது அந்த யானை அவ் வரசனை நோக்கி, "எனக்கு வைத்தியஞ் செய்யவேண்டாம். கீதையின் பதினேழா மத்தியாயம் படித்தவனை இங்கே யழைப்பித்தால் எனக்கு நன்மையுண்டாகும்" என்று கூறிற்று. அரசன் அப்படியே கீதையின் பதினேழா மத்தியாயம் படித்த ஒரு வேதியனைக் கண்ட மாத்திரத்தில் அந்த யானை தன்னுடைய யானைத் தேகத்தைவிட்டு முந்தின சலாசியானனுடைய தேகத்தை யடைந்தது. உடனே அங்கு விமானம் வந்தது; அப்போது அவனை அரசன்பார்த் ததிசயித்து, "நீ யார்?" என்று வினவினான்; அங்ஙனம் வினவியவுடனே அந்தச் சலாசியானன் தன்னுடைய பூர்வ விருத்தாந்தங்களையும், தான் நற்கதி யடைவதற் கேதுவாக வந்த வேதியனிடத்திலுள்ள கீதையின் பதினேழா மத்தியாயத்தின் மகிமையையுஞ் சொல்லி விமானத்தி லேறிச்சென்று மோக்ஷமடைந்தான். அதன் பிறகு அந்த அரசன் கீதையின் பதினேழா மத்தியாய மகிமையை யுணர்ந்து தானும் அவ் வேதியனிடம் அதனைக் கேட்டுணர்ந்து அதைப் பாராயணம் பண்ணி மோக்ஷ மடைந்தான்.

## 18-வது அத்தியாயத்தின் மஹாத்மிய கதை.

ஒரு காலத்தில் தேவேந்திரன் சிம்மாதனத்தில் வீற்றிருக்கும் போது அங்கே ஒருவனை விஷ்ணுதூதன் ஒருவன் அழைத்துக்கொண்டு வந்தான். உடனே சிம்மாதனத்தி லிருந்த இந்திரன் மூர்ச்சை யடைந்தான். அவ்விதம் விழுந்தவுடனே அங்கு வந்த விஷ்ணு தூதன் அவனை அப்புறந் தள்ளிவிட்டுத் தன்னுடன் வந்தவனை அச் சிம்மாதனத்தி லேற்றி அவனுக்கு இந்திரப்பட்டங் கட்டிவிட்டுச் சென்றான். பிறகு முன்னே மூர்ச்சையாய் விழுந்த இந்திரன்

மூர்ச்சைதெளிந் தெழுந்து பார்த்துச் சிம்மாதனத்தில் வேறே இந்திரன் வீற்றிருப்பதை யுணர்ந்து, அவ்வாறானதற்குரிய காரணத்தை யறிய முடியாமல் அதனைத் தெரிந்து கொள்ளுமாறு உடனே விஷ்ணுவினிடஞ் சென்று அவரைத் தோத்திரஞ் செய்து, 'என்னைத் தள்ளி வேறொருவனை இந்திரனாக்கியதற்குக் காரணமென்ன?'' என்று வினவினன் அதற்கு மகாவிஷ்ணு, "இவன் கீதையின் பதினெட்டா மத்தியாயத்தில் ஆறு சுலோகம் படித்தவன். இங்ஙனம் படித்தவன் இந்திரப்பட்ட மடையவேண்டியது அவசிய மாதலால் இவன் இப்போது இந்திரனாயினன்'' என்று கூறினர். இவ்வாறு கூறிய அவருடைய வார்த்தைகளைக் கேட்டவுடனே இந்திரன் கீதையின் பதினெட்டா மத்தியாய மகிமையை யுணர்ந்து அதனைத் தானுங் கற்று நற்கதி யடைய விரும்பிப் பிராமண வடிவங் கொண்டு கோதாவரி தீரத்திலுள்ள காளிகாபுரத்தி லிருந்த காலேசுரன் என்னும் பிராமணனிடஞ் சென்று அவனை நமஸ்கரித்துப் பிரமசரிய விரத மனுஷ்டித்து, ஷை பிராமணனிடம் கீதையின் பதினெட்டா மத்தியாய உபதேசம் செய்யப் பெற்று அதனைப் பாராயணம் பண்ணி விஷ்ணு சாயுச்சிய மடைந்தான்.

இந்த யுகத்திற் சில வருடங்களுக்கு முன் அரசு செலுத்தி வந்த இதர மதஸ்தராகிய பாஷா ஒருவர் "இகபர சாதனமான சாஸ்திர மெது?'' என்று ஒருகால் உசாவ, அக் காலத்தில் மகா புத்திசாலியா யிருந்த அப்பாஜி யவர்கள் பகவத்கீதையே யவர் கருதிய எண்ணத்திற் கிசைந்த தென்று தெரிவிக்க, அதை விசுவாசிக்க வொட்டாது தடுத்தவர்களின் அயோக்கியதையை நன்கு அறிந்து அப்பாஜி யவர்கள் அபிப்பிராயப்படி நம்பிப் பிரதி தினமும் பகவத் கீதா பாராயணஞ் செய்து ஜீவன் முக்தரானா ரென்பது உலகப் பிரசித்தம்.

இவைகளை யன்றி ஏறக்குறைய 100-வருடங்களுக்கு முன் நடந்திருக்கிறதாய்த் தெரிய வருகிற ஆச்சரியகரமான அற்புதங் கூறுதும்:—அக் காலத்தில் இத் தேசத்திற் கதிபதியாகவும் கவர்னர் ஜெனரலாகவும் கோர்ட் ஆப் டைரெக்டர்ஸ் அவர்களால் நியமிக்கப்பட்டு விஜயஞ் செய்திருந்த கனம் பொருந்திய வாரன் ஹேஸ்டிங்ஸ் துரையவர்கள், இந்து மதாசாரமான உண்மை நூல்களின் எதார்த்தத்தை ஒருவாறு ஆராய்ச்சி செய்ததில் ஈஸ்வர பிரேரணையால்

ஸ்ரீ பகவத்கீதா கிரந்தமான பரம ரகசிய நூலே சர்வத்திலும் சிறந்த தென்று புத்திக்குத் தோற்றி அதன் சாராம்சத்தை இந்து தேசத் தவர்க ளனுபவித்துச் சுகிப்பது போல ஐரோப்பிய தேசத்தவர்க ளனைவரும் அதன் பிரயோஜனத்தை யடையவேண்டு மென்ற அபிப்பிராயத்தால் இக் கிரந்தத்தை ஆங்கிலேய பாஷையிலும் மொழி பெயர்க்க வேண்டிய போதுமான பொருளுதவி செய்து அதற்குத் தக்க வல்லவராகிய ஒருவரை நியமனஞ் செய்வதே கோர்ட் ஆப் டைரெக்டர்ஸ் அவர்களின் முக்கிய கடமையா யிருக்கிற தென்று தெரிவிக்க, அவர்களும் இவர் கருத்துக் கிசைந்து, சகல சாஸ்திர சம்பன்னரும் மகா புத்திசாலியுமாகிய ஒருவரை நியமிக்க, அவரும் தக்க முயறசி செய்து கூடிய பிரயாசை யெடுத்து இவ் விடத்து வித்துவான்களின் பேருதவியினால் அதன் சாராம்சத்தை நன்கு யறிந்து ஐரோப்பியர்களுக்குப் பிரயோஜன மாகத்தக்க இங்கி லீஷில் மொழி பெயர்த்திருக்கிறார். இன்னும் இந்நூலில் ஹிப்ரூ, லத்தின் முதலிய பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட் டிருக்கிறது. அவர் இக் கிரந்த மான்மியத்தைக் குறித்துச் சொல்லிய விபர மாவன: "என்னுடைய புத்திக்குத் தோன்றினமட்டும் இந்த பகவத் கீதையே யெந்த நூல்களிலுஞ் சிறந்தது. இதனாலேயே இந்துக்களுக்கு இவ்வளவு பெருமையும் கிடைத்திருக்கிறது. இதன் அர்த்தத்தில் இந்துமத பிரபல சாஸ்திரிகளே மயங்குவார்க ளானால் யானெவ்வாறு கூற வல்லவனாவேன்" என்பதேயாம்.

ஸ்ரீ பகவத் கீதா மான்மிய சங்கிரகம்

முற்றுப்பெற்றது.

---

திருமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1937.

